த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—418

# சமூக உளவியல்

ஆசிரியர்
டாக்டர் செ. ரா. பரமேஷ்,
M.A. (Duk), M.A., M.Litt., Dip. (Anthro), Ph.D. (Madras),
உளவியல் பேராசிரியர்,
மாநிலக் கல்லூரி, சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—February, 1973

T.N.T.B.S. (C.P.) No. 418



**SOCIAL PSYCHOLOGY**

Dr. S. R. PARAMESH

***Price Rs. 6-80***

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.'

*Printed by*
Selvam Printing Works,
Madras-5.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்

(தமிழகக் கல்வி-உள்ளாட்சித்துறை அமைச்சர்)



தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பன்னிரண்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்கள் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது. இவ் வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்து வரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான 'சமூக உளவியல்' என்ற இந்நூல் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 418ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 453 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைசசகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப் படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்


பக்கம்

1. அறிமுகம் : சமூக அமைப்பின் தோற்றமும் வரலாறும் 3

உளவியல் – சமூகம் எனும் கோட்பாடு – சமூக அமைப்பின் தோற்றம் – சமூக உளவியல் என்பது என்ன ? – சமூகத்தின் உளவியல் அடிப்படை – அகச் சூழ்நிலை – சமூக உளவியலின் பயன்கள் – சமூக உளவியலின் தோற்றமும் வரலாறும் – அதிகாரச் சுருக்கம்.

2. சமூக உளவியலின் புதிய பாங்கு ... 25

சமூக உளவியல் கருத்துக கோட்பாடுகள் – இன்பியல் கோட்பாடு – தன்னலக் கோட்பாடு – இரக்கவுணர்ச்சிக் கோட்பாடு – போலிப் பாவனைக் கோட்பாடு – கருத்தேற்றம் – அதிகாரச் சுருக்கம்.

3 சமூக உளவியலின் முறைகள் ... 39

உற்றுநோக்கும் முறை – கள அளவீடுமுறை – வினு நிரல்கள் முறை – பரிசோதனைமுறை – தனியவன் வரலாற்று முறை – அளவுத் திட்ட முறை – புள்ளியியல் முறை – சமூக உள்வியலுக்கும் பிற அறிவியல்களுக்கும் உள்ள உறவு – சமூக உளவியலும் பொது உளவியலும் – சமூக உளவியலும் வளர்ச்சி உளவியலும் – சமூக உளவியலும் கல்வி உளவியலும் – சமூக உளவியலும் தொழிலக உளவியலும் – சமூக உளவியலும் மருத்துவ உளவியலும் – சமூக உளவியலும் பரிசோதனை உளவியலும் – சமூக உளவியலும் சமூகவியலும் – சமூக உளவியலும் மனித இயலும் – அதிகாரச் சுருக்கம்.

4. விலங்குகளின் சமூக நடத்தை ... 61

விலங்குகளின் சமூக நடத்தையும் அதன் காரணிகளும் – பிராணிகளின் சமூக வாழ்க்கை – மீன்களின் சமூக வாழ்க்கை – இடப்பெயர்ச்சி – இனப் பெருக்க நடத்தை – பூச்சி இனங்களின்

சமூக வாழ்க்கை – சாதி வேறுபாடுகள் – இனப் பெருக்கம் – புற்று அல்லது கூடுகட்டுதல் – பறவைகளின் சமூக வாழ்க்கை – சமூக வகைப்படுத்தல் – புறாவின் சமூக வாழ்க்கை – பாலூட்டிகளின் சமூக வாழ்க்கை – கலைமான்கள் – ஓநாய்களின் சமூக வாழ்க்கை – கலவியும் குட்டியைப் பேணுதலும் – மனித முன் இனத்தின் சமூக வாழ்க்கை – விலங்குகளின் குழுநடத்தை – உயிரிகளின் குழு நடத்தை – அகக்குழு, புறக்குழுத் தொடர்புகள் – குழுச் சூழ் நிலையில் தனித்த ஒன்றன் நடத்தை – தலைமைத் தன்மையும் ஆதிக்கமும் – மிருகங்களின் கலாசாரம் – கருத்துப் பரிமாற்றம் – விலங்குகள் – அதிகாரச் சுருக்கம்.

5. மொழியும் செய்தித் தொடர்பும் ... 95

மொழியின் தோற்றம் – மொழியின் தோற்றம் பற்றிய கருத்துக் கோட்பாடுகள் – சைகைக் கருத்துக் கோட்பாடு – மனஎழுச்சிவழிச் சைகைகள் – சைகைமொழி சாகுமா ?-வியப்பிடைச்சொல் கருத்துக் கோட்பாடு – ஒலி அணுகரணக் கருத்துக் கோட்பாடு – பாட்டு மொழிக் கருத்துக் கோட்பாடு – சிந்தனை – உள்பேச்சு – மொழி – தனியனும் மொழியும் – தனியவன் வாழ்க்கையும் மொழியும் – மொழியும் சமூகமும் – மொழியின் செயல்கள் – அதிகாரச் சுருக்கம்.

6. சமூகத் தூண்டல்களுக்குத் துலங்கல்கள் ... 115

இரக்கவுணர்ச்சி – இன்றைய உளவியலார் கருத்து – இரக்கவுணர்ச்சியும் கூட்டுறவும் – இரக்கவுணர்ச்சியின் சமூக முக்கியத்துவம் – பாவனை நடத்தை – கருத்தேற்றம் – கருத்தேற்றத்தில் தனியாள் வேற்றுமைகள் – கருத்தேற்றத்தின் சமூக முக்கியத்துவம் – ஒன்றுணர்ச்சி – கெஸ்டால்ட் கொள்கை – சிரிப்பு – சிரிப்பின் சமூக முக்கியத்துவம் – அதிகாரச் சுருக்கம்.

7. குழுவும் குழு வாழ்க்கையும் ... 135

குழுக்கள் – மனிதக்குழு – குழுவின் தன்மைகள் – சார்புத் தன்மை – சமூகக் கட்டுப்பாடு – செயல்

பக்கம்

பாட்டிசைவு – குழுக்களின் வகைகள் – இரண்டாம் நிலைக் குழுக்கள் – குழுமனம் – குழுவும் கூட்டமே – கூட்டத்தின் செயல்தன்மைகள் – கூட்டத்தின் வகைகள் – அதிகாரச் சுருக்கம்.

8. தலைமைத் தன்மை ... 155

தலைமைத் தன்மையும் ஆதிக்கமும் – தலைவர் என்பதன் பொருள் – தலைவர் – தலைவர் அல்லாதார் – தலைமைத் தன்மையை நிர்ணயிப்பதில் உள்ள இடர்ப்பாடுகள் – தலைமைத் தன்மையின் பண்புகள் – தலைவர்களும் குழுச் சிக்கலமைப்பும் – தலைவர்களும் நெருக்கடியும் – தலைவர்களும் குழு நிலையின்மையும் – தேவைகளே தலைவர்களை உருவாக்குகின்றன – தலைவரும் பின்பற்றுவோரும் – தலைவர்களுக்குரிய தன்மைகள் – தலைமை நடத்தையின் பரிமாணங்கள் – தலைவர் – செயல்படுத்துபவராவார் – தலைவர் திட்டமிடுபவராவார் – தலைவர் கொள்கை வகுப்பவராவார் – தலைவர் செயலில் நிபுணராவார் – தலைவர் புறத்தொடர்பு குழுவிற்குப் பிரதிநிதியாவார் – தலைவர் உள் உறவுகளைக் கட்டுப்படுத்துபவராவார் – தலைவர் தண்டனைகளையும் பரிசுகளையும் வழங்குபவராவார் – தலைவர் நடுவராவார் – தலைவர் முன்மாதிரியாவார் – தலைவர் குழுவின் உருவகமாவார் – தலைவர் தனியாள் செயல்களுக்குப் பொறுப்பேற்பவராவார் – தலைவர் லட்சியக் கோட்பாட்டினராவார் – தலைவர் தந்தையின் உருவாவார் – தலைவர் பிறர்பழி ஏற்பவராவார் – தலைமைத் தன்மையின் வகைகள் – நிறுவனத் தலைவர்கள் – ஆதிக்கத் தலைவர்கள் – இணங்கவைக்கும் தலைவர்கள் – அரசியல் தலைவர் – அதிகாரி – இராஜதந்திரி – சீர்திருத்தவாதியாளர், ஆர்ப்பாட்டக்காரர் – கொள்கையாளர் – ஜனநாயக, ஆதிக்கவாதிக் கொள்கைத் தலைமை – மக்களாட்சித் தலைமை – ஆட்சியாதிக்க அல்லது அதிகாரத்துவப் பாங்கு – மக்களாட்சி அல்லது மக்கள் சாபு பாங்கு – ஆராய்ச்சியின் குறிப்பிடத்தக்க முடிவுகள் – அதிகாரச் சுருக்கம்.

9. பொதுமக்கள் கருத்தும் கருத்துப் பரப்பலும்

பொதுமக்கள் கருத்து – பொதுமக்கள் கருத்தின் தன்மை – பண்டைச் சமூகத்தில் பொதுமக்கள் கருத்து – பொதுமக்கள் கருத்து உருவாவதில் காணப்படும் படிகள் – பொதுமக்கள் கருத்தை உருவாக்கும் காரணிகள் – குறுக்கிடும் அழுத்தங்கள் – சமூக வகுப்பின் செல்வாக்கு – ஊடகங்களின்மேல் ஏற்படும் வற்புறுத்தல்கள் – தலைமையும் பொதுமக்கள் கருத்தும் – பொதுமக்கள் கருத்தை வளர்க்கும் ஊடகங்கள் – செய்தித் தாள்கள் – வானொலி – திரைப்படம் – மேடைப் பேச்சு – பொதுமக்கள் கருத்தினை மதிப்பிடுதலும் அளவிடுதலும் – பொது நிகழ்ச்சிகளை உற்று நோக்கு முறை – வாக்கெடுப்பு – கருத்துப் பரப்பல் – கருத்துப் பரப்பலின் நோக்கங்கள் – கருத்துப் பரப்பலில் பயன்படுத்தப்படும் உத்திகள் – அதிகாரச் சுருக்கம்.

10. சமூகப்படுத்துதல் ... 219

சமூகப்படுத்துதலும் சமூகப் படிப்பினையும் – சமூகப்படுத்துதலும் ஆளுமை வளர்ச்சியும் – சமூகப்படுத்துதலும் இலக்கு நோக்கிய நடத்தையும் – சமூக மாற்றம் – இந்தியாவில் சமூக மாற்றம் – மாற்றத்திற்குத் தடை – அதிகாரச் சுருக்கம்.

11. சமூகப் புலன் காட்சி ... 237

புலன் காட்சியின் விதிகள் – புலன் காட்சிப் பிரதிவினைகளைப் பாதிக்கும் அடிப்படைத் தோற்ற முறைகள் – சமூக இடைவினைகள் – புலன் காட்சியில் சமூகக் காரணிகள் – இந்திய சமூகத்தில் மக்கள் பகுப்பு – சமூகக் கற்றல் – போலிப் பாவனையின் வழிச் சமூகக் கற்றல் – சமூகக் கற்றலின் பலன்கள் – அதிகாரச் சுருக்கம்.

12. சமூக நோக்குகளும் உந்துதல்களும் ... 257

மனப் போக்குகளும் உந்துதல்களும் – மனப் போக்கினை அளவிடுதல் – தர்ஸ்டனின் சமமாகத் தோன்றும் இடைவெளி அளவுகோல் முறை –

பக்கம்

லிக்கர்ட்டின் கூட்டு விகிதப் பாங்கு அளவுகோல் முறை – பொக்கார்டஸின் சமூகத் தொலைவு அளவு கோல் முறை – கட்மனின் அளவுகோல் வரைபட (தொழில் நுணுக்க) முறை – மனப்போக்கை அள விடுவதில் பயன்கள் – மனப்போக்கு மாற்றம் – அதிகாரச் சுருக்கம்.

13. பண்பாடும் ஆளுமையும் ... 271

பண்பாடும் ஆளுமையின் வளர்ச்சியும் – ஆளுமை உருவாக்கத்தில் பண்பாட்டின் பங்கு – எளிய சமூகங்களில் ஆளுமை அமைப்பு – ஜப்பா னியப் பண்பாடும் ஆளுமையும் – நாட்டுப் பண்பு – வரையறை – நாட்டுப் பண்பு ஆய்வு முறைகள் – தனியாள் முறைகள் – ஜெர்மானிய நாட்டினர் இயல்பு – அதிகாரச் சுருக்கம்.

14. தாக்குதலும் சமாளித்தலும் ... 295

வெறுப்பும் விரோதத் தாக்குதலும் – கலாசாரத் தின் விளைபயன் – நிறுவனமய, தனித்துவமய எதிர்த்தாக்குதல் அமைப்புகள் – ஒரு சார்பெண் ணமும் உள்ளிடைக் குழுவின் வெறுப்புணர்ச்சி யும் – குழு ஒரு சார்பெண்ணம் – ஒரு சார்பெண்ண உணர்வின் வளர்ச்சி – ஒரு சார்பெண்ண உணர்வு களைக் கட்டுப்படுத்தல் – ஒரு சார்பெண்ணங் களின் சமூக விளைவுகள் – சமூக முரண்பாட்டுப் போராட்டங்கள் – வேலைநிறுத்தம் – போர்கள் – புரட்சி – அதிகாரச் சுருக்கம்.

15. சமூகநோய்த் தோற்றவியல் ... 319

பரத்தைத் தன்மை – பரத்தைத் தன்மைக்கான காரணங்கள் – பரத்தைத் தன்மையும் சமூக அமைப்புக் குலைவும் – குடிப்பழக்கம் – குடிப்பழக் கத்தால் ஏற்படும் சமூக விளைவுகள் – குற்ற நடத்தை – குற்றங்களின் தோற்றங்கள் – குற்றங் களும் சமூக அமைப்புக் குலைவும் – அதிகாரச் சுருக்கம்.

மேற்கோள் நூற்பட்டியல் ... 331

கலைச்சொற்கள் ... 332

# 1. அறிமுகம் : சமூக அமைப்பின் தோற்றமும் வரலாறும்

**உளவியல்**

உளவியல் என்பது மனித உள்ளத்தின் தன்மைகளை எடுத்து விளக்குவது. சைக்கி (Psyche), லோகஸ் (Logus) எனும் இரு கிரேக்கச் சொற்களும் இணைந்து 'சைக்காலஜி' (Psychology) என வழங்கப்படுகின்றது. சைக்கி என்றால் ஆன்மா எனவும் லோகஸ் என்றால் விஞ்ஞானம் அல்லது அறிவியல் எனவும் இங்குப் பொருள் கற்பிக்கப்படுகிறது. இதனடிப்படையில் முதலில் உளவியலை ஆன்மாவைப்பற்றிப் பயிலும் இயலாகக் கருதினர்; பின்னர் இவ் விளக்கம் மாற, உளவியல், தத்துவத்தில் ஒரு பிரிவாக இருந்த நிலைமாறித் தனித்த ஓர் இயலாகச் செயற்படத் தொடங்கிற்று. 'மனம்' என்ற சொல் ஆன்மா (soul) என்ற கருத்துருவமாக (concept) இருப்பதால்—எளிதில் பார்த்துணர முடியாத பருப் பொருளானதால்—அப்படி 'ஆத்மா' என்ற ஒன்றே இல்லை எனப் பலர் வாதிட்டனர். தத்துவ இயலில் அதுவே இன்னும் ஒரு முடிவடையாத பிரச்சினையாக இருக்கையில், சிலர் அது மூளையில் வேலைசெய்கிறது என்றும், சிலர் அஃது இதயத்திற்குள் இருக்கிறது என்றும், வேறு சிலர் அது கையளவு வடிவம் உடைய ஓர் உருவமுடைய பொருள் என்றும், மற்றும் சிலரோ அது, தான் தங்கி இருக்கும் உடலின் அளவு கொண்டது என்றும், சிலர் அஃது அணு அளவு பரிமாணம் உடையது என்றும் கூறி வாதிட்டுக்கொண்டிருக்கையில் உளவியலாளர்கள் அப் பொருளிலிருந்து மாறுபட்டு, தனித்துச் சிந்தித்து, மனம் என்பது ஆன்மா அன்று, உள்ளமே என்று விளக்கி, அதனால் இவ்வியலை 'உளவியல்' என்று அழைத்தனர்.

இவ்வளவில் 'உள்ளம்' என்பது ஒரு கருத்துருவம் என்றும், அது கண்ணுக்குப் புலனாகா அருவப் பொருள் என்றும், அதை

அதன் செயல் இயக்கங்கள் வழி உய்த்துணர முடியும் என்றும் அறிகின்ருேம். உளவியலே நாம் இங்ஙனம் பொருள் வரையறை செய்தபோதிலும், ஜே. பி. வாட்சனின் (J. B. Watson) நடத்தைக் கொள்கையினர் (Behaviourists) இதை நடத்தையை ஆராயும் அறிவியல் எனப் பொருள்படுத்திச் 'சைக்காலஜி' என்பது உள்ளத்தை ஆய்வது அன்று, அது நடத்தையை ஆய்வது எனப் பொருள் வரையறை செய்தனர். 'நடத்தை' என்பது ஓடுதல், பேசுதல், கூடுதல் எனும் புறச் செயல்கள் மட்டுமன்றிச் சிந்தித்தல், கற்பனை செய்தல், உணர்தல், கற்றல் எனும் அகச் செயல்களையும் குறிப்பதாகும். இதை ஆராயுமிடத்து, உளவியல் என்பது உள்ளத்தையும், அதன் அகவழிச் செயலையும், அதன் தூண்டுதலில் செயற்படும் புறச் செயல்களையும், இவற்றின் விளைவால் ஒருவனிடம் ஏற்படும் நடத்தையும் விவரிப்பது என்பது புலனுகும்.

இனி நாம் சமூகமெனும் அமைப்பையும் சமூக உளவியலையும் அதன் தோற்றம் வரலாறுகளையும்பற்றிக் காண்போம்.

### சமூகம் எனும் கோட்பாடு

ஆதிமனிதர்கள் காடு மேடுகளில், தனியாக ஆதரவற்று விலங்குடன் தாமும் ஒரு விலங்காய் இருந்த நிலைமாறி, அவர்கள் கூட்டங் கூட்டமாய் ஒன்றி, ஓரிடத்தில் தங்கி வாழத் தலைப்பட்டபோதே சமூகம் உருவாயிற்று எனலாம். இருப்பினும் 'சமூகம்' எனும் கோட்பாடும் அந்தச் சொல்லில் இப்போது நாம் புரிந்துகொள்ளும் உணர்ச்சி மிக்க, பொருளாழம் கொண்ட கருத்தும் அப்பொழுது தோன்றவில்லை. இது சமீப காலத்தில்தான் தோன்றியது. இதற்கிடைப்பட்ட காலங்களில் சமூகம் எனும் கருத்து வளர்ச்சியை ஆராயவேண்டுமாயின் நாம் கி மு. 2000-த்திற்குமுன் இருந்த வாழ்க்கையை நோக்கவேண்டும்.

சமூகமெனும் அமைப்பு கி.மு. 2000-த்திற்கு முன் டைக்ரீஸ், யூப்ரடிஸ் (Tigris, Euprates) நதிகளின் பள்ளத்தாக்குகளில் மக்கள் வாழத் தலைப்பட்டபோதே உருவாகிவிட்டது என மேலைநாட்டில் ஒரு சாரார் கூறுகின்றனர். அப் பள்ளத்தாக்குகளில் வாழ்ந்திருந்த மக்கள் நாகரிகத்தில் வளர்ச்சி அடைந்திருந்தனர் என்றும், தங்களின் கருத்துகளை மொழியின் வாயிலாகப் பரிமாறிக் கொண்டனர் என்றும், அடையாளங்கள், குறியீடுகள், எழுத்துகள்வழிச் சமுதாயக் கட்டுதிட்டங்களை, சட்டங்களை எழுதி வைத்துள்ளனர் என்றும் சரித்திர ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். ஏறக்குறைய இதே காலத்தில்தான் உலகின் கிழக்குப்

பகுதியில், இந்தியாவில் சிந்து கங்கைச் சமவெளியில் வாழ்ந்த மக்கள் இதைவிட ஒருபடி மேம்பாடான வாழ்க்கை நடத்தினர் என்று மொகஞ்சதாரோ, ஹரப்பா—புதைபொருள் ஆராய்ச்சிகள் கூறுகின்றனர். இவர்களெல்லாம் கி.மு. 2000-க்கு முற்பட்டவர்கள் என்பதால் சமூகமும், சமூகமெனும் கருத்துக் கோட்பாடும் மிகவும் தொன்மை வாய்ந்த காலத்தவை என்பது தெளிவு பெறுகிறது.

தற்காலத்திய சான்றுகளான, மேற்கத்திய விவிலிய நூல், இந்துமத வேதங்கள், புராணங்கள், மனுநீதி நூல், கௌடில்யரின் அர்த்த சாஸ்திரம், பிளேட்டோ, அரிஸ்டாடில் போன்றோர்களின் அரசியல் கட்டுரை நூல்களின் வழியாகவும், தொல்காப்பியம், திருக்குறள், எட்டுத்தொகை வழியாகவும் அக்காலத்தே மக்கள் ஒரு சமூகமாகக் கூடி வாழ்ந்தனர் என்றும், அவர்கள் தங்களுக்குள் ஒருவனைத் தலைவனுக்கி அவன் சொல்லுக்குக் கட்டுப்பட்டு அவனால் அறிவிக்கப்பட்ட சட்டங்களுக்கும் (கட்டு திட்டங்களுக்கும்) மதிப்புக் கொடுத்து வாழ்ந்தனர் என்றும் அறிகின்றோம். இந் நூல்களின் மூலம்அக்கால மக்களின் சமூகம் பற்றிய கருத்துக்களையும், எண்ணங்களையும் நம்மால் அறிந்து கொள்ள முடிகின்றது.

இச் சமூகமெனும் கோட்பாடு ஓர் உணர்ச்சியை ஊட்டி, மக்களைச் சமூகத்தின்வழி வாழ முதலில் போதித்து, ஆனால் அதே நேரத்தில் அந்தச் சமூகத்தின் இடையே காணப்பட்ட தீய பழக்க வழக்கங்களைக் களைந்து, சமூகத்தைச் சீர்திருத்தி, 'சமுதாயச் சீர்திருத்தவாதி' எனப் புகழ் பெற்றவர் கிரேக்க ஞானியான சாக்ரடீஸ் எனக் கூறுவர். ஆனல் இந்த ஒரு காரணத்தை மட்டும் கொண்டு 'சமூகம்' எனும் கருத்துக் கோட்பாடு சாக்ரடீஸ் என்பவரால்தாம் அதுவும் கிரேக்க தேசத்தில்தான் உருவெடுத்தது எனக் கூறுவது பொருந்தாது. ஏனெனில் சாக்ரடீஸின் காலத்திற்கு முன்பே இந்தியாவில் சமூகமெனும் கருத்துக் கோட்பாடு சிறப்பான முறையில் உருக்கொடுக்கப்பட்டு நடைமுறையில் செயற்பட்டு வந்துள்ளது எனப் பல நூல்களிலிருந்து அறிகிறோம். உலகில், தத்துவங்களே முதன்முதலில் கிரேக்கத்தில் சாக்ரடீஸால்தாம் தோன்றியது என்ற கூற்றை மறுத்து, இந்திய அரசாங்கத்தாரால் டாக்டர் இராதாகிருட்டினன் பொறுப்பில் வெளியிடப்பட்ட 'கிழக்கு—மேற்குத்—தத்துவம்' என்ற நூலின் முன்னுரையில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. சாக்ரடீஸ் முதல் அரிஸ்டாட்டில் வரையுள்ள கிரேக்க தேச அறிஞர்கள் கிழக்கத்திய நாடுகளில் பயணம் செய்து, இந்தியர்களுடன் தங்கி, அவர்கள்தம் தத்துவ அறிவைக் கற்றுணர்ந்த பின்னரே

தம் நாட்டிற்குச் சென்று, அக் கருத்துகளுக்கு ஓர் உருக் கொடுத்துத் தமக்கென ஒரு தத்துவ அமைப்பை உருவாக்கினர் என்றும், எனவே உலகத் தத்துவமே கிழக்கில்தான் அதுவும் இந்தியாவில்தான் முதன்முதலில் தோன்றியது என்றும் அம் முன்னுரையில் ஆசிரியர் கூறுகின்ருர். அக் கிரேக்க தேசத்து ஞானிகளின் வாழ்க்கை வரலாறுகளைப் படிக்கும்போது அங்ஙனம் அவர்கள் 'கீழை நாடுகளில் பயணம் மேற்கொண்டு திரும்பிய பின்னரே இந்தியாவில் கற்றுச் சென்ற உண்மைகளைப் பேசினர், எழுதினர் என்றும், அதனுல் அவர்களின் காலத்திற்கு முன்பே இந்தியாவில் வாழ்ந்த மக்கள் சமூகம், அரசியலமைப்பு, சமூகத்தை ஆட்டிப் படைக்கும் சிந்தனைகள், கோட்பாடுகள், திட்ட வழிகள் போன்றவற்றில் சிறந்து வாழ்ந்தனர் என்றும் அவ் வாசிரியர் விளக்குங்கால் சமூகம், சமூகமெனும் கோட்பாடு சமூக உளவியல் இந்தியாவில்தான் பண்டைக் காலத்தில் முதன்முதலில் தோன்றலாயிற்று' என்று சொல்லுவது இயலும்.

## சமூக அமைப்பின் தோற்றம்

சமூக அமைப்பு என்பது ஆதிகாலத்தில் மனிதர் ஒருவருடன் ஒருவர் இணைந்து வாழத் தொடங்கியபோதே தோன்றியது எனலாம். எனினும் ஏன், எப்படி, எவ்வெத் தூண்டுதல்களால் இந்தச் சமூக அமைப்பு உருவெடுத்தது என்பதை யாரும் இதுவரை திட்டவட்டமாகக் கூறவில்லை. சமூக அமைப்புகள் மனிதரிடையே எவ்வாறு எதற்காகத் தோன்றின என்று தற்போது பலராலும் ஆராயப்படுகின்றது. மக்கள் ஏன் மற்றவர்களுடன் கூடி வாழ்கின்றனர், எதனுல் கூடி இருப்பதை விரும்புகின்றனர், எது அவர்களைக் கூடி வாழ்ந்திருக்கச் செய்கிறது என்பன போன்றவற்றைச் சமூக உளவியலில் இதுவரை பலவாறு ஆராய்ந்து வந்துள்ளார். இளமைப் பருவத்தில் பிறரைச் சார்ந்திருக்கும்போது ஏற்படும் நன்மைகளும், அவர்களின் ஆதரவால் கிடைக்கும் வெகுமதிகளும், ஒருவனுக்குப் பிற்காலத்திலும் அவர்களையே சார்ந்து வாழவேண்டுமென்பதற்கொரு படிப்பினையாக அமைகிறது. வளரும் குழந்தை, தன் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகத் தன் உற்ருர், உறவினர் பலரை அறிந்து அவர்களுடன் இணைந்து வாழக் கற்றுக்கொள்கிறது. வளர்ந்த குழந்தை பள்ளியில் சேர்ந்தவுடன் அங்குப் பேச்சுத் துணைக்கும், விளையாட்டுத் துணைக்கும், பொழுதுபோக்கிற்கும் இன்ன பிற பல்வேறு தேவைகட்கும் தான் கற்கும் வகுப்பினரோடு சேர்ந்து பழகி, அதனுடன் ஒன்றிப் பின்னர் படிப்படியாகப் பிற வகுப்பினரின் அறிமுகத்தையும் சம்பாதித்துக்கொண்டு நாளடைவில் அப் பள்ளி முழுவதையுமே அறிந்துகொள்ள முயல்கிறது.

விளையாட்டு நேரங்களில் குழுக்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு விளையாடும்போதும், ஒரு பள்ளியின் குழு மற்றொரு பள்ளியின் குழுவோடு போட்டியிட்டு விளையாடும்போதும் சிறுவன் தன் குழுவின் வெற்றிக்கு வேண்டிய செய்கைகளை மேற்கொள்வதுடன், தன் குழுவினர் வெற்றிக்குப் பாடுபடும் வகையில் அவர்களுக்கு உதவவும் செய்கிறான். கற்று முடித்தபின் அலுவலகங்களிலோ தொழிற்சாலைகளிலோ பணியேற்று வாழும்போது தன் பணி நிலைக்கவும், நீடிக்கவும், தன் பணியைச் செவ்வையாய் ஆற்ற மற்றவர்களின் உதவியைப் பெறுவதற்கும், தன் தனிமைத் தன்மையைப் போக்கிக்கொள்ளவும், அவன் பிறருடன் இணைந்து சமூகத்துடன் கூடி வாழ்கின்றான். இத்தகைய ஒரு செயலைச் சீராய்ச் செய்வதில் மற்றவர்களின் துணை தேவைப்படும்போது, ஒரு சில சூழ்நிலைகளில் நாம் மற்றவர்களின் ஆதரவில் வாழ நேரிடும்போது, பிறரின் மத்தியில் அவர்களின் அறிமுகத்தை ஏற்றுச் செயற்பட நேரிடும்போது, நமக்குப் பிறரின் தொடர்பும் அவர்களின் ஒத்துழைப்பும் தேவைப்படுவதை நாம் உணர்கின்றோம்.

நாம் சமூகத்துடன் இணைந்து ஒன்றிக் கலந்து வாழ்ந்தாலும் அது ஏன், எப்படி ஆரம்பத்தில் தோன்றியது என்பதை நம்மால் எளிதில் கூறிவிட இயலாது. கி.மு. 300 ஆண்டுகட்கு முன்னரே 'பிளேட்டோ' (Plato) எனும் கிரேக்க அறிஞர் இப் பிரச்சினையை ஆராய்ந்து, தனிமனிதன் தன்னிறைவு பெறவேண்டிப் பிறரைச் சார்ந்தும், இணைந்தும், ஒன்றியும் வாழ நேரிட்டபோது சமூகக் கூட்டமைப்புத் தோன்றியது என்றார். தனிமனிதன் தன்னுடைய குறிக்கோள்கள், தேவைகள் முதலியன ஈடேறவேண்டி இவ்வாறு, அவனாகவே கூட்டுறவு அமைப்பில் ஈடுபட்டுச் சமூக மனிதனாக மாறுகின்றான் என்று அவர் கருதுகிறார். ஆனால், அவரது மாணாக்கர் அரிஸ்டாடில் (Aristotle) என்பவர் இதற்கு மாறாகப் பிறப்புத்தான் மனிதனைச் சமூகமாக வாழச் செய்கிறது; சூழ்நிலையன்று என்று கூறினார். அவரது கூற்றுப்படி மனிதன் பிறப்பாலேயே பிறருடன் ஒத்துவாழவும், சார்ந்து இருக்கவும் அறிந்திருக்கிறான் என்பதாகும். இதற்கு அடுத்து ரூசோ (Rousseau) என்பவர் தமது 'சமூக ஒப்பந்தம்' (Social Contract) என்ற புத்தகத்தில் இவ் விருவரின் கருத்தையும் தழுவி 'மனிதன் சுதந்திரமானவனாக இருந்தாலும் பிறப்பிலும், பிறந்த பின்னர் சமுதாயத்துடன் இணையும்போதும், சமூகம், அவனைப் போன்ற எண்ணற்ற தனிமனிதர்களின் சக்திகளைக் கொண்டு ஒரு சில காரியங்களைச் சாதிக்க முற்படும்போதும், அவனைத் தன்னகத்தே ஏற்றுத் தனது கட்டுதிட்டங்களுக்கு உள்ளாக ஆட்படுத்து

வதன் மூலம் தனிமனிதன், சமூகம் எனும் கூட்டமைப்பில் ஒன்றுகிறான், என்று கூறுகின்றார்.

மனிதனை அறிந்துகொள்வதைப் பற்றி லாக் (Locke) என்பார் கடவுள், சிறப்பான வாழ்க்கையையும் அதை வாழ்வதில் விளையும் மகிழ்ச்சியையும் அறவழியில் வைத்து அவற்றை அனுபவிப்பவர்கள் ஒன்றி ஒரு சமூகமாக நிலைத்து இருப்பதை விரும்பினார் என்று கூறுகிறார். நல்லதையும் நல்ல கருத்துகளையும் விரும்புகின்றவர்கள் அறவழியில் ஒன்றுசேர அதன்வழி ஒரு சமுதாயம் உருவாயிற்று என்பது அவர் கருத்து. டார்வின் (Darwin) என்பவர் தமது பரிணாமக் கொள்கையில் (Evolution Theory) தகுதி வாய்ந்தவை உயிர் வாழும் (Survival of the fittest) என எடுத்துக் காட்டுகிறார். ஆதிகால மனிதர்கள் இயற்கையின் சீற்றத்திலிருந்தும், விலங்குகளினின்றும் தங்களைக் காத்துக் கொள்ளவேண்டி இருந்தது. தங்களின் உடைமைகளையும், செல்வங்களையும் பிற இனத்தவர்கள் வன்முறையில் கவர்ந்து செல்வதைத் தவிர்க்க அவர்களுக்குத் திறன் தேவைப்பட்டது. அதனால் அவர்கள் ஒன்றி ஒரு கூட்டமைப்பில் இணைந்து சமூகமாகச் செயற்படத் தொடங்கினர். இதுவே டார்வின் விளக்கம். இவ்வாறு பலரும் பல்வேறு வகைகளில் தனியன் ஏன் சமூகத்தில் ஒன்றி வாழ்கின்றான் என்பதற்கு விடையாகப் பற்பல கோட்பாடுகளையும், விளக்கங்களையும் எடுத்துக் கூறுகின்றார்கள்.

**சமூக உளவியல் என்பது என்ன ?**

சமூக உளவியல் என்பது என்ன என்று நாம் எண்ணும் பொழுது நம் கண் முன்னே எண்ணற்ற நிகழ்ச்சிகள் தோன்றுகின்றன. ஒரு தாய் தன் குழந்தையை அரவணைத்துக்கொண்டு பாலூட்டுகிறாள்; நான்கைந்து மனிதர்கள் தெருவில் நின்றுகொண்டு கூச்சலிட்டுக் கத்தி, சண்டை போடத் தொடங்குகின்றனர்; ஒரு மரத்தடியில் நண்பர்கள் சிலர் கூடி ஏதோ ஒன்றைப் பற்றிக் காரசாரமாகப் பேசுகின்றனர்; கடற்கரையில் மக்கள் கூட்டத்தில் ஒருவர் மேடை மீதேறிப் பேசுகிறார், அதைத் தொடர்ந்து அம் மக்கள் கைதட்டி வரவேற்கின்றனர்; நகர விளையாட்டு அரங்கைச் சுற்றிலும் நூற்றுக்கணக்கான மக்கள் குழுமி நிற்க, இரு குழுவினர் பந்தாடிக் கொண்டிருக்கின்றனர்; சாலை ஓரத்தில் இருக்கும் உணவு விடுதியின் முன் கொடி ஏந்திய சிலர் ஆரவாரம் செய்கின்றனர்; கல்லூரி அறை ஒன்றில் ஒரு பேராசிரியர் பலகையில் எழுதியுள்ளதைச் சுட்டிக் காட்டி மாணவர்களுக்கு விளக்கிக் கொண்டிருக்கிறார்.

மேற்கண்ட பல்வேறு நிகழ்ச்சிகளை ஏதாவது ஒரு கோவை யில் அல்லது தொடர்பில் நம்மால் இணைக்க முடியுமா? பல் வேறு சூழ்நிலைகளில் காணப்படும் இப் பல்வேறு வகைப்பட்ட மக்களிடை ஏதாவது ஒன்று அல்லது இரண்டு எனப் பொதுக் காரணங்களை ஊகித்து அவைகளின் வழியில்தான் இவைகள் எல்லாம் நிகழ்கின்றன என்றோ நம்மால் கூற இயலுமா?

சமூக உளவியல் என்பது, இப்படி எண்ணற்ற பிரச்சினை களுக்கு ஒரு தீர்வு காண்பதோடு எவ்வாறு மனிதர்கள் தங்களுக் கிடையே நிகழும் நடத்தையில் மாறுபடுகிறார்கள் என அறிவ தாகும். கல்லூரி மைதானத்தில் மாணவர் படை துப்பாக்கிப் பயிற்சி செய்துகொண்டிருக்கிறது. மாணவர்கள் துப்பாக்கி யைத் தங்களுக்கு நேரே இருக்கும் பொம்மைகளை நோக்கிப் பிடித் துக்கொண்டு முன்னேறுகின்றனர். 'தாக்கு' என்ற கட்டளை பிறந்தவுடன் அந்தப் பொம்மைகளின் வயிற்றில் துப்பாக்கி முனையிலுள்ள கத்தியைப் பாய்ச்சுகின்றனர். இஃது ஒரு பயிற் சிக் களம். இந்தச் சூழ்நிலை மாறுகின்றது. வடக்கே பனிசூழ்ந்த மலைப் பிரதேசத்தில் வரிசையில் நின்று இப்படித்தான் இந்திய வீரர்கள் முன்னேறுகின்றனர். போர்க்களத்தில் தோல்வி யடைந்து பின்வாங்கிய எதிரிப்படைகளில் சிலர் உதிரியாகத் திரிந்த வண்ணம் திடீரென அவர்களின் முன் தோன்றுகின்றனர். இங்கே பயிற்சிக் களத்தில் மாணவனிடம் காணப்பட்ட அதே வெறியும், கோபமும், முகமாற்றமும், ஆவேசமும் அங்கே இந்திய வீரனிடம் காணப்படுகின்றன. ஆனால் எதிரேயுள்ள எதிரி முன் போல் ஒரு பொம்மையல்லன். பொம்மைக்கும் இவனுக்கும் இடையே எண்ணற்ற வேறுபாடுகள் இருக்கின்றன. இங்கே எதிரி இந்தியனின் திடீர் தாக்குதலைக் கண்டு திகைக்கிறான். அதைக் கண்டு எதிரி மிரண்டு, அதே நேரத்தில் தான் தப்பு வதற்கான வழியையும் நாடுகின்றான். அவன் கண்ணில் அச்சம் தெரிகிறது. முகம், இறந்து விடுவோம் என்ற அச்சத்தால் வெளிறி இருக்கிறது. மறுகணத்தில் எதிரி சூழ்நிலைக்குத் தக்க வாறு தப்பித்து வீரனின் துப்பாக்கியைப் பிடித்துக்கொண்டு போரிடுகிறான். இறுதியில்தன் உயிரைக் காக்கப் போராடுகிறான்.

பொம்மைக்கும் மனிதனுக்கும் இடையே எத்தனை வேறு பாடுகள்! சமூகம் என்பது ஒரு தனிப்பட்ட பொம்மை போன்றதும் அன்று; பல பொம்மைகளைப் போன்ற ஒரு கூட்டுத் தொகுதியும் அன்று. தனிமனிதனுக்கும் மற்றவனுக்கும் இடையே எண்ணற்ற செயல்கள் தோன்றுகின்றன. எண்ணற்ற வழிகளில் எண்ணற்ற தொடர்புகளில் எண்ணிலடங்கா நோக்கங்களில் அச் செயல்கள் எழுகின்றன. எப்படி, ஏன், எந்த நோக்கில் அவை எழுகின்றன

என ஆராய்ந்து அதன்வழிச் சமூகத்தில் எழும் பிரச்சினைகளைப் புரிந்துகொள்ள முற்படுவது சமூக உளவியலாகும்.

**சமூகத்தின் உளவியல் அடிப்படை**

சமூக உளவியல் என்றவுடன் மக்களிடை வினைபுரிவதே நினைவிற்கு வருகின்றது. ஆனால் சமூகம் என்பதற்கு இப் பொருளுடன் இன்னும் வேறு பொருள்களையும் சமூக உளவியல் எடுத்துக் காட்டுகிறது. மக்கள் மட்டுமல்லாமல் அவர்களிடை நிலவும் எண்ணற்ற தொடர்பால் ஏற்படும் பின்னல் அமைப்பும், சமூகத்தின் குறியீடுகளும், அடையாளச் சின்னங்களும், தேசியப் பாடல்கள், கொடிகள் முதலியனவும் சமூகத் தூண்டல் என்றே கருதப்படுகின்றன. மேலும் மன்றங்கள், பள்ளிகள், குழுக்கள், சபைகள் போன்ற நிறுவனங்களும் சமூகத்தின் அங்கங்களாகக் கருதப்பட்டுத் தனியவன் இவற்றுடன் தொடர்புகொள்வது ஒருவன் சமூகத்துடன் தொடர்புகொள்வதாகச் சமூக உளவியல் கருதுகின்றது. எனவே சமூக உளவியலில் 'சமூகம்' என்பது மக்கள் கூட்டம் என்பதனையும் அவர்களிடையே நிலவும் எண்ணற்ற தொடர்புகளையும் சமூகக் குறியீடுகள், அடையாளச் சின்னங்கள், நாட்டுப் பாடல்கள், நிறுவனங்கள் போன்றவற்றையும் குறிக்கும்.

தனிமனிதனின் நடத்தை, அனுபவம் ஆகியவை மற்றவர்களுடன் இணையும்போதோ, குழுக்கள், கழகங்கள் போன்றவற்றைச் சார்ந்திருக்கும்போதோ அத் தனிமனிதன் நடத்தையில் ஏற்படும் மாற்றங்களை அறிவியல் முறையில் ஆராய்வது சமூக உளவியலாகும். அதனுடன் தனிமனிதன் நினைவும், உணர்வும் எவ்வாறு மற்றவர்களின் முன்னிலையில் பாதிக்கப்படுகின்றன என்பதைப் புரிந்துகொண்டு விளக்கமாக எடுத்துரைக்கின்றது. 'மற்றவர்களின் முன்னிலை' என்பது புறச் சூழ்நிலையாகவோ, அகச் சூழ்நிலையாகவோ இருக்கலாம். தன் குடும்பத்தினருடன் தனித்து உரையாடும் ஒருவன், தனது பக்கத்து வீட்டாரோடு சண்டையிடும் மற்றொருவன், தேசியக் கீதத்தை கேட்டதும் எழுந்து நின்று மரியாதை செலுத்தும் இன்னொருவன் ஆகிய அனைவரும் இத்தகைய புறச் சூழ்நிலையில் சமூக நடத்தையில் ஈடுபடுகின்றனர். இங்கே இவர்களுடைய செயல்கள், நடத்தைகள், இவர்களிடையே நிகழும் சமூக நிகழ்ச்சிகள் போன்றவை நம்மால் எளிதில் புரிந்துகொண்டு ஆராயப்படுகின்றன.

**அகச் சூழ்நிலை**

சமூக நடத்தை புறச் சூழ்நிலையில்தான் நடைபெறுகிறது என்று நாம் கருத வேண்டியதில்லை. தனித்திருக்கும் ஒருவன்

தன் அறையில் அமர்ந்து சிந்தித்தபடி தன் நண்பரையோ உறவினரையோபற்றி எண்ணும்போது, அவன் சமூக நடத்தையில் ஈடுபடுகின்றான். தனித்திருக்கும் அவன் ஒரு சிறிய காகிதத்தில் தன் எண்ணங்களை எழுதி அது அச்சேறிச் செய்தியாக வெளிவரும்போது அவ் விதழ்களைப் படிக்கும் அனைவருடனும் அவன் நேருக்கு நேர் நின்று பேசுவதாகத்தான் கொள்ள இயலும். ஆயினும் அவன் எதிரே வேறு ஒருவரும் இல்லை என்பது உண்மை. யாரும் நேரடியாக இவனுடன் தொடர்புகொள்ளவில்லை. எனினும் அவனுடைய கருத்துகளில் பலர் பங்கு பெறுகின்றனர். அப் பங்கு காரணமாகப் படிப்பவர்களின் நடத்தையில் மாற்றம் ஏற்படுகிறது. அதனால் மக்களின் நடத்தையில் அவ் வெழுத்தாளன் மாற்றத்தைத் தோற்றுவிக்க முயல்கிறான். இதைச் சமூக நடத்தையில்லை என்று நாம் மறுப்பதற்கில்லை. சான்றாக, ஒரு செயலைச் செய்யக் கருதும் ஒருவன், தனித்து அது பற்றிச் சிந்திக்கையில் அவனது தாய் தந்தையரின் பெருமையும், அவன் செயலால் அவர்களுக்கு மட்டுமன்றி அவனது உடன் பிறந்தோருக்கும் உடன் உறைவோருக்கும் ஏற்படக்கூடிய விளைவுகளையும்பற்றிச் சிந்திக்கிறான். அவன் நூல்களில் பயின்ற அறநெறிக் கருத்துகளும், பெரியோர் வாயிலாகக் கேள்வியுற்ற நீதிநெறிகளும் இப்போது அவன் சிந்தனையை வழிப்படுத்த முயல்கின்றன. அவன் பயின்ற பள்ளி, கல்லூரி போன்றவற்றின் பெருமையும் அவன் வழி வழி வந்த பெருமையும், மரபு பண்புகளும் அவனது சிந்தனையைத் தூண்ட அவன் அந் நிமிடத்திலேயே தான் செய்யவிருந்த செயலைத் தீயது என நினைத்துக் கைவிடுகிறான். இங்கே இவன் நேரடியாகச் சமூகத்துடன் தொடர்புகொள்வதால் அவன் நடத்தையில் ஒரு மாற்றம் ஏற்பட ஏதுவாகின்றது. எனவே, இச் சூழ்நிலையை நாம் சமூகத்தின் அகச் சூழ்நிலை என்று கூறுகின்றோம். எனவேதான், தனியவன் ஒருபோதும் தனித்திருப்பதில்லை; சமூகத்துடன்தான் இருக்கிறான் என்று உளவியலார் கூறுகின்றனர்.

சமூக உளவியல், தனிமனிதன் புறச் சூழ்நிலையில் சமூகத்துடன் கொள்ளும் தொடர்பை மட்டுமன்றி, அகவழியில் நிகழ்த்தும் சமூக நடத்தையையும் ஆராய்கின்றது. பொதுவாகக் கூறுமிடத்து இந்தச் சமூக நடத்தைகளை நான்கு வகைகளாகப் பிரிக்கலாம்:

**1. தனியனுக்கும் சமூகப் பொருள்களுக்கும் இடையே நிகழ்வன**

சமூகத் தொடர்பு என்பது ஒரு தனியனுக்கும் அவனைச் சார்ந்த ஏனையவருக்கும் இடையே நிகழும் தொடர்புமட்டுமன்று. சமூகத் தூண்டல்களான தேசியக்கொடி, நாட்டுப்பாடல்

கள், குறியீடுகள், சின்னங்கள் முதலியவற்றுடன் கொள்ளும் தொடர்பையும் குறிக்கும்.

**2. தனியனுக்கும் தனியனுக்கும் இடையே நிகழ்வன**

தனித்திருக்கும் ஒற்றையடிப்பாதை ஒன்றில் எதிரெதிரே வரும் இருவர் எவ்விதப் பேச்சுமின்றி அவரவர் வழியே சென்று கொண்டிருக்கின்றனர். ஆங்கே சமூக நடத்தை இடம் பெறுவதில்லை. ஆனால், ஒருவர் மற்றவரைக் கண்டதும் மெய்ப்பாடு கொள்வதோ பேசுவதோ நடைபெறுமானால், அங்கே ஒரு சமூக நடத்தை இடம் பெறுகிறது. இவ் விருவரும் ஒரே ஒரு விநாடி மட்டும் சந்தித்து, புன்னகை செய்து அல்லது பேசிவிட்டுக் கடந்து சென்றால் கூட அஃது ஒரு சமூக நடத்தையாகும்.

**3. தனியவனுக்கும் குழுவுக்கும் இடையே நிகழ்வன**

தனித்து வரும் ஒருவன் தன்னெதிரே அமர்ந்திருக்கும் ஒரு குழுவினரைக் கண்டதும் அவர்களில் ஒருவனை இவன் அழைப்பதனால் அல்லது அவர்கள் இவனை அடையாளம் கண்டு பெயரிட்டு அழைத்து வரவேற்பதனால், தனியனுக்கும் ஒரு குழுவினருக்கும் இடையே சமூக நடத்தை ஏற்படுகிறது. அத் தனியனின் வரவில் அக் குழுவினரிடம் ஒரு மாற்றமோ தூண்டுதலோ நிகழலாம்; அல்லது அக் குழுவினரைக் கண்ணுற்றதும் அத் தனியனின் உள் நடத்தைகள் மாறுபட்டும் காணலாம். இங்குத் தனியனுக்கும் குழுவுக்கும் இடையில் சமூக நடத்தை நிகழ்வதாகக் கொள்ள முடிகிறது. ஓர் ஆசிரியருக்கும் பல மாணவர்களுக்கும் இடையே ஏற்படும் சமூக நடத்தையைத் தனியனுக்கும் குழுவுக்கும் இடையே நிகழும் நிகழ்ச்சிகளுக்குச் சான்றாகக் கூறலாம்.

**4. குழுக்களிடையே நிகழ்வன**

குழுவுக்கும் குழுவுக்கும் கீழ்க்கண்ட வகைகளில் சமூக நடத்தை நடைபெறுகிறது:

(1) ஒரு குழுவினர் இன்னொரு குழுவினருடன் தொடர்பு கொள்வது.

(2) ஒரு குழுவிலுள்ள ஒருவர் இன்னொரு குழுவிலுள்ள எல்லோரிடத்தும் தொடர்புகொள்வது.

(3) ஒரு குழுவினர் இன்னொரு குழுவிலுள்ள ஒருவருடன் தொடர்புகொள்வது.

(4) ஒரு குழுவிலுள்ள ஒருவர் இன்னொரு குழுவிலுள்ள ஒருவருடன் தொடர்பு கொள்வது.

எடுத்துக்காட்டாக இச் சமூக நடத்தையை நாம் இரு தனிப் பட்ட விளையாட்டுக் குழுக்கள் ஓர் இடத்தில் விளையாடச் சந்திக்கும்

பொழுதும், பல்வேறு நாட்டுப் பிரதிநிதிக் குழுக்கள் ஓர் இடத்தில் தங்களுடைய கருத்துகளைப் பரிமாறிக் கொள்ளும் பொழுதும் ஏற்படக் காணலாம்.

**சமூக உளவியலின் பயன்கள்**

மனிதனை எதிர்நோக்கியுள்ள பிரச்சினைகளில் முக்கியத்துவம் வாய்ந்தது, தனித்துள்ள ஒருவன் எங்ஙனம் பிறரோடு ஒன்றி வாழக் கற்றுக்கொள்கிறான் என்று ஆராய்வதாகும். நாம் மனித சமுதாயத்தின் புறப் பிரச்சினைகளை மிக விரைவாக ஆராய்ந்து, தீர்வு கண்டிருக்கின்றோம். மக்கள்தொகையின் பெருக்கத்திற்கு ஏற்பத் தேவைக்குமேல் உணவு, உடை, உறைவிடம் ஆகியவற்றைப் பெற முயன்று வெற்றி கண்டு வருகிறோம். ஆனால், இவ்வாறு மனிதனின் புறவாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு வழிமுறைகளைக் கண்ட நாம் அவனுடைய உள வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கும் ஒரு தீர்வினைக் காண்பதில் முழு வெற்றி காண முடியவில்லை எனலாம். தனித்துள்ள ஒருவன் எங்ஙனம் பிறரோடு ஒன்றி வாழ்வது? அவ்வொன்றுதல் எத்தகைய வழியில் ஏற்படும்? அஃது அவனால் ஏன் இயலவில்லை? அஃது இயலும் வழியில் உள்ள தடைகளை நீக்கி வெற்றி காண்பதெங்ஙனம்? இவைகளுக்கான பதில்களைக் காண்பது சமூக உளவியலின் நோக்கம். நம் வாழ்க்கை நம் சமூகத்துடன் நெருங்கிய தொடர்புகொண்டுள்ளது. இத் தொடர்பு பொதுவாக வெளிப்படையாகத் தெரியாமல் மறைந்து இருக்கிறது. ஆயினும் இஃது எப்பொழுதும் நம் வாழ்க்கையைப் பாதித்துக்கொண்டுதான் இருக்கிறது. இத்தகைய தொடர்பு தனியன் குடும்பத்தில் காணப்படலாம்; அல்லது அவன் சுற்றத்தாருடனும், சுற்றுப்புறத்தாருடனும் கொண்டுள்ள தொடர்புகள் வழியாக எழலாம். அல்லது அவன் தன் மாவட்டம், நாடு முதலியவற்றுடன் கொண்டுள்ள இடைவினையால் ஏற்படலாம். இத் தொடர்புகளால் தனியனின் வாழ்க்கையில் பல சிக்கலான கட்டங்கள் உருவாகின்றன. இத்தகைய சிக்கல்கள் சமூகப் பிரச்சினைகளுக்கு அடிப்படைகளாக அமைகின்றன.

ஒரு வட்டாரத்தில் வாழும் ஒருவன் தனித்து வாழ்ந்தாலும், அந்த இடத்தின் அமைப்பாலும் அல்லது சுற்றுப்புறச் சுகாதார வசதிகளாலும் பாதிக்கப்படுகிறான். குடிசைகள் நிறைந்த இடத்தில் வாழும் ஒருவன், மழையாலும், பிற இயற்கை நிகழ்ச்சிகளாலும் பாதிக்கப்படுகிறான். அப்போது தானும் தன்னை ஒத்த பிறரும் இவற்றினின்றும் விடுபடவேண்டுமென முயல்கிறான். இவ்வாறு தனியனும் அவனை ஒத்த பலரும் சேர்ந்து எடுக்கும்

சமூக நடவடிக்கைகளின் கூட்டு முயற்சிகளின் விளைவே குடிசை மாற்று வாரியம் போன்ற அமைப்புகள் தோன்றக் காரணமாகும்.

தன்னுடைய வாழ்க்கைத்தரத்தை உயர்த்த எண்ணும் ஒருவன், மக்கள் பெருக்கம் ஒரு பெரும் சமூகப் பிரச்சினையாக இருப்பதால் குடும்பக் கட்டுப்பாடு போன்ற திட்டங்களில் தன் கவனத்தைச் செலுத்துகிறான். நாம் இருவர் நமக்கு இருவர் என்றிருந்தால் மட்டும் போதாது, தன் சமுதாயத்தில் உள்ள பிறரும் இதைக் கடைப்பிடிக்க வேண்டும் என்னும் கொள்கையில் பிறருடைய கவனத்தையும் திட்டங்களின்பால் செலுத்துமாறு செய்கின்றான். இதுபோலவே, வெள்ளப் பெருக்கைக் கட்டுப்படுத்த ஒரு தனியன் தலைமையில் ஆயிரக்கணக்கான மக்கள் செயற்படுவது; உணவு உற்பத்தியைப் பெருக்கி உணவுப் பற்றாக் குறையைப் போக்கும் முயற்சியில் மக்களை ஊக்கி அவர்களைப் 'பசுமைப் புரட்சி' (Green Revolution) முயற்சிகளில் ஈடுபட ஒரு தனியன் முயல்வது; மற்றும் தொழிற்சாலைகளின் உற்பத்தியைப் பெருக்கி மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முயல்வது— ஆகிய நிகழ்ச்சிகள் யாவும் எவ்வாறு ஒரு தனிமனிதன் சமூகப் பிரச்சினைகளால் பாதிக்கப்பட்டு அவற்றுக்கான தீர்வுகளைக் காணும் முயற்சிகளில் ஈடுபடுகிறான் என்பதை ஒருவாறு விளக்கும்.

தனிமனிதன் எப்போதும் தனித்திருப்பதில்லை; பிறரைச் சார்ந்தும், பிறருடன் ஒன்றியும் எண்ணற்ற வழிகளில் பிறருடன் தொடர்புகொண்டும் ஒரு சமூக உறுப்பினனாகவே வாழ்கிறான். தனியன் ஒருவன் தான் ஏற்றுள்ள தொழிலில் நல்ல வெற்றியைக் காண்பதென்பது அந்தத் தொழில் வழி அவன் நல்ல வாடிக்கையாளர்களைப் பெறுவதையும் அவர்கள் ஆதரவில் தன் விற்பனையைச் சிறப்பாக நடத்துவதையும் பொறுத்ததாகும். எனவே, ஒருவன் பிறரோடு கொண்டுள்ள தொடர்பில் அவர்களின் மனநிலையை அறிந்து அதற்கேற்பச் செயற்படுபவனாக இருக்க வேண்டியது அவசியமாகின்றது. இதற்குச் சமூக உளவியல் அறிவுப் பெரிதும் பயன்படுகிறது.

இவ்வாறே ஒரு சிறந்த உளவியல் ஆசிரியர் தம் துறையில் வெற்றி காணப் புள்ளியியல், உடலியல், மானிடவியல் போன்ற ஒத்த துறைகளிலும் புலமை கொண்டிருத்தல் அவசியமாகிறது. அவ்வாறே ஒரு மருத்துவர் ஒரு நோயைத் தீர்க்க நோயாளியின் உளப்போக்கையும் அவரைச் சார்ந்துள்ள சமூகத்தின் இயலையும் பற்றி நன்கு தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. இவ்வாறே சாதாரணமாக ஒருவர் தம்மையே அறிவதுடன், தம் சூழ்நிலை

யையும் உளவியலின்மூலம் அறிந்து, மற்றவர்களுடன் சிறந்த முறையில் தொடர்புகொள்ள சமூக உளவியலைக் கற்க வேண்டியது இன்றியமையாததாக இருக்கின்றது.

அறிவியலின் நோக்கம் இவ் வுலகத்திலுள்ள எண்ணற்ற இயற்கைச் சக்திகளையும் அதன் அடிப்படையில் இயங்கும் தத்துவங்களையும் விளக்குவதாகும். சமூக உளவியல் ஓர் அறிவியல் என்பதால் தனியன்களிடையே நிகழும் தொடர்பில் ஏற்படும் விளைவுகளை எடுத்துக் கூறுவதோடு இத்தகைய தொடர்புகளுக்கு அடிப்படையான விதிகளை விவரிக்கும் பணியையும் செய்கின்றது. மேலும் சமூகத்தில் ஒரு மனப்போக்கினை உருவாக்குவதற்கு ஒரு சிலவிடத்து அம் மனப்போக்கில் மாற்றம் நிகழச் செய்து, வேண்டும் விளைவை ஏற்படுத்திச் சமூகத்தை ஒழுங்குபடுத்துதல் போன்ற பணிகளில் சமூக உளவியல் ஈடுபடுகின்றது. சமூக உளவியல் ஆராய்ச்சியாளர்கள், எவ்வாறு தனியன் ஒரு குழுவின் செய்கையை உணர்ந்து கொள்ளுகிறான், அல்லது ஒரு குழுவோடு தன்னை இணைத்துக் கொள்ளுகிறான் என்று நமக்கு விளக்குகின்றனர்.

மேலும், பகை உணர்வுகள் எப்படி உருவெடுக்கின்றன, குறிக்கோள்களும் நடைமுறை வாழ்க்கையும் எங்கு, ஏன் மாறுபடுகின்றன என்று நமக்குக் கூறுகின்றனர். சமூக உளவியலின் மூலம் சமூக அமைப்பில் ஒரு நிலையான தன்மை இல்லாமையினையும், சமூக மாற்றத்தையும் நாம் அறிந்துகொள்ள இயலும். சமூகத்திடையே எழும் பிரச்சினைகளுக்கு இதன்வழி நாம் ஒரு தீர்வினைக் காண இயலும் என்பதோடு, பொதுமக்களின் கருத்தினை அறிந்து அவர்களை மேம்பாடு அடையச் செய்ய நம்மால் இயன்றதைச் செய்வதற்கும் முடியும். இங்கு நாம், நம்மை நம் சமூகப் பிரச்சினைகளிலிருந்து பாதுகாத்தவராகின்றோம்.

சமூக உளவியலைப பற்றிய அறிவு ஆக்கத்திறன் (creativity) பற்றிய இயலுக்கும் அடிப்படையாக அமைகின்றது. ஆக்கத்திறனை நிர்ணயிக்கின்ற காரணிகளில் சூழ்நிலையும் ஒன்று. இந்தச் சூழ்நிலைகளின் விளைவாகவே ஒரு தனிமனிதன் சிறந்த ஆளுமைத் தன்மையையும் அறிவு ஆற்றலையும் பெறுகின்றான். இதுவே அவனின் தோன்றுகின்ற ஆக்கத்திறனுக்கு உருவாக்கம் கொடுக்கின்றது. இங்ஙனம் ஆக்கத்திறனை உருவாக்குகின்ற அகக் காரணிகளுக்குச் சமூக உளவியலின் அறிவு மிகவும் தேவைப்படுகிறது.

சமூக உளவியல் அறிவு ஆக்கத்திறனை ஊக்குவிக்கின்ற புறக் காரணிகளையும் உருவாக்குகின்றது. கல்வி, பயிற்சித் திட்

டங்கள், தொழில் துறை, கல்லூரித் திட்டவமைப்புகள் போன்றவைகள் தனிமனிதனிடம் புதைந்து கிடக்கும் ஆக்கத்திறனை வெளிக்கொணர முயல்கின்றது. இங்கே சமூக உளவியல் அறிவும், அம் முயற்சிகளை வெற்றிகரமாகச் செயற்படுத்த உதவுகிறது. இவைகளையெல்லாம் எண்ணும்போது, சமூக உளவியலைக் கற்பதும் அதன் அறிவினைப் பெறுவதும் ஒரு தேவையைப் பூர்த்தி செய்யும் அவசியம் என்பதைவிட முக்கியமாகத் தெரிந்து கொள்ளவேண்டிய ஒரு படிப்பினையுமாகும் என்பது நமக்குத் தெளிவாகின்றது.

**சமூக உளவியலின் தோற்றமும் வரலாறும்**

சமூக உளவியல் எப்போது தோன்றியது எனத் திட்டவட்டமாக ஆராய்வது எளிதன்று. மனிதன் குறியீடுகள், அடையாளங்கள், சைகைகள் ஆகியவற்றின்வழித் தன் மனக்கிடக்கையை மற்றவர்களுக்கு உணர்த்தியபோதே அதாவது மொழி என ஒன்று தோன்றுவதற்கு முன்னரே சமூகம் எனும் அமைப்புத் தோன்றியது எனலாம். ஆங்கே சமூக நடத்தைகள் துளிர்க்கத் தொடங்கி ஒருவரை ஒருவர் அறிந்து, புரிந்துகொண்டு, தொடர்பினராய் வாழத் தலைப்படவே சமூக உளவியலும் தோன்றியது எனலாம். எனவே, சமூக உளவியலின் வரலாற்றை ஆராயுமிடத்துப் பொதுவாக ஒரு குறிப்பிட்ட நிலையிலோ, குறிப்பிட்ட ஒருவரிடமோ தொடங்கியதாக நாம் கொள்வதற்கில்லை.

இன்றைய சமூக உளவியலை ஆராயும்போது பிளேட்டோ (Plato) முதல், பென்தாம் (Bentham) வரை இருந்த அரசியல், தத்துவச் சிந்தனையாளர்களின் சிந்தனைகளே இதற்கான தோற்றிடங்களாகக் காணப்படுகின்றன. இவ் வாசிரியர்கள், மக்களைப் பற்றியும், மக்கள் கூட்டங்களைப்பற்றியும், இம் மனிதக் கூட்டங்களையெல்லாம் ஓர் ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்து திறமையாக ஆளும் செயலினைப்பற்றியும் சிந்தித்த, பேசிய, எழுதிய கருத்துகளே பின்னர் சமூக உளவியலாகத் தோன்றியது எனலாம். இருப்பினும் சமூக உளவியலின் உண்மையான வளர்ச்சி முதல் உலகப் போருக்குப் பின்னர்தான் தோன்றத் தொடங்கியது. இதைத் தொடர்ந்து, ஹிட்லரின் கை ஓங்கல், யூதமக்கள் ஒடுக்கப்படல், இனவெறி தலைவிரித்தாடல், இரண்டாம் உலகப் போரில் அணு ஆயுதங்களின் வளர்ச்சி போன்ற இன்னும் பிற நிகழ்ச்சிகளும் சமூக அறிவியல்களைப் பயமுறுத்தத் தொடங்கின. இப்போதுதான் தனிமனிதன் உரிமைகளைப் பாதுகாப்பது எப்படி என்ற கேள்வி எழுந்தது. விஞ்ஞானத்தால் இதற்கு ஒரு வழியினைக் கூற இயலுமா எனவும் சிந்தித்

தனர். கண்ணுற்ற போதுதான் விஞ்ஞானத்தால் கூற இயலாது என உளவியலார், குறிப்பாகச் சமூக அறிவியலாளர்கள் சிந்திக்கத் தொடங்கினர். அந்த நேரத்தில்தான் சமூக உளவியலின் பல்வேறு அடிப்படைக கோட்பாடுகள் உருவெடுத்தன. அவை கொள்கைகளாகப் பல்வேறு சிந்தனையாளர்களின் மூலம் வெளிவரத் தொடங்கின.

'சமூகம்' என்பது என்ன? சமூகத்தினர் தங்களை ஆளும் உரிமையினைத் தனியன் ஒருவனிடம் ஒப்படைக்கின்றனர். அத் தனியன் சிறப்பாக அரசாட்சி செய்யும்போது எத்தகைய ஆளுமைத் தன்மைகளை அவன் பெற்றிருக்கிறான். அத்தகைய ஆளுமைத் தன்மைகளைப் பிறன் ஒருவன் பெறுவது எங்ஙனம்? சமூகத்தில் பிரச்சினைகள் எங்கே உருவெடுக்கின்றன? எந்தச் சூழலில், திறமையான தலைவர்கள் எவ்வாறு தோன்றுகின்றனர்? அவர்கள் பிரச்சினைகளுக்கு எவ்வாறு தீர்வு காண்கின்றனர்? அதன் வழி எவ்வாறு பொது மக்களின் திட்ட வட்டமான கருத்தினை மாற்றுகின்றனர்? என்பனவும் இன்னும் இவை போன்ற பல்வேறு கட்டங்களில் சிந்தனைகள் செயல்பட அவற்றைக் கூட்டுமொத்தமாகச் சமூக உளவியல் என்ற ஓர் இயல் தோன்றத் தொடங்கியது.

இவையெல்லாம் சமூக உளவியல் துறையில் ஆரம்பகாலத் தோற்றங்களாகக் கருதப்படுகின்றன. பின்னர்ப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஃபிரஞ்சுக் கணித இயல் நிபுணரும் தத்துவ ஞானியுமான அகஸ்டே காம்டே (Aguste Comte) என்பவர்தாம் 'சமூக உளவியல்' எனும் ஒரு புத்தகத்தை எழுதப் போவதாகக் கூறினார். அதை அவர் முடிக்கும் முன்னரே இறந்து விட்டார். என்றாலும், அதில் அவர் மனிதனே சமூகத்திற்குக் காரணமும் அதன் பின் விளைவும் என்று காட்ட முயன்ற கருத்தே, பிற்காலத்திய சமூக உளவியலுக்கு அடிப்படைக் கருவாக இருக்கின்றது. அதற்கடுத்த நூற்றாண்டில் சமூக உளவியலைப் பயின்றோர்ச் சமூக நடத்தையை அறிவியல் வழி நிர்ணயிக்க முற்பட, ஆங்கே உண்மையான வளர்ச்சித் தோன்றத் தொடங்கியது.

இதற்கு முன்னரே ஜெர்மெனியில் 1860-ல் மக்கள் உளவியல் (Folk Psychology) ஆர்வம் காட்டிப் பத்திரிகைகளில் எழுதத் தொடங்கினர். வில்ஹெம் ஊண்ட் (Wilhelm Wundt) பரிசோதனை உளவியலின் தந்தை இப் பத்திரிகையில் நிறைய எழுதினார்.

சார்லஸ் டார்வின் (Charles Darwin) என்பார் 1871ஆம் ஆண்டில் தனது மனிதன் (Decent of Man) எனும் புத்தகத்திலும், 1893ஆம் ஆண்டில் ஹெர்பர்ட் ஸ்பென்சர் (Herbert Spencer) தனது 'சமூக இயலின் ஆராய்ச்சி' (Study of Sociology) எனும் புத்தகத்திலும் சமூகக் கோட்பாடுகளைப் பற்றி எழுதியுள்ளார்கள்.

வில்லியம் மெக்டுகல் (William McDougall) என்ற ஆங்கில நாட்டு உளவியலார் தன்னுடைய 'சமூக உளவியலுக்கு அறிமுகம்' (Introduction to Social Psychology) என்ற நூலை 1908ஆம் ஆண்டில் வெளியிட்டார்.

மெக்டுகலின் (McDougall) சமூக உளவியற் கொள்கை— 'சமூக நடத்தையை மனிதனின் புலன் வழித் தூண்டுதலின் மூலம் விவரிக்கலாம்.' என்ற இன்றைய உளவியல் கருத்துக்கு முரண்பட்ட ஒரு கோட்பாட்டினைக் கொண்டிருந்தது. தொடக்கத்தில் இக் கோட்பாடு வரவேற்கப்பட்டது என்றாலும் இருபதாண்டுகளுக்குள் இக் கோட்பாடு கைவிடப்பட்டு, 1924ஆம் ஆண்டில் ஆல்போர்ட் (F. H. Allport) என்பவரின் சமூக உளவியல் நூல் தோன்றியது. இதுவே சமூக உளவியலின் புதுமைக் காலம் எனக் கருதப்படுகிறது. ஆல்போர்ட், மெக்டுகலின் தனிமனிதனின் வழிச் சமூகத்தை ஆராயும் முறையினை ஒத்துக் கொண்டார். அக்காலத்திய ஐரோப்பிய சமூகவியலாளர்கள் 'குழு மனம்' (Group mind) மூலம் ஆராய்தல் என்பதற்கு எதிர்ப்பாகக் கூறப்பட்ட இக் கருத்தினை ஆல்போர்ட் ஏற்றுக்கொண்டரெனினும், மெக்டுகலின் தனிமனிதனின் புலன் வழித் தூண்டுதல்கள் மூலம் சமூக நடத்தையை ஆராய முடியும் என்பதை மறுத்தார். ஏனெனில் தனி மனிதனின் புலன் வழித் தூண்டுதல்கள் பின்னர் நிலைவழிக் கட்டுப்படுத்தலின் மூலம் உருத் தோற்றம் செயல்படுகின்றது. எனவே ஆல்போர்ட் என்பாரின் நூலே சமூக உளவியலில் இரு திருப்பு மையமாகக் கருதப்படுகின்றது. இது தனது கோட்பாட்டில் உறுதியாக நின்றதுடன் கோட்பாட்டின் முடிவுகளைப் பரிசோதனை வழியும், உற்று நோக்குதல் வழியாகவும் (Observation) ஆராய்ந்து நிலை நிறுத்தியது. இதற்கடுத்துத் தொடர்ந்து எண்ணற்ற படைப்புகள் தற்காலத்தில் வெளி வந்துள்ளன. எனினும் அடிப்படைத் தளமாக இருந்த ஆல்போர்டின் ஆராய்ச்சி முடிவுகள் சமூக உளவியலின் வரலாற்றில் இடம் பெறுகின்றது.

இந்தியாவில் சமுக உளவியலில் 527 ஆராய்ச்சிகள் நடைபெற்றிருக்கின்றன என்று ராத் (Rath) என்ற இந்திய உளவியலார் அளவீடு செய்துள்ளார்.

இந்தியாவில் நடைபெற்றுள்ள சமூக உளவியல் ஆராய்ச்சிகளை நான்கு கட்டங்களில் நடைபெற்றுள்ளதாகப் பகுக்காலாம். 1940ஆம் ஆண்டிற்கு முன் 55 இதழ்கள் சமூக உளவியலின் எட்டுத் தலைப்புகளைத் தன்னுள் கொண்டு வெளிவந்தன. அதற்கடுத்த ஐந்தாண்டுகளில் 64 ஆராய்ச்சி இதழ்கள் வெளிவந்தன. ஆனால் 1950–60ஆம் ஆண்டுகளில் இவ் வெண்ணிக்கைகள் 102 ஆகவும் 1960–70ஆம் ஆண்டுகளில் 306 ஆகவும் பெருகின. இதனையே, கீழ்க் கண்ட பட்டியலில் ராத் (1970) சிறப்பாக விளக்கிக் காட்டுகின்றார்.

| ஆராய்ச்சிக்கு உட்பட்ட தலைப்புகள் | 1940-க்கு முன்னர் | 1940–49 | 1950–59 | 1960–69 | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| சமூகக் கலாசாரத் தோற்றங்கள் | 36 | 49 | 49 | 143 | 277 |
| மனப்போக்குகளும், கருத்துகளும் | 1 | 1 | 27 | 64 | 93 |
| குழு, தனிப்பட்டவர்கள் உள்ளிட்டவைகளின் அமைப்புத் தோற்றங்கள் | 5 | 3 | 14 | 49 | 71 |
| செய்தித் தொடர்புகள் (Communication) | 3 | 1 | 2 | 21 | 27 |
| கலை உணர்வுகள் சம்பந்தப்பட்டவை (Aesthetics) | 6 | 5 | 2 | 7 | 20 |
| பால் நடத்தைகள் | 3 | 5 | 1 | 0 | 9 |
| புகைத்தல், மருந்துகள், ஆல்கஹால் உபயோகித்தல் | 0 | 0 | 0 | 1 | 1 |
| வழி முறை இயல்கள் (Methodology) | 1 | 0 | 7 | 21 | 29 |
| | 55 | 64 | 102 | 306 | 5 |

மேலும் இந்தியாவில் சமூக உளவியலின் வளர்ச்சியைப் பற்றிச் சிந்திக்கும் காலை, மேலைநாட்டினருக்கு ஒப்ப, ஆங்கிலத்திலேயே சமூக உளவியல் நூல்களை எழுதியுள்ள பலர் நம் கண்முன் தோன்றுகின்றனர். முக்கர்ஜி சென்குப்தா என்பவர் சமூக

உள்வியல் எனும் நூலை 1928ஆம் ஆண்டில் வெளியிட்டார் இவரை அடுத்து பாட்கே என்பார் 1949ஆம் ஆண்டிலும், அக் கோல்கர் 1953ஆம் ஆண்டிலும், ஹால்யால்கர், ஜியந்தானி, காலே–எனும் ஆசிரியர்கள் 1956ஆம் ஆண்டிலும் தத்தம் நூல் களை வெளியிட்டனர். குப்புசாமியின் சமூக உள்வியலுக்கு ஓர் அறிமுகம் எனும் நூல் 1961 ஆம் ஆண்டில் வெளி வந்தது. ஆதி நாராயணனின் நூல் 1964ஆம் ஆண்டிலும் பாட்டியா'-வின் நூல் 1965ஆம் ஆண்டிலும் வெளி வந்தன. பெசண்ட் கீப்பர் ராஜ் என்பவர் தமிழில் 'சமூகத்தில் நாம்' எனும் நூலை 1961ஆம் ஆண்டில் வெளியிட்டார்.

இங்ஙனம் பலர் சமூக உளவியலின் வளர்ச்சிக்குத் தங்களின் அரிய படைப்புகளின் மூலம் உதவியுள்ளனர்.

**அதிகாரச் சுருக்கம்**

உளவியல் என்பது மனித உள்ளத்தைப் பற்றிப் படிப்பது. ஜே. பி. வாட்சனின் நடத்தைக் கொள்கையினர், இதை நடத் தையை ஆராயும் அறிவியல் எனப் பொருள் வரையறை செய் தனர். ஆதிகால மனிதனும் சமூகமாய் வாழ்ந்தான். ஆனால் இப்போதைய சமூக அமைப்பு அப்போது இல்லை. இச் சமூகத்தின் நடத்தையைப் பற்றிப் பயில்வது சமூக உளவியலாகும்.

சமூக அமைப்பின் தோற்றக் காரணத்தைப் பற்றிப் பிளேட்டோ, அரிஸ்டாட்டில், ரூஸ்ஸோ போன்றவர்கள், வேறு பட்ட கருத்தினைக் கொண்டிருக்கின்றனர். இவர்கள் தனியவன் ஏன் ஒரு சமூகமாய் ஒன்றி வாழ்கின்றான் என்பதற்குப் பல்வேறு விளக்கங்களைத் தருகின்றனர். சமூக உளவியல் மனிதனின் அகச் சூழ்நிலையிலும், புறச் சூழ்நிலையிலும் ஏற்படும் நடத்தை மாறுதல் பற்றிப் பயிலுகின்றது.

மனிதனின் புறவாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு நாம் தீர்வு களைக் கண்டுள்ளோம். மக்கள் தொகை பெருக்கத்திற்கேற்ப உணவு, உடை, உறைவிடம் ஆகியவற்றைப் பெற முயன்று வெற்றி கண்டுள்ளோம். ஆனால் அவனது அக வாழ்க்கைப் பிரச்சினைக்கு அவன் தன்னைச் சார்ந்துள்ள சமூகத்தோடு ஒன்றி வாழும்போது ஏற்படும் பிரச்சினைகளுக்கு நாம் இதுவரை ஒரு முடி வான தீர்வினைப் பெறவில்லை. தனியவன் தன் வாழ்க்கையில் சிறக்க அவனுக்குச் சமூகம் பற்றிய அறிவு மிகவும் தேவை. இதற்குச் சமூக உளவியல் நமக்கு உதவுகின்றது.

சமூக உளவியல் பிளேட்டோ முதல் பென்தாம் வரையிருந்த அரசியல் தத்துவச் சிந்தனையாளர்களின் சிந்தனைகளின் வழித் தோன்றியது எனலாம். இருப்பினும் முதல் உலகப் போரின் விளைவால் எழுந்த பிரச்சினைகளே சமூக உளவியல் தோன்ற அடிப்படைக் காரணங்களாய் அமைந்தன. பத்தொன்பதாம் நூற்றுண்டில் அகஸ்டே காம்டே சமூக உளவியலை ஒரு புத்தக மாக எழுதத் தொடங்கினுர். இதற்கு முன்னரே ஜெர்மெனியில் 1860-ல் நாட்டுப்புற மக்கள் உளவியலின் தந்தை வில்ஹெம் ஊண்ட் இப்பத்திரிகையில் நிறைய எழுதினுர். தொடர்ந்து சார்லஸ் டார்வின், ஹெர்பர்ட் ஸ்பென்சர், வில்லியம் மெக்டூகல் போன்ருேர் சமூக உளவியலைப்பற்றி எழுதினுர். மெக்டூகலின் 'உளவியலுக்கு ஓர் அறிமுகம்' எனும் புத்தகம் 1908-லும் ஆல்போர்ட்டின் புத்தகம் 1924-லும் வெளி வந்தன.

# 2. சமூக உளவியலின் புதிய பாங்கு

சமூக உளவியலின் வரலாற்றினை ஆராய்ந்தபோது 19ஆம் நூற்றுண்டில் மெக்டுகல், ஆல்போர்ட் எனும் இரு அறிஞர்களும், சமூக நடத்தையை எதன் வழி ஆராய்ந்து கூற இயலும் எனும் கூற்றில் மாறுபாடான கருத்தினைக் கொண்டிருந்தனர் எனக் கண்ணுற்ருேம். சமூக உளவியலில் புதிய பாங்குகள் (Modern trends) இஃது இடத்தினின்றே உருவாகத் தொடங்கின.

அக்காலத்திய ஐரோப்பிய சமூக உளவியலாளர்கள், சமூக நடத்தையைக் 'குழு மனம்' மூலம் ஆராய்தல் இயலும் என்று கூறினர். தனிமனிதனின் நடத்தையை ஆராய்ந்து சமூக நடத்தையை ஆராய்தல் இயலும் என மெக்டுகல் கருதினுர். இருப்பினும் தனிமனிதனின் நடத்தையை ஆராய அவர் புலன்வழித் தூண்டுதல்களை அடிப்படைக் காரணங்களாகக் கருதினுர். ஆனுல் ஆல்போர்ட் என்பார் இவர் கருத்தினின்று மாறுபட்டு, தனிமனிதனின் நடத்தைகளைப் புலன் வழித் தூண்டுதல் மூலம் ஆராய்வது இயலாது; ஏனெனில் அத் தூண்டுதல்கள் பின்னர் நிலைவழிக் கட்டுப்படுத்த பின்மூலம் (Conditioning) உருத் தேற்றம் பெறுகின்றன என்று கூறினுர். இருப்பினும் சமூகநடத்தையை, நிலைவழிக் கட்டுப்படுத்தலால் பாதிக்கப்படுகின்றன. முன்னிலைச் சக்தி மறிவினைகளால் (Prepotent reflexes) விளக்கலாம் என்பது அவரது கருத்து.

இவ்வாறு ஆரம்பத்தில் உளவியலார் உடலியற் கூற்றின் படி மனித நடத்தையை நிர்ணயிக்க முயன்று சமூகக் கலாசார அனுபவங்களைப் புறக்கணித்தனர். சமூக வியலாரோ உடலியற் கூறுபாட்டினைப் புறக்கணித்துச் சமூகத் தோற்றங்களுக்கும், நிலைமைகளுக்கும் முக்கியத்துவம் கொடுத்தனர். ஆனுல் பிற் காலத்திய சமூக உளவியலார் இவ்விரு கூற்றுக்களும் ஒரு சார் பான முடிவுகள் என்பதைக் கண்டு கொண்டனர். எனவே 19ஆம் நூற்றுண்டில் பால்டுவின் (Baldwin) என்பார் சமூக

நடத்தையை ஆராயும்போது மரபு வழியாக இளமையில் ஒருவன் பெற்றுள்ள சூழ்நிலை, மரபுக் கூறுகளின் அடிப்படையில் ஆளுமைத்தன்மை உருவாகிறதென்று விளக்கினர்.

அவர் தனியன் பிறந்துள்ள சமூகம் என்பது தனித் தனியாக உயிர்வாழும் ஒரு கூட்டமைப்பன்று. ஆனால் அஃது ஒரு தனித்த அறிவமைப்பின் விளைபொருள், உளவியல் தொடர்பால் ஒன்றுக் கொன்று பின்னிப் பிணைந்திருக்கும் ஒரு வலையினை ஒப்பது. இந்தச் சூழ்நிலையின் அனுகூலத்தில் ஒரு தனியவன் வார்க்கப் பட்டு உருவாக்கப்பட்டு முதிர்ச்சி அடைகிறான். அவன் இப்போது சமுதாய இடைவினைப் பின்னலில் நுழைந்து, தனக்கென ஒரு இடத்தை ஏற்படுத்திக் கொள்கிறான். பின் அதன்வழிப் பிறருக்குத் தன் தன்மையைக் காட்டி அறிமுகமாகித் தன் வளர்ச்சியில் தனக்கும், தன்னைச் சார்ந்த சமூகத்தினருக்கும் ஒரு பயனை விளை விக்கின்றான். இத்தகைய தனியவர்களிலே சமுதாயம் தனக் கென ஓர் அறிவினை, ஒழுக்கச் சட்டங்களை, மதிப்புகளை ஏற் படுத்திக் கொள்கிறது. சமூகமே ஒரு தனிமனிதன் போன்று அதன் தனி வாழ்க்கையில் ஒரு தனியவனாகி இயங்கத் தொடங்கு கிறது. எனவே இந்தச் சமூக நடத்தையை ஆராயத் தனிமனி தனின் நடத்தை ஆராயப்படவேண்டும். தனிமனிதனின் நடத்தை, மரபுப் பண்பையும், வளர்ந்த சூழ்நிலையையும் பொறுத்து இருக்கின்றது. எனவே சமூக நடத்தையை, மரபுப் பண்புகளின் மூலமும், வளர்ந்த சூழ்நிலை மூலமும் ஆராய்தல் இயலுமே யன்றி மற்ற வழிகளில் ஆராய்தல் என்பது இயலாது.

இன்றைய சமூக உளவியல், அறிவியல் முறையில் சட்ட திட்டங்களை ஏற்படுத்தப் பிரச்சினைகளைப் பரிசோதனை முறை யில் அணுகி ஒரு கட்டுப்பாட்டிற்குள் வைத்து ஆராய்கிறது. மேலும், முடிவுகளை மீண்டும் சோதனைக்குள்ளாக்கி விளக்குவதில் ஓர் அறிவியலாகவே உள்ளது.

சமூகப் பிரச்சினைகள் ஆரம்பத்தில் பொது அறிவைக் கொண் டும், பின்னர்ப் பழக்க-வழக்க மரபுவழி அறிவைக் கொண்டும், ஆராயப்பட்டன. இம் முறைகளில் ஏற்பட்ட தவறுகளைக் களையத் தொடங்கினபோதுதான் சமூக உளவியலில் ஒரு புது வளர்ச்சித் தொடங்கியது. பொது அறிவும், பழக்க வழக்க மரபு வழி வந்த அறிவும் முதிர்ந்த அனுபவத்தையும் நோக்கத்தையும் அறிவுறுத்துகின்றன. எனினும் இவை தன்னகத்தே ஒரு சில குறுகிய முடிவுகள், மனக் கோட்பாடுகள் போன்ற பகுத்தறிவுக்கு ஒத்துவராத கொள்கைகளைக் கொண்டுள்ளது. இவை பழங் கால நம்பிக்கைகளின் அடிப்படையில் உருவானவை. ஆனால்

தற்காலத்தில் அந் நம்பிக்கைகள் மூட நம்பிக்கைகளாகக் கருதப் பட்டு அவை கைவிடப்பட்டன.

எனவே, தற்போது சமூக உளவியலார் அறிவியல் முறைகளைக் கையாண்டு சமூகவியல் கொள்கைகளை நிர்ணயிக்கின்றனர். இருப்பினும் அவர்கள் முடிவானது, பொது அறிவு, பழக்கவழக்க மரபுவழி அறிவு, இவற்றிலிருந்து மாறுபடுகின்றனர். எடுத்துக்காட்டாக நவீன வசதிகள் கொண்ட வளப்பமான ஒரு பகுதியில் நாம் விஞ்ஞான முறைப்படி ஒரு குடியேற்றத்தை நிறுவ முயற்சித்தால், ஆங்கேகுடியேறுபவர்கள் தங்களின் சுற்றத்தாரிடமிருந்து தனித்து விடப்பட்டதை எண்ணி மிக விரைவில் மனம் மாறுபடுகின்றனர். அவர்கள் புதிய சூழ்நிலையை ஏற்றுக்கொள்வதற்கு முன் பழகி வந்த சூழ்நிலையையும் பண்பாட்டு அடிப்படையில் அமைந்த வாழ்கை முறையையும் எண்ணிப் பார்க்கின்றார்கள். இங்கே எண்ணற்ற புதிய சிக்கல்கள் உருவாகத் தொடங்குகின்றன. எனவே, சமூகக் கோட்பாடுகளை ஆராயுமிடத்துப் பொது அறிவும், கற்ற அறிவும், அனுபவ அறிவும் தேவைப்படுகின்றன. இவை, அறிவியல் வழி வரும் சமூக உளவியலில் ஒரு குறையே என்றாலும் அதையும் நீக்கும் முயற்சி பின்னால் நடைபெற்றுள்ளது.

சமூக உளவியல் கடந்த முப்பது அல்லது நாற்பது ஆண்டுகளாகப் பெரும் மாற்றங்களுக்கு உட்பட்டிருக்கின்றது. இது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. முதலில் பரிசோதனை முறையில் சமூக உளவியலின் பிரச்சினைகளை அஃது ஆராய்ந்தது. இரண்டாவதாக ஆளுமை (Personality) இத் துறையில் வளர்ச்சிப் பெற்றதாகும். செய்தித்தாள் உலகில், இதன் விளைவாகப் 'பிறழ் நிலை உளவியல்' (Abnormal Psychology) என்ற தலைப்புடன் வெளிவந்த ஆய்வு இதழ்கள் (Journal) பின்னர்ப் 'பிறழ் நிலை உளவியலும் சமூக உளவியலும்' என்ற தலைப்பில் வெளி வரத் தொடங்கின. நாளடைவில் 'பிறழ்நிலை சமூக உளவியல்' என்றே சுருக்கப்பட்டு விட்டது. 1965ஆம் ஆண்டில் அமெரிக்க உளவியல் சங்கம் 'சமூக உளவியலும் ஆளுமையும்' என்ற தலைப்பில் ஓர் ஆய்வு இதழை வெளியிடத் தொடங்கியது. பின்னர்ச் 'சமூக உளவியல்' என்ற தலைப்பில் ஆய்வு இதழ்கள் வெளிவரத் தொடங்கின. இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் இத்தகைய ஆய்வு இதழ்களின் வளர்ச்சி அதிகரிக்கத் தொடங்கியதும் அவை சிக்கல்களை அணுகும் முறைகள் சாதாரண நோக்கத்திலிருந்து இன்றியமையாத சிக்கல்களை ஆராய்வதாக அமைந்தன.

தற்போதைய சமூக உளவியலின் பாங்கு மூன்று கட்டங்களில் மேம்பாடு அடைந்துள்ளதாகக் கருதப்படுகிறது.

(1) சமூக உளவியலின் பிரச்சினைகளை ஆராய்வதில் விஞ்ஞான முறைகளும், அதைக் கையாளும் நுணுக்கங்களும் அதிக அளவில் பயன்படுத்தப் படுகின்றன. அறிவியலின் சட்ட திட்டங்களின் மூலம் சமூக உளவியல் இப்போது திறம் மிக்க ஆராயும் கலையாக வளர்ந்து இருக்கின்றது. இதனால் சமூக உளவியலுக்கான சோதனைகள் பரிசோதனைக் கூடங்களில் மட்டுமின்றி நேரிடையாகச் சென்று பேட்டி கண்டும் நடத்தப்படுகின்றன. மனப்பான்மை அளவீடு (Attitude Measurement), அளவை ஆராய்ச்சிப் (Survey Research), போன்றவை சமூக உளவியலில் தற்போது கையாளப்படும் அளவை முறைகள் ஆகும். அறிவியலைப் போன்றே இதன் துணையில் நாம் சமூகத்தைப் பற்றி முடிவெடுக்கும் கோட்பாடுகள் முடிந்த முடிவுகளாக இருக்கின்றனவா என்று ஆராயப்பட வேண்டி இருக்கிறது. கோட்பாடுகளைக் கொண்டு மீண்டும் சோதனை நடத்தி அவற்றின் உண்மைத் தன்மையை ஆராய்வதிலும், அக் கோட்பாடுகளைக் கையாண்டு நாம் சமூகத்தில் தேவையான ஒரு மாற்றத்தை விளைவிப்பதில் அளவிற்கதிகமான திறமையும், அறிவியலின்வழிச் செயல்படும் அறிவும், ஆராய்ச்சியும் தேவைப்படுகின்றன. தற்போதைய சமூக உளவியல் இக் கட்டத்தில் தேர்ந்து, பயிற்சிப் பெற்றுள்ளதாகக் கருதப்படுகிறது.

(2) இரண்டாவதாகச் சமூகக் கோட்பாடுகள் சமயப் பண்பாட்டுக்குக் கட்டுப்பாடுகளுக்குள் அடங்கி, ஒடுங்கி விடுவதில் இருந்து காப்பாற்றப்படுவதேயாகும். அறிவியலில் நாம் கண்டுபிடித்த சமூகக் கோட்பாடுகள், உண்மைகள் பற்பல சமயங்களையும் பண்பாடும் கொண்ட மக்களுக்கு எல்லாம் பொருந்தும் என்று நாம் கூற இயலாது. சமுதாயம் என்பது பண்பாட்டிற்குத் தக்கபடி, சமயங்களுக்குத் தக்கபடி, ஏன், மக்கள் வாழுகின்ற வாழ்க்கை முறைகளுக்கும் உளப்போக்குக்கும் ஏற்றவாறு மாறுபாடு அடைகின்றது. இங்கே கையாளப்படுகின்ற அளவிற்குச் சமூகக் கோட்பாடுகளையோ, உண்மைகளையோ ஆராய்ந்து அறிவது என்பது கடினமான காரியமேயாகும். இந்நிலையில் ஆராய்ச்சியாளர் தானே தன் முயற்சியால் தன்னுடைய குழுவிற்கும் பண்பாட்டிற்கும் ஒத்த பயன்படும்படியான சமூகக் கோட்பாடுகளைக் கண்டறிவது அவசியமாகும். இந்த வகையிலும் தற்போதைய சமூக உளவியல் மேம்பாடு அடைந்துள்ளதாகக் கருதப்படுகிறது.

(3) மூன்ருவதாகத் தனிமனிதனின் நடத்தை, அவன் தனி வாழ்க்கையின் ஊக்கிகள் (Motives), கடந்த கால அனுபவங் களின் விளைவுகள், அவன் உடலமைப்பு, வளர்ந்த விதம் முதலிய வற்ருல் மட்டுமின்றி அவன் வாழ்ந்த பண்பாடு, பின்பற்றுகின்ற சமயம், வாழ்கின்ற சூழ்நிலை முதலியவற்ருலும் பாதிக்கப்படுகின் றது என்பதனையும் ஆராய்வதாகும். எனவே 'பொது அறிவும்', பழக்க வழக்கங்களினுல் வரும் அறிவும்' சமூக நடத்தையை ஆராயும்போது, அடிப்படைக் காரணிகளாக எடுத்துக் கொள்ளப் படுகின்றன.

## சமூக உளவியல் கருத்துக் கோட்பாடுகள் (Theories in Social Psychology)

சமூக உளவியல் ஒரு பிரச்சினையை ஆராயும்போது நமக்குக் கிடைக்கும் எண்ணற்ற உண்மைகளை, நேரில் கண்டு அறிந்த முடிவுகளையும், விவரங்களையும் ஏதாவது ஒரு வகையில், தொடர் புள்ள ஒரு முறையில் சீர்ப்படுத்தி அதனின்று நாம் ஆராய்கின்ற ஒரு புது உண்மையைக் கண்டுபிடிக்க எத்தனையோ வழிகள் உள்ளன. நூல் நிலையத்தில் புத்தகங்களை எண் வரிசையில், எழுத்து வரிசையில் அல்லது தேதி வரிசையில் அடுக்கித் தேவைக்கு ஏற்றபடி ஓர் அமைப்பில் ஒழுங்குபடுத்தி வைப்பது போல, இந்தக் கருத்துக் கோட்பாடுகளைச் சமூக உளவியலார் தங்கள் ஆராய்ச்சிக்கு எளிதில் உதவுமாறு ஒழுங்கு படுத்தி உள்ளனர்.

சமூக உளவியலை ஆராயப் புகுந்தவர்கள் ஒரு சில சமூக நடத்தைக்குப் பொதுவாக, ஒன்றைக் காரணமாக ஊகித்து; அதிலிருந்து மற்ற காரணிகளைத் தொடர்புபடுத்தித் தாம் எடுத் துக்கொண்ட அந்தப் பிரச்சினைக்குத் தீர்வினைக் காண முயலுகின் றனர். இவ்வாறு மெக்டூகல் (McDougall) என்பார் சமூக நடத்தை, எளிதில் உணர்ச்சி வயப்படுதல் (Sentiments) எனும் கருத்துக் கோட்பாடு வழி நிகழ்வதாகக் கூறி இதன் மூலம் பல் வேறு வகையான சமூக நடத்தைக்கு ஒரு பொதுவான தொடர் பினைக் கண்டார். ராஸ் (E. A. Ross) என்பார் சமூக நடத்தை களை விளக்க ஒரு சில வேளைகளில் போலிப் பாவனை என்ற கோட்பாட்டையும், சில வேளைகளில் கருத்தேற்றம் என்ற கருத் துக் கோட்பாட்டையும் கையாண்டார். மற்றவர்கள் பார்த்துக் கற்கும் இயல்பூக்கம் (Instinct of imitation), இணைந்து வாழும் இயல்பு (Gregariousness), கருத்தேற்றம் (Suggestion), ஆதிக்கம் (Dominance) போன்றவற்றைக் கோட்பாடுகளாக எடுத்துக் கொண்டு அதன் மூலம் சமூக நடத்தையை விளக்க முயன்ற பலர்

பலவகைக் கோட்பாடுகளைச் சமூக நடத்தைக்கான காரணிகளாக ஊகித்துக் கூறியுள்ளனர். இவை சமூக உளவியலின் கருத்துக் கோட்பாடுகள் (Theories) என அழைக்கப்படுகின்றன.

**இன்பியல் கோட்பாடு (Hedonism)**

பென்தாம் (Bentham, 1748–1832) சமூக நடத்தையை ஒரு கோட்பாடு வழி விளக்கப்புகுங்காலை இன்ப துன்பங்களே மனித நடத்தைக்கு ஆணையிடும் தலைவர்கள் என்று கூறி மனித நடத்தைக்கு மூலகாரணம் துன்பத்தை விடுத்து இன்பத்தை நாடுதலே என்று கூறினர். இதை அவர் 'உளவியல் இன்பியல் கேட்பாடு' (Psychological Hedonism) என அழைத்தார். இக் கோட்பாட்டினை விளக்கையில் இரக்க உணர்ச்சி (Sympathy) வழிதான் சமூக நடத்தை ஏற்படுகின்றது என்பதை மறுத்தார். எல்லா நேரங்களிலும் மனிதன் ஏதாவது ஒரு நோக்கத்தின்பால் நடத்தைக்கு உட்படுகிறுன். அந்த நோக்க வெற்றியின் இறுதியில் கிட்டும் மகிழ்ச்சியைச் சுவைப்பதற்கே ஒருவன் அவ்வாறுன நடத்தைக்கு உட்படுகிறுன் என்று அவர் விளக்கினுர்.

பென்தாமின் கருத்துப்படி எல்லா மகிழ்ச்சிகளும் ஓர் அளவீட்டுக்குட்படுவனவே. அவற்றின் தூண்டுதல்களும் சக்தியின் ஒரு பயன்படு தன்மையும் ஒவ்வொரு நிலையிலும் மாறுபாடு கொண்டிருக்கிறது. உதாரணமாக எண்ணிய செல்வ வசதியை அடைவதில் ஏற்படும் மகிழ்ச்சியும், தன் திறமையில் எய்திய பதவிகளை அடைவதில் ஏற்படும் மகிழ்ச்சியும், பேறு, புகழ், போன்றவற்றில் கிட்டும்மகிழ்ச்சியும், பண்புதரத்திலும், நிலைக்கும் கால அளவிலும், உணர்ச்சித்தரத்திலும் இறுதியில் மாறுபட்டிருக்கின்றது. தரங்கள் மாறுபடினும் எய்துறும் உணர்வு மகிழ்ச்சியின் பாற்பட்டதே. எனவே எல்லாவகைக் களிப்பும் கருதிச் செயல்படும் செயல்களும் இன்பியல் கருக்கோட்பாட்டினைச் சார்ந்ததே என அவர் திண்ணமாகக கூறுகிறுர்.

**தன்னலக் கோட்பாடு**

இன்பியல் கோட்பாடும் தன்னலம் கருதியதாகும். ஒருவன் இன்பத்தை நாடித் துன்பத்தைத் தவிர்த்தல் அவனது தன்னலம் கருதிச் செயல்படுவதாகும். சில சமயத்தில் பொது நலம் கருதி, அறம் செய்யும்போது மகிழ்ச்சி எழுகின்றது. இவ்வகையான மகிழ்ச்சியை 'ஈத்துவக்கும் இன்பம்' என வள்ளுவர் குறிப்பது இங்குக் கருதத்தக்கது. ஆயினும் அம் மகிழ்ச்சி தன்னலத்தால் தூண்டப்பட்டது என்பதை மறுப்பதற்கு இயலாது. எனவே சமூக நடத்தைகள் தன்னலத்தினுலேயே எழுகின்றன. இக் கருத்தினை இன்பியல்கோட்பாட்டைவிடத் தன்னலக் கருக் கோட்

பாட்டால் விளக்கமாகக் கூறுதல் இயலும். ஏனெனில் அந்த அதிகாரப் பலம்தான் அவன் தேடும்உடல் இன்பத்தையும், மற்ற வர்களின் நேரடிப் புகழச்சிகளையும், போற்றுதல்களையும் பெற்றுத் தந்து, இறுதியில் மிகப் பெரிய இன்பத்தை நல்குகின்றது. மனிதனின் தலையாய அடிப்படைத் தூண்டுதல், அதிகாரப் பலத்தை மற்றதாகப் பெறும் ஆசையே ஆகும். அவ்வாசை மனிதனின் வாழ்நாள் முழுதும் செயல்படுகின்றது. ஒருவனது வாழ்க்கை முடிவுறும்போதுதான் அந்த ஆசைக்கும் ஒரு முடிவு ஏற்படுகின்றது. இதை நினைவு கூறும்போது சமூக நடத்தைகள் தன்நல ஆசையாலே எழுகின்றன என்பது நன்கு புலனாகும்.

எல்லாவகைச் சமூக நடத்தைகளும் ஜெர்மெனி நாட்டுத் தத்துவ அறிஞரான நீட்சேயைப் (Nietzsche) பொறுத்தவரை அதிகாரப் பலத்தைத் தேடும் வழியில் செயல்படுவதாகும். தன்னலமெனும் இக் கோட்பாட்டின்படி சமூகத்தில் நிலவும் எல்லாவகை நடத்தைகளையும் விளக்குவது எங்ஙனம் என ஒருவர் கேட்கலாம். ஏனெனில் சமூக நிறுவனங்களும், அமைப்புகளும், கூட்டுறவுகளும் ஒன்றை ஒன்று புரிந்துகொண்டு உதவும் அடிப்படையில் செயல்படுகின்றன. ஆங்கே தன் நலத்திற்கு இடமில்லை என்பதால் அதைச் சமூகம் நடத்தை எனக் கூறுவது இயலாது. இதை உணர்ந்து லெடான்டக் (Le Dantec) என்பார் இதற்குப் பதில் அளிக்கின்றார். பொதுவான எதிரிகள் எனச் சிலர் எப்போதும் இருப்பதால் இது இயலுகின்றது. குடும்ப அமைப்புக் கூட இத்தகைய பாதுகாத்தலின் வழியே இயங்குகின்றது. தாய் தந்தையர் தங்களின் முதிய காலத்தில் தங்களைக் காப்பாற்றவும், பொருளாதாரத்தில் தங்களுக்கு உதவவும் பிள்ளைகளைப் பேணி வளர்க்கின்றனர். ஒருவர் பிறருடன் நட்பாய் இருப்பதும் ஒரு குழுவில் அங்கத்தினராகி அக்குழுவின் கட்டுத் திட்டங்களுக்கு உட்பட்டிருப்பதும் அக் குழுவோடு சேர்ந்து வாழ்வதில்தான் மனநிம்மதி பெறுவதும் போன்ற காரணங்களை விடத், தன்னைப் பிற எதிரிகளிடமிருந்து காத்துக் கொள்வதற்கான பாதுகாப்பு நடவடிக்கை என்பதே பொருத்தமான காரணமாகும்.

ஒரு நாட்டில் உள்ள மாநிலங்களுக்கு மாநிலங்கள் தங்களிடைய கருத்து வேறுபாடு கொண்டிருந்தாலும், (உ-ம் மொழிப் பிரச்சினை, நிலப்பிரச்சினை, சுயஆட்சிப் பிரச்சினை) உள்நாட்டில் கலவரம் ஏற்பட்டு உள்நாட்டுப் போரே நடந்து கொண்டிருந்தாலும், அயல் நாட்டினர் அந்த நாட்டைத் தாக்கும்போது உள்நாட்டிலுள்ள கருத்து வேறுபாடுகளும், கலவரங்களும், ஏனைய பிரச்சினைகளும் நிறுத்தப்பட்டு ஒற்றுமை என்ற கொடியை

ஏந்திக்கொண்டு தங்களின் பொது எதிரியை விரட்டுவதற்கான பணியில் ஈடுபடுகின்றார்கள். இவற்றைக் கண்ணுறும்போது பொதுஎதிரிகள் எனச் சிலர் எப்போதும் இருப்பதால்தான், ஒருவர் மற்றவரின் சுய அதிகாரத்திற்கு ஆட்பட்டு ஆங்கே சமூக நடத்தை எழ ஏதுவாகின்றது என்பது தெரியவரும்.

லெடன்டெக் தொடர்ந்து கூறும்போது, நமது சமூக நடத்தைக்கான தூண்டுதல்கள் தன்னலம் கருதித்தான் என்று மட்டுமல்லாது சமயம், பண்பாடு, நாட்டுப்பற்றுப் போன்ற இயல்பு இயலுக்கு அப்பாற்பட்ட (Metaphysical) கோட்பாட்டின் வழியாகவும் இயலுகின்றது என்று கூறுகின்றார். உதாரணமாக ஒரு சமயத்தையும், பண்பாட்டையும் காக்கச் சிலர் முற்படுவதன் மூலமும் சமூக அமைப்புத் தோன்றுகின்றது. நாட்டுப்பற்று வாய்ந்த மக்கள் நாட்டைப் பாதுகாக்கும் பொருட்டு ஒன்று கூடி இயங்குகின்றனர். இதற்குச் சிறப்பாகக் கூறவேண்டுமேயானால் சமயத்தின் அறக் கோட்பாடுகளும், ஒழுக்க நெறிகளும் இங்ஙனம் இயல்பு இயலுக்கு அப்பாற்பட்டக் கோட்பாடுகளால் தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக எழுந்ததேயாகும். உதாரணமாக 'திருடாதே' என்பது தன் பொருளைப் பிறர் திருடுவதினின்று பாதுகாத்துக் கொள்வதற்கேயாகும். 'கொலை செய்யாதே' என்பது தன்னைப் பிறர் கொல்லக்கூடாதே என்னும் தன்னலத்தின்பாலும், 'பொய் சாட்சி சொல்லாதே' என்பது தான் ஏமாற்றம் அடையக் கூடாதே என்ற பயத்தினாலும் எழுந்தவையாகும்.

இங்ஙனம் சமூக நடத்தைகள் தன்நலம் கருதியே இயங்குகின்றன எனினும், அந்தத் தன்நலம் எப்போதும் பொதுவான எதிரிகள் எனச் சிலர் இருப்பதால் தொடர்ந்து செயல்படுகின்றது என்றும், சில நேரங்களில் அது சமயம், பண்பாடு, நாடு போன்றவற்றைக் காக்க நினைக்கும்போது செயல்படத் தொடங்குகின்றது; எனவே தன்நலமே சமூக நடத்தைக்கான பொதுக்காரணி என லெடான்டெக் விளக்குகின்றார்.

### இரக்கவுணர்ச்சிக் கோட்பாடு (Sympathy)

இன்பியல்கோட்பாட்டினையும், தன்னலக்கோட்பாட்டினையும் சமூக நடத்தைகளை ஊக்கும் காரணிகளாக விளக்கம் கூறியதைப் பகுத்தறிவு வாதிகள் ஒத்துக் கொள்ளவில்லை. மேலும் இயல் பூக்கம் பிறப்போடு பிறந்து என்றெல்லாம் சமூக நடத்தையை விளக்கப் புகுவோரும் இன்பியல், தன்னலக் கோட்பாடுகளை எதிர்த்தனர். அவர்கள், தன்னைத்தானே நேசித்தல் என்பது ஒரு சார்பான செயல் என்றும், அஃது ஓரளவிற்கு ஒவ்வொரு மனிதனிடமும் இருக்கின்றது என்றாலும் அதுதான் அவனது

நடத்தையைக் கட்டுப்படுத்துகிறது என்று கூறுதல் பொருந்தாது என்றும் கூறினர்.

ஒரு சிலர் இந்த விளக்கத்தையே தலைகீழாக மாற்றித் தன்னைக் காப்பதன் மூலம் ஒருவன் பிறரையும் காக்கத் தொடங்க அங்கே சமூக நடத்தை ஏற்பட ஏதுவாகின்றது என்று விவாதித்தனர். இதனால் தனது கடந்த அனுபவங்களும், துன்பங்களும் ஒருவரிடம் தோன்ற அவர் தன்னை விடுவித்துக்கொள்ள விரும்புகிறார். இந்நிலையில் அவரை எதிர்ப்படும் மற்றவரும் அவரை ஒத்த சூழ்நிலையில் இருப்பதை அறியும்போது அவர்பால் இவருக்கு இரக்கவுணர்ச்சித் தோன்றுகிறது. இஃது இரக்கவுணர்ச்சியே பிறருக்காக எதையும் செய்யும் அன்பினைத் தோற்றுபிக்கின்றது. இத்தகைய ஒருவர் மற்றவர்பால் இரக்கவுணர்ச்சியால் தூண்டப்பட்டு, அவரோடு ஒத்து வாழவும், அவருக்கு உதவியாக இருக்கவும் நினைக்கின்றார். இதன் வழியாகச் சமூக உளவியல் நடத்தை நடைபெற ஏதுவாகின்றது.

ஸ்மித் (Smith) என்பார் தனது நூலில் மனிதன் எத்துணை தான் தன்னலம் கருதுபவனாக வாழ்ந்தாலும் அவனிடமும் சில கொள்கைகள், பிறவியிலேயே இயற்கையாக, மற்றவர்க்கு உதவுதல், மற்றவர்களை மகிழ்வித்தல் போன்றவற்றிற்கு வித்துகள் காணப்படுகின்றன என்று கூறுகின்றார்.

இவர் இரக்கவுணர்ச்சியை இரு தன்மையான அமைப்புகளாகப் பிரிக்கின்றார். முதலாவது, திடீரென–மறிவினையாகத் (Reflex) துலங்குவது மூலம் உண்டாகும் இரக்கவுணர்ச்சியாகும். நாம் நம்மெதிரே ஒரு மனிதன் தடியால் தலையில் அடிபடுவதைக் காணும்போது நாமும் தலையைக் குனிந்து நெளிகிறோம். இது பிறப்பால் வந்த மறிவினை என நம்பப்பட்டாலும், பின்னர் ஆக்க நிலையிறுத்தத்தால் (Conditioned Reflexes) எழுந்த செயலென அறிகின்றோம். முதலில் நாம் அடிபட்டபோது தலையைக் குனிந்து நெளிந்து கொடுத்திருக்கின்றோம். அதே நிகழ்ச்சி நடைபெறுவதை இப்போது நாம் காணும்போது நம்மையறியாது மறிவினை நிகழ்ச்சி நம்முடலில் நிகழ்கின்றது.

இரண்டாவது, முற்றிலும் அறிவு வளர்ச்சியைச் சார்ந்தது. நாம் அத்தகைய ஓர் உணர்ச்சியை அடைந்து அனுபவித்திரா விட்டாலும், பிறர்பால் அது நிகழ்வதைக் கண்டு மனம் கசிந்து இரக்கவுணர்ச்சி மீதூறப் பெறுகின்றோம். வெற்றி கண்ட ஒருவனை மனமகிழ்ந்து போற்றும்போதும், மீளாத் துயரத்தில் ஆழ்ந்திருக்கும் ஒருவனுக்கு ஆறுதல் மொழி கூறும்போதும்,

நாம் இன்ப துன்பமெனும் இரு உணர்ச்சிகளுக்கும் அப்பாற் பட்டவராக இருக்கின்றோம். இங்கே ஏற்படும் இரக்க வுணர்ச்சி அறிவு வளர்ச்சியைச் சார்ந்ததாகும்.

**போலிப்பாவனைக் கோட்பாடு (Theory of Imitation)**

மனித நடத்தையின்மேல் ததும்புகின்ற சமூக இலக்கணத் தைப் பற்றி (Social conformity) சமூக உளவியலாளர்கள் விவ ரிக்க வேண்டிவர்களாக இருக்கின்றார்கள். பெற்றோர்கள் தங்க ளின் பிள்ளைகளுக்கு ஓர் எடுத்துக்காட்டாக இருக்கின்றார்கள். நாகரிகங்களில் ஒரு சிலவற்றை நல்ல எடுத்துக்காட்டுகளாகக் கொண்டு இளைஞர்கள் அவற்றைப் பின்பற்றுகின்றார்கள். ஏன்? பண்பாடு என்ற ஒன்றைக் கூட நாம் ஓர் எடுத்துக்காட்டாகக் கொண்டு இதுவரை பின்பற்றி வந்திருக்கின்றோம். மேலை நாட்டி னருக்கு என ஒரு பண்பாடும், கீழை நாட்டினரான ஜப்பானியர், பர்மியர், இந்தியர் போன்றவர்களுக்கு வேறு சில பண்பாடுகளும் மாதிரிகளாக அமைகின்றன. மாறுகின்ற சமூகத்தில் இத்தகைய மாதிரிகளைப் பின்பற்றுவது (Imitation of models) போன்ற ஒன்றினைத் தவிர வேறெதுவும் நிலையாக இருப்பதாக—அல்லது சமுதாய மாற்றங்களுக்கெல்லாம் அடிப்படையாக, அப்படி மாறு கின்ற மாற்றங்களின் ஊடே நிலையாக இருப்பதாக—ஒன்றும் நமக்குத் தோன்றவில்லை.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய சிலர் சமூக நடத்தைகளுக்கும் சமூக இணக்கத்திற்கும் போலிப் பாவனையே சிறந்த ஒரு கோட்பாடாக இருப்பதாகக் கண்டனர். வால்டெர் பேக்காட் (Walter Bagehot, 1826–1877) என்பார் இக் கருத்தினைப் பற்றிப் பேசும்போது, 'முதன் முதலில், காலப்போக்கில் தானாகவே ஒன்று பெரும்பான்மையினரால் பின்பற்றப்படும் மாதிரியாகத் தோன்ற, அதன்பால் கவரப்பட்டு மற்ற சந்ததி யினரும் அவற்றைப் பார்த்துப் பின்பற்ற, தங்கள் நடையுடை பாவனைகளை மாற்றிக்கொள்ளத் தொடங்கினர். நாளடைவில் பெரும்பான்மையினரால் பின்பற்றப்பட்ட ஒரு மாதிரியே, பின்னர் பலரையும் அவ்வழி உருவாக்கி அவர்களிடையே நிகழும் சமூக நடத்தையில் ஒரு சமூக இணக்கத்தைத் தோற்றுவித்தது.

போலிப் பாவனை இவ்வாறாகச் சிந்தனை ஆற்றல் மிக்க மனிதர்களைக்கூட ஒரு குழுவினராய்க் கட்டுப்படுத்துகின்றது.

**கருத்தேற்றம் (Suggestion)**

இரக்கவுணர்ச்சி, போலிப் பாவனை, கருத்தேற்றம் இவை மூன்றும் ஓரளவிற்கு ஒரே பார்வையில், ஒரே கருத்து நோக்கத் தில் செயல்படும் கோட்பாடுகளாகும். வரலாற்றை ஆராயும்

போது இம் மூன்றில் கருத்தேற்றமே அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகத் தோன்றுகிறது. இஃது உண்மைச் சமூக உளவியலாளர்களால் 1890ஆம் ஆண்டு வரை அறிந்துகொள்ள முடியாதிருந்தபோதிலும், பின்னர் வந்த விஞ்ஞானிகள் முதல் சாதாரண மனிதர்கள் வரை அனைவரும் சமூக உளவியலில் உள்ள பெரும் பாலும் எல்லாப் பிரச்சினைகளும் கருத்தேற்றத்தினுல் செயல்படுவதாகக் கருதினர். இப்பொழுதும், சாதாரண மனிதன், சமூக மனம் கும்பல் மனம் (mass mind) எனக் கருதுகின்றான். செம்மறியாடுகளைப் போன்று ஒரு பக்கம் சாய்ந்தால் அவ்விடத்தே மீண்டும் மீண்டும் சாய்ந்து முன்னேறுகின்ற மக்கள் கும்பல்களை நோக்கும்போது கருத்தேற்றத்தின் ஆற்றல் எத்தனை மகத்தானதென்பதை நாமும் ஏற்றுக் கொள்ளவேண்டியவர்களாக இருக்கின்றோம்.

மெக்டுகல் (McDougall) கருத்தேற்றம் எனும் சொல்லைப் பொருள் வரையறை செய்கையில், 'கருத்தேற்றம் என்பது நாம் தொடர்பு கொண்டு உரையாடும் ஒருவருடைய சொற்களின் கருத்தை ஏற்றுக்கொண்டு, பகுத்தறிவுக்கு ஏற்ற அடிப்படைக் காரணம் ஏதுமின்றி அவர் எண்ணங்களுக்கு நாம் இணக்கம் தெரிவிக்கும் ஒரு செயலாகும்' என்று கூறுகின்றார். இது மனிதனுடன் கூடப்பிறந்த நாம் அவர்களுக்கு வேண்டும்போது பணிந்துபோகும் (submission) உணர்வாகும். இஃது உணர்ச்சி, மதிப்பு வாய்ந்த அல்லது அவனால் மதிக்கப்படுகின்ற ஒருவனுக்கு அல்லது ஓர் அடையாளத்துக்கு முன்னால், எந்தவித பகுத்தறிவு நோக்கும் தேவையான அடிப்படை நோக்கமும் இன்றித் தன்னை ஆட்படுத்துவது எல்லா மனிதர்களிடையேயும் காணப்படுகின்றது. இதை ஆராயுமிடத்துக் கருத் தேற்றத்தினுல் ஒருவன் தூண்டப்பட அவன் தான் மதிக்கும் பிறரது ஆணைக்குத் தன்னை ஆட்படுத்தி இயங்க, அவ்வகையிலேயே சமூக நடத்தையும் இயங்குகின்றது என்பதை உணரலாம்.

### அதிகாரச் சுருக்கம்

சமூக உளவியலின் நவீனப் பாங்குகள் சமூக நடத்தையை எதன் வழி ஆராய்ந்து கூற இயலும் என்ற கூற்றில் ஏற்பட்ட மாறுபாடான கருத்துக்களின் விளைவாகத் தோன்றியுள்ளன. ஆரம்பத்தில் உளவியலாளர் உடலியற் கூற்றின்படி மனித நடத்தையை நிர்ணயிக்க முயன்று சமூகக் கலாசார அனுபவங்களைப் புறக்கணித்தனர். சமூகவியலாளரோ உடலியற் கூறுபாட்டினைப் புறக்கணித்துச் சமூகத் தோற்றங்களுக்கும், நிலைமைகளுக்கும் அதிக முக்கியத்துவம் கொடுத்தனர். ஆனால் பிற்காலத்

திய சமூக உளவியலாளர் இவ்விரு கூற்றுகளும் ஒருதலைப் பட்சமான முடிவுகள் என்பதைக் கண்டனர்.

சமூக நடத்தையை ஆராயத் தனிமனிதனின் நடத்தையை ஆராயவேண்டும். தனிமனிதனின் நடத்தைப் பாரம்பரிய குணத்தையும் வளர்ந்த சூழ்நிலையையும் பொறுத்து இருக்கின்றது. எனவே சமூக உளவியலில் நவீனப் பாங்குகள் சமூக நடத்தையைப் பாரம்பரிய குணத்தின் மூலமும் வளர்ந்த சூழ்நிலை மூலமும் ஆராய முற்படுகின்றனர். மேலும் தற்போது சமூக உளவியலாளர்கள் அறிவியல் முறை உத்திகளைக் கையாண்டு சமூகக்கோட்பாட்டினை நிர்ணயிக்கின்றனர்.

சமூக உளவியல் கடந்த நாற்பது ஆண்டுகளாகப் பெரும் மாற்றங்களுக்கு உப்பட்டிருக்கிறது. தற்போதைய சமூக உளவியலின் பாங்கு மூன்று கட்டங்களில் மேம்பாடு அடைந்துள்ளதாகக் கருதப்படுகின்றது. (i) சமூக உளவியலின் பிரச்சினைகளை ஆராய்வதில் விஞ்ஞான முறைகளும் உத்திகளும் கையாளபடுகின்றன. (ii) சமூகக் கோட்பாடுகள் மதக் கலாசாரக் கட்டுப்பாடுகளினின்று விலக்கப்பட்டு எல்லாச் சமூகத்தினராலும் ஏற்கப்படுவதாகச் செய்யப்படப் படுகின்றது.

சமூக நடத்தையை இன்பியல் கருத்துக் கோட்பாடு, சுய அதிகாரக் கருத்துக் கோட்பாடு, இரக்க வுணர்ச்சிக் கருத்துக் கோட்பாடு, போலிப் பாவனைக் கருத்துக் கோட்பாடு, கருத்தேற்றம் போன்றவற்றின் வழி எடுத்து விளக்க, சமூக உளவியலாளர்கள் முயன்றுள்ளனர்.

# 3. சமூக உளவியலின் முறைகள்

மனிதன் அன்றாடப் பிரச்சினைகளுக்கு ஒரு தீர்வு காண்பதில் தனது பொது அறிவைப் பயன்படுத்தி வெற்றி கண்டு அதில் பெருமை அடைகின்றான். அறிவியல் என்பது இத்தகைய பொது அறிவின் முன்னேற்றமே என்ற அளவிற்கு அவன் பெருமை இன்று வளர்ந்துள்ளது. நாம் முழுக்க முழுக்கப் பொது அறிவே சிறந்தது என்று கூற முன்வரவில்லை. அறிவியல்கள் நம்மை அச்சுறுத்துகின்றபடி நமது பொது அறிவு ஒரு சில வரையறைகளுக்கு உட்பட்டுத்தான் செயலாற்ற முடியும் என்பதையும் பொது அறிவினால் பெற்ற முடிவுகள், அறிவியல்களின் மூலம் வந்த முடிவுகளைப் போன்று அவ்வளவு நம்பகமானதாக உண்மையானதாக நாம் கொள்வதற்கு இயலாது என்பதையும் நாம் அறிவோம். இருப்பினும் அறிவியல் கண்டுபிடிப்புகளின் வளர்ச்சி, அவற்றின் வரலாறு, நமக்குப் பொது அறிவு செய்துள்ள நன்மைகளை அதன் வளர்ச்சியில் ஆற்றிய பணிகளை நன்கு எடுத்துக் காட்டுகின்றது. எனவே பொது அறிவு முற்றிலும் புறக்கணிக்கத் தக்கது என நாம் கைவிட்டு விடுவிதற்கு இல்லை.

சமூக உளவியலில் இந்தப் 'பொது அறிவு' மிகச் சிறந்த பணிகளை ஆற்றியுள்ளது. சமூக உளவியலில் இப்போது உள்ள முறைகள் வருவதற்கு முன்னரே சமூக வளர்ச்சிகளை ஆராயப் பொது அறிவுதான் உதவியது. பின்னரே பொது அறிவு, அனுபவ அறிவு இவற்றில் உள்ள ஒரு சில குறைகளைக் களைய முற்பட ஆங்கே பல்வேறு முறைகள் சமூக உளவியலில் தோன்றலாயின. தற்போது சமூக உளவியலில் மற்ற இயல்களில் உள்ள எல்லா முறைகளையும் தன்னகத்தே கொண்டு விளங்குவதோடு குறிப்பாக ஒரு சில முறைகளைத் தனக்கென்று உரிமையாக்கிக் கொண்டுள்ளது. இவை ஆராய்வதற்கு எடுத்துக்கொண்ட பிரச்சினைகளை எண்ணற்ற வகைகளில் ஆராய்ந்து தீர்வு காணுகின்றது.

எந்த அறிவியலையும் படிக்க நேரிடும்போது, எவ்வெவ் முறைகளில் அதனைப் படிக்க இயலும் எனும் அறிவுத் தேவையான தாகும். ஓர் அறிவியலால் நாம் பெறும் சிறந்த அறிவு, அதனைப் படிப்பதற்கு உதவும் முறைகள், வழி வகைகள் இவற்றின் திறனையும், அதனால் கிட்டும் பயனையும் பொறுத்திருக்கின்றது. அதோடு ஒரு சில அறிவியல்களைப் படிப்பதற்கு ஒரு சில வழி முறைகளையே கையாளவேண்டும் என்பதன் அவசியத்தையும் வலியுறுத்துகிறது.

சமூக உளவியலின் நோக்கம் மனிதனின் நடத்தைப் பற்றிய நம்பத்தக்க ஒரு முடிவைச் சுருக்கமாக, ஆனால் அதே நேரத்தில் விளக்கமான ஒரு முடிவினை எடுத்துக் கூறுவதாகும். இந்தக் கருத்துப்படி சமூக உளவியலின் பணியும், ஈடுபடும் பிரச்சனையின் தன்மையும் மற்ற அறிவியல்களில் இருந்து மாறுபடுகின்றது. தனியன் நடத்தை மற்றவனோடு தொடர்பு கொள்ளும் போது, அல்லது ஒரு குழுவோடு இணையும்போது, எங்ஙனம் வேறுபாடு அடைகின்றது என்ற நோக்கத்தில் சமூக உளவியல் பணியாற்றுகிறது. பெரும்பாலும் மற்ற அறிவியல்கள் கையாளும் முறைகள் அனைத்தையும், ஏற்றதாக இருப்பின், பயனறிந்து கையாளுகிறது. தனக்கென்றே ஒரு சில நுணுக்கங்களை மற்ற அறிவியல்களில் இருந்து எடுத்து வேண்டிய மாற்றங்களைச் செய்து தனது உரிமையாக்கிக்கொண்டு அவ்வழி முறைகள் மூலமும் தனது பிரச்சினைகளை ஆராய்கிறது. அவற்றில் முக்கியத்துவம் வாய்ந்த சில முறைகளைப் பற்றி ஈண்டு காண்போம்.

**உற்று நோக்கும் முறை (Observation)**

இம் முறை சமூக உளவியலின் துவக்கக் காலந்தினின்றே பயன்படுத்தப்பட்டு வருகின்றது. மனித சமூகத்தை உற்று நோக்கி, நடத்தைகளை ஆராய்ந்து அதன் வழிப் பிரச்சினைகளைத் தீர்க்க முயல்வது உற்று நோக்கும் முறை ஆகும். கும்பல்கள் (Mobs), விளையாட்டுக் குழு ஆகியவற்றின் நடத்தைகளை ஆராய இம் முறையே பெரிதும் பயன்படுத்தப்படுகின்றது. சான்றாக ஒரு திரைப்படத்தின் வெற்றியினை அதனைப் பார்த்துப் திரும்பும் மக்களின் அளவையும், அவர்களின் திறனாய்வு முதலியவற்றைக் கணித்தலின் வழியாகவும் எளிதில் நிச்சயித்து விடலாம். அறிவியலின் பாற்பட்ட உற்று நோக்கும் முறையில் ஒருவருடைய விருப்பு வெறுப்புக்கோ, ஒருதலைப் பட்சமான முடிவிற்கோ இடமில்லை. விருப்பு வெறுப்பு நடுநிலையில் நின்று எந்தவிதக் கொள்கைப் பற்றுதலும் இல்லாமல் ஒரு நடத்தையினை உற்று நோக்கி ஆராயும்போது அதன் காரணிகள், இயல்புகள் ஆகியவை பற்றிய உண்மைத் தன்மையை அறியக்கூடும்.

இந்த உற்று நோக்கும் முறை எல்லா வகையிலும் சிறந்தது என்று நாம் கூறுவதற்கில்லை. இம் முறையின் சிறப்பான செயல் தன்மை இம் முறையைக் கையாளும் ஆய்வாளரின் செயல் திறனை யும் இன்னும் பிற காரணிகளையும் பொறுத்து உள்ளது. எடுத் துக்காட்டாக உற்று நோக்குபவர்களிடையே ஒருவருக்கொருவர் செயல் திறனில் வேறுபட்டு இருக்கின்றனர். அதே போன்று கிட்டிய செய்திகளைக் கொண்டு அறிக்கைகளைத் தயாரிப்பதிலும் பெருமளவில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஒருவர் நல்ல நினைவாற்றலுடன் உற்று நோக்கி அறிக்கையைத் தருவதிலும் மற்றவர் அத்தகைய நினைவாற்றல் இன்றி, அறிக்கையைத் தரு வதிலும் உள்ள விளைவுகள் கண்டிப்பாக இறுதியில் கொடுக்கும் முடிவில் மாற்றம் விளைவிக்கும். எனவே இம் முறையில் உள்ள பிழைகள் ஆராயப்பட்டுக் களையப்படவேண்டியதவசியம். இவ் வழியில், உற்று நோக்கி அறிந்த செய்திகளை மீண்டும் சரி பார்ப்ப தும், ஒருவர் ஒரு நிகழ்ச்சியைக் உற்று நோக்குவதற்குப் பதிலாக பலர் அதே செயலில் ஈடுபடுவதும், அதே போன்று ஒரே நிகழ்ச் சியை மீண்டும் மீண்டும் உற்று நோக்கி இம் முறையில் ஏற்படக் கூடிய பிழைகளைக் களையும் வழிகளாகக் கையாளப் படுகின்றன. சமூக உளவியல், கட்டுப்பாட்டிற்குட்பட்ட உற்று நோக்கல் முறை, கட்டுப்பாடற்ற உற்று நோக்கும் முறை என இருவகை களும் பயன்படுத்தப் படுகின்றன.

### கள அளவீடு முறை (Field Survey Method)

ஒவ்வொரு நிகழ்ச்சியும் அது நிகழும் களத்திற்கே நேரடியாகச் சென்று ஆய்வு செய்தல் கள அளவீடு முறையாகும். இம் முறை ஒரு நிகழ்ச்சியினை அதன் இயற்கையான சூழ்நிலையால் கண்டறி வதை வலியுறுத்துகின்றது. இயற்கையான சூழ்நிலையால் ஒரு நிகழ்ச்சி நிகழுவதை நேரில் காணும்போது அந் நிகழ்ச்சியினைப் பற்றிய ஒரு முழுமையான உருவகமும் உண்மை நிலையும் கிடைப் பது உறுதி. ஆய்வாளறின் அறிவியற் பாங்கு, அனுபவம், நடு நிலைமை, நினைவுத்திறன், அறிக்கையிடும் திறன் போன்ற காரணிகள் இம் முறைக்கு மிகவும் இன்றியமையாதவைகளாக அமைகின்றன. ஒழுங்கு நிலை, குழுச் சூழ்நிலை போன்ற சமூக உளவியல் நிகழ்ச்சிகள் உண்மையில் நடைமுறையால் எங்ஙனம் செயல்படுகின்றன என்பதை அறிய இம் முறையே சாலச் சிறந்தது.

### பேட்டிகாண் முறை (Interview Method)

ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்ட அந்தச் சமூக நிகழ்ச்சியால் உறவுக் கொண்ட ஒவ்வொருவரையும் நேரடியாகக் கண்டு பேசி

நிகழ்ச்சிகளைப் பற்றிய உண்மைகளைப் பெறும் முறை பேட்டி காண் முறை ஆகும். பேட்டி காணும்போது குறிப்பிட்ட வரையரைகட்கு உட்பட்டோ, உட்படாமலோ இருக்கலாம். ஏற்கனவே தயாரிக்கப்பட்டுத் திட்டமிடப்பட்ட ஓர் அடிப்படையிலோ அல்லது அவ்வப்போது பேட்டி காணுபவர் கொள்ளுகின்ற திட்டப்படியோ இம்முறை கையாளப்படலாம். பேட்டி காணும் முறையில் பிரச்சினையுடன் தொடர்பு கொண்டுள்ள மக்களுடன் நேரடித் தொடர்பு கொள்ள வாய்ப்பிருக்கின்றது. இந்த நேரடித்தொடர்பு சமூக உளவியலுக்கு மிக முக்கியமானதாகும். மேலும் அனுபவம் பெற்ற உளவியலாளர்கள் பேட்டி காணும் முறையால் விவரங்களைச் சேகரிக்க முற்படும்போது, வினு விடைகளின் வழி உண்மை நிலையை, அறிவதைவிடச் செய்திகள் அளிப்போரின் பாவனைகள், ஏற்றத் தாழ்வுகள், பேச்சு, நடை ஆகியவை மூலம் எளிதில் உண்மை நிலையை அறிந்து கொள்ள முடிகின்றது. பொதுமக்கள் கருத்தைச் சேகரிப்பதற்கு இம் முறையே சாலச் சிறந்ததாகும்.

பேட்டி காணுதல் முற்றிலும் பிழையற்ற ஒரு முறை என நாம் கூற இயலாது. பேட்டி காணுபவரின் அனுபவ முதிர்ச்சி, பழகும் திறன், மொழிப்பயிற்சி, பொறுமை போன்றவை இம்முறையைக் கையாள இன்றியமையாத பண்புகளாக உள்ளன. குறிப்பாக அமைப்பற்ற (unstructured) பேட்டி காணுதலில், அனுபவ முதிர்ச்சியற்ற ஒருவர் இம் முறையில் ஈடுபடும்போது, காலம் பெரிதும் வீணுகின்றது. இந் நிலையால் செய்திகளனைத்தையுமே திரட்டிவிட முயலுவது இயலாதது. பேட்டி காண்பவர், செய்திகளை அறிவிப்போர் ஆகிய இருவருக்கும் இடையே ஏற்படும் உளவியலுறவு, உளத் தொடர்பு (rapport), முதலியன செய்திகளின் நம்பகத்தையும் (reliability), ஏற்புடைமையையும் (validity) பாதிக்க வல்ல காரணிகளாக அமைகின்றன. எனவே இக்குறைகள் களையப்படாதவரை இம் முறை சிறப்பானது என நாம் கூறுவதற்கு இயலாது. இதுவன்றியும், பேட்டி காணும் முறையில் பேட்டி காணுபவர், பேட்டி தருபவர் இவர்களிடையே நிலவும் உள் தொடர்பு ஆக்கமுடையதாக இருக்கவேண்டும். பேட்டி தருபவர், பேட்டி காண்பவரிடத்து ஒரு சில மதிப்பையும், மரியாதையையும், கண்ணியம் மிக்க பண்பாடுகளையும் கண்டு அவரின் வாழ்க்கைத் தராதரத்தை அறிந்து தெளிந்து அவருக்குப் பேட்டி தர முன் வருகின்றார். பேட்டி காண்பவர் அனுபவம் இல்லாதவராக இருந்த போதிலும், தான் அந்தத் துறையில் திறமை வாய்ந்தவர் என்று காட்டிக் கொண்டு, அந்த மனநிறைவுடனேயே தொடர்ந்து வினுக்களுக்கு விடை கேட்பதும், ஒரு சில விடத்து

பேட்டி காணுபவர் அத் துறையில் வல்லவரிடம் அல்லது அந்தத் துறையில் தொடர்புகொண்ட பெரிய நபர்களோடு சம்பந்தப் பட்டிருப்பதாகக் காட்டிக்கொள்வதும், சமயத்தில் அப்படிக் காட் டிக்கொள்வதில் தீமை ஏதும் ஏற்படும் எனில் அல்லது பேட்டி யாளரிடமிருந்து தேவையான விஷயங்களை அறிந்துகொள்ள முடியாதெனில் அப்படிக் காட்டிக்கொள்ளாததும், இன்னும் இவை போன்றவற்றில் இடனறிந்து நடந்து கொள்ளுதலு மான செயல் திறன்களைப் பெற்றிருக்க வேண்டும்.

### வினு நிரல்கள் முறை (Questionnaire Method)

வினு நிரல்கள் மூலமாகச் செய்திகளைச் சேகரிக்கும் முயற்சி நீண்டகாலமாகவே சமூக உளவியலில் ஏற்கப்பட்ட முறையாகும். ஒரு நிகழ்ச்சிப் பற்றிய ஒவ்வொருவரது கருத்தினையும் அந் நிகழ்ச்சி பற்றிய பல்வேறு பரிமானங்களைப் பற்றியும், பல்வேறு கோணங்களிலிருந்து வினுக்களின் மூலம் வினுவும்போது அந் நிகழ்ச்சிப் பற்றிய உண்மையான விவரங்களைப் பெறலாம் என்பது சமூக உளவியலாரது நம்பிக்கை.

சமூக உளவியலார்கள் இம் முறையால் புதுப்புது நுணுக்கங் களைக் கையாண்டு இதன் பயனை உயர்த்தியுள்ளனர். தரம் வாய்ந்த வினு நிரல்களில் வினுக்கள் எளிதாகவும் நேரிடையாகவும் இருக்கவேண்டும். குழப்பமான விடை கூறுவனவாக இருக்கக் கூடாது. எடுத்துக்காட்டாக, இந்தியாதான் உலகத்தில் சிறந்த நாடு–ஆம், இல்லை என்பதில் இருவிதப் பதில்களும் சிக்கலை உருவாக்குகின்றன. ஆம், ஒத்துக்கொள்கிறேன் என்ருல் அதிக மதிப்பீட்டையும் தன் நாடு பற்றிய உண்மை நிலைக்கு அப்பாற் பட்ட நிலையையும் எடுத்துக்காட்டுவதாக இருக்கின்றது. இல்லை; ஒத்துக்கொள்ளவில்லை என்ருலோ, தாய் நாட்டைத் தரக்குறை வாக மதிக்கும் நாட்டுப்பற்றற்ற மனிதர்களாக்குகின்றது. இங்கே எந்த வகையால் பதிலளித்தாலும் அப்பதில் திருப்தி கரமான ஒரு பதிலைத் தரவல்லதல்ல. இத்தகைய ஒரு நிலை ஏற் படா வண்ணம் வினுக்கள் தொடுக்கப்பட வேண்டியது அவசியம்.

மேலும் விருப்பத்திற்கேற்றபடி ஒருவர் ஒரு நிகழ்ச்சிக் குறித் துக் கேட்கும் கேள்விகளின் தொகுதிகளனைத்தும் வினு நிரல் ஆகிவிட முடியாது. மாருக ஒரு நிகழ்ச்சிப் பற்றிய காரணிகளின் அடிப்படையில் ஏற்கனவே திட்டமிட்டு ஒழுங்கான அமைப்புக் கொண்ட கேள்விகளின் வரிசைப் பாங்கினையே நாம் வினு நிரல் என்று கூற இயலும். வினு நிரல் ஏற்புடைமையும் நம்பகம் வாய்ந்ததாகவும் இருத்தல் மிக மிக இன்றியமையாதது. கேள்வி யின் மூலம் கிடைக்கும் பதில்கள் பதிலளித்தவரின் உண்மையான

நம்பிக்கை, அக்கறை, நோக்குப் போன்ற உள்ளத்தின் நிலைகளை விளக்குவனவாக அமைதல் சிறப்பு. இயன்றவரை கேள்விகளின் நடை பணிவாக, ஆனால் கண்டிப்பான தன்மையினதாக இருத்தல் வேண்டும். வினா நிரல்கள் அறிவியற் பாங்காக அமைகின்ற நேரத்தில் நேரடியாகவோ அல்லது அஞ்சல் மூலமாகவோ வினா நிரல்களைப் பயன்படுத்திச் செய்திகளைச் சேகரிக்க இயலும். வினா நிரல் வழி கிட்டிய பதில்களை எண்ணளவையிலோ அல்லது தன்மையளவிலோ (Qualitative) பகுத்துப் பிரித்துப் பாகுபடுத்தி உண்மை நிலைகளைப் பெற இயலும். சமூக உளவியலின் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளும் நிகழ்ச்சிகளனைத்தும் ஏறத்தாழ இம் முறைக்கு உட்பட்டவையாகவே இருக்கின்றன.

### பரிசோதனை முறை (Experimental Method)

உளவியலாளர்கள், பௌதிக அறிவியலாளர்களைப்போன்றே சமூக உளவியலிலும் பரிசோதனை முறையைப் பயன்படுத்த விரும்புகின்றனர். உலகப் புகழ் பெற்ற உளவியலார் ஒருவர் 'எது எது நிலவுகின்றதோ அது ஒரு சில அளவுக்கு உட்படும் தன்மையுடன் தான் நிலவுகின்றது. அப்படி அளவுக்கு உட்படும் தன்மையில் நிலவுகின்ற எதுவும் அளந்து அறியக் கூடியனவே' என்று கூறுகின்றார்.

இந்த வகையில் மனித நடத்தையைப் பாதிக்கும் பல்வேறு காரணிகளை ஒவ்வொன்றாகத் தனிப்படுத்துவதன் மூலம் அல்லது குறைப்பதின் மூலம் எந்த ஒன்று இல்லாதபோது அல்லது எந்தக் காரணிச் செயல்படும்போது மனித நடத்தை மாறுபாடு அடைகின்றது என்பதைச் சமூக உளவியலாளர்கள் எளிதில் கண்டறிகின்றனர். இதற்கு எல்லாக் காரணிகளையும் ஒரு கட்டுப்பாட்டிற்குள் வைத்து ஒவ்வொன்றாக ஆராயப்படவேண்டும். இம்முறை பரிசோதனை முறையாகும்.

இன்றைய சமூக உளவியலாளர்கள் பரிசோதனைக் கூடங்களில் செயற்கை முறையில் சிறு சிறு குழுக்களைத் தோற்றுவித்து அவற்றின் இயக்கங்களை ஆராயும் முயற்சிகளை மேற்கொண்டுள்ளனர். பரிசோதனைச் சாலைகளில் குழுக்களைக் கட்டுப்படுத்தி, ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் ஒரு சில மாறுமியல்புகளைப் புகுத்தி அல்லது ஒரு சில மாறுமியல்புகளை (variables) வேறுபாடுகளுக்குட் படுத்தி அந்நிகழ்ச்சியின் இயல்புகளனைத்தையும் புரிந்துகொள்ள முயலுகின்றனர். இப் பரிசோதனை முறையில் சார்புத் தன்மையும் விருப்பு, வெறுப்புகளும் இயன்றவரை நீக்கப்பட்டு உள்ளது. பரிசோதனைகளை மீண்டும் மீண்டும் நடத்தி முடிவுகளைச் சரிபார்க்க இயலும் ஒரே பரிசோதனையை எல்லா

இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் நடத்தி ஒரு நிகழ்ச்சியின் உண்மைகளைக் கண்டறிய இயலும். மேற் சொன்னவையும் இன்னும் இம் முறையில் உள்ள பிற நன்மைகளும், இம் முறைக் குச் சமூக உளவியலாளர்கள் அதிக முக்கியத்துவம் கொடுத் துள்ளதை நமக்கு விளக்குகின்றன.

சமூக உளவியலில் பரிசோதனை முறையைக் கையாளும் போது பலவிதமான இடையூறுகளைச் சமாளிக்க வேண்டியுள்ளது. ஒவ்வொரு நாட்டின் பழக்க வழக்கங்கள், பண்பாடு போன்றவை பிற நாடுகளின் பழக்க வழக்கங்கள், பண்பாடுகளினின்று பெரி தும் மாறுபட்டவையாயுள்ளன. மேலும் மனிதன் தான் வாழும் பகுதியின் சமூகச் சூழ்நிலையால் பெரிதும் கட்டுப்படுத்தப்பட் டிருக்கின்றான். எனவே, இச் சமூகச் சூழ்நிலை இடத்திற்கிடம் மாறுபடுகின்றது. மேலும் சமூகச் சூழ்நிலையின் மாறுமியல்பு களைக் கட்டுப்படுத்துவதென்பது மிக மிகக் கடினம். இத்தகைய இடர்பாடுகள் பல இருப்பினும், இடைவிடாத தங்கள் முயற்சி யின் பயனால் சமூக உளவியலார் பலவிதமான சோதனை முறை களைக் கையாண்டு, எடுத்துக்கொண்ட பிரச்சினைகளை ஆராயப் புதிய புதிய கருவிகளைத் தங்களது நோக்கங்களுக்கு ஏற்ப உருவாக்கிக் கொண்டு, பரிசோதனைகள் மூலமாகச் சமூக உள வியலை ஆராய்ந்து வருகின்றனர்.

### தனியவன் வரலாற்று முறை (Case History Method) ✓

இம் முறை சமூக உளவியலாளர்கள், சமூக வியலாளர்கள், மருத்துவ உளவியலாளர்கள், மனநோய் மருத்துவர்கள் போன்ற பலராலும் உபயோகப்படுத்தப்பட்டு வருகின்றது, தனியவனின் நடத்தையை அவனது கடந்தகாலச் சரித்திரத்தை ஆராயாது அறிந்துகொள்ள இயலாது என்னும் கோட்பாட்டில் இம் முறை செயல்படுகிறது. இதன் வழிக் கிட்டும் செய்திகள்–பல்வேறு கட்டங்களில் பல்வேறு வகையானதாய்ப் பல்வேறு தலைப்புகளின் கீழ்ச் சேகரிக்கப்பட்டு, சேகரித்த செய்திகளைத் தனியவனின் பிரச்சனையை என்னவென்று ஆராய உதவுகின்றது. தனியவ னின் குடும்பம் உறவினர், அந்நாட்டின் சூழ்நிலை, சமூகப் பொருளாதார நிலை, கல்வி, சமயம், உடலின் தன்மை, சூழ்நிலை களின் தன்மைப் போன்ற பல்வேறு அடிப்படைகளில் இருந்து அவனைப் பற்றிய செய்திகள் சேகரிக்கப்படுகின்றன. மேலும் சுய சரிதங்கள், நாட்குறிப்பேடுகள், பேட்டிகண்ட நிகழ்ச்சிகள், நீதிமன்றம், சிறைச்சாலை, மனநல மருத்துவமனை, பள்ளிகள் போன்றவற்றிலுள்ள குறிப்பேடுகள்; இன்னும் பல்வேறு ஆதா ரங்களின் மூலமும் தனியவனைப் பற்றிய செய்திகள் சேகரிக்கப் படுகின்றன.

தனியவன் வரலாற்று முறை இவ்வாறான எண்ணற்ற வழிகளில் பயனுள்ளதாகவும் உபயோகமானதாகவும் இருப்பினும் இதன் மூலம் மனித நடத்தையைப் பற்றிய ஆராய்ச்சி முடிவுகள் எந்த அளவிற்கு முக்கியத்துவம் வாய்ந்ததென்பதை நிச்சயமாக நாம் கூற இயலாது. ஏனெனில் தனியனின் மறதியும் மற்றும் இடைப்பட்ட காலம், இடம், போன்றவைகளும், உண்மையான செய்தியை அறியமுடியாமல் செய்கின்றன. தனியாள் வேற்றுமைகள், செய்திகள் சேகரிப்போரின் விருப்பு வெறுப்பு போன்றவை இம் முறையில் காட்டும் முடிவுகளைப் பாதிக்கின்றன. மேலும் செய்தி அளிப்போரின் மொழி, செய்தி சேகரிப்போருக்கு எளிதில் புரியக்கூடியதாய் இருக்கவேண்டும். இல்லையெனில் சேகரிக்கப்படும் செய்திகள் தவறான முடிவுகளைக் கொடுக்கும். இம் முறை சிறு குழந்தைகளுக்கும், செவிடர்களுக்கும், ஊமைகளுக்கும் பயன்படாது. ஏனெனில் அக் குழந்தைகள் தங்களுடைய கடந்த நிகழ்ச்சிகளைக் கூறுவதற்கான மொழித் திறனும் நினைவாற்றலும் பெருமலிருக்கலாம். இவ்வாறே செவிடர்களுக்கும், ஊமைகளுக்கும் தாங்கள் எந்தவிதத்தில் செய்தி சேகரிப்பவரிடம் பதில் அளிக்கவேண்டும் என்று தெரியாது. ஆனால் சில வேளைகளில் செய்தி அளிப்போரின் நினைவுத் தடையீடுகள், மிகைப்படுத்தல்கள் போன்றவை கூடத் தனியவனது அகவாழ்வு பற்றிய செய்திகளைத் தெள்ளத் தெளிய உணர்த்துவது உண்டு. ஸ்டேக்னர் (Stagner) கூறியது போன்று ' ஒருவன் குழந்தையாயிருந்தபோது மிகக் கடுமையாகத் தண்டிக்கப்பட்டதாகக் கூறுகிறான். ஆனால் இக் கூற்றின் உண்மையைப் பிறர் மறுக்கக்கூடும். இத்தகைய நேரங்களில் இக்கூற்று நம்பகம் பெறுவதில்லை. எனினும் அவன் தான் நடத்தப்பட்ட விதம் பற்றிக்கொண்டுள்ள நம்பிக்கைகள் பற்றி இக்கூற்றுத் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றது.

இவ்வாறு குற்றங்களை நீக்கிக் குணங்களைக் கொண்டு பார்க்குமிடத்து இம் முறையின் வரையறைகளை உள்ளத்தில் இருத்திப் பயன்படுத்தும் நேரங்களில் நல்ல பயன்மிக்க விவரங்கள் கிடைக்கும் என்பதில் ஐயமில்லை.

### அளவுத்திட்ட முறை (Scaling Method)

அளவுத் திட்டம் என்பது ஒன்றை அளப்பதற்கு உதவும் அமைப்பாகும். எல்லாப் பொருள்களும் எண்ணற்ற பரிமானங்களைப் பண்புகளைத் தன்னகத்தே பெற்றுள்ளன. அவற்றை அளக்கும்போது அவற்றின் நீளம், அகலம், எடை, தாங்கும் சக்தி, உருகுநிலை போன்ற பல்வேறு தன்மைகளை அளக்க

வேண்டியுள்ளது. இங்கே ஒவ்வொரு பண்பிற்கும் ஒவ்வொரு அளவுத்திட்ட முறை, கையாளப்பட வேண்டியிருக்கின்றது. சமூக உளவியலும் இத்தகையதுதான்; சமூகத்தில் வாழும் மக்களின் மனப்போக்கினை அறிய முற்படும்போது, அவர்களுக்கு அரசியலின்பால் உள்ள நோக்கங்கள், சமயங்களின்பால் உள்ள நோக்கங்கள், வகுப்புப் பிரிவு, ஜாதி, இனப் பிரச்சினைகளின் பால் அவர்களின் நோக்கங்கள்; இன்னும் கசப்பு, விருப்பு, வெறுப்புப் போன்றவற்றில் அவர்கள் காட்டுகின்ற எதிர்ச் செய்கைகளின் பாலான நோககங்கள் போன்ற பலவற்றை அளந்து அறிய வேண்டியிருக்கின்றது. சமூக உளவியலார்கள் இத்தகைய ஒவ்வொரு பிரச்சினைகளும் ஒரு சில குறிப்பிட்ட மதிப்பெண்களைக் கொடுத்து அதன் கூடுதல் அல்லது குறைதலின் எண்ணிக்கை வழி, ஒரு சமூகத்தின் தரத்தை நிர்ணயிக்க முயற்சிக்கின்றனர். இம் முறையே அளவுதிட்ட முறை என்று அழைக்கப்படுகின்றது.

**புள்ளியியல் முறை (Statistical Method)**

மிகவும் நுணுக்கமானதும் அதே நேரத்தில் எல்லாவித நோக்கங்களின் பாலும் பயன்படுத்தப் படுகின்றதுமான ஒரு முறையின்தேவையை உணர்ந்த சமூக அறிவியலாளர்கள் (Social Scientists) புள்ளியியலில் பல முறைகளைக் கையாண்டு இம் முறையைச் சிறந்ததாகக் கண்டு, ஏற்று, இதன் உதவியால் சமூகப் பிரச்சினைகளை ஆராய்ந்து வருகின்றனர்.

இதன் உதவியால் சமூக உளவியலார்கள் சமூகத்திலுள்ள ஒவ்வொருவனும் ஒரு பிரச்சினையில் ஈடுபட்டுள்ளபோது பெறும் மதிப்பெண்களையும், அவன் குழுவினரோடு சேர்ந்து இயங்கும் போது பெறும் மதிப்பெண்களையும், அல்லது அவன் தனியவனக இருக்கும்போது பெறும் மதிப்பெண்களையும், அவன் சார்ந்துள்ள அந்தக் குழு பெறும் மதிப்பெண்களையும், ஒப்பிட்டு ஆராய்ந்து எங்கே, எந்த இடத்தில், எந்த எண்ணிக்கையில் அல்லது அதன் பண்புத்திறத்தில் தனியவன் சமூகத்தினிடமிருந்து வேறு படுகின்றான் அல்லது சமூகம் தனியவனிடமிருந்து மாறிச் செல்லுகிறது என்பதைக் கண்டறிகின்றனர்.

புள்ளியியல் முறைகள் ஆய்ந்தறிந்த உண்மைகளை எண் அளவில் எத்தகைத்ததென்று நமக்குத் தெரிவிக்கின்றன. சமூக உளவியலில் ஏறத்தாழ புள்ளியியல் முறைகள் அனைத்துமே பயன்படுத்தப்படுகின்றன. என்றாலும் குறிப்பாகச் சராசரிகள் (averages), போக்குகள் (Brends), மாறிகளின் அளவீடுகள்

(measures of variability), இடைத்தொடர்புகள் (correlation) போன்ற முறைகளே அதிகம் பயன்படுத்தப்படுகின்றன.

நுண்ணறிவினைப்பற்றி ஆராய்கின்ற உளவியலாளர்கள், மிக விரைவிலேயே குழுவில் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்ட மக்கள் ஓர் அலைவுப் பரவலில் (normal distribution) அமைகின்றனர் என்று கண்டனர். இஃது அலைவுப் பரவலில் நடுப்புள்ளி ஒன்றில் பெரும்பாலும் அதிகமான எண்ணிக்கையுள்ள மக்கள் அமைகின்றனர். அதன் இருகோடிகளிலும் குறைந்த மனத்திறனுடையவர்களும், மிக உயர்ந்த மனத்திறனுடையவர்களும் அமைகின்றனர்.

இந்த நடுப்புள்ளியின் அன்மையில் சராசரி மக்கள் அனைவரும் எல்லாவகைக் குழுவிலும் ஒடுங்கி அமைவதில்லை. ஒரு சில குழுவின் பெரும்பான்மையோர் இந் நடுப் புள்ளியிலிருந்து விலகிச் சிறு சிறு எண்ணிக்கையில் மாறுபட்டுச் செல்வர். இவர்களைப் பற்றிய உண்மைகளை ஆராயும்போது புள்ளியியலின் விலகு முறை (deviation) பயன்படுத்தப்படுகின்றது. இத்தகையதும், இன்னும் மன நோயல் பாதிக்கப்பட்டவர்களை அளவிடும்போதும், அவர்கள் மனநலத்துடனிருப்பவர்களிலிருந்து எஃதளவில் எண்ணில் மாறுபாடு அடைகின்றனர் என்பதைக் காண, மாறுமியல்பின் அளவீடுகள் (measures of variability) முறை பயன்படுத்தப்படுகின்றது. இதனைப் போன்றே மனநோயால் பாதிக்கப்படுவோர்களின் மனநோய்க்கான காரணிகளை ஆராயும்போதும், தவறான வளர்ப்பு முறை எஃதளவிற்கு மனநோயுடன் தொடர்பு கொண்டுள்ளது என்பதை ஆராயும்போதும், இடைத்தொடர்பு முறை (correlation) பயன்படுத்தப்படுகின்றது.

**சமூக உளவியலுக்கும் பிற அறிவியல்களுக்கும் உள்ள உறவு**

எஃதோர் அறிவியலும் தன்னளவில் தன்னிறைவுப் பெற்றுத் தனித்தியங்குவது என்பது இயலாது. ஒவ்வோர் அறிவியலும் ஏனைய இயல்களுடன் ஏதாவதொரு வகையில் தொடர்புக் கொண்டும், கையாளுகின்ற அறிவியல் முறைகளின் அடிப்படையில் ஒன்றுடன் ஒன்று உறவுக் கொண்டும் இயங்கிக் கொண்டிருக்கின்றது. மேலும் முதன் முதலாகத் தோன்றிய அறிவியல்கள் பின்னல் தோன்றும் அறிவியல்களுக்கு முன்னோடிகளாக அமைந்து, வழிக் காட்டுகின்றன. சான்ருக, இன்றைய உளவியலின் முன்னோடிகளாக மெய்யுணர்வு, கணிதம் போன்ற இயல்கள் இருந்தன. இவையன்றியும் ஓர் அறிவியலின் புதிய கண்டுபிடிப்புகள் ஏனைய அறிவியல்களில் தகுந்த மாறுபாடுகளைத் தோற்றுவிக்கக் கூடும் என்பதை நாம் அறிவோம். டார்வினது பரிணாமக்

கொள்கையால் பாதிக்கப்படாத அறிவியல்கள் எதுவுமே இல்லை என்பதையும், ரஷ்ய நாட்டைச் சேர்ந்த பாவ்லாவ் (Pavlov) என்பார் கண்டுபிடித்த ஆக்கநிலையிறுத்தல் (conditioning) பற்றிய உண்மைகள் உளவியலின் போக்கையே மாற்றியமைத்த பாங்கினையும் நமக்கு வரலாறு உணர்த்துகின்றது. இத்தகைய வேற்றியல்களின் வளர்ச்சிகள் உளவியலின் வளர்ச்சியினை எவ்வாறு பாதித்திருக்கின்றன என்பதைக் 'கார்டினர் மர்பி' (Gardner Murphy) 'இன்றைய உளவியலுக்கு வரலாற்று அறிமுகம், என்ற நூலில் தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளார். இங்கு நாம் சமூக உளவியலுக்கும், பிற அறிவியல்களுக்கும் உள்ள தொடர்புகளைக் கீழே காண்போம்.

### சமூக உளவியலும் பொது உளவியலும்

சமூக உளவியல், உளவியலின் ஒரு பிரிவே. உள்ளத்தன்மைகளையும் போக்கையும் ஆய்வுப் பொருளாக எடுத்துக்கொண்ட அளவில் சமூக உளவியல் ஏனைய உளவியல் துறைகளனைத்துடனும் ஒற்றுமை கொண்டுள்ளது. அவ்வகையில் இது பொது உளவியலுடனும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது.

பொதுவாகப் பொது உளவியல் (General Psychology) உள்ளத்தைப் பற்றிய அடிப்படை உண்மைகளனைத்தையுமே அறிய உதவுகின்றது. பொது உளவியல் கூறுகின்ற உண்மைகள் எல்லா உளவியல்களிலும் கூறப்படுகின்ற உண்மைகளுக்கு அடிப்படையாய் அமைவதால், சமூக உளவியல் கோட்பாடுகளுக்குப் பொது உளவியல் கோட்பாடுகள் அடிப்படை உண்மைகளாய் அமைகின்றன. விலங்குகளின் நடத்தைகள், சமூக அமைப்புக் குறைந்த நிலையினின்று தொடங்கி முழுமையும் சமூக அமைப்பு உயர்ந்த நிலையில் காணப்படும் நிலைவரை, அத்தொடர்ச்சியில் முதல் முனையில் பொது உளவியலும், இறுதியில் சமூக உளவியலும் இடம் பெற்றுள்ளன. எனவே பொது உளவியலுக்கும், சமூக உளவியலுக்கும் உள்ள வேற்றுமைகள் இவை தாம் என அறுதியிட்டுக் கூற இயலாது. பெருமளவிற்கு இரண்டும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. 'உளவியல் அனைத்துமே சமூக உளவியல்தான்' என்று கூற முடியாதெனினும், இக் கூற்றுப் பெரும்பாலான இடங்களில் பொருந்தி வருவதை நம்மால் மறுக்க முடியாது. தனியவன் உளவியலுக்கும் சமூக அல்லது குழு உளவியலுக்கும் இடையே உள்ள வேறுபாடுகள் முதற் கண்ணோட்டத்தில் முக்கியத்துவம் நிறைந்ததாகத் தோன்றினும் மிக நுணுகி ஆராயும் போது பெருமளவிற்குத் தத்தம் தனித் தன்மைகளை இழந்துவிடுகின்றன தனியவன்

உளவியல் தனி மனிதனைப் பற்றி அக்கறையுடையது என்பது உண்மையே. எனினும் ஒரு சில விதி விலக்கு நிலைகளில் மட்டுமே தனியாள் உளவியல் இத் தனியொருவனுக்கும், பிறருக்கும் உள்ள உறவுகளைக் கருதாத நிலையினைப் பெற இயலும். தனியவனது உளவாழ்வில் யாராவது ஒருவர் பெரும்பாலான வேளைகளில் உதவியாளராக, எதிரியாக, இன்னும் இவை போன்ற ஒரு தொடர்பில் இடம் பெறுவதால் முதலிலிருந்தே தனியவன் உளவியல் ஒரு நோக்கில் சமூக உளவியலாகவும் செயல்பட்டு வருகின்றது.

**சமூக உளவியலும் வளர்ச்சி உளவியலும்**

வளர்ச்சி உளவியல் (Developmental Psychology) உயிரின் வளர்ச்சியைச் சார்ந்து எழுகின்ற உளவியல் கூறு குறித்து ஆராய்கின்றது. வளர்ச்சியின் விதிகளைக் காண இது முயல்கின்றது. பேச்சு, இயக்கம், மனஎழுச்சிப் போன்ற வெவ்வேறு உளவியல் பண்புகளையும் படிப்படியாய்ப் பிறப்பிலிருந்து இறப்பு வரை நிகழும் உடல்-உள்ள வளர்ச்சி, தளர்ச்சி ஆகியவற்றையும் இது விளக்குகின்றது. வளர்ச்சிப் பருவத்தின் ஒவ்வொரு நிலையிலும் எந்த அளவுக்குச் சமூகத்தின் சூழ்நிலைப் பாதிக்கின்றதோ அஃது அளவுக்குச் சமூக உளவியலை இத்துறை நம்பியிருக்கின்றது. குறிப்பாகச் சமூகவயமாக்கல் (socialization) ஆளுமை வளர்ச்சி போன்றவற்றை இவ்விரு இயல்களும் இணைந்து ஆராய்ந்தால் அன்றி, அவற்றைத் தெளிவாக அறிந்துகொள்ளுதல் இயலாது. வளர்ச்சி, உயிரியின் வளர்ச்சியின்போது ஏற்படும் சமூகச் சூழ்நிலையையே பெரிதும் பொறுத்துள்ளது. எடுத்துக்காட்டாக ஒரு குழந்தை பிறந்தவுடன் அது தன்னுடைய தாயின் பாதுகாப்பில் வளர்ந்துவருகின்றது. பிறகு வளர வளர அது தந்தை, சகோதர சகோதரிகளிடம் ஒன்று சேர்ந்து தன்னை அவர்களுடைய மனநிலைக்கு ஏற்றவாறு பேசவும், பழகவும் அமைத்துக்கொள்ளுகின்றது. பின்பு புறச் சூழ்நிலைகளான பள்ளி, விளையாடுமிடம், படிப்பகம், போன்றவற்றில் பிறருடைய மனநிலைக்கு ஏற்றவாறு தன்னுடைய நடத்தைகளை அமைத்துக்கொண்டு புதிய நடைமுறை அறிவுகளைப் பெறுகின்றது. இவ்வாறு தனியவன் தான் பிறந்த நிமிடத்திலிருந்து இறக்கும் வரை சமூகச் சூழ்நிலைக்குள் சூழ்ந்து புதிய மாற்றங்களைத் தான் அடைவதோடு மற்றவர்களையும் மாறச் செய்கிறான். இவ் வகையில் சமூக உளவியலும் வளர்ச்சி உளவியலும் ஒன்றையொன்று தழுவியே இயங்கி வருகின்றன.

**சமூக உளவியலும், கல்வி உளவியலும்**

கல்வி உளவியல், கல்விப் பயில்வதில் உள்ள போக்கையும், தன்மையும், இடர்ப்பாடுகளையும், சிறப்பாகக் கல்விப் பயிற்றும் முறைகளையும் ஆராய்வதில் கவனம் செலுத்துகின்றது. கற்றல் பற்றிய கொள்கைகளை அடிப்படையாகக் கொண்ட இத்துறை சமூக உளவியலின் துணையின்றி நிறைவு பெறுவது என்பது இயலாது. பள்ளி ஆசிரியர்–மாணவர் உறவு முதல் ஆசிரியர் குழு, மாணவர் குழு ஆகிய குழு அமைப்பு வரை அனைத்துமே சமூக உளவியலின் கோட்பாடுகளின் வழி இயங்குகின்றன. இந் நிலையில் கல்வியினைச் சார்ந்து எழும் சமூக உளவியற் சிக்கல்களை இவ்விரு உளவியல் பிரிவுகளும் இணைந்து நின்று ஆராயவேண்டியுள்ளதால் ஒன்றின் உதவி மற்றொன்றுக்கு இன்றியமையாததாக உள்ளது.



**சமூக உளவியலும், தொழிலக உளவியலும்**

இன்றைய அறிவியல்களின் வளர்ச்சியின் பயனாகவே தொழில்சார்பு வளர்ச்சிந் தோன்றியுள்ளது. இவ் வளர்ச்சியின் பயனாக எண்ணிறந்த தொழிற்சாலைகளையும் அவற்றைச் சார்ந்து எழுகின்ற சமூகங்களையும் நாம் காணுகின்றோம். பெரும் தொழிற்சாலைகளும் அவற்றின் பெருத்த உற்பத்திகளும் ஒரு சமூகப் பிரச்சினையாகவே வளர்ந்துவருகின்றது. இத்தகையதொரு நிலையில் இப் பிரச்சினைகளுக்கு ஒரு தீர்வினைக் காண இவ்விரு இயல்களின் ஒத்துழைப்புப் பெரிதும் தேவைப்படுகின்றது.

தொழில்சார்பு உளவியலுககுச் சமூக உளவியல் ஆற்றும் நன்மைகளை இன்று பலரும் உணர்ந்து வருகின்றனர். அலுவல் குழு (work group), தொழில் குழு (occupational group) ஆகியவைத் தொழிலாளர்களது நடத்தைகளைக் கண்டிப்பாகத் தீர்மானிப்பதையும், உற்பத்திநிலை முதல், விற்பனைநிலை வரை சமூகச் சிக்கல்கள் தலைதூக்கிய வண்ணமே இருப்பதையும், வேலை நிறுத்தம், மனக்கசப்புகள் போன்ற பல தொழிற்சாலை நடவடிக்கைகளைச் சமூக உளவியலினைக் கொண்டே அறியவேண்டியிருப்பதையும், நாம நன்ருக அறிவோம். இன்னும் தொழிற்சாலையின் ஒழுங்குநிலை, வேலையில் மனநிறைவு, தொழிற்சாலையில் நடைபெறும் இடைவினைகள் போன்றவை சமூகத்தின் இடர்ப்பாடுகளாகவே இருப்பதையும், இதனல் இன்றைய சமூக உளவியலின் துணையினை எப்போதும் தொழிற்சார்பு உளவியல் நாடிய வண்ணமே இருப்பதையும் நோக்குமிடத்து இவ்விரு இயல்களும் ஒன்றுடன் ஒன்று எவ்வகையில் உறவுகொண்டு இயங்கி வருகின்றன என்பது நமககுத் தெரியவரும்.

**சமூக உளவியலும் மருத்துவ உளவியலும்**

உளநோயின் அறிகுறிகள், காரணங்கள் அதனைத் தணிக்கின்ற வகை முறைகள் ஆகியவற்றில் அக்கறை காட்டுவது மருத்துவ உளவியலாகும். இம் மூன்று நிலைகளிலும் சமூக இடைவினைகள் காரணிகளாக இடம் பெறுகின்றன. உளநோயின் தோற்றத்தில் சமூகச் சூழ்நிலை பெருமளவு பங்கு பெறுகின்றது. ஐசன்க் (Eysenck) என்பார் 'உளவழி நரம்பு நோயும்' (Psychoneurosis) நோய்க் கூறுடைய ஆளுமையும் (Psychopathic parsonality) சமூகப்படுத்துதலில் ஏற்படுகின்ற 'தோல்விகளின் பயனாக ஏற்படுவதாகச் சுட்டிக் காட்டுகின்றார். ஃபிராய்டு (Freud), அட்லர் (Adler), யுங் (Jung) போன்றோரின் நூல்களில் சமூகச் சூழ்நிலை உளநோய்கள் ஏற்படுவதில் எவ்வளவு முக்கியத்துவம் கொண்டது, என்பது பற்றிக் குறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். யுங் 'ஆன்மாவினைத்தேடும் இன்றைய மனிதன்' (Modern man in search of a Soul), காரன் ஹார்ணியின் (Karn Horney) 'நவீன உலகின் நரம்பு வழி நோய் ஆளுமை Neurotic personality of Modern World)', எரிக் ஃபிராம் (Eric Fromn), 'பிறழ் நிலைச் சமூகம்' (Insaue Society), போன்ற நூல்கள் இன்றைய சமூகச் சூழ்நிலையில் உளநோய்கள் எவ்வாறு தோன்றுகின்றன என்பதைத் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றன. இன்றைய உளநோய்க் குண முறைகளில் புதிய பல சமூக முறைகள் கையாளப்படுகின்றன. குழுக் குண முறை, உள நாடகம் (Psycho drama), செயற்கைச் சமூக முறை (Artificial Society) போன்றவை சமூக உளவியல் நியதிகளின் அடிப்படையிலேயே இயங்குகின்றன. மேலும், ஏனைய குண முறைகளைச் சமூக உளவியலின் இடைவினைகள் மூலமாக அறியும் முயற்சி இன்று பெரிதும் காணப்படுகின்றது. எனவே இன்றைய உள மருத்துவமும், சமூக உளவியலும் ஒன்றுடன் ஒன்று மிக நெருங்கிய உறவினைக் கொண்டுள்ளதென்பது நன்கு தெரிகின்றது.

உளநோய் தோன்றும் முன்பே தற்காப்பு முறைகளை உருவாக்க முயன்று வரும் உளநல இயலும் (mentahygiene) சமூக உளவியலுடன் நெருங்கிய உறவு கொண்டிருக்கின்றது. இல்லம், கல்விக் கூடம், குழுக்கள் போன்றவற்றில் உரிய உறவு முறைகளை நிறுவிய நிலைகளில் உளநலம் பெரிதும் பேணப்படுகின்றது. இத்தகைய உறவு முறைகள் சமூக இயல்புடையன. எனவே இவ்வுறவு முறைகளைப் புரிந்துகொள்ள உள நல இயல் சமூக உளவியலின் துணையைப் பெரிதும் நாடுகின்றது.

**சமூக உளவியலும், பரிசோதனை உளவியலும்**

பரிசோதனைகளின் மூலம் உள்ளத்தின் பண்புக் கூறுகளை அறிய முற்படுவது பரிசோதனை உளவியலாகும். சமூக உளவியலில் பரிசோதனை முறைகளைக் கையாளும்போது ஒரு சில குறிப்பிட்ட பிரச்சினைகள் வலிமையுடன் எழுகின்றன. நடத்தைகளைக் கட்டுப்படுத்தல், ஆட்படுபவர், சோதனையாளர் போன்றோரின் பங்கு, பரிசோதனை மூலம் காணும் முடிவுகளை உண்மை வாழ்விற்கு ஏற்கப் பயன்படுத்துவதில் உள்ள இடையூறுகள் ஆகியவை சமூக உளவியலில் மிகமிக முக்கியமானவை. இந்நிலையில் இவற்றைச் செயல்படுத்த இவ்விரு இயல்களும் இணைந்து முயல்வதே சிறப்பானது. எனவே பரிசோதனை உளவியல் சமூக உளவியல் பயன்படுத்தப்படும் பலவித முறைகளுக்கும் அடிப்படையை நல்குகிறது.

**சமூக உளவியலும் சமூகவியலும்**

சமூகவியல் (Sociology) சமூக நிறுவனங்கள், அமைப்புகள் போன்றவற்றில் மக்கள் எவ்வாறு அமையப்பெற்றுச் செயல்படுகின்றனர் என்றும், அவர்களின் நடத்தை அக் குழுவினுள் அல்லது நிறுவனங்களுக்குள் எவ்வாறு செயல்படுகின்றது என்றும் ஆராய்ந்து அறிந்து கூறுவதாகும். சமூக உளவியலோ தனி மனிதனின் ஒவ்வொரு நடத்தையும் அந்தச் சமூக அமைப்பில் எவ்வாறு இருக்கின்றது என ஆராய்வதாகும். இவ்வகையில் சமூகத்தைத் தனது ஆய்விற்கு உகந்த பொருளாக ஏற்றுக் கொண்டிருப்பதில் இவை இரண்டும் மிக நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன.

சமூகவியல் சமூகத்தைக் குழுக்களாகப் பகுத்து ஒவ்வொரு பகுதியையும் முழுமையாக ஆராய முற்படுகின்றது. சான்றாகக் குடும்பம், பல்வேறு குழு அமைப்புகள், நாடு போன்ற பிரிவுகளின் அடிப்படையில் சமூகவியல் சமூகத்தினை ஆராய்கின்றது. ஆனால் சமூக உளவியல் குழு அமைப்புகளையல்லாது அதில் வாழும் மக்களின் அடிப்படையில் சமூகத்தைப் புரிந்து கொள்ள முயல்கின்றது. குடும்பத்தின் அமைப்பினைக் காட்டிலும் குடும்பத்தில் உள்ள உறுபினர்களது நிலையே மனித நடத்தையின் முக்கிய காரணி என்பது சமூக உளவியலின் கருத்து. இதே நேரத்தில் சமூகக் குழுக்களின் அமைப்பே அக் குழுவின் நடத்தையின் முக்கிய காரணி என்பது சமூகவியலின் கருத்து.

சமூகவியல் சமூக நடத்தையினைத் திட்டவட்டமான குழு நடத்தையாகவே காணும்போது, சமூக உளவியலோ குழுக்களின் மூலமாகத் துலங்கும் தனியவன்களது இடைவினையையே சமூக

நடத்தை என்று கருதுகின்றது. மேலும் சமூகவியல் சமூக நடத்தையின் அமைப்புகளைப்பற்றி ஆராயும்போது சமூக உளவியல் சமூக நடத்தையில் தனி மனித இயல்புகளைப்பற்றி ஆராய்கின்றது

சமூக உளவியல் சமூக நடத்தையின் தன்மைகளையும் அதன் காரணிகளையும் பற்றி அறிய முயற்சித்தால் சமூகவியல் சமூகத்தின் அமைப்புப்பற்றி (Form) அறிய முயற்சிக்கின்றது.

அன்றியும் சமூக உளவியலுக்கும் சமூகவியலுக்குமிடையே உள்ள வேறுபட்ட நோக்கங்களைப் பின்வரும் சான்றுகள் மூலம் விளக்க இயலும். கடற்கரையில் பலரும் பரந்த வெளியிலே கூடியிருக்க எதிர்பாராது, திடீரெனப் பலத்த மழை பெய்யத்தொடங்குகிறது. உடனே அவர்கள் அனைவரும் ஒதுங்கும் இடம் தேடி ஓடத்தொடங்குகின்றனர். இந்த நடத்தைக் குழுவினடிப்படையில் நடைபெறுகின்றதா அல்லது ஒவ்வொருவரும் பிறர் ஓடுவதனைக் கண்டு ஓடத்தலைப்படும் தனி மனித அடிப்படையில் நடைபெறுகின்றதா என்பது ஒரு வினுவாகும். பொதுவாகக் கூறுமிடத்து இவ்விருவகை வாய்ப்புக்களுமே இந் நடத்தையில் இடம்பெறக் கூடும் என்ருலும், சமூக உளவியல் இரண்டாவது கூறிய நோக்கினையே முக்கியமானதாகக் கருதுகின்றது. சமூகவியல் சமூக உளவியலினின்று மாறுபட்டு முதலில் கூறிய நோக்கினையே வலியுறுத்துகின்றது.

மக்கள் கூடியுள்ள அவை ஒன்றில் ஒருவர் பேசும்போது, குறிப்பிடக் கூடிய ஒரு விறுவிறுப்பான கட்டத்தில் மக்கள் கைதட்டி ஆரவாரம் செய்கின்றனர். இத்தகைய கை தட்டி ஆரவாரம் செய்யும் மக்களின் நடத்தையினைச் சமூக நடத்தை என்று நாம் கொள்ளலாம். கை தட்டுபவர்கள் தனித்தனியாக ஒரே தூண்டலுக்கு ஆட்பட்டுக் கைதட்டினுர்கள்; அல்லது குழுவினடிப்படையில் குழுவிலுள்ள பிற உறுப்பினரைக் கண்டு இவ்வித நடத்தையில் ஈடுபட்டவர்களா என ஆராய்ந்தால், சமூக உளவியல் முதலில் குறிப்பிட்ட தனியவனது குழு நடத்தையினை வலியுறுத்துகின்றது; சமூகவியலோ இரண்டாவதாகக் குறிப்பிட்ட குழுவின் குழு நடத்தையினை வலியுறுத்துகின்றது.

இங்ஙனம் மக்களின் நடத்தைகளை வேறு வேறு நோக்கங்களில் இவ்விரு இயல்களும்–பெருமளவு மாறுபட்டாலும்–கண்டறிந்தாலும், ஆராய்ச்சிப் போக்கில் இவையிரண்டும் அடிப்படையில் ஒன்ருய் இணைக்கப் பெறுகின்றன. சமூகவியலாரோ, சமூக உளவியலாரோ ஒரு பிரச்சினையைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபடும்போது இவ்விருவித நோக்குகளையும் மனதில் இருத்தியே

முடிவுகளைக் காண முயல்கின்றனர். சுருங்கக் கூறின் சமூக உளவியலும், சமூகவியலும் சமூகமென்ற ஒரே நாணயத்தின் இரு பக்கங்களாக அமைவதால் இவை இரண்டிற்குமிடையே உள்ள வேறுபாடுகளைத் திட்டவட்டமாக நுண்ணிய முறையில் குறிப்பிடல் இயலாது. அடிப்படையில் ஒன்றுகத் தெரியும் இவ்விரு இயல்களும் செயல்பாட்டில் மாறுதல் அடைகின்றன. இந்தச் செயல்பாட்டினைத் தவிர மற்றபடி இவ்விரு இயல்களும் ஒரே வகையான தன்மைகளைக் கொண்டு இயங்குவனவே!

**சமூக உளவியலும் மனித இயலும்**

சமூகவியல்களனைத்துமே பொதுவாக மனித நடத்தையை அறிந்து கொள்வதைத் தங்களது பொது நோக்காகக் கொண்டு இயங்குகின்றன. அந்த வகையில் மனித இன வளர்ச்சியின் சரிதத்தை ஆராயும் மனித இயலும் (anthropology) சமூக உளவியலும் தங்கள் பொதுவான நோக்கமாக ஒன்றி இணைந்து இயங்குகின்றன. மனித இயலில் மனித வளர்ச்சியைப் பற்றி ஆராய்கின்றபோது அம் மனிதர்களின் பழக்க வழக்கங்களின் வளர்ச்சி, நாகரிகங்கள், நிறுவனங்கள் போன்றவற்றின் வளர்ச்சி, இவற்றையும் நாம் பயில வேண்டியவர்களாக இருக்கின்றோம். சமூக உளவியலாளரும் இதையே செய்கின்றனர். மேற்போக்காகக் கூறுமிடத்துச் சமூக உளவியல், குழுவில் ஓர் உறுப்பினனான ஒரு தனி மனிதனைப் பற்றிப் படிக்கும்போது, மனித இயல் இந்தக் குழுவின் வளர்ச்சியை ஆரம்பகாலத் தோற்றம் முதற்கொண்டு ஆராயத் தொடங்குகின்றது. மேலும் முன்னது குழுவினரின் தற்போதைய நடத்தையில் அக்கறை செலுத்துகின்றது. பின்னது குழுவின் கடந்த கால நடத்தைகளில் அக்கறை செலுத்தி உண்மைகளைக் கண்டறிய முயல்கின்றது.

மனித இயலை, 'உடலியல் மனித இயல்' (Physical anthropology), வரலாற்றுக்கும் முந்திய பண்பாட்டு மனிதவியல் (Prehistoric and cultural anthropology), இன மனித இயல் (Ethnic anthropology), பயன்படு மனித இயல் (Applied anthropology) என்று நான்கு பகுதிகளாகப் பகுக்க இயலும்.

இப் பகுப்பில் உடலியல் மனித இயலுக்கும், சமூக உளவியலுக்கும் ஓரளவே தொடர்பு இருக்கின்றது. இம் மனித இயல் பொதுவாக மனிதனின் உடலமைப்புகளின் வளர்ச்சியினைத் தொடர்ந்து ஆராய முற்படுகின்றது. மனித உடல் எவ்வாறு ஒரு 'செல்' உயிரிலிருந்து இடையற்ற வளர்ச்சியைப் பெற்றிருக்கின்றது என்பதை அறிய இத்துறை முற்படுகின்றது. சமூக

உளவியலோ இம்மனித உடலியற் கூறுகள் அன்றைய நிலையில் எவ்வாறு சமூக நடத்தைக்கு அடிப்படையாக அமைந்திருந்தன என்ற அளவில் மட்டுமே அக்கறை காட்டுகின்றது.

வரலாற்றுக்கும் முந்திய பண்பாட்டு மனித இயல் சமூக உளவியலுடன் நெருங்கிய தொடர்பினைக் கொண்டிருக்கின்றது. இருப்பினும் வரலாற்றின் தொடக்க நிலைப் பண்பாடுகளில் இத் துறை ஆர்வம் காட்டுமளவிற்குச் சமூக உளவியல் ஆர்வம் காட்டுவதில்லை. மேலும் பண்பாடுகளின் வளர்ச்சி உள்ளது சிறப்பது என்னும் முறையில் அறிந்துகொள்ள மனித இயல் முயற்சிப்பதுபோலன்றி உளவியற் பண்புக் கூறுகளின் வழியாக அறிந்துகொள்ள, சமூக உளவியல் முயல்கின்றது. குறிப் பாகப் பண்பாட்டு மனித இயல் பண்பாட்டினைப் பற்றியே ஆராய் கின்றது. சமூக உளவியலோ பண்பாட்டினைச் சமூக நடத்தையின் ஒரு வகையாகவே கருதி ஆராய்கின்றது. மேலும் பண்பாட்டின் உள்ளது சிறப்பது பற்றிய விதிகளைக் கணிப்பதற்கு மனித இயல் முயற்சிச் செய்யும் அதே நேரத்தில், சமூக உளவியல் பண்பாடுகள் மனித இடைவினையுடன் அளவு தொடர்பு கொண்டுள்ளன என்பதைப் பற்றி ஆராய்கின்றது.

நிர்மல் குமார் போஸ் (Nirmal Kumar Bose) குறிப்பிடுவது போன்று, சமூக உளவியலும் மனித இயலும் ஏறத்தாழ ஒரே வித நோக்கினையே கொண்டுள்ளன. சமூக உளவியலார் மனித உள்ளத்தின் தன்மைகளை அறிய முயற்சிக்கும் நேரத்தில் மனித உள்ளத்திற்கும் ஒழுங்கமைக்கப்பட்ட நிறுவன (Institutional) நடத்தைகளுக்கும் உள்ள உறவை அறியும் முயற்சியில் சமூக இயல்கள் இயங்குகின்றன. அதனால்தான் மனித இனவியலார் பண்பாட்டில் செலுத்தும் அஃதே அளவிற்குச் சமூக உளவிய லாளர்கள் கவனம் செலுத்துவதில்லை.

இன மனித இனவியல் (Ethnic Anthropology) பண்பாடு களுக்கும் இனங்களின் பகுப்புகளுக்கும் இடையே உள்ள நடத்தை களை அறிய முயல்கின்றது. தனது துணை அறிவியல்களுடன் இணைந்த நிலையில் ஒவ்வோர் இனத்திற்கும் உள்ள முக்கிய பண்புகள் பற்றி உண்மையைக் காண இது முற்படுகின்றது. சமூக உளவியலும் இத்தகைய இன வேறுபாடுகளில் அக்கறை கொண்டுள்ளது. எனினும், இன மனித இனவியல் இன வேறு பாடுகளின் காரணிகள் அனைத்தைப் பற்றியுமே ஆராயும்போது சமூக உளவியல் சமூக உளவியற் சிறப்புப்பெற்ற நடத்தைகளைப் பற்றியும் ஆளுமைப் பண்புக் கூறுகள், நுண்ணறிவு போன்ற

உளவியற் காரணிகள் ஆகியவற்றைப் பற்றி மட்டுமே ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்கிறது.

பயன்படு மனித இனவியல் (Applied anthropology) வெவ்வேறு துறை மனித இயல் பிரிவுகளினின்றும் பெறப்பட்ட உண்மைகளை நடைமுறையில் எங்ஙனம் பயன்படுத்துவது என ஆராய்கின்றது இன்று நாம் வாழும் சமூகத்தின் பண்பாடு போன்றவற்றை விளக்கப் பெரிதும் இதுவே உதவுகின்றது. இஃது அளவிற்குச் சமூக உளவியலும், பயன்படு மனித வியலும் நெருங்கிய உறவினைப் பெற்றுள்ளன. சமூகத்தின் முன்னேற்றத்திற்கு அடிப்படையான சமூகக் காரணிகளை அறியும் முயற்சியில் இவை இரண்டும் ஒத்துழைத்தே இயங்குதல் வேண்டும்.

கொள்கையளவில் மனித இயலுக்கும், சமூக உளவியலுக்கும் இடையே உள்ள வேற்றுமைகளைக் கூற இயலும் என்றாலும் நடைமுறையில் இவை இரண்டும் பெரும்பாலான வேளைகளில் மிக ஒற்றுமை கொண்டவைகளாகவே இருக்கின்றன.

அதிகாரச் சுருக்கம்

சமூக உளவியல் மற்ற இயல்களில் உள்ள எல்லா முறைகளையும் தன்னகத்தே கொண்டு விளங்குவதோடு குறிப்பாக ஒருசில முறைகளைத் தனக்கென்று உரிமையாக்கிக் கொண்டுள்ளது. அவற்றில் உற்று நோக்கல், கள அளவீடு முறை, பேட்டிகாண் முறை, வினு நிரல்கள் முறை, பரிசோதனைமுறை, நிகழ்வுக் கூற்றின் வரலாற்றுமுறை, அளவுத்திட்டமுறை, புள்ளியியல் முறை என்பன. சிறப்பாகச் சமூக உளவியலில் கையாளப்படும் சில முறைகளாகும்.

எந்த ஓர் அறிவியலும் தன் அளவில் தன்னிறைவு பெற்றுத் தனித்தியங்குவதென்பது இயலாது. எனவே சமூக உளவியலும் பிற அறிவியல்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டு இயங்குகின்றது. சமூக உளவியல், உளவியலின் ஒரு பிரிவே. பொது உளவியல் உள்ளத்தைப் பற்றிய அடிப்படை உண்மைகளை எடுத்துப் பயில்கின்றது. அதன் உண்மைகள் சமூக உளவியலுக்கு அடிப்படைக் கோட்பாடுகளாய் அமைகின்றன. வளர்ச்சி உளவியல், உயிரியின் வளர்ச்சியைச் சார்ந்து எழுகின்ற உளவியற் கூறு குறித்து ஆராய்கின்றது. ஆனால் அதன் பணி சமூக உளவியலின் ஒத்துழைப்புடன்தான் சிறந்து செயல்பட இயலும். இங்ஙனமே சமூக உளவியல் ஏனைய கல்வி, தொழில் உள மருத்துவம், பரிசோதனை போன்ற உளவியல்களோடும் சமூகவியலுடனும் ஒன்றை ஒன்று சார்ந்து, நெருங்கிய தொடர்பு கொண்டு இயங்குகின்றது.

# 4. விலங்குகளின் சமூக நடத்தை

மனித சமூகத்தின் நடத்தையில் அக்கறை கொண்ட நாம், விலங்குகளின் சமூகநடத்தையினைக்குறித்து ஆராய வேண்டியதன் அவசியம் என்ன? அது மனித சமூகத்தைப் பற்றி அறிந்து கொள்ள எந்த அளவிற்கு உதவும்? நாம் எதுவரை அதன் படிப்பினையை நம்பி அதன் முடிவுகளையும் அறிவுகளையும் பயன்படுத்திக்கொள்ள முடியும்.

இத்தகைய வினாக்களுக்கு ஆட்டோகிளைன்பர்க் (Otto-Klineberg) என்பார் பதில் அளித்துள்ளார். மனித சமூகத்தில் காணப்படும் ஒரு சில சமூகச் செயல்பாடுகள், சமூக அமைப்பு களின் ஒரு சில பண்புக் கூறுகள் அக்குழுவின் வெளிக் சூழச் செயல்கள், தலைமைத் தன்மை, காதலிக்கும் முறைகள், இன்னும் புணர்ச்சிச் செய்யும்போது நடந்துகொள்ளும் போக்குகள், கூடி வாழும் முறைகள் போன்றவை விலங்குகளுக்கும், மனிதர் களுக்கும் ஒரே தன்மையாகவே காணப்படுகின்றன. இவற்றை நாம் விலங்குகளின் சமூகத்திலும், அவற்றின் ஆரம்ப நிலைகளிலும் காண இயலும். இங்கேதான் சமூக நடத்தையும், சமூக வாழ்க் கையும் தொடங்குகின்றன. இத் தொடக்கத்தைப் புரிந்து கொண்டால் சமூக நடத்தையின் வளர்ச்சியையும், அதன் அமைப் பையும், பின் அவை வளர்ந்து உள்ள நிலையில் புரிந்து கொள்வது நமக்கு எளிது. எனவே வளர்ந்துவிட்ட மனித சமூக நடத்தை யையும் அதன் அமைப்பையும் பற்றி அடிப்படையை முதலிலே தெரிந்துகொள்ளவும், மனித சமூகத்தைப்பற்றிய முழுமையான தேர்ந்த அறிவினைப் பெறவும், விலங்குகளின் நடத்தையைப் பற்றி அறியவேண்டியது மிகவும் அவசியமாகின்றது.

இரண்டாவதாக விலங்குகளின் சமூக நடத்தையைப் பற்றி நாம் அறிந்து கொள்ளும் அறிவு, மனித சமூகத்தில் சூழ்நிலை (Environment) பாரம்பரியம் (Hereditary) எனும் கராணிகள் எந்த அளவிற்குச் செயல்படுகின்றன என்பதைப் புரிந்துகொள்ள

உதவுகின்றது. எங்ஙனமெனின் உடல் அமைப்புகளைக் கொண்ட விலங்கினைப் போன்றே மனிதனும் புலன் உணர்வில் தூண்டப்பட்டுச் செயல்படுகின்றான். இச் செய்கை அவன் விலங்கு இனத்தினின்று வந்தவன் என்பதினாலும், இத் தூண்டுதல்கள் மரபு வாயிலாக விலங்குகளினிடமிருந்து அவனுக்கு வந்தவை என்ற காரணத்தினாலும் ஏற்படுகின்றது என நாம் கூறலாம். இருப்பினும் ஒரு சில நேரங்களில் மனிதன் விலங்கினங்களுக்கு அப்பாற்பட்டவனாக முற்றிலும் மாறுபட்ட வகையில், பண்பாடு, நாகரிகம் அறவாழ்வு போன்ற நடவடிக்கையில் ஈடுபடுகின்றான். இங்கே அவனின் பாரம்பரிய குணங்களைக் காட்டிலும் அவன் வளர்ந்த சூழ்நிலையின் காரணங்களே அதிகமாகச் செயல்படுகின்றன. போர்டு (Ford), பீச் (Beach) எனும் அறிஞர்கள் தங்களது புத்தகத்தில் பால், இன உறவு, நடத்தை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு இவ்விரு காரணிகளும் மனித சமூகத்தையும், விலங்குகளின் சமூகத்தையும் எப்படிப் பிரிக்கின்றன என்பதனை ஒப்பிட்டுப் பார்த்து ஆராய்ந்து எழுதியுள்ளனர். இவைபோன்ற விலங்குகளின் சமூக நடத்தைப் பற்றிய அறிவு, மனித சமூகத்தின் பாரம்பரியம் சூழ்நிலை போன்ற காரணிகளை ஆராய உதவுகின்றது.

உளவியல் என்பது நடத்தையின் பொது நியதிகளைக் கண்டு பிடிப்பது என்று இப்போது பேசப்படுகின்றது. இங்ஙனம் நடத்தையின் பொது நியதிகளைக் கண்டுபிடிக்க மிகவும் சாதரணமான பிராணிகளின் வாழ்க்கையைக் கொண்டு ஆராய்ந்து அப் பொது நியதிகள் ஆரம்ப நிலையில் இருக்கும் தன்மைகளையும் ஆராய்ந்து அறிதல் வேண்டும். எனவே மனித சமூக நடத்தையை ஆராய்ந்து அறிவதற்குத் தேவையான முன் படிப்பினையாக நாம் விலங்கினங்களின் சமூக வாழ்க்கைகளையும் அறியவேண்டியது அவசியமாகின்றது.

இறுதியாகக் கூறுமிடத்து விலங்குகளின் சமூக உளவியலை நாம் ஊன்றி அறிவது விலங்குகளும், உயிரிகளும் எவ்வாறு வாழ்கின்றன. என்பதனை அறியும் ஆவலின் பாற்பட்டதாகவும் இருக்கலாம்.

**விலங்குகளின் சமூக நடத்தையும் அதன் காரணிகளும்**

ஒரே இனத்தைச் சேர்ந்த விலங்கு மற்றொரு விலங்கினால் தூண்டப்படுவதுண்டு. இவ்வாறு ஒன்றினால் தூண்டப்படும் சமூக நடத்தையினையே, நாம் விலங்குகளின் சமூக நடத்தை என்கிறோம். இத்தகைய விலங்கு நடத்தையைப் பொதுவாக நாம் சமூக நடத்தை என்று கூறலாம். விலங்குகளின் சமூக நடத்தை

அவற்றின் ஊடல் அமைப்பினைப் பொறுத்தும் அவை உயிர் வாழும் நிலையினைப் பொறுத்தும் அமைகின்றது. உதாரண மாகக் கீழ்த்தர உயிரினங்கள் தங்களின் உடல் அமைப்புக் கேற்றபடி தங்களுக்குத் தேவையான உணவைப் பெறுகின்றன. இவ்வாறு உணவைப் பெறும்போது ஓர் உயிர்வாழ் இனம் மற்றோர் உயிர்வாழ் இனத்திற்குத்தெரிந்தோ தெரியாமலோ உதவி செய்கின்றது. இவ்வகையில்தான் கீழ் தர உயிர் இனங் ளிடையே சமூக வாழ்க்கை அமைகின்றது. ஒரு சில பாக்டீரி யாக்கள் (Bacteria) தங்கள் உயிர் வாழும் செடிகளின் வேர்களி லிருந்து தங்களின் உணவைப் பெறுவதோடு மண்ணில் உள்ள முக்கிய தாதுப் பொருட்களின் மூலகங்களைப் பிரித்து வேர்களுக்கு உணவும் அளிக்கின்றன.

சிறிது உயர் தர வாழ்க்கை அமைப்பினை உடைய உயிர்வாழ் இனங்களிடையே இச் சமூக வாழ்க்கை ஒன்றை ஒன்று நம்பி வாழும் வாழ்க்கையாக அமைகின்றது. உதாரணமாக, பட்டுப் பூச்சி, தாவரம் இவற்றின் வாழ்க்கையைக் கூறலாம். பட்டுப் பூச்சி, பூக்களின் அடியில் உள்ள தேனைப் பெற குழல் வடிவமான வாய் அமைப்பினைப் பெற்றிருக்கின்றது. ஆனல் அதே நேரத்தில் அதன் கால்களும் வயிற்றுப் பகுதியும் மலர்களிலுள்ள மகரந்தத் தூள்களை எடுத்துச் சென்று மற்ற பூக்களில் ஒட்ட வைத்துச் செடிகளின் இன விருத்திக்கு உதவுவதாக அமை கின்றது. இதனைப் பயன்படுத்திக்கொள்ளவே செடிகள் தேனை அத்தகைய குழல் வடிவான அமைப்பைக்கொண்டுள்ள பூச்சிகளே எடுத்துப் பருகும் அளவிற்கு மலர்களின் அடியில் கீழேவைக் கின்றன. இத்தகைய ஒரு வகை உயிர்வாழ் இனங்கள் மற்றோர் உயிர்வாழ் இனத்தையே நம்பி உயிர் வாழ்தலையும், அவற்றின் வாழ்க்கை ஒன்றுக்கொன்று உதவுவதாக அமைவதையும், ஒன்றுக்கொன்று உயிர் வாழும், 'கூட்டுச் சம வாழ்வு' என்று அழைக்கின்றோம்.

தாங்கள் காட்டும் சமூக நடத்தையின் அளவிலும் தன்மை யிலும் விலங்குகள் பெரிதும் மாறுபடுகின்றன. கீழ்நிலை விலங்கு களில் பெரும்பான்மையானவற்றின் சமூக நடத்தை–பால் நடத்தை (social behaviour) இருக்கை தேடுதல் (shelter seeking) எனப்படும் இருவகை தொடக்க நிலைகளின் நடத்தையினல் எழும் தற்காலிகக் கூட்டுச் சேர்க்கையாகவே காணப்படுகிறது. புரோட்டோசோவா (protozoa) இனத்தைச் சேர்ந்த பேரமீசியா (paramecea) இணைவதற்காக இரட்டைகளாகக் கூடுகின்றன. மேல்தர விலங்குகளிடையே பால் நடத்தையுடன், குஞ்சுகளைப் பாதுகாத்துப் பேணுதலும் இவற்றிடையே காணப்படும் சமூக

வாழ்க்கைக்கும் சமூக நடத்தைக்கும் காரணிகளாக அமைகின்றன. பேணுதல் நடத்தையே பூச்சிச் சமூகங்களின் சமூக வாழ்வின் அடித்தளமாக அமைகின்றது.

முதுகெலும்பு விலங்குகளிடையே 'பேணுதல்' முக்கிய சமூக நடத்தையாகக் காணப்பட்டாலும் அதுவே முழு முக்கியத் துவத்தையும் பெற்றிருப்பதில்லை. இவ்விலங்குகள் மற்ற விலங்கு களின் செயல்களைப் பார்த்து அவ்வாறே தாமும் செய்ய முற்படு கின்றன. இந் நடத்தையின் அடிப்படையாகவே இயைபு மிக்க கூட்டங்கள், பறவைக் கூட்டங்கள் பாலூட்டிகள் முதலியன வற்றின் மந்தைகள் தோன்றுகின்றன.

இத்தகைய காரணிகளை விலங்குகளின் சமூக நடத்தைக்கு அடிப்படைகளாய் நாம் கூற இயலும். ஆனால் டின்க் லேபக் (Tink Lepaugh) என்பார் விலங்குகளின் சமூக நடத்தைகளைத் தீர்மானிப்பதில் நான்கு காரணிகள் முக்கியமானவைகளாக இருப்பதாகக் குறிப்பிடுகின்றார். அவை (1) பௌதிகச் சூழ்நிலை, (2) உடலியல் அமைப்பு, (3) உடலியல் காரணிகள், (4) உள வியற் காரணிகள் என்பனவாம்.

1. **பௌதிகச் சூழ்நிலை:** இச் சூழ்நிலைக்குச் சான்றாக புரோட்டோசோவாவைக் (Protozoa) குறிப்பிடலாம். புரோட்டோ சோவா ஒளி ஈர்ப்பினிற்கு (Photoiopism) எதிர்த்தன்மை கொண் டிருப்பதால் நிழல்களிள்ள பகுதிகளிலெல்லாம் குழுக்குழுவாகக் காணப்படுகின்றன. தட்ப வெட்பமும் (climate) சமூக நடத் தைக்கு வழி கோலுகிறது. பறவைகளின் இடப் பெயர்ச்சியினை இதற்குச் சான்றாகக் கூறலாம்.

2. **உடலியல் அமைப்பு:** எறும்புகளின் சமூக நடத்தை இவ் வகையினைச் சேர்ந்ததே. இராணி எறும்புகள், ஆண் எறும்புகள், இயல்பாக கருத்தரிக்க முடியாத பெண் எறும்புகள், வேலைக்கார எறும்புகள் ஆகியவற்றிடையே உள்ள உடல் அமைப்புகளின் அடிப்படையில் இவற்றின் சமூகத் தொடர்புகளின் அமைம்பு களும் நடத்தைகளும் அமைகின்றன.

3. **உடலியல் காரணிகள்:** பிராணிகளிடையே ஏற்படும் காதல், கலவி, உறவு முறைகள் போன்றவற்றில் ஒன்றிற் கொன்று ஏற்படும் கவர்ச்சித்தன்மையின் அடிப்படையில் ஏற் படுகின்றன. இங்ஙனம் பாலுறவில் ஒருங்கிணைந்த பிராணிகள் பின்னர் பேணுதலின் வழித் தொடர்ந்து சமூகமாக வாழ்கின்றன.

4. **உளவியற் காரணிகள்:** ஆட்டுமந்தையில் மிரளுகின்ற ஓர் ஆடு, மந்தை முழுவதையும் மிரளச் செய்கின்றது. திடுக்

கிட்டு ஓடும் ஒரு மானின் செயல் மற்ற மான் மந்தையினையே திடுக்கிட வைத்து ஓடச் செய்கின்றது. இங்கே மன எழுச்சி, சந்தேகம் போன்ற உளவியற் காரணிகள் ஒன்றை ஒன்று பின் பற்றி நடக்கும் சமூக நடத்தைக்குக் காரணிகளாக அமைகின்றன.

இவையேயன்றியும் சமூக உளவியலார்களில் சிலர், பிராணிகள் விலங்குகளிடையே காணப்படும் சமூக நடத்தையைக் கீழ்க் கண்ட மூன்று பொதுப் பகுப்பின் வழிப் பிரித்து அதன் மூலம் இவற்றைக் காரணிகளாக எடுத்துக் கூறுகின்றனர். அவை (1) கீழ் நிலை முதுகெலும்பு விலங்குகளை உள்ளிட்ட தற்காலிகச் சேர்க்கைகளில் மட்டும் காணப்படும் சமூக நடத்தைகள், (2) பூச்சி சமூகங்களைப் போன்ற பேணுதல் நடத்தையினால் பிணைந்து நிரந்தரமாக ஒன்று கூடி வாழும் சமூக நடத்தைகள், (3) முதுகெலும்புகளைக் கொண்ட விலங்கு சமூகங்களில் காணப் படும் சமூக நடத்தைகள் என்பனவாம். இதோடு இச் சமூகங் களில் பேணுதல் நடத்தையும் இணைந்தே காணப்படுகின்றது.

இம் மூன்று வகை சமூக நடத்தைகளில் முதல் வகையில் நிரந்தரமற்ற தற்காலிகச் சேர்க்கையும், இரண்டாம் வகுப்பில் பேணுதலும், மூன்றும் வகுப்பில் பின்பற்றுதல் குழுவாழ்வு போன்றவற்றிலும் சமூக நடத்தைகளுக்கான காரணிகளாய் அமைகின்றன என அவர்கள் கூறுகின்றனர்.

இதன் மூலம் மனித சமூக நடத்தைக்குப் பொதுவாகச் சில முக்கிய அடிப்படைக் காரணிகளாய் அமைவதனைப் போன்று, பிராணிகள், விலங்குகள் இவற்றின் சமூக நடத்தைகளுக்கும் சில அடிப்படைக் காரணிகளாய் அமைகின்றனவென்றும், இவ்வடிப் படைக் காரணிகள் இனத்திற்கு இனம் பல்வேறு காரணங்களைப் பொறுத்து மாறுபடலாம் என்றும் அறிகிறோம்.

**பிராணிகளின் சமூக வாழ்க்கை**

பாக்டீரியாக்களின் ஒன்றுகூடி வாழும் வாழ்க்கையை ஆராய்ந்தபோது, அவற்றின் வாழ்க்கையில் சமூக நடத்தை யென ஒன்று இல்லை என்றும் பிராணவாயு (oxygen) அதிகமாக உள்ள இடங்களில் அவை இயல்பாகக் கூடத் தொடங்கி ஒரு கூட்டுத்தொகுதி ஏற்படுகின்றது என்றும் தெரிய வருகிறது. இங்ஙனம் முதுகெலும்பற்ற பிராணிகளின் சமூக வாழ்க்கை உயிர்வாழ் நிலைகளை ஒட்டி நிகழ்ந்துவிட்ட கூட்டாக அமைகின் றதே ஒழிய தனித்த, பொருள் பொதித்த சமூக வாழ்க்கையாக அமைவதில்லை.

இதற்குச் சிறிது மேம்பட்ட சமூக வாழ்க்கையினை நாம் மீன்கள், பூச்சிகள், பறவைகள் பாலூட்டிகள் போன்ற உயிரிகளிடம் படிப்படியான முன்னேற்றங்களுடனும் சிறப்பியல்புகளுடனும் காணலாம்.

**மீன்களின் சமூக வாழ்க்கை**

முதுகில் மூன்று முட்களை உடைய (Three spined stickle back) ஒருவகை மீனினத்தின் சமூக வாழ்க்கையைச் சமூக உளவியலாளர்–ஒருவர் முழுமையாக ஆராய்ந்துள்ளார். புதிய நீரில் மட்டுமே வாழக்கூடிய இச் சிறுமீன்கள் கலவிப் பருவம் நீங்கிய எல்லாக் காலங்களிலும் கூட்டம் கூட்டமாகவே காணப்படுகின்றன. கலவிக் காலம் வந்ததும் ஆண் மீன்கள் கூட்டத்திலிருந்து விலகுகின்றன. தங்கள் நிறங்களை மாற்றிக்கொண்டு சேறும், செடிகளும் நிறைந்த பகுதிகளில் ஒவ்வொன்றும் தனக்கென்று ஒரு பிரிவை ஏற்படுத்திக் கொண்டு பெரும் கூடு ஒன்றைக் கட்டி அதில் ஒரு வழியை உண்டாக்குகின்றன. இப்போது பெண் மீன்களின் கூட்டம் அங்கு வருகின்றது, ஆண் மீன் வளைந்து வளைந்து காதல் நடனமாடியபடி அவற்றை நோக்கிச் செல்கிறது. இதனால் கவரப்பட்ட பெண் மீன் ஒன்று ஆணைத் தொடர்ந்து சென்று அதன் கூட்டை அடைந்து கலவையில் ஈடுபட்டு முட்டையிடுகிறது. உடனே ஆண் மீன் பெண்ணை விரட்டி விட்டு முட்டையைத் தன் இறக்கைகளால் விசிறியபடி கூட்டில் இருக்கிறது. ஏழெட்டு நாட்களில் குஞ்சுகள் வெளி வருகின்றன. இவற்றில் ஏதாவது ஒன்று தன் கூட்டத்திலிருந்து ஓடினாலும் தந்தை மீன் ஓடிச்சென்று அதனை வாயினால் பிடித்து வந்து தன்னுடைய கூட்டத்தில் மீண்டும் சேர்ப்பிக்கிறது. இவ்வாறு ஒரு சில வாரங்களுக்கு ஆண் மீன் குஞ்சுகளுடனேயே இருக்கிறது. பிறகு அவ்விடத்தை விட்டு அகன்றுவிடுகிறது. குஞ்சுகள் தத்தம் வழியே கூட்டத்தில் ஒன்றாகச் செல்கின்றன. வேறு பல வகையான மீன் இனங்களிடமும் இதே நடத்தைக் காணப்படுகின்றது.

பறவைகளுடனும், பாலூட்டிகளுடனும் ஒப்பிடுகையில் மீன் பல அடிப்படையான சமூக நடத்தைகளை இழந்ததாகவே காணப்படுகின்றது. மீன்களிடம் பால் இன நடத்தையில் பிரச்சினைகள் எதுவும் காணப்படுவதில்லை. குஞ்சு பொறித்த பின் மீன் ஒரு போதும் குஞ்சுகளுக்கு இரையூட்டுவதில்லை. பெற்றோருக்கும் குஞ்சுகளுக்கும் இடையே ஏற்படும் உறவு சுருக்கமானதாகவே இருக்கின்றது. இருப்பிடம் அளித்தல் எதிரிகளைத் துரத்தல் ஆகியவையே குஞ்சுகள் பேணுதல் நடத்தையாக அமைகின்றன.

மீன் குட்டிகளும் பேணுதல் நாடும் நடத்தையற்றே காணப்படுகின்றன.

பெரும்பாலான மீன்கள் திட்டவட்டமான இடங்களில் வசிக்கின்றன. இயல்பிலாது எங்கும் நீந்துவதில்லை. தூய நீரில் வசிக்கும் மீன் அதன் இருப்பிடத்தினின்று எடுத்துச்செல்லப் பட்டால் மீண்டும் தன் இடத்திற்கே அது விரைந்து மீள்கிறது. நீண்ட நாள் வாழும் இன மீன்கள் வருடக் கணக்கில் ஒரே இடத்தில் காணப்படுகின்றன. கலவிப் பருவமானாலும், இவை திட்ட வட்டமான பகுதிகளைத் தேர்ந்தெடுத்து அவற்றிலேயே தொடர்ந்து வாழ்கின்றன.

## இடப்பெயர்ச்சி (Migration)

மீன்களிடம் இடப்பெயர்ச்சி நடத்தைச் சிறப்பாகக் காணப்படுகிறது. சாலமன் (Salaman) மீன்கள் கூட்டங் கூட்டமாகத் தங்கள் தூய நீர்ப்பகுதியினின்று பெயர்ந்து கடலுக்குச் செல்கின்றன. பின் பல ஆண்டுகள் கடந்து மீண்டும் தங்கள் பழம் பகுதிக்கே மீள்கின்றன. நீரின் இரசாயன பண்புகளை உணரும் திறன் கொண்டிருப்பதாலேயே இவற்ருல் இவ்வாறு மீள இயலுகின்றது. அட்லாண்டிக் ஈல்ஸ் (Atlantic eels) எனும் சார் கோசா கடலில் உள்ள மீன்கள் தங்கள் இடத்தினின்று பெயர்ந்து ஐரோப்பா, வட அமெரிக்கா ஆகிய கடற்கரை பிரதேசங்களுக்குச் சென்று வாழ்ந்து மீண்டும் நீந்தித் தம் பழைய இடத்திற்கே வந்து சேருகின்றன எனப்படுகிறது.

## இனப்பெருக்க நடத்தை (Breeding behaviour)

ட்ரோட் (trout), சாலமன் (Salman) போன்ற மீன் இனங்கள் பெற்ரோர்களின் பேணுதல் பெருமளவு குறைந்தும் கூட்டத்தின் முக்கியத்வம் மிகுந்தும் காணப்படுகின்றது. ஐரோப்பாவைச் சேர்ந்த அல்பைன்சன் (Alphine chae of Europe) எனும் மீன் இனத்தில் ஆண் மீன் தெளிவான ஓடை அல்லது ஒளியின் தரையில் கலவி இடத்தை நிர்ணயிக்கிறது. பெண் மீன் இவ்விடத்தையடைந்து பக்கவாட்டில் படுத்துத் தன் வாலினுல் கீழேயுள்ள சிறு கற்களை அகற்றிவிட்டுக் கூடு அமைக்கின்றது. இதனைத் தொடர்ந்து கலவி ஏற்பட முட்டைகள் கூட்டில் இடப்படுகின்றன. பின் பெண் மீன் இம் முட்டைகளைச் சவ்வில் போட்டு மறைக்கின்றது. மறைக்கப்படாமல் உள்ள முட்டைகளை ஆணும் பெண்ணும் உண்டு விடுகின்றன. பெரும்பாலும் பெண் மீன் தொடர்ந்து பல கூடுகளை அமைப்பதும் முட்டைகள் இட்டபின் ஒவ்வொன்ருக மூடிவிடுவதும் வழக்கம். பின் சிறிது காலம் இக் கூடுகளின் அருகில் பெண் மீன் வசிப்பதுண்டு. இவ்விடத்தை

அது தன் இடமாக உரிமை கொண்டாடுவதுண்டு. ஆண் மீன் இதில் கலந்து கொள்வதில்லை. தன் இடத்திற்கு வரும் பிற பெண் மீன்களிடம் காதல் செய்கின்றன. இளம் குஞ்சுகளைப் பாதுகாக்கப்பெற்றவை முயற்சியெடுப்பதில்லை. குஞ்சுகள் வந்ததும் அவற்றைத் தின்றுவிடவே செய்கின்றன. எனினும் இக் குஞ்சு மீன் கூட்டங்களிடமிருந்தே பாதுகாப்பைப் பெறுகின்றன.

**பூச்சி இனங்களின் சமூக வாழ்க்கை**

குளவிகள், தேனீக்கள், எறும்புகள், கறையான்கள் ஆகிய பூச்சிகளிடம் சமூக நடத்தைக் காணப்படுகின்றன. அவ்வினத்தில் சாதி அமைப்பு, குழு வாழ்க்கை, குழு ஒருமைப்பாடு, வேலைப்பிரிவு ஆகிய சமூக அமைப்புகள் நன்கு வளர்ந்த நிலைகளில் காணப்படுகின்றன. இனப்பெருக்கத் திறன் அடிப்படையிலும் வேலை செய்யும் ஆற்றலின் அடிப்படையிலும் சாதி அமைப்புகள் காணப்படுகின்றன. அரசன், அரசி, இனப்பெருக்கத் திறனிறை வேலைக்காரர்கள், போர்வீரர்கள் போன்ற முக்கிய பிரிவுகள் இங்ஙனமே பகுக்கப்பட்டுள்ளன. இனப்பெருக்க வகுப்பினைச் சேர்ந்த பூச்சிகளே தங்கள் இனத்தைப் பெருக்குகின்றன. மற்றவை கூட்டமாகப் பறந்து சென்று புதிய புற்றுக்களை உருவாக்க இடம் பிடிக்கின்றன. இடத்தைப் பிடித்ததும் மனைகளில் உருவாகும் குஞ்சுகளைப் பாதுகாத்துப் பேணுதல் இவற்றின் முக்கியத் தொழிலாக அமைகின்றது. மேனிலை எறும்புகளிடையேயும், கறையான் (termites) களிடையேயும் இனப்பெருக்கத் திறனற்ற ஆண், பெண் வேலைக்காரப் பூச்சிகளும், போர்வீரப் பூச்சிகளும் இருக்கின்றன. ஆனால் குளவிகள், தேனீக்கள், வேறுசில எறும்பினங்கள் (Ponerine ants) ஆகியவற்றிடையே இனப் பெருக்கத் திறனற்ற பெண் பூச்சிகளே வேலைக்காரப் பூச்சிகளாக முட்டைகளைக் காத்தல், கூட்டுப் புழுக்களைப் பேணுதல், புற்றுகளைக் கட்டுதல், இரைதேடி வருதல் போன்ற வேலைகளைச் செய்கின்றன. போர்வீரப் பூச்சிகள் எதிரிகளிடமிருந்து தங்கள் இனத்தைக் காத்துக்கொள்ளப் போரிடுவதற்கு ஏற்ற உடலமைப்புக் கொண்டவைகயாகக் காணப்படுகின்றன.

**சாதி வேறுபாடுகள்**

சமூக ஒழுங்கமைப்புக் கொண்ட பூச்சிவகைகளிடையே சாதி வேறுபாடுகள் பலவகைக் காரணிகளின் அடிப்படையில் ஏற்படுகின்றன. புறக்காரணிகள் (Extrioric fattors) உணவூட்டம் (Nutrition) பரம்பரை இயலமைப்பு (genetics) ஆகியவை இதற்கான அடிப்படைக் காரணிகளாக உள்ளன. குளவிகள், தேனீக்கள், எறும்புகள் ஆகியவற்றிடையே காணப்படும் சாதி வேறு

பாடுகள் பரம்பரை இயலையும், உணவூட்டத்தையும் அடிப்படையாகக் கொண்டுள்ளன. ஆண், பெண் ஆகியவற்றிற்கிடையே உள்ள வேற்றுமைகள் பரம்பரை இயலின்படி ஏற்படுகின்றன. ஆண் பூச்சிக் கருத்தரிக்காத (unfestilired) முட்டையினின்று பிறக்கிறது. எனவே இதில் ஒரு குரோமோசோம் (chromosome) தொகுதியே இருக்கிறது. இராணி ஈக்கள், வேலைக்காரர்கள், போர்வீரர்கள் ஆகியவை பெண்பாலினமாகவே உள்ளன. இவை கருத்தரித்த முட்டையினின்று தோன்றுவதால் இவற்றிடம் இரண்டு குரோமோசோம் தொகுதிகள் காணப்படுகின்றன.

### இனப்பெருக்கம்

ஒவ்வொரு கூட்டிலும் ஓர் இராணி இருப்பது இயல்பு. சில குளவிகளிடையேயும் எறும்புகளிடையேயும் ஒரே கூட்டில் பல இராணி ஈக்கள் இடம் பெறுவதும் உண்டு. கறையான் இனங்களில் ஓர் அரசனும் அரசியும் ஒன்றாகக் காணப்படுவதாகக் கண்டுள்ளனர். ஓர் அரசன் ஈர் அரசிகள் அல்லது ஈர் அரசர்கள் ஓர் அரசி என்று இருப்பதும் உண்டு.

### புற்று அல்லது கூடுகட்டுதல்

தட்ப வெப்பம், ஈரப்பசை, மிகையான நெருக்கம் போன்ற பல காரணிகளின் அடிப்படையில் பூச்சிகளின் புற்றுகள் ஏற்படுகின்றன. குளவி, தேனீ ஆகிய இனங்களில் இராணிப்பூச்சிக் குளிர்காலத்தில் கருவுற்று இருந்து, வசந்த காலத்தில் புதிய இடத்தைத் தேர்ந்தெடுத்து தனக்குமட்டும் கூடுகட்டிக்கொண்டு அதில் முட்டையிடுகிறது. முதல் முட்டைகளிலிருந்து வேலைக்காரப் பூச்சிகள் பிறக்கின்றன. இவையே கூடு கட்டுதல், குஞ்சுகளைப் பராமரித்தல் ஆகியவற்றில் ஈடுபடுகின்றன. கோடையில் ஆண்களும், இளம் இராணீக்களும் கூட்டில் தோன்றுகின்றன. குளிர்காலம் நெருங்க நெருங்க வேலைக்காரப் பூச்சிகள், ஆண்கள், முதிர்நத இராணீக்கள் அனைத்தும் இறந்து விடுகின்றன. கருவுற்ற இராணிப் பூச்சிகள் மட்டுமே பிழைக்கின்றன. இவையே மீண்டும் இனப்பெருக்கத்தைச் செய்கின்றன.

மேல்வகை எறும்பினங்களில் இராணி தன் பழைய கூட்டை விட்டு வெளியேறிக் கலவி செய்தபடி வெளியில் பறந்து வருகின்றது. அப்போது இளம் ஆண்களும், பெண்களும், இராணி எறும்புடன் ஒன்றாக வெளியேறிப் பறக்கின்றன. ஆண்கள் கலவி முடிந்ததும் இறந்துவிடுகின்றன. இராணியோ தொடர்ந்து பிறவற்றுடன் கலந்தபடி பறந்து இறுதியில் தரையில் வீழ்கிறது. இங்கு அதன் சிறகுகள் உதிர்ந்துவிடுகின்றன. அது குழி

தோண்டித் தன்னை மூடிக்கொள்கிறது. முட்டையிடுகிறது. கூட்டுப்புழுக்கள் இராணியின் தசைகளினின்று வெளிப்படும் திரவத்தினுல் உண்பிக்கப்படுகின்றன. முதலில் வருபவை வேலைக்காரப் பூச்சிகளே. பிறகே மற்றப் பூச்சிகள் பிறக்கின்றன. தன்னுள் அடக்கி வைத்துள்ள முட்டையணுக்களின் மூலம் ஒரு முறை கலவி செய்த இராணிப் பூச்சித் தொடர்ந்து 12 முதல் 17 ஆண்கள்வரை முட்டையிட இயலுகின்றது. இனம் பெருகப் பெருக இறக்கைகளுடன் கூடிய இளம் இராணி ஈக்களும் ஆண் களும் உருவாகின்றன.

வேறுவகை எறும்பினங்களில் இனப் பெருக்கத்திறன் கொண்ட ஒன்று அல்லது பல இராணிப் பூச்சிகளுடன் வேலைக் காரர்களில் ஒரு பகுதியினர் இடம் பெறுவதன் மூலம் புதிய புற்றுகள்–கூடுகள் உருவாகின்றன. தேனீக்களிடமும் இவ்வகை யான நடத்தையே காணப்படுகிறது. ஒரு பழைய இராணி ஈயுடன் 35,000 வேலைக்கார ஈக்கள் பறந்து சென்று புதிய கூட் டினை உருவாக்குகின்றன. ஈசல் இனங்களிடையே புற்றினை அமைப்பதில் ஆண் பெண் இரண்டுமே சமபங்கு பெறுகின்றன. மழை-பெய்த உடன் ஈசல்கள் புற்றைவிட்டு வெளியே வரு கின்றன. இனப்பெருக்க ஈசல்கள் வெளிவர வேலைக்காரர்கள் புற்றில் வழியமைத்துத் தருகின்றன. இவையனைத்தும் ஒளியை நாடிச் சிறிது தூரம் பறந்து கீழே வீழ்கின்றன. பெண் ஈசல் களின் வயிற்றுப் புறச்சுரப்பியின் வாசனையால் கவரப்பட்ட ஆண் ஈசல்கள் அவற்றை நோக்கி விரைகின்றன. ஆணும், பெண்ணும் தரையில் அல்லது மரத்தில் துளையிட்டு உள்ளே செல்கின்றன. பிறகு துளையின் வாயில் அடைக்கப்படுகிறது. இரண்டும் கலவி செய்து முட்டைகள் இடவே, பின் குஞ்சுகள் பிறக்கின்றன. முதலில் வேலைக்காரப் பூச்சிகளே பிறக்கின்றன. இராணியின் வாழ்நாள் முழுவதும் சிறுசிறு இடைவெளி விட்டுக் கலவி நடைபெறுகிறது.

### பறவைகளின் சமூக வாழ்க்கை

அடிப்படைச் சமூக நடத்தை வகைகள் பறவைகளிடையே நன்கு முதிர்ச்சியுற்றவையாகக் காணப்படுகின்றன. கற்றல், அனுபவம் ஆகியவற்றின் அடிப்படையில் பறவைகளால் தங்கள் நடத்தையை வழிப்படுத்தி அமைத்துக்கொள்ள முடி கின்றது. இருப்பினும் இத்திறமை பறவைகள் இனத்திற்கு இனம் வேறுபட்டுள்ளன. வான்கோழி (Turkey) இனம் புதிய நடத்தைகளை மேற்கொள்வதில்லை. இவற்றின் நடத்தை முழுவ தும் மரபின் அடிப்படையில் ஏற்படும். இயல்பூக்கங்களி

ளுலேயே நிர்ணயிக்கப்படுகின்றன. இதற்கு நேர்மாருகக் காக்கை களும் சேக்டவ் (Jackdaw) பறவைகளும் கற்றல், அனுபவம் ஆகியவற்றின் அடிப்படையில் புதிய புதிய நடத்தைகளைக் கற்றுக்கொள்ள வல்லனவாக் உள்ளன

பறவைகள் தங்கள் நிறங்களின் அடிப்படையிலும், சிறகடித் துக்கொள்ளும் முறையின் அடிப்படையிலும் தங்கள் இனங்களைப் பிற பறவையினங்களினின்று பிரித்தறிந்து கொள்கின்றன. ஆண் பறவையும், பெண்பறவையும் கூடும் வேளையில் சிறகினை விரித்து ஆடிய பிறகே (Display behaviour) பால் நடத்தைகளில் ஈடுபடுகின்றன.

**சமூக வகைப்படுத்தல்**

வாத்தினங்கள் தங்களின் குஞ்சுகள் சமூக உறவுகளைச் சரியாகக் கற்றுக் கொள்ளப் பெருமளவு உதவி செய்கின்றன. குயில் வலியான் (Cow birls) போன்ற சார்பு வாழ்க்கைப் பறவைகள் தங்களை வளர்க்கும் பெற்ருேர்களால் சமூக வயமாகப்படுவதில்லை. கூட்டைவிட்டு வெளியேறியதும் வளர்ந்த இனத்தை விட்டு தன் இனத்தை நாடிச் சென்றுவிடுகின்றன. பல பறவையினங்கள் ஒரு சில குறிப்பிட்ட இடங்களைத் தங்கள் இடமாகத் தேர்ந்தெடுத்து வாழ்கின்றன. பெரும்பாலும் சாதாரண காலங்களில் ஒரு குறிப்பிட்ட இடத்தையும், கலவிப் பருவங்களில் மற்ருேர் இடத்தையும் இப் பறவைகள் கொண்டிருப்பதுண்டு.

குருவி இனங்கள் கறுப்புப் பறவை இனங்கள் ஆகியவை குளிர்காலங்களில் ஐரோப்பாவின் தெறகுப் பகுதிகளில் கூட்டம் கூட்டமாக வசிக்கின்றன. வசந்த காலத்தில் ஆண் பறவைகள் வடபகுதிகளுக்குச் சென்று தங்களுக்கென ஒரு நிலப்பகுதியை நிர்ணயித்துக் கொள்கின்றன. பின் ஒவ்வோர் ஆண் பறவையும் தன் பகுதியில் உரிமை கொண்டாடியபடி தன் இடத்தின் நடுவில் அமர்ந்து வருவோர் போவோருக்கு எச்சரிக்கைக் குரல் எழுப்பியபடி இருக்கிறது. இவ்வாறு ஒவ்வோர் ஆண்பறவையும் தன் எல்லைப் பகுதியில் ஆதிக்கம் மிக்கதாக இருக்கிறது. சிறிது காலத்திற்குப்பின் ஏனைய பெண் பறவைகள் அவ்விடத்திற்கு வருகின்றன. ஒவ்வோர் ஆண் பறவையுடனும் ஒரு பெண் பறவை பிரிந்து சென்று குடும்பம் நடத்துகிறது. அவ் விருபறவைகளும் முட்டைகளைப் பாதுகாக்கின்றன. ஆனுல் அடைகாப்பதிலும் இரையூட்டுவதிலும் தாய்ப் பறவைப் பெரும்பங்கு கொள்கிறது. இலையுதிர் காலத்தே இவை மீண்டும் கூட்டம் கூட்டமாக ஐரோப்பாவின் தென்பகுதியை நோக்கி விரைகின்றன. அடிக்கடி இத்தகைய கூட்டங்களில்

நன்கு முன்னேறிய ஒருங்கமைப்புக் காணப்படுகிறது. ஆனால் தனிப்பறவை ஒன்றின் தலைமைத் தன்மை இவற்றில் காணப் படுவதில்லை.

கோழி இனங்களில் இட உரிமைப் பிரச்சினை எழுவதில்லை. ஆனால் இவையும் குறிப்பிட்ட இடங்களைத் தங்கள் பகுதியாகக் கொண்டு வாழ்கின்றன. இவை கூட்டமாகக் கூடும்போது ஆதிக்கப்படி அமைப்பு (dominance hierarchy) வலிமையுடன் எழுகிறது. ஆண் பறவைகளில் வலிமை மிக்கதே ஏனைய பறவை களனைத்துடனும் கலவி செய்ய முற்படுகிறது. இவற்றிடையே நீடித்த பால் உறவு காணப்படுவதில்லை. பெண் பறவைகளே குஞ்சுகளைப் பேணுகின்றன.

**புறுவின் சமூக வாழ்க்கை**

புறுக்கள் தங்களிடையே மிக விரைவில் எளிதில் ஒன்றின் நடத்தையை ஒன்று புரிந்துகொண்டு, அவற்றிற்கு ஏற்ப தங்க ளுடைய நடவடிக்கைகளை மாற்றிக் கொள்ளுகின்றன. புதிதாக விடப்பட்ட புறு ஒன்று தன் கூட்டிலுள்ள மற்றப் புறுக் களுடன் மிக விரைவில் நட்புக் கொள்ளுகின்றது. தனக்கு ஏற்ற துணையைத் தேர்ந்தெடுத்துப் பெரும்பாலும் அதனுடனேயே தனது பால் உறவினைத் தொடர்ந்து வைத்துக்கொள்ளுகின்றது. குஞ்சுகளைப் பேணுவதில் தாய், தந்தை இரண்டும் சமபங்கு பெறு கின்றன. அடைகாத்தலில் இப் பறவைகள் முறைபோட்டு நடந்து கொள்ளுகின்றன. ஒன்றினை அடுத்து மற்றொன்று என மாறி மாறி அமர்ந்து இவை அடைகாக்கின்றன. பால் உறவு களைப் புறுவானது தனது நடத்தையின் வழியே நிர்ணயிக்கிறது.

**பாலூட்டிகளின் சமூக வாழ்க்கை**

பாலூட்டிகளிடம் பால்சுரப்பிகள் காணப்படுகின்றன. இச் சுரப்பிகள் பெண் விலங்குகளிடம் மட்டுமே காணப்படுவதால் இதனடிப்படையில் வேலைப்பிரிவு ஏற்படுகிறது. பெண் விலங்குகள் கன்றுகளைப் பேணுகின்றன. ஆண் விலங்குகள் சண்டையிடுவதில் கவனம் செலுத்துகின்றன. கங்காரு இனத்தில் பால் சுரப்பிகள் ஒரு பையமைப்பிற்கு நேர்மேலே இருப்பதால் குட்டி பெரும்பாலான தன் வாழ்நாளை இப்பையி னுள்ளே இருந்தபடி பாலைப் பருகியபடியே கழிக்கின்றது.

**கலைமான்கள்**

மான் குடுப்பத்தின் உயர்ந்த பிரதிநிதியாகக் கலைமான் காணப் படுகிறது. இவற்றின் சமூக வாழ்வு பருவங்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டதாக அமைகின்றது. ஒவ்வோர் ஆண்

மானும், ஒரு பெண் மந்தையை வென்று அவற்றுடன் கலவி செய்ய முயல்கிறது. இப்போது வேறு ஆண் மான் எதிர்ப் பட்டால் அதனுடன் பெரும் சண்டை ஏற்படுகிறது. இரண்டில் ஒன்று சத்தி இழந்து தப்பி ஓடும்வரை இச்சண்டை நீடிக்கிறது. இம்மானினங்கள் முன் தலைமுறையிலிருந்தே இடப்பெயர்ச்சி நடத் தையைக் கற்றுக்கொள்கின்றன. இவை வரலாற்றுப் போக்கில் பாதிக்கப்படுவதுண்டு. இவற்றிடம் இட உரிமை எழுவதில்லை. புதிய மந்தைகள், மற்றவற்றுடன் சண்டை எதுவும் இன்றிக் கலக்கின்றன. எதிர்ப்பு நடத்தை அவ்வளவாகக் காணப்படுவ தில்லை. குளம்பு பிளவுபட்ட விலங்கினங்களிலும் இதே வகை யான சமூக நடத்தையே காணப்படுகின்றது. ஸ்காட்லாந்து சிவப்புமான் இனங்கள், ஆடுகள், செம்மறியாடுகள், எருமைகள் ஆகியவற்றிலும் இதே வகையான நடத்தைகள் காணப்படு கின்றன. அசைபோடுதல் இவ் விலங்குகளுக்குரிய விநோத பண்பாக உள்ளது.

### ஓநாய்களின் சமூக வாழ்க்கை

சாதாரணமாக மாமிசம் தின்னும் விலங்குகளுக்கு ஒரே இடத் தில் இரை கிடைப்பதில்லை. எனவே ஓநாய்கள் வேட்டையாடு தலில் முக்கியமாகக் காலம் செலுத்துகின்றன. பெரும்பாலும் இரவிலேயே ஓநாய்கள் வேட்டையாடுகின்றன. பகற்பொழுதில் குகைக்கு அருகிலேயே காலத்தைப் போக்கும். ஓநாய் மந்தை மலையில் ஒன்று கூடி நீண்ட தூரம் சென்று வேட்டையாடுகிறது. பெரும்பாலும் காலையில் இருப்பிடம் திருப்புகின்றது. இவ் வேட்டைக்களம் 20 முதல் 50 மைல்கள் வரை பரவியிருத்தல் கூடும். வேட்டையாடும்போது பின் துரத்தும் நடத்தைப் பெரி தும் காணப்படுகிறது. ஆனால் தனி ஓநாயின் தலைமை இவற் றிடையே காணப்படுவதும் இல்லை.

### கலவியும் குட்டியைப் பேணுதலும்

ஓநாய் இனங்கள் ஜனவரி அல்லது பெப்ரவரியில் கலவி நடத்தையில் ஈடுபடுகின்றன. இக் கலவிப் பருவம் ஆறுமாத காலம் நீடிக்கிறது. இப் பருவத்திலேயே நீண்ட முன்னிலைக் காதலும், கலவியும் நடைபெறுகிறது. ஒரு பெண் ஓநாய் குறிப் பிட்ட ஒரே ஓர் ஆணுடன் மட்டுமே கலவி செய்யக் கூடியதா என்பது தெளிவாகத் தெரியவில்லை. ஆனால் மந்தையாகச் சுற் ருத இதனை ஒத்த நரிபோன்ற வேறு விலங்குகளிடம் (Foxes and Coyotes) இத்தகைய தன்மை காணப்படுகிறது. ஒரு பெண் குறிப்பிட்ட ஒரே ஓர் ஆணுடன் மட்டுமே கலவி புரிகிறது. இதனைத் தொடர்து அவற்றிடையே நீடித்த உறவு நிலவுகிறது.

குட்டி ஓநாய்கள் ஆறுமாத கலம்வரை தாஞக வேட்டையாடும் திறனற்றவையாயிருக்கின்றன. இவை பெற்ருேரைச் சார்ந்தே வாழவேண்டியுள்ளன. இதனுல் பேணுதல் நடத்தை ஓநாய்களிடம் காணப்படுகின்றது.

**மனித முன் இனத்தின் (Primates) சமூக வாழ்க்கை**

மனித முன் இனம், விலங்குகளிடையே சமூக நடத்தை, பால் நடத்தையினைச் சுற்றியமைவதாக இருக்கிறது. முதிர்ந்த ஆண்களும், பெண்களும் இவ்வினங்களின் வாழ்வு முழுவதும் தொடர்ந்து ஒன்ருக வாழ்கின்றன. அதேபோல் இவ்வினங்களிடையே பேணுதல் நடத்தையும் சிறப்பாகக் காணப்படுகிறது. இவ்வின விலங்குகளில் பெண் மட்டுமன்றி ஆணும் பேணுதலில் அக்கறை காட்டுகின்றது. குட்டிகள் தாயினுல் குறைந்தது ஓராண்டு காலமாவது பாதுகாக்கப்படுகின்றன. தொடர்ந்து நீண்ட நாட்கள் தாயுடனேயே வாழ்கின்றன. இதன் விளைவாக ஆண்கள், பெண்கள், குட்டிகள் என்று ஒன்ருகக் காணப்படும் குடும்ப அமைப்பு உருவாகிறது.

பாபூன் குரங்குகளும், அதன் உறவினங்களும், ரேசஸ் குரங்கினங்களும் (Baboons Rhesus). இவ்வகை அமைப்புக் கொண்டவைகளாக உள்ளன. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட ஆண் குரங்குகள், பல பெண் குரங்குகள், குட்டிகள் ஆகியவை கொண்ட குரங்குக் கூட்டம் 2 சதுரமைல் அளவு நிலப்பகுதியைத் தம்முடைய் இடமாகக் கொண்டு வாழ்வதுண்டு. பெண் குரங்குகள் குட்டிகளைப் பேணுகின்றன. இக் குட்டிகளுக்கு இன்னல் நேரிடின் தாய்க்குரங்கு அழுகிறது. பாபூன் குரங்குகள் ஒன்றுகூடி விளையாடுவதிலேயே பெருங்காலத்தைச் செலவிடுகின்றன. எனவே இதனுல் ஏற்படும் பிணைப்பு அவை முதிர்ச்சிப் பெற்ற பின்னும் தொடர்ந்து ஏற்படுகிறது.

குரங்கினங்களின் குடும்ப அளவு இனத்திற்கு இனம் வேறுபடுகிறது. ஜிப்சன் குரங்குகளிடையே ஆண் குரங்கும், பெண் குரங்கும் ஒரே மாதிரியான உடலமைப்புக் கொண்டிருக்கின்றன. இரண்டுமே ஆக்கிரமிப்பு மிக்கவை. எனவே இவ்வினத்தின் குடும்பத்தில் பெரும்பாலும் ஒரு பெண்ணும், ஓர் ஆணுமே காணப்படுகின்றன. சிம்பன்சி, கொரில்லா, ஏப் குரங்கினங்கள் காட்டில் வாழ்வன. இவை 8 அல்லது 9 குரங்குகள் கொண்ட கூட்டம் கூட்டமாக வாழ்கின்றன. ஒவ்வொரு கூட்டத்திலும் ஓர் ஆணும், நாலைந்து பெண் குரங்குகளும் காணப்படுகின்றன.

மாக்குகள் (Macaques) எனும் இனத்திலோ 150 வரை ஒரே கூட்டமாக இருப்பதுண்டு. மரத்தில் வாழும் குரங்குகளை விடத்

தரையில் வாழ்வனவே அதிக எண்ணிக்கைக் கொண்ட கூட்டங்களாக அமைகின்றன. உராங்உட்டான் குரங்குகளிடம் அவ்வளவாகச் சமூகத் தன்மைக் காணப்படுவதில்லை. கலவிப் பருவங்கள் தவிர ஏனைய காலங்களில் ஆண் குரங்குகள், பெண் குரங்குகளினின்று தனித்து விலகியே வாழ்கின்றன.

குரங்குகளின் ஏமாற்றும் தன்மையையும், கள்ள வழிகளின் மூலம் தங்களின் தேவைகளை அடையும் செயல்களையும் நாம் நன்கு அறிவோம். குரங்குச் சமூகத்தினிடையே இச் செயல்கள் மிகவும் குறிப்பிடத்தக்கதாக இருக்கின்றன. டாக்டர் கெம்ப் (Dr. Kempf) என்பார் தாம் நடத்திய பரிசோதனை ஒன்றை இதன் வழி எடுத்துக்காட்டாக விளக்குவதைப் பார்ப்போம்.

ஒரு குரங்கு உணவு உண்டு கொண்டிருந்தது. அதைத் தற்செயலாகக் கவனிக்க நேர்ந்த இரண்டாவது குரங்கு, அவ்வுணவைத் தந்திரமாகப் பறிக்க எண்ணியது. இரண்டாவது குரங்கைக் கண்ணுற்ற முதல் குரங்கு, ஐயத்துடன் முன் எச்சரிக்கையாக ஒரு சில நடவடிக்கைகளில் ஈடுபட்டதை உணர்ந்த இரண்டாவது குரங்கு அக் குரங்கின் ஐயத்தைத் தீர்ப்பதற்காக ஒன்றுமறியாததுபோல், அம் முதல் குரங்கு உணவு வைத்திருப்பதையே கண்டுகொள்ளாததுபோல் தம்போக்கில் போவதாகப் பின்வாங்கி நகர்ந்தது. ஆனால் முதல் குரங்கு முன் எச்சரிக்கையான நடவடிக்கைகளைக் கைவிட்டு, இயல்பாக உணவைக் கடித்துக் கொண்டிருந்தபோது, பின்வாங்கிய குரங்கு அதுவரை பின்புறமாகவே அதன் செயல்களைக் கவனித்து வந்து சட்டெனத் தக்க நேரத்தில் அதன்மீது தாண்டிப் பொருளின் மீது காலை வைத்துக் கொண்டு அக் குரங்கினை அடித்துத் துரத்தியது.

குரங்குகள் இவ்வாறு ஒன்றின் உணவை மற்றது தட்டிப் பறிக்க வேறு வழிமுறைகளையும் கையாளுகின்றன. உதாரணமாக ஒரு சிறு குரங்கு, அது ஓர் ஆணாகவோ அல்லது ஒரு பெண்ணாகவோ இருந்தாலும் கூட, அது தின்னும் ஓர் உணவு பண்டத்துடன் இருக்கும்பொழுது, அதற்கு எதிர்ப்படும் ஒரு புதிய மற்றொரு குரங்கு அந்த உணவைத் தட்டிப் பறிக்க நினைத்து, பால் இனத் தொடர்பிற்காக அச் சிறிய குரங்கினை அழைப்பது போல் தன் உடலினைக் கிடத்திக்கொண்டு குரல் எழுப்பும். இந்நிலையில் அச்சிறு குரங்கு தன் உணவினை மறந்துவிட்டு ஓடிவரும். இதுதான் தக்க சமயமென அந்தப் பெரிய குரங்குத் திடீரெனப் பாய்ந்து உணவினை எடுத்துக்கொண்டு ஓடி மறையும். ஒரு சில நேரங்களில் பால் இன உறவு சம்பந்தமான செயல்களே, ஒரு குரங்கினை நான்கு ஐந்து குரங்குகள் துரத்தி வந்தால் அவற்றில்

ஒன்றைத் தேர்ந்தெடுத்து அதனைக்கொண்டே மற்ற குரங்குகளை விரட்டி அடித்து ஆபத்திலிருந்து, தப்பும் உபாயமாக ஒருசில வேளைகளில், பால் இன உறவு சம்பந்தம் பயன்படுகிறது. ஒரு சில நேரங்களில் இத்தகைய ஆபத்தான நிலைமைவரின் குரங்குச் செத்து விட்டதைப்போன்று கை, கால்களை மடக்கிக்கொண்டு படுத்துக் கிடந்து தப்பித்துக் கொள்ளும்.

**விலங்குகளின் குழு நடத்தை**

சமூக உளவியல் என்பது சமூகத்தில் உள்ள மற்றவர்கள் ஒரு தனியவனின் வாழ்க்கையை விளைவிக்கும் செயல் மாற்றம் சிறப்பு முதலியவற்றைப் படிப்பதென நாம் பொருள்வரையறை செய்கிறோம். அத்தகையதொரு சமூக வாழ்வினை மிகவும் சாதாரணமான முறையில் எளிய நுண்ணிய உடலமைப்புக் கொண்ட உயிர்வாழ் இனங்களும் ஏற்றுக்கொண்டிருக்கின்றன. எனவே அவற்றின் சமூக நடத்தையினையும் ஆராய்ச்சிக்கு ஏற்றுப் பயில வேண்டியவர்களாக இருக்கின்றோம். செடிகள், பாக்டீரியாக்கள், ஒருசெல் அணுக்கள் போன்றவற்றின் வாழ்க்கை 'அவையும் வளர்ந்து விட்டப் பிராணிகளைப் போன்றே வாழ்கின்றன' என்ற உண்மையை நமக்குப் புலப்படுத்துகின்றன.

இவற்றிற்கு அடுத்த நிலையில் உள்ள எறும்புகள், பூச்சிகள் போன்றவற்றின் வாழ்க்கை முறைகள் பெருப்பாலும் மனித சமூகத்தின் வாழ்க்கை முறைகளை ஒத்து அமைவதாக இருக்கின்றன.

மூன்றாவதான நிலையில் பறவைகளின் வாழ்க்கைமுறை, ஒரு படி மேம்பட்டதாகக் காணப்படுகிறது.

நான்காவது படியான குரங்குகள், மனிதக் குரங்குகள் போன்றவற்றின் வாழ்க்கை முறைகள் மனித சமூகத்தின் ஆரம்ப கால வாழ்க்கை முறைகளைப் பிரதிபலிப்பதாக அமைந்துள்ளன.

இங்ஙனம் 5 நிலைகளில் (மனித நிலையையும் சேர்ந்து) மனித சமூகத்தின் தற்போதுள்ள மேம்பாடான நிலையின் தோற்றக் கட்டங்களை நாம் நிர்ணயிக்க இயலுகின்றது. ஒரு செல் அணுவின் சமூக வாழ்க்கையிலிருந்து தொடங்கி, மனித குரங்கின் வாழ்க்கை முறைவரை மனித சமுதாயத்தில் காணப்படும் பல சிறப்பான தன்மைகளும் இயல்புகளும் பல்வேறு நிலைகளில் ஆரம்பக் கட்டங்களில் ஆராயப்படுகின்றன.

முன்னமே நான்கு நிலைகளில் இடைப்பட்ட உயிரிகளின் சமூக வாழ்க்கையினைப் பற்றிப் பார்த்தோம். இங்கே அவற்றிடைக் காணப்படும் குழு நடத்தைப் பற்றிக் காண்போம்.

**உயிரிகளின் குழு நடத்தை**

பாக்டீரியாக்களில் காணப்படும் குழு நடத்தை எந்த வித தனித்த பொருளோடும் அமைந்ததாக இருக்கவில்லை. உயிர்க் காற்று நிறைந்துள்ள இடத்தினை நாடி நகரும் பாக்டீரியாக்கள் ஆங்கே ஒரு கூட்டுத் தொகுதியாகக் காணப்படுகின்றன.

இதற்கு அடுத்த நிலையில் காணப்படும் மீன்கள் போன்றவற்றின் சமூக வாழ்வு அதன் கூட்டத்தைச் சார்ந்ததாகவே அமைகின்றது. இதில் ஒன்றை ஒன்று பின்பற்றுகின்றது, சார்ந்து நடக்கின்றன. எனவே அந் நடைத்தைகளே குழுவை ஒன்று படுத்துவதுடன் பாதுகாப்பையும் அளிக்கின்றன.

மீன்கள் சமூக வாழ்விற்கு இலக்கணமாயிருப்பது கூட்டமே. புதிதாகப் பொறிக்கப்பட்ட மீன் குஞ்சுகள் அனைத்தும் ஒன்று கூடித் திரிவதையே கூட்டம் என்கிறோம். ஒரு கூட்டத்தைச் சேர்ந்த மீன்கள் அனைத்தும் ஒன்றையொன்று வெகுவாகப் பின் பற்றுகின்றன. உணவிடத்தை ஒரு மீன் கண்டு சென்றால் கூட்டமே அதனுடன் பின்பற்றிச் செல்லுகிறது. அதேபோல் ஆபத்தை அறிந்து, ஒருமீன் துலங்கினால் ஏனைய மீன்களனைத் தும் அதேபோல் துலங்குகின்றன. இதனால் கூட்டமே நிலைமாறி அலைமோத, எதிரியால் எதையும் தெளிவாகக் காண இயலாதபடி குழப்பம் ஏற்படுகின்றது. கண்பார்வையும் பாதிக்கப்படுகின்றது. இத்தகைய குழுக்களில் 'தலைமை நடத்தை'க் காணப்படுவதில்லை. ஒவ்வொரு மீனும் தனக்கென்று ஒரே மீனுடன் வாழ்வதாகவும் கூறுவதற்கில்லை. ஒருசில மீன் இனங்களிடையே இத்தகையக் கூட்ட அமைப்பே காணப்படுவதில்லை.

பூச்சி இனங்களிடையே குழு வாழ்க்கையே சமூக நடத்தை யாய் அமைகின்றது. குளவிகள், தேனீக்கள், எறும்புகள் போன்ற இனத்தைச்சேர்ந்த பிராணிகள் குழுவாகவே வாழ்கின் றன. குழுவைத்தவிர்த்து அவற்றின் வாழ்க்கை ஒருபோதும் அமைவதில்லை. குழுச்சூழலிலே அவை வாழும் சமூக வாழ்க்கை யின் பல்வேறு நிலைகளைப்பற்றி நாம் முன்னமே கண்டுள்ளோம்.

பறவைகள், விலங்குகள் ஆகியவற்றின் குழு நடத்தைப் பூச்சி இனங்களைவிடச் சிறிது மேம்பட்டதாக அமைகின்றது. இவை தனித்தும், இரட்டையாகவும் வாழும் தன்மையன. கூட்ட மாகத்தான் வாழ வேண்டுமெனும் அவசியமோ, ஒரு கட்டாயமோ இவற்றிற்கு இல்லை. எனவே இவை குழுவாக இணைவதில் ஒரு தனித்த பொருளும் இருக்கின்றது. இங்கேதான் குழு நடத்தை எனும் சிறப்பான அம்சமே தோன்றுகின்றது என்று கூடக்

கூறலாம். சமூக அடிப்படையில் பறவைகள் குழுவாக வாழும் வாழ்க்கையினையே நாம் விலங்குகளின் சமூக வாழ்க்கை என்ற தலைப்பில் கண்டோம்.

**அகக்குழு புறக்குழுத் தொடர்புகள்**

தனித்த ஒரு குழுவில் வாழும் பிராணிகளினிடையே ஏற்படும் நட்புப் பற்றியும்—வேறு ஒரு குழுவைச் சேர்ந்த விலங்குகள் ஒரு குழுவினேடோ அல்லது ஒரு குழுவின் உறுப்பினரோடோ சேரும் போது ஏற்படும் அறிமுகம், அங்கீகரிப்பு, நட்புத்தன்மைப் போன்றவற்றைப் பற்றியும் பல்வேறு சோதனைகளின் வழியாகச் சமூக உளவியலாளர்கள் பல உண்மைகளைக் கண்டுபிடித்துள்ளனர். எறும்பின் சமூக வாழ்க்கையில் ஒவ்வொரு குழுவும் மற்ற குழுவினரை அவை வெளியிடும் வேறுபட்ட வாசனையில் இருந்து, கண்டு கொள்கின்றது. பறவைகளினிடையே புதிய பறவை வந்தால் உடனடியாக அங்கே சண்டை நடைபெறுகிறது. மனித சமூகத்தினைப் போன்றே, வரும் புதியவற்றை 'அங்கீகரிக்கும் நாள்வரை' அவற்றிடை வெறுப்புத்தன்மை இருந்து கொண்டே இருக்கிறது.

ஹெர்லோ (Herlow) என்பார் அடுத்தடுத்துள்ள கூண்டுகளில் வசித்த குரங்குகளின் ஆராய்ச்சிகளைப்பற்றிக் கூறும்போது, ஒரு கூண்டுக்குள் அடைக்கப்பட்ட குரங்குகளுக்குள் எத்துணைதான் பகைமை இருந்தாலும், அவை வேறு கூண்டில் வாழும் குரங்குகளால் தாக்கி அச்சுறுத்தப்பட்டபோது, அவை ஒன்ருக இணைந்து தங்கள் பொது எதிரியை விரட்டுவதில் ஈடுபட்டன என்றும், இங்கே மனித சமூகத்தில் குழுநடவடிக்கையில் ஏற்படும் 'குழு மனத்தினைப்' போன்று ஒரு 'கூட்டு மனம்' எழுகின்றது என்றும் விளக்குகின்ருர்.

புதியவற்றைத் தனது இனத்தைச் சேராத பிறஇன விலங்குகளை அறிந்துகொண்டு, அவற்றின் அறிமுகத்தை அங்கீகரித்து, அவற்றுடன் நட்பாய் வாழ்கின்ற விலங்குகளின் சமூக நடத்தைப் பெரும்பாலும் ஒத்த உடலமைப்பினைக்கொண்ட விலங்குகள் ஒன்றுசேரும் கொள்கையாக அமைகின்றது. ஓர் இனப்பறவைகள் —மற்ருெரு இனப்பறவைகளிடமும், நான்குகால் விலங்குகள், ஓர் அளவிற்குத் தங்களின் உடலமைப்பு, உணவு முறைகளை ஒத்த வேறு இன நான்குகால் விலங்குகளுடனும் ஒத்து வாழ்கின்றன.

இதனின்று விலங்குகளிடை ஏற்படும் அகக் குழு வாழ்விற்கு அதே இனத்தைச் சேர்ந்த விலங்குகளாகத்தான் இருக்கவேண்டும் என்பதில்லை, என்று உணரலாம். உதாரணமாகப் பசுமாட்டின்

கன்று, குதிரை, வரிக்குதிரை, காட்டெருமை போன்ற இனங்கள் ஒன்ருக இணைந்து புல் மேய்கின்றன ; சமூகமாகத் தோழமை உணர்ச்சியுடன் நடந்துகொள்கின்றன என்று சமூக உள வியளார் கண்டுபிடித்துள்ளனர்.

மேலும் காட்டுவரிக்குதிரைகள் வீட்டுக் குதிரைகளுடன் அல்லது நெருப்புக்கோழிகளுடன் ஒரே கூட்டத்தில் இருப்பதனை நாம் காண இயலும். அதேபோல் காட்டெருமைகள் யானைக ளுடனும், குதிரைகள் வேறு பலவிதமான விலங்குகளுடனும் இருப் பதைப் பார்க்கமுடியும். வேருென்றுடன் இருக்கவேண்டும் என்ற வேட்கை உடைய ஒரு விலங்கு தன் விருப்பத்தை நிறை வேற்ற தன் இனத்தைச் சார்ந்த ஒரு விலங்கு வேண்டும் என்ற அவசியமில்லை. காண்டாமிருகம் ஒன்று பிடிபட்டுக் கூண்டில் இருக்கையில் தனிமையால் மிகவும் வாடியதாகவும், இவ்வளவில் வளர்ந்த ஆடு ஒன்றினை அதனுடன் துணையாக விட்டபோது, அது மிகவும் மனநிறைவு பெற்றதாகவும் ஆல்வேடர் (Alveder) குறிப்பிடுகிருர். இவ்வாறு ஒன்று சேர்க்கப்பட்ட இரண்டு விலங்குகளும் மிக நெருங்கிய நட்புக்கொண்டு விட்டதாகவும், காண்டாமிருகத்தின் மீது சாய்ந்தபடி அடிக்கடி ஆடு ஓய்வெடுக்க முற்பட்டதாகவும் அவர் விவரித்துள்ளார். எனவே விலங்குக ளிடையே அகக் குழு இனஉணர்வைக் காட்டிலும் பழக்கமே (Familiarity) அடிப்படையாக அமைகிறது என்று கருதுதல் பொருந்தும்.

மேலும் அவர் தனது அகக் குழு பரிசோதனையின் முடிவைப் பற்றிக் கூறும்போது ஒரு கழுதைக்குட்டி ஓர் ஆண் குதிரையோடு சேர்த்து வளர்க்கப்பட்டபோது அவ் விரண்டும் நட்பினதாய் வாழ்ந்தன என்றும், பின்னுல் அந் நட்பின் பழக்கத்தில் ஏற்பட்ட புணர்ச்சியை ஒட்டி, அக் கழுதை ஆண் குதிரைகளோடேயே கூடியது என்றும், தன் இனக் கழுதைகளோடு கூடுவதைத் தவிர்த்தது என்றும் கூறுகின்ருர். விட்மேன் (Whitman) என்பார் மாடப்புரு ஒன்று மணிப்புருவோடு வளர்க்கபட்டதால் அது பின்னுல் மணிப்புருக்களோடுதான், கலவி செய்தது என்றும், மாடப்புருக்களுடன் கூட மறுத்தது என்றும் கூறுகின்ருர். இவற்றினின்று புருக்களின் அகக் குழு அல்லது வெளி வாழ்க் கையினைப் பெரும்பாலும் இனம் என்பதைவிட உடலமைப்பே ஒன்று சேர்க்கின்றது என்பது தெரியவரும்.

குழு சூழ்நிலையில் தணித்த ஒன்றின்நடத்தை

சமூக உளவியலாளர்கள் குழுவின் சூழலிடைப்பட்ட தனித்த ஓர் உயிரியின் நடத்தையும், குழுவின் சூழலுக்கு அப்பாற்பட்ட

சூழலில் அதன் நடத்தையையும், பரிசோதனைவழித் தீர்மானித்து —எங்ஙனம், எப்படி, ஏன் தனித்த ஒன்றின் நடத்தை மற்றவர் களின் முன்னிலையில் மாறுபாடு அடைகின்றது—என்று ஆராய் கின்றனர். இவ்வகையில் எண்ணற்ற பரிசோதனைகளை நாம் உயிர்களின் ஒவ்வோர் இனத்தின் வழியும் நடத்தி அதன் முடிவுகளைக் கூறலாம். காட்ஸ் (Katz) என்பார் வீட்டில் வளர்க்கும் கோழியானது தனக்குப் போட்ட இரையினை வயிறு நிறையத் தின்று இரையின் மீது வெறுப்புத்தட்டி ஒதுங்கியிருக் கிறது. அப்பொழுது, அதை எடுத்து நான்கைந்து கோழிகள் இரை எடுத்துக்கொண்டிருக்கும் சூழலில் விட்டால், அதுவும் தன் சூழல் இடைப்பட்டவர்களின் நடத்தையைக் கண்ணுற்று—தன் நிலைமறந்து இரை எடுக்கின்றது, எனப் பரிசோதனை வழி காட்டு கின்றார். சிம்பன்சி வகைக் குரங்குகளும் உணவில் அதிருப்தி அடைந்த நேரத்தில் வேறு சில உணவு எடுத்துக்கொண்டிருக்கும் குரங்குகளின் இடையிலமைந்தபோது அவையும் தங்களை மறந்து உணவு உண்ணத் தொடங்குகின்றன.

சிம்பன்சி வகைக் குரங்குகள் சமூகச் சார்பு (Social dependence) மிக்கதாக உள்ளன. பழக்கப்பட்ட கூட்டாளிகளிடமிருந்து பிரிக்கப்பட்ட நிலையில் மனிதர்களிடையே காணப்படுவது போன்ற வீட்டு நினைவு நோயினை (Home Sickness) ஒத்த, 'உடலியல் எதிர்வினைகள்' இக் குரங்குகளிடம் ஏற்படுகின்றன. இதனால் ஜீரணம் பாதிக்கபடுவதுண்டு. ஒருசில வேளைகளில் தங்கள் கூட்டாளிகளை மீண்டும் அடைய முடியாத குரங்குகள் கடுமையான நோய்க்குள்ளாவதும் இறப்பதும் இயல்பே. ஆண் குரங்கு இறந்ததைப் பொறுக்காத பெண்குரங்கு, தன் குழந்தை யைத்தன் இனத்திடம் ஒப்படைத்துவிட்டு மலைமீது ஏறித் தன் உயிரை மாய்த்துக் கொண்டதாகக் 'குறுந்தொகை'க் கூறு வதை இங்கு ஒப்பிடலாம்.

'கருங்கண் தாக்கலைப் பெரும் பிரிவுற்றன
கைம்மை உய்யா காமர் மந்தி
கல்லாவன் பறம் கிளை முதல் சேர்த்தி
ஓங்குவரை அடுக்கத்துப் பாய்ந்து
உயிர் செகுக்கும் சாரல் நாட'

என்னும் குறுந்தொகைப் பாடல் வரிகளில் இக் கருத்துக் காணப் படுகின்றது. குழுவினின்று பிரிக்கப்படும்போது குட்டிகள் மிக மிக அஞ்சுகின்றன. பெரியவை ஆத்திரத்துடன் ஓலமிடுகின்றன; அழுகின்றன. ஒரு குரங்கை மீண்டும் அதன் குழவினிடம் விட்ட போது ஏனைய குரங்குகள் அதனை வெகுவாக வரவேற்கின்றன, மகிழ்ச்சி அடைகின்றன

நிலைவழிக் கட்டுப்படுத்துதல் (Conditioning) சோதனையை உரினங்களிடையே தனித்த ஒன்றின் சூழ்நிலையிலும், குழு வினிடைப்பட்ட சூழ்நிலையிலும் நடத்தியபோது தனித்த சூழ்நிலையில் நிலைவழிக் கட்டுப்படுத்துதல் மிகவும் எளிதாக இருந்ததென்றும், சூழலிடப்பட்ட நேரத்தில்தான் சூழலில் இருக்கின்றோம் என்ற உணர்வு தன்னை நிலைவழிக் கட்டுப் படுத்தலுக்கு இணங்கவைக்கவில்லை என்றும் அப்போதே தவறு களும் மறுப்பு மனப்பான்மையும் அதிகமாகக் காணப்படுகின்ற வென்னும் கரப்பான் பூச்சிகளைச் சோதனைக்குட்படுத்தியபோது தெரியவருகின்றது. இதனையே, வெல்டி (Walty J. C.) என்பார், மட்மினோ மீன்களைக் (Mud-minnows) கொண்டு நடத்திய சோதனைகளின் மூலம் எடுத்துக்காட்டியுள்ளார். சிவப்பு விளக்கு ஒளி ஒன்று மேலே வீசப்படும்போது நீரினின்று வெளியே துள்ளி கயிற்றின்மேல் இலேசாகக் கிடத்தப்பட்டுள்ள மண்புழுவினைக் கவ்வுவதற்கு இவ்வகை மீன்கள் நிலைவழிக் கட்டுப்படுத்தல் (Conditioning) மூலம் கற்பிக்கப்பட்டன. இங்குத் தனித்திருந்து கற்பதை விடக் குழுச் சூழ்நிலையில் கற்பது விரைவாக ஏற்படு கிறது என்பதனை வெல்டியின் பரிசோதனை முடிவுகள் எடுத்துக் காட்டியுள்ளன.

இத்தகைய நடத்தை மாறுதல்கள் இனத்திற்கு இனம் மாறுபடுகிறது என்று ஆட்டோகிளைன்பர்க் வலியுறுத்துகிறார். உதாரணமாகத் தங்கநிற மீன்கள் குழுவின் சூழலிடைப்பட்ட பொழுதே ஆட்பட்டன என்றும் பரிசேதனைச் சிக்கலறைப் பெட்டி யின் வழி எளிதில் ஓடின என்றும் , பரிசோதனைகள் கூறுகின் றன. இம் மீன்களிடையே குழு நபர்களின் எண்ணிக்கையின் அதிகரிப்பைப் பொறுத்து நிலைவழிக் கட்டுப்படுத்தல் எளிதா கின்றது. அல்லி (Allee) என்பார் இதனால் உயிர்களின் நடத்தைச் சூழலிடைப்படும்பொழுது பல்வேறு காரணிகளைப் பொறுத்து மாறுபடுகின்றது என்றும், குறிப்பிட்ட ஒரு காரணியை நடத்தை யின் மாற்றத்திற்குக் காரணமெனப் பொதுவாக எல்லாவகை உயிர்களுக்கும் கூற இயலாது என்றும், கூறுகின்றார். இருப்பி னும் தனித்த ஒன்று குழுவினிடைப்படும்பொழுது தன்நடத்தை யில் மாறுபாடு அடைகின்றது என்பதையும், தனித்த ஒன்றின் நடத்தை மற்றவைகயின் முன்னிலையில் மாற்றப்படுகின்றது அல்லது செப்பனிடப்படுகின்றது என்பதையும் நம்மால் மறுக்க இயலாது.

**தலைமைத் தன்மையும் ஆதிக்கமும் (Leadership and Dominence)**

சுவிஜெலர்ப் எபே (Schjelderap Ebbe) என்பார் பறவை யினங்களிடையே ஆதிக்க நடத்தைப் பரவியிருப்பதனை விரிவாக

ஆராய்ந்துள்ளார். பறவைகளிடையே திட்ட வட்டமான சமூகப் பாகுபாடு (Social distinction) காணப்படுவதாகக் கண்டுள்ளார். ஒவ்வொரு பறவையும் வேறொன்றை அடக்குவதாகவோ அல்லது அதற்கு அடங்கி நடப்பதாகவோ இருக்கின்றது. அடங்கி நடக்கும் பறவை ஆதிக்கம் செலுத்தும் பறவையினிடம், கவலை, அச்சம், பயம் கொண்டதாக நடந்து கொள்கிறது. ஆதிக்கம் இரு பறவைகள் முதன் முதலாகச் சந்திக்கும்போதே தீர்மானிக்கப்படுகின்றது. பறவைகளின் ஆதிக்கம், அடங்கி நடத்தல் இவற்றின் வலிமை, சத்தி, இவை முக்கிய காரணமாயிருப்பினும் அதுவே முழுக்காரணமாக அமைவதில்லை. சூழ்நிலையும் இதில் பெரும்பங்குப் பெருவதுண்டு. ஒரு குறிப்பிட்ட பறவையினிடம் பணிந்து நடக்கும் ஒரு பறவை வேறொன்றின் மீது ஆதிக்கம செலுத்துவதும், இம்மூன்றுவது பறவை முதல் பறவை மீதே கூட ஆதிக்கம் செலுத்துவதும் உண்டு.

பால் உறவுகளைப் புருவானது தனது நடத்தையின் வழியே நிர்ணயிக்கிறது. உதாரணமாகக் காதல் செய்யும் பருவத்தில் ஆண் புருவானது மிகவும் மூர்க்கமாக உணர்ச்சி வயப்பட்டு, 'கத்துதல், மற்ற புருவினை ஆக்ரமித்தல்' போன்ற செயல்களில் ஈடுபடுகின்றது. அப்போது அதற்கு இடைப்படும் புரு ஆணாக இருந்தால் தானும் அம் மாதிரியான எதிர்வினைகளைச் செய்யத் தொடங்குகின்றது. ஆனால் எதிர்பட்ட புரு, பெண்ணாக இருந்தால் அது முன்னதின் ஆக்ரமிப்புக்கு, மூர்க்கத்தனத்திற்கு இசைந்து ஆட்படுகிறது. இங்ஙனம் புருக்களினிடையே பால் இன உறவு நிகழ்கின்றது. ஒருசில நேரங்களில் ஆண் புருவானது அத்தகையதொரு பெண் புருக் கிடைக்கப் பெருவிட்டால் தன்னிலும் சத்தி குறைந்த மூர்க்கத்தனமற்ற ஆண் புருவையே தனது ஆக்ரமிப்புக்கு உட்படுத்தித் தனது பால் இன உணர்ச்சியைத் திருப்தி செய்து கொள்ளுகின்றது.

இத்தகைய ஆண் புருவின் மூர்க்த்தனம் அதன் எதிரே உள்ள ஒரு புருவினை, அது பெண் புருவாக இருந்தால் அதன் ஆக்கிரமிப்புக்கு இணங்கச் செய்தும், ஆண்புருவாக இருந்தால் எதிர்த்துச் சண்டை செய்தும், எதிர்ப்பட்ட புரு ஓர் ஆணா அல்லது ஒரு பெண்ணா என்பதை எடுத்துக்காட்டுகின்றது. ஆதிக்கநடத்தைப் பால் (Sex) அடிப்படையில் அமைவதில்லை. புருக்கள், காடை, வான்கோழி போன்ற சில பறவை இனங்களில் ஆண் பறவைகளே பெண் பறவைகள் மேல் ஆதிக்கம் செலுத்துகின்றன. ஆனால் குருவி இனங்களிடையே பெண் பறவைகள் ஆதிக்கம் மிக்கதாகக் காணப்படுகின்றன. இன்னும் வேறு சில பறவை இனங்களில் (Half-wild-aua of Sweedau) ஆண்டின் ஒரு

பருவத்தில் ஆண் பறவை ஆதிக்கம் செலுத்துவதையும், வேறு பருவத்தில் பெண் பறவைகள் ஆதிக்கம் செலுத்துவதையும் காணலாம். வயதினடிப்படையிலே பெரும்பாலும் ஆதிக்கம் காணப்படுகிறது. முதிய பறவைகள் இளம் பறவைகள் மீது ஆதிக்கம் செலுத்துதல் இயல்பே. அவை தங்கள் வலுவினை இழந்தபின்பும் இவற்றின் ஆதிக்கம் நீடிக்கிறது.

புருவிடம் காணப்படும் இந்த ஆக்ரமிப்புச் செயல் ஓரளவு புருவின் சமூக வாழ்க்கையில் நிகழும் தலைமைத் தன்மையைப் (leadership quality) பற்றி நமக்கு விளக்குகின்றது. புருவின் சமூகத்தில் உடல் சத்தியே சகல சமூக சத்தியாகச் செயல்படு கிறது. புருக்களின் ஆளுமைத் தன்மையும், இதன் வழியேதான் நமக்குத் தெரிய வருகின்றது. ஒரு புரு நல்ல சத்தியும் அருமைத் தன்மையும் பெற்றிருப்பின் அது ஆணாக இருப்பின் மற்றொரு ஆண் புருவின் மூர்க்கத்தனத்திற்குப் பால் இன நடவடிக்கை களுக்குத் தன்னை ஒரு பெண்ணாகப் பாவித்து அடிபணிந்து கொடுக்காது. ஆனால் அது சத்தியிலும் ஆளுமைத் தன்மையிலும் குறைந்து இருப்பின் அங்ஙனம் தன்னை முதல் புருவின் ஆக்கிர மிப்புச் செயலுக்கு அடிபணிந்து கொடுக்கும்.

ஓநாய் கூட்டங்களில் தலைமைத் தன்மை அவ்வளவாகக் காணப்படுவது இல்லை. ஓநாய்கள் கூட்டங் கூட்டமாக வாழ்வனவாகக் காணப்படுகின்றன. இவற்றின் குழு நடத் தைகள் 'தலைமைத்தன்மை'யற்று மந்தை நடத்தையாய் இருப் பதால் இவற்றிடையே தலைமைத் தன்மைக் காணப்படுவதில்லை எனலாம். ஓநாய்கள் ஒரு குறிப்பிட்ட பகுதியைத்தேர்ந்தெடுத்து அங்கு மலம் கழிக்கின்றன. இதனால் வேறு கூட்டங்கள் அவ் விடத்திற்கு வருவதில்லை. மேலும், தாங்கள் வசிக்கும் குகையைச் சுற்றிலும் இவை உரிமை கொண்டாடுகின்றன. இவ்விடத் திற்கு வரும் எந்த ஓர் ஓநாயும் இந்த ஓநாய் கூட்டத்தால் தாக்கி விரட்டப்படுகின்றது.

ஓநாயினங்கள், நீண்டகாலம், வாழவல்லன. இவற்றிடம் பால் நடத்தை உட்பட்ட சமூக உறவு முறைகள் அனைத்தும் தொடர்ந்து நீடிக்கக்கூடியனவாக உள்ளன. பின்பற்று நடத்தை (குறிப்பாக ஓநாய் குட்டிகளிடம்) ஆதிக்கம், பணிவு, உறவு முறைகளும் இவற்றிடம் சிறப்பாகக் காணப்படுகின்றன. பெற்றோர், குழந்தைகள், உறவு நடத்தை இவற்றிடம் அவ்வளவு முக்கியத்துவம் பெறுவதில்லை.

பாபூன்கள், அவற்றின் உறவினங்கள், ரீசசு போன்ற குரங்குகள் ஆகியவற்றில் ஆண்களிடையே திட்டவட்டமான

ஆதிக்க அமைப்புக் காணப்படுகிறது. எனவே, ஒவ்வொரு குரங்கும் இன்னொரு குரங்கிடம் பணிவதாகவோ, ஆதிக்கம் செலுத்துவதாகவோ இருக்கிறது. ஆனால் புறத்தேயிருந்து தாக்குதல்கள் வருமாயின் இவையனைத்தும் ஒன்றுபட்டு எதிர்ப்பைச் சமாளிக்கின்றன. பாபூன் குரங்குகளின். ஆதிக்க நடத்தைதையை மாஸ்லோ (Maslow A.H.) ஆராய்ந்துள்ளார். கொரில்லாக் கூட்டங்களில் ஒரு முதிர்ந்த ஆண் குரங்கே ஆதிக்கம் மிக்கதாக விளங்குகிறது. இதன் ஆதிக்கத்திற்குட்பட்டே பெண் குரங்குகளும் குட்டிகளும் நடந்துகொள்கின்றன. இந் நிலையில் பால்சார் உறவு முறையே தலைமைக்கு வழி செய்கிறது. ஆனால் ஏனைய குரங்கினங்களிடையே இது அடிப்படையாக அமைவதில்லை. சிம்பன்சி குரங்குகளிடையே வயது, பால், வலிமை, துடி, அல்லது விழிப்புத்தன்மை, திறன்பெற்ற தன்மை (resourcefulness) மன நிலைத்தன்மைகள் (Temperamental characteristics) ஆகியவற்றின் அடிப்படையில் ஆதிக்க நடத்தை அமைவதாக எர்க்ஸ்சும், ஏர்க்ஸ்சும் (Yerkes and Yerkes) குறிப்பிடுகின்றனர். ஆதிக்கமும் பணிவும் குரங்குகள் தங்கள் குறிக்கோளை அடைவதற்கு உதவவல்லனவாக இருப்பதனைக் காணலாம். உணவினை ஆதிக்கத்தின் மூலம் பெறும் சிம்பன்சிகள் கலவி நடத்தையில் பணிவு நடத்தை மூலம் தம் குறிக்கோளை அடைகின்றன என்பதனைக் கார்ப்பெண்டர் (Carpenter) எடுத்துக்காட்டியுள்ளார். ஆண் குரங்கு புணர்ச்சிக்காகப் பெண் குரங்கினை நாடும்போது அடிபணிந்து போதலும் பெண் குரங்கு எத்துணைதான் சத்தி படைத்திருந்தாலும் ஒரு சிறிய ஆண் குரங்கினிடம் தன் புணர்ச்சியை வைத்துக்கொள்ள அச் சிறிய குரங்கின் ஆளுமைத் தன்மையையும், ஆதிக்கத்தையும் ஒத்துக்கொள்வதாக நடந்துகொள்வதும் இயல்பாகக் காணப்படுகின்றன.

பரிசோதனைகளின் வழி குரங்கு ஒன்றை ஒன்று ஆதிக்கம் செலுத்துவதைப்பற்றி எண்ணற்ற செய்திகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. ஒரு கூண்டில் உள்ள குரங்குகளுக்கு உணவு போட்டபொழுது சத்திவாய்ந்த பெரிய குரங்கு ஒன்று மற்றக் குரங்குகளை விரட்டிவிட்டு அவ் உணவை ஆக்கிரமித்துக் கொண்டதையும் அந்நேரத்தில் அதனால் விரட்டப்பட்ட குரங்கு ஒன்று பயந்து பயந்து உணவினை மெதுவாக நெருங்க, அப் பெரிய குரங்கு அதன் மீது தாவி தலையில் பளார் என அறைந்து, அக் குரங்கை அலறிக்கொண்டே கூட்டின் ஒரு மூலையை நோக்கி ஓடுமாறு செய்துவிட்டு, பின்னர் நிமிர்ந்து நின்று மற்றக் குரங்குகளையும் அதிகாரத்தொனியில், பொருள் பொதிந்த பார்வையில், வெறித்துப் பார்த்து, அங்ஙனம் மற்றக் குரங்குகளும் நடந்தால்

என்ன நிகழும் என உணர்த்திவிட்டு, பின்னர், அந்த உணவினை அடைந்து தான் உண்டபின் மீதியைத் தனக்கு விருப்பமான குரங்கிற்குத் தந்ததையும் பற்றி ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்கள்.

**மிருகங்களின் கலாசாரம்**

மிருகங்கள் தங்களுக்கென ஒரு கலாசாரத்தைப் பெற்றிருக்கின்றனவா அல்லது கலாசாரமென்பதே மனிதனுக்குச் சொந்தமான ஒரு பொருளா என்பதைப்பற்றி எண்ணற்ற கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. இக் கருத்து வேறுபாடுகள் விலங்கு உளவியலைப்பற்றி நாம் படிக்கின்றபொழுது, பாரம்பரிய கலாசார காரணிகள், மனித நடத்தையையும் மிருகங்களின் நடத்தையையும் எங்ஙனம் பாதிக்கின்றன என்ற ஆராய்விற்கு ஏற்ற அடிப்படைக் கருத்துகளை நமக்குத் தெரிவிக்கின்றன. மனிதக் குரங்குகளிடையேயும், மனிதர்களிடையேயும் ஒரே வகைத்தான ஒருசில செயல்பாடுகள் காணப்படுகின்றன வென்றால் அவை உடல் இயல்பாகத்தோன்றுகின்ற காரணங்களாகத்தான் இருக்குமே ஒழிய, கலாசாரத்தின் செயல்களால் ஏற்பட்டிருக்காது. பின் எது மனிதனை-மனிதக் குரங்கினின்று பிரிக்கிறது? நிச்சயமாகக் கலாசாரம்தான் அங்ஙனம் செய்கின்றது.

மனித இனம் கலாசாரத்தின் வழியாகத்தான் ஒருசில நுண்ணிய சிறப்பான செயல் திண்மைகளைப் பெற்றிருக்கின்றது என்பதைக் காணவேண்டுமேயானால் மனித இனத்தைக் கலாசாரத்தின் தொடர்பினின்று நீக்கி ஆராயவேண்டும். நாம் இதை நேரடியாக ஆராய் இயலாது; காரணம் கலாசாரமற்ற ஒரு மனித சமூகமே இல்லை. எனவே, இதனை ஆராய மனித சமூகத்தை ஒத்த விலங்கு சமூகமான மனிதக் குரங்குகளின் சமூகத்தை ஆராய்ந்து அறிதல் பயனுள்ளதாக இருக்கின்றது.

வார்டன் (Warden) என்பார் மனிதக் கலாசாரத் தோற்றம் என்னும் புத்தகத்தில் கலாசாரம் என்பது கண்டுபிடிப்புகள், தொடர்புகள், சமூகப் பழக்கங்கள் என்ற மூன்றின் வழி தோன்றிச் செயல்படுகின்றது என்று கூறுகின்றார். இவருடைய கூற்றுப்படி, மனித சமூகம் தவிர்த்த ஏனைய உயிரிகளின் சமூகத்தில் இம் மூன்றும் இல்லை என்பதால், அவற்றிற்குக் கலாசாரமே இல்லை என்றே தெரியவருகின்றது.

குரோபர் (Kreber) என்பார் இக்கருத்திற்கு மாறுபட்ட வகையில் கலாசாரம் என்பது மனிதக் குரங்குகளின் சமூகத்தில்கூடக் காணப்படுகின்றது எனக் கூறுகின்றார். மனித இனத்தில்

தோன்றுகின்ற கலாசார அமைப்பே பிராணிகளிடத்திலும் காணப்படுகின்றது எனப் போஸ் (Boas) என்பார் கூறுகின்ருர். இவரைப் பொறுத்தவரை கலாசாரம் என்பது இனத்தின் பழக்க வழக்கங்களின் வழித்தோன்றுவதாகும். இங்ஙனம் நாம் விலங்கு களிடத்துக் கலாசாரத்தை ஆராய்ந்தால் விலங்குகளும் தங்களுக் கென ஒரு குறிப்பிட்ட பழக்க வழக்கங்களைத் தொடர்ந்து ஏற்று, ஒத்துக்கொண்டு, வாழ்ந்து வருகின்றன என்றே கூறத்தோன்று கின்றது. எனவேதான் போஸ் என்பார் மனிதக் கலாசாரத்தின் ஒருசில பண்புகளுக்கிடையேயும் விலங்குகளின் பழக்க வழக்க பண்புகளுக்கிடையேயும் இடைவெளி இல்லையெனக் கூறுகின் ருர்; இதன் அடிப்படையிலேயே அவர் விலங்குகளுக்கும் கலா சாரம் இருப்பதாகக் கருதுகின்ருர்.

விலங்குகளின் சமூகத்தினிடையே மனித சமூகத்தில் தோன்றுகின்றதைப் போன்றே புதுவழி நடத்தைகள் தோற்றம் பெற்று மிக விரைவில் சமூக ஒப்பந்தத்தையும் பெறுகின்றன. இதனை ஆப்ரிக்கச் சிங்கங்களின் நடத்தை மாற்றத்தின் மூலம் லிண்டன் (Linton) எடுத்து விளக்குகிருர். ஆப்ரிக்கச் சிங்கங்கள் அனைத்தும் ஒரே இனத்தவையே. அவை பெரும்பாலும் தனித்துச் சென்றே வேட்டையாடுகின்றன—அல்லது ஓரளவு முதிர்ந்த தங்கள் குட்டிகளுடன் இணை இணையாகச் சென்று வேட்டை யாடுகின்றன. ஆனல் கென்யா (Kenya) பிரதேசத்தில் இவை ஓர் ஒழுங்கான செயற்பாகுபாடுகள் கொண்ட மந்தைகளாகச் சென்று வேட்டையாட முற்பட்டுள்ளன. இம் மந்தை தன் இரையினைச் சுற்றி வளைத்துக்கொள்கிறது. சுற்றிலும் உள்ள சிங்கங்கள் உறுமுகின்றன. இதனுல் மிரண்ட இரை ஒரு திசைக்கு விரட்டப்பட்டு ஓடுகிறது. அங்கு அமைதியாக மறைந்து இருக்கும் ஒரு சிங்கம் அதனை அடித்துக் கொல்கிறது. நெடுங்காலமாக வேட்டையாடி வருபவர்கள் இது ஓர் அண்மை முன்னேற்றம் என்றே கூறுகின்றனர். அங்கு இன்னமும் வாழ்ந்து வரும் மக்களின் நினைவினைப் பொறுத்தவரை கென்யாச் சிங்கங்களும் சாதாரணமாக ஏனைய சிங்கங்களைப் போன்றே தனித்துச் சென்றே வேட்டையாடுவனவாக இருந்திருக்கின்றன என்று லிண்டன் கூறுகிருர். நீர்நாய் (Beaver) விலங்குகளும் இவ்வாறு தங்கள் நடத்தையை மாற்றிக்கொண்டுள்ளதாக ஆல்வேடர் (Alverder, F) சுட்டிக்காட்டுகிருர். இவ் விலங்குகள் சூழ்நிலையின் தன்மைக்கு ஏற்பத் தங்கள் நடத்தையை மாற்றிக் கொள்வதாகத் தோன்றுதலும் உண்மையே. ஐரோப்பாவில் காணப்படும் நீர்நாய்கள் இன்றும் பெரும்பாலும் தம்பதியராகவே வாழ்கின்றன. ஆனல் கனடா (Canada) போன்ற நாடுகளிலோ

இவை சிறிய அல்லது பெரிய குழுக்களாகவே வாழ்கின்றன. மக்கள் நெருக்கம் மிக்கப் பகுதிகளில் இவை தரையின் அடியில் காணப்படும் வங்குகளில் வாழ்கின்றன. ஆனால் மக்கள் குறைந்த பகுதிகளில் இவை கூடுகட்டி வாழ்கின்றன.

ஸ்காட் (Scott) என்பார் ஓரியல் (Oriole) என்னும் பாடும் பறவையின் குஞ்சுகளை அவற்றின் தந்தையார் இடம்மிருந்து பிரித்து ஓரியல் பறவையின் பாட்டை அவை கேட்காதவாறு தனித்து வளர்த்தார். இதன் விளைவாக அவ்விரு ஓரியல் பறவைகளும் ஒரு புதிய பாணியில் தாங்களாகவே பாடக் கற்றுக்கொண்டன என்று கண்டார். அவற்றைப் பின்னர் மற்ற ஓரியல் பறவைகளோடு ஒன்றாக வாழவிட்டபோது அவ்விரு பறவைகளின் புதிய பாணியை மற்றப் பறவைகளும் கற்றுக்கொண்டு பாட ஆரம்பித்தன என்றும் அவ்விரு புதிய பறவைகளும் மற்ற பறவைகள் பாடுகின்ற வழக்கமான ஓரியல் பறவையின் பாட்டினைக் கற்றுக்கொண்டு பாடின என்றும் கூறுகின்றார். இங்கு கலாசாரம் என்பது வார்டனின் வரையறையை ஒட்டியதாகக், கண்டுபிடிப்பு, தொடர்பு, சமூகப் பழக்கங்கள் அவற்றின் வழி வந்ததாகக் காணப்படுகின்றது. இவற்றைப் போன்றே குருவியினக் குஞ்சு ஒன்று கனரி (Kanary) என்னும் பறவையினங்களோடு சேர்த்து வளர்க்கப்பட்டபோது, அக் குஞ்சு கனறிப் பறவையைப் போன்றே பாடத் தொடங்கியது. இன்னும் நைட்டிங்கேல் போன்ற பறவைகளின் பாட்டு, அப் பாட்டினை நன்றாகப் பாடுகின்ற பறவைகளின் பழக்கத்தில்தான் முன்னேற்றம் அடைகிறது என்பதும், ஒருசிலப் பறவைகள் தங்களின் குஞ்சுகளுக்கு எப்படிப் பாடவேண்டும் எனக் கற்றுக்கொடுப்பதும் உயிரிகளின் சமூகத்திலும் கலாசாரம் இருக்கின்றது; அக் கலாசாரத்தின் வழி அச் சமூகம் முன்னேற்றம் காண்கிறது என்னும் உண்மைகளைப் புலப்படுத்துகின்றன. மேலும், ஒருசிலப் பிராணிகள் தங்களின் குட்டிகளுக்கு எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதைப் போதிக்கின்றன. ஒராங் (Orang), சிம்பன்சி (Chimpanze) என்றகுரங்குகளின் தாய்கள், தங்களின் குட்டிகளுக்கு எப்படி நடக்கவேண்டும் என்பதையும் போதிக்கின்றன.

வார்டனின் கலாசாரம் பற்றிய வரையறைப்படி கண்டுபிடிப்புகள், தொடர்புகள், சமூகப் பழக்கங்கள் என்ற இம் மூன்றின் மாட்டும் கலாசாரம் பறவைகளின் சமூகத்தினிடையே ஏற்படுகின்றன என்பதை நாம் கண்டோம். இங்கே தொடர்பு வழி சமூகக கலாசாரம் பரவுகின்றதால் விலங்குகளின் சமூகத்தினிடையே மொழி என ஒன்று காணப்படுகின்றதா என்று இங்கு ஆராய்வோம். ஏனெனில் மொழியின் தன்மைகளைக் கொண்டே

ஒரு சமூகத்தின் தொடாபுகளே அதன் வழி கிடைக்கும் கலா சாரப் பண்புகளை நம்மால் கணிக்க இயலும்.

**கருத்துப் பரிமாற்றம் (Communication)**

பல மீன் இனங்கள் செவிவழிக் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்வதனை ஆராய்ச்சிகள் எடுத்துக் காட்டியுள்ளன. இவ் வொலிகள் நிலவாழ் விலங்குகளால் கேட்க இயலாதவையாக உள்ளன. சில வகை மீன் இனங்கள் வேறு மீன் தங்கள் பகு திக்கு வருவதனை எச்சரிக்கை ஒலி மூலம் அறிவிக்கின்றன. இர வில் அல்லது கடலின் அடிப்புற இருட்டில் தங்கள் கூட்டத்தை ஒன்று திரட்டிப் பல மீன் இனங்கள் ஒலியெழுப்புகின்றன.

பறவைகள் சிறகினை விரித்தல் ஒரு வகை கருத்துப் பரிமாற்றமாகப் பறவைகளிடையே காணப்படுகிறது. இத் துடன் பறவைகள் தங்கள் குரல் ஒலி மூலம் பலவகை ஒலிகளை எழுப்பிக் கருத்துப் பரிமாற்றம் செய்துகொள்கின்றன. காக்கை, கிளி போன்றவை ஒருசில பாலூட்டிகளைவிட வளர்ச்சியுற்ற குரல் அமைப்புப் பெற்றுள்ளன. இதனுல் இவை பிறர் பேசுவதைப் பின்பற்றிப் (initate) பேச இயலுகிறது. பறவைகள் தங்கள் ஒலியை மட்டுமின்றிப் பார்வையினையும் கருத்துப் பரிமாற்றத்தில் பயன்படுத்துகின்றன.

**விலங்குகள்**

அல்வேடஸ் (Alverdes) என்பார் விலங்குகள் அடிக்கடி உண்டாக்கும் ஓசைகளைப் பாவித்துக் கத்துதல் (Initation) என்றும் ஆண் இனமாக இருந்தால் தங்களின் எதிரியைக் கண்டு முறைத்தல்; பெண்பாலாக இருந்தால் வாவென வரவேற்றல் என்ற அர்த்தத்தில் கொள்ளவேண்டும் என்றும் கூறுகின்ருர்.

சிங்கம் ஒன்று கர்ச்சிக்கும்போது அச் சிங்கத்தை அடுத் துள்ள சிங்கங்களும் அதனுடன் சேர்ந்துகொண்டு கர்ச்சிக் கின்றன. ஒரு கழுதையின் கத்தல் அடுத்துள்ள கழுதைகளை யும் கத்த வைக்கின்றது. இத்தகைய ஓசைகள் மனிதனின் மொழியினைப் போன்று ஒரு பொருளோடு எழுந்தன என்று நாம் கூறுவதற்கில்லை. இவ்வகையான ஓசை எழுப்புதல் ஒன்றை ஒன்று பின்பற்றிக் கத்துதல் என்றே கூறலாம். இருப்பினும் விலங்குகளிடையே எழும் ஓசை தூண்டுதலை, எதிர்வினை ஏற் படுத்தவில்லையென நாம் கூறுதல் பொருந்தாது. ஓசைகள் ஒரே மாதிரி இருப்பினும் அவை தெரிவிக்கும் உள்ளார்ந்த பொரு ளும் பல்வேறு வகையினதாய்க் காணப்படுகின்றன. உதாரண மாக ஆபத்துக் காலங்களில் பயந்து ஓடிக்கொண்டே கத்துதலும் உணவைக் கண்டதும் மகிழ்ச்சியால் கத்துதலும், பால் இனத்

தொடர்பில் ஆணோ அல்லது பெண்ணோ தனக்கு எதிர்ப்பட்ட மற்ற பால் இனத்தைச் சேர்ந்த விலங்கினைக் காதலுக்கு அழைக்கும் ஓசையும், மிருகங்கள் ஒன்றை ஒன்று கோரமாகத் தாக்கிச் சண்டையிடும்போது ஏற்படுகின்ற ஓசையும் பொதுவாக ஒரே தன்மையினதாய்க் காணப்படினும் உள்ளார்ந்த பொருளில்–குறிப்பில்–மாறுபாடு அடைகின்றன.

குரங்குகள் பிற குரங்குகளின் ஒலியைக் கேட்டு எதிர்வினை புரிவதனைப் பரிசோதனைச்சாலைகளில் கண்டுள்ளனர். பரிசோதனைக்குட்படும் குரங்கு வெளியேயுள்ள குரங்கின் ஒலி மிக மெல்லியதாகக் கேட்டாலும் வேலை செய்வதனை நிறுத்திவிடுவதனை ஹார்லோ (Harlow, H. F.,) கண்டுள்ளார்.

மனிதர்கள் பயன்படுத்தும் சொற்களைப் புரிந்துகொள்ள வல்லனவாகக் குரங்குகள் உள்ளன. எர்க்ஸ் பரிசோதனைச் சாலையில் விகி (Viki) எனும் இளம் சிம்பன்சி மூன்று ஆங்கிலச் சொற்களைப் பொதுவாகப் புரிந்துகொண்டு நடக்கக் கற்பிக்கப் பட்டதை இதற்குச் சான்றாகக் கூறலாம். அதேபோல் ‘கெல்லாக் தம்பதியர்’ (Kellogg, W. W. and Kellogg D. A.) தாங்கள் வளர்த்த குரங்கு பல சொற்களைப் புரிந்துகொண்டதாக ஒரு பட்டியலையே வெளியிட்டுள்ளனர். சாதரணமாகக் குரங் காட்டிகள் குரங்குகளுக்குக் கட்டளைகள் இடுவதனையும் அதன் படி அவை நடப்பதையும் நாம் காண்கிறோம்.

கொரில்லாக் குரங்கு, மனிதக் குரங்கு போன்றவை மனிதனின் கட்டளைகளையும், முகப்பாவங்களையும் எளிதில் உணர்ந்து கொண்டு அதற்கு ஏற்பச் செயல்படும் தனித்தன்மை வாய்ந்தவையாக இருக்கின்றன. இவற்றைவிடச் சைகையையும் அதன் வழி ஒரு பொருளை வெளியிடும் திறமையையும் நன்கு உணர்ந்து இருக்கின்றன. மனிதர்களைப் போன்றே இவையும் தனக்கு வேண்டாத பொருள்களின் பால் முகத்தைத் திருப்பிவைத்துக் கொள்ளுதலும் வேண்டிய பொருள்களின் பால் கையை நீட்டிக் கரைவதுமான நடத்தைகள் காணப்படுகின்றன.

திரு. கார்னர் (Mr. Garner) என்பவர் மனிதக் குரங்குகளின் நடத்தைகளைப் பழக்க வழக்கங்களை நன்கு கற்று அறிந்து அவற்றிற்குப் பன்னிரண்டு ஓசைகளைக் கொண்ட ஒரு மொழி இருக்கின்றது என்றும், அவை சூழ்நிலையால் அவற்றைக்கொண்டு ஆபத்து, உணவு, பால் உணர்வு, விளையாட்டு, தண்ணீர், நகரும் பொருள்கள் போன்ற பல்வேறு சூழ்நிலைகளில் நிகழும் செயல்களை–மற்ற மனிதக் குரங்குகளுக்கு எடுத்துக் கூறுகின்றன என்றும் அவ்வொலிகள் ஒருசிலவிடத்து மிகப் பெரிய மாறுபாடுகளுடன்

காணப்படாவிட்டாலும் மிகவும் நுண்ணிய மாற்றத்துடன் இருக்கின்றன என்றும், அதை மற்றக் குரங்குகள் புரிந்துகொண்டு எதிராக விளையாற்றுகின்றன என்றும் கூறுகின்றார்.

கார்பெண்டர் என்பார் ஊளையிட்டு இறைகின்ற குரங்குகளின் ஓசையில் எண்ணற்ற வேறுபாடுகளைக் கண்டுபிடித்துள்ளார். (1) ஆண் குரங்கானது அடித்தொண்டையில் கரைகின்ற, உருமுகின்ற பாணியில் ஊளையிடும்போது பெண் குரங்குகள் பயத்தில் கீரிச்சிட்டுக் கத்துவதைப்போன்று ஊளையிடுகின்றன. (2) குழுவின் முன்னே நின்று நடந்து செல்லும் ஆண் குரங்கானது நேரத்துக்கு நேரம் ஒருவித எச்சரிக்கை ஒலியை எழுப்பிச்செல்லும். (3) ஆபத்தோ அல்லது ஆபத்து இருக்கின்ற சூழ்நிலையை மிகவும் இலேசாகப் புரிந்துகொள்ளும் நிலையோ ஏற்பட்டால் நேரத்திற்கு நேரம் எழுப்புகின்ற அந்த ஒலி தொடர்ந்து 'கர்' 'கர்' என ஒலிக்கத் தோன்றும்—அதை உணர்ந்து மற்ற குரங்குகள் பாதுகாப்பு முயற்சியில் இறங்கி ஆபத்தை எதிர்க்க அல்லது தவிர்த்துவிட்டு ஓடிவிடத் தங்களைச் சரிசெய்து கொள்ளும். (4) தன்னை அடிவயிற்றில் பிடித்திருக்கும் குட்டியானது தரையில் விழுந்துவிட்டால் 'வீல்' எனத் தாய்க்குரங்கு கத்தத் தொடங்கி அது முடிவற்ற ஒப்பாரியாக மாறத் தொடங்கும். (5) குரங்கு, குட்டியானது தன் தாயை விட்டுப் பிரிந்திருக்க நேர்ந்தால் மூன்று வகையான ஒலி வரிசையில் தொடர்ந்து கத்துகிறது. (6) தாய்க்கும், சேய்க்குமிடையே தழுவுதல் ஏற்படும்பொழுது நீண்ட நேரம் ஒருவித 'புர்' என்னும் மெல்லிய முணகல் ஏற்படுகின்றது. (7) விளையாட்டு நேரங்களில் குரங்குகள் ஒருவிதமான ஒலியையும். (8) சண்டை நேரத்தில் ஒரு விதமான ஒலியையும். (9) விளங்காத புதிர் நிறைந்த சூழ்நிலைகளில் அகப்பட்டுக்கொள்ளும்பொழுது 'கூ' 'கூ' என்னும் ஒலியையும் செய்கின்றன.

டாக்டர் கெம்ப் (Dr. Kemph) என்பார் குரங்குகளிடையே தனிப்பட்ட பால் இனத் தொடர்பினைக் குறிக்கும் வார்த்தைகள் இருக்கின்றன என்றும், சமயத்தில் குரங்கு தன் நாக்கின் நுனியை இலேசாகத் தட்டி ஒலி எழுப்புவதிலும், மெதுவாக இ இ—அஹ (ee-ah) என ஒலி உண்டாக்குவதிலும், ஒருசில நேரங்களில் பால் இன உறவிற்குத் தக்கபடி தன் உடலைக் கிடத்திவைத்துக் கொண்டு ஒருவிதமாக ஒலி எழுப்புவதிலும் இச் சொற்கள் செயல்படுகின்றன என்றும் அவர் கூறுகின்றார்.

இத்தகைய படிப்புகள், பரிசோதனைகள் மனிதனைப்போன்றே வேறுபட்ட சூழ்நிலையில் வேறுவிதமான ஒலிகளை விலங்குகள்

எழுப்புகின்றன என்ற கருத்தை நன்கு விளக்குகின்றன. மனித மொழிக்கும் விலங்குகளின் மொழிக்குமுள்ள முக்கியமான ஒரு வேறுபாடு மனிதர்களைப் போலன்றி விலங்குகள் தங்களின் ஒலி களின் வழி நிகழ்காலத்தில் நேரிடையாக நடைபெறும் செய்தி களைப்பற்றி மட்டுமே கருத்துப் பரிமாற்றம் செய்கின்றன. இக் கருத்துப் பரிமாற்றம் உணர்ச்சி வசப்பட்டபோது ஏற்படும் பிரதி வினையாகச் சில நேரங்களில் தங்களின் ஆசைகளை, விருப்பங் களைத் தாங்கள் வேண்டும் பொருள் அல்லது செய்கையின் பால் சுட்டிக் காட்டுவனவாக அமைகின்றன. நாம் விலங்குகளில் ஒலி வழிகளைத் தெரிந்துகொண்ட அளவில், விலங்குகள் தங் களின் மொழி வழி நிகழ்காலத்தில் நடக்கும் செயல்களின் பாலே பரிமாற்றம் செய்ய இயலும் என்றும், எண்ணப் பகுப்புகள், சிந்தனைகள், குறியீட்டுப் பேச்சுகள், இறந்தகாலம் அல்லது எதிர் காலம் பற்றிய சிந்தனைகள் போன்றவை குரங்குகளின் மொழியில் இல்லை என்றும் கூறலாம்.

இருப்பினும் நாம் எதையும் திட்டவட்டமாகக் கூறும் நிலை யில் இல்லை. இங்ஙனம் நாம், சிம்பன்சி குரங்குகள் ஓரிடத்தில் குழுமி அமர்ந்துகொண்டு, தொடர்ந்து கத்திக்கொண்டிருப்ப தைப் பார்த்து அவை பொருளற்ற கத்தல்கள் என்றோ—அங்கே மனிதனைப் போன்று விவாதிக்கின்ற குழு விவாதம் இல்லை என்றோ—அல்லது அவை தாங்கள் கண்டவற்றையும், கேட்ட வற்றையும் நேற்று நடந்ததையும், நாளை அவை செய்ய இருப் பதையும் பற்றி ஒன்றுக்கு ஒன்று விவாதித்து பேசிக்கொள்ள வில்லை என்றோ—அல்லது அவை மனித சிந்தனையாளர்களின் கூட்டத்தில் நிகழ்வதைப் போன்று இவ்வுலகம் பற்றிய அதன் தோற்றம், அமைப்பு, இறுதிநாள் போன்றவற்றைப் பற்றியும்–சிந்தித்து விவாதிக்காது என்றோ, உறுதியாகக் கூற முடியும்.

இவ்வகையில் எஸ்பர் (Esper) என்பார் மனித விலங்கு மொழி பற்றிய ஆராய்ச்சியின் முடிவாக விலங்குகளின் மொழி இரண்டு வகையான கட்டுப்பாட்டிற்கு உட்பட்டிருக்கின்றது எனக் கண்டார். முதலாவதாகக் குரங்குகளின் சமூகத்தில் கூட்டுறவும், ஒன்றை ஒன்று தொடர்ந்து புரிந்துகொள்ளும் நிலையும் மிகவும் குறைவாகக் காணப்படுகின்றன. இரண்டாவதாகச் சமூக மரபு களின் வழி புதிய யுக்திகள், கண்டுபிடிப்புக்கள்—இவற்றின் பயனால் மொழியில் ஒரு தேர்ச்சியைப்பெற விலங்குகளின் மொழி யில் ஒரு தேர்ச்சியைப்பெற விலங்குகளின் மொழியில் வழி இல்லை. எனவே இவ்விரு தடைகளினால் விலங்குகளின் மொழி மனித மொழியினின்று வேறுபட்டுப் பின் தங்கிய நிலையில் காணப்படு கின்றது என்றும் அவர் கூறுகின்றார்.

**அதிகாரச் சுருக்கம்**

**விலங்குகளின் சமூக நடத்தை:** மனித சமூகத்தில் காணப்படும் ஒரு சில அம்சங்கள், நடத்தைகள், விலங்குகள் சமூகத்திடையேயும் அவற்றின் ஆரம்ப நிலைகளில் காணப்படுகின்றன. இவற்றைப் புரிந்துகொண்டால் வளர்ந்துவிட்ட மனித சமூகத்தின் நடத்தையினை முற்றிலுமாகத் தெரிந்துகொள்ளுதல் இயலும். மேலும் விலங்குகளின் சமூக நடத்தைப் பற்றிய அறிவு மனித சமூகத்தின் மரபுநிலை, சூழ்நிலை போன்ற காரணிகளை ஆராய உதவுகின்றது.

விலங்குகளின் சமூக நடத்தை அவற்றின் உடல் அமைப்பினைப் பொறுத்தும் அவை உயிர்வாழும் நிலைகளைப் பொறுத்தும் அமைகின்றன. பிராணிகள், விலங்குகளிடையே காணப்படும் சமூக நடத்தையைச் சமூக உளவியலாளர்கள் மூன்று பொதுப் பகுப்பின் வழி எடுத்து விளக்குகின்றனர். அவை யாவன :—(1) கீழ்நிலை முதுகெலும்பு விலங்குகளை உள்ளிட்ட தற்காலிகச் சேர்க்கைகளில் மட்டும் காணப்படும் சமூக நடத்தைகள். (2) பூச்சி சமூகங்களைப் போன்ற பேணுதல் நடத்தையினால் பிணைந்து நிரந்தரமாக ஒன்று கூடி வாழும் சமூக நடத்தைகள். (3) பல முதுகெலும்பு விலங்குச் சமூகங்களைப் போன்று ஒன்றுகொன்று ஏற்படும் பின்பற்றல், ஒத்த செயல்கள் ஆகியவற்றால் ஒருங்கமைக்கப்பெற்ற நிரந்தர குழுக்கள் வழி ஏற்படும் சமூக நடத்தைகள் என்பனவாகும்.

பிராணிகளின் சமூக வாழ்க்கையை ஆராய்கின்றபோது பாக்டீரியாக்களின் வாழ்க்கையில் சமூக நடத்தை என ஒன்று இல்லையென்றும் பிராணவாயு அதிகமாக உள்ள இடங்களில் அவை இயல்பாகக் கூடத் தொடங்கி ஒரு கூட்டுத்தொகுதி ஏற்படுகின்றது என்றும் தெரிய வருகின்றது. பறவைகளுடனும், பாலூட்டிகளுடனும், ஒப்பிடுகையில் மீன் பல அடிப்படையான சமூக நடத்தைகளை இழந்ததாகவே காணப்படுகின்றது.

பூச்சிகள், குளவிகள், தேனீக்கள், எறும்புகள், கறையான்கள் ஆகிய பூச்சியினங்களிடையே சாதி அமைப்பு, குழு வாழ்க்கை, வேலைப்பிரிவு ஆகிய சமூக அமைப்புகள் நன்கு வளர்ந்த நிலையில் காணப்படுகின்றன. பறவைகளின் சமூக வாழ்க்கை இதற்கடுத்து ஒருபடி மேம்பட்டதாகக் காணப்படுகின்றது. கற்றல், அனுபவம் ஆகியவற்றில் அடிப்படையில் புதிய புதிய நடத்தைகளைக் கற்றுக்கொள்ள வல்லனவாக உள்ளன. பாலூட்டிகளின் சமூக வாழ்க்கை மனித முன் இனத்தின் (Polimate) சமூக வாழ்க்கையினைவிடச் சில படிகளில் தாழ்ந்ததாகவும் சிலவற்றில் ஒரே தன்மையானதாகவும் காணப்படுகின்றது.

# 5. மொழியும் செய்தித் தொடர்பும்

மனித சமூகத்தையும், அதன் உளவியல் நடத்தையையும் பற்றி ஆராய்கின்றபோது உடனடியாக நாம் மொழியைப்பற்றி யும் அதனது வேலைப்பாடுகளைப் பற்றியும், அது மனிதனுக்கு ஆற்றியுள்ள தொண்டுகளைப் பற்றியும் சிந்திக்கவேண்டியவர் களாக இருக்கின்றோம். ஏனெனில் விலங்குச் சமூகத்தினிடம் இருந்து மனித சமூகத்தை வேறுபடுத்திக் காண்பிப்பதும் மனித சமூகத்திற்கென்று தனித்த சிறப்புமிக்க இடத்தினைப் பெற்றுத் தந்ததும், மனித சமூகத்திற்கு அடிக்கல்லாக நின்று இன்றைய நிலைக்கு அதனை உயர்த்தியதும் மொழியே ஆகும்.

இவையன்றி மொழியின் முக்கியத்துவம் பற்றி, சமூக உள வியலில், நாம் படிக்கவேண்டியதின் அவசியம் பல்வேறு வகைப் பட்டதாகக் காணப்படுகின்றது. முதலில் சமூக உள் நிகழ்ச்சி களுக்கும், தொடர்புகளுக்கும், அடிப்படைக் கருவியாக அமைவது மொழியே. மொழி இல்லையேல் மனித இனத்திற்குச் 'சமூக வாழ்க்கை' என ஒன்றே தோன்றியிருக்க இயலாது என்று நாம் உறுதியாகக் கூற இயலும். இரண்டாவதாகச் சமூக நடத்தைக்கு உயிர் கொடுக்கும் காரணிகளான மதம், கலாசாரம், ஒழுக்க-நீதி, போதனைக் கருத்துகள் போன்றவை ஒரு சந்ததியினரிட மிருந்து மற்றொரு சந்ததியினருக்கு இம் மொழியின் மூலமாகத் தான் கிடைக்கின்றன. மொழிமட்டும் இத்தகைய ஓர் இடைப் பட்ட பொருளாக நின்று செயல்பட்டிருக்காவிட்டால் ஒரு சந்ததி யினர், அடுத்த சந்ததியினருக்குத் தங்களின் சமூகக் கலாசார மதக் கோட்பாடுகளைக் கைம்மாற்றித் தந்து, தங்களின் வாழ்க்கை யைப் போன்றே அவர்களும் ஒரு மேம்பட்ட வாழ்க்கையினை வாழ் வதற்கு எவ்வித வழியையும் செய்திருக்க முடியாது. இதனைப் போன்றே பின் சந்ததியினர் தங்களின் முன் சந்ததியினரிட மிருந்து எதையும் பெற்று, அதன் அடிப்படையில் தங்களின் அறிவினை வளர்ச்சி செய்து, ஒரு மேம்பாட்டினைக் கண்டிருக்க இயலாது. எனவேதான் மொழி என ஒன்று இல்லாவிட்டால்

மனித சமூகம் எனும் ஓர் அமைப்பே இருந்திருக்காது என்றும், முந்தைய சந்ததியினரால் பிந்தைய சந்ததியினரும், பிந்தியவர்களால் இனி அடுத்து வரவிருக்கும் சந்ததியினரும், எவ்வித நன்மையும் அடைய இயலாது என்றும், சந்ததியினர் ஒருவருக்கொருவர் தொடர்பு இன்றிக் கருத்துமாற்றப் பரிவர்த்தனை இன்றி ஆதிகால மக்களைப் போன்று தனித்தே வாழ வேண்டியிருந்திருக்கும் என்றும் சமூக உளவியலாளர் கருதுகின்றனர்.

இவ்வாறு மனித எண்ணங்களையும் பண்பாட்டுக் கலாசாரக் கோட்பாடுகளையும் ஒருவரிடமிருந்து மற்றவர்களுக்குக் கைம் மாற்றித் தரும் கருவியாகச் செயல்படுவதும், தனித்தனியே சிதறி வாழ்ந்த மனிதர்களை ஒன்றுபடுத்தி ஒரே குடும்பமாய் ஒரே சமூகமாய் வாழச் செய்து, அதன் வழி கலாசாரம் பண்பாடுகளுக்கு உயிர் கொடுத்து மனித சமூகத்தை முன்னேற்றம் நோக்கி நடத்திச் செல்லும் அடிப்படைக் காரணியாக அமைவதும், மொழியே ஆகும். இவற்றையே தாம் பானர் (Bonner) என்பார் சமூக உளவியலில் மொழியினைப் பயிலவேண்டியதின் காரணங்களாகக் கூறுகின்றார்.

மனிதனின் மிகச் சிறந்த சாதனையில் முதன்மையானது என்றில்லாவிட்டாலும், மிகவும், சிறந்தது என்ற வகையிலாவது மொழியின் தோற்றமும், ஆக்கமும், அதன் வளர்ச்சியும், மனித இனத்திற்குப் பயன்பட்டது என மனித இனவியலார் ஒத்துக் கொள்ளுகின்றனர். பேச்சுவழி, எழுத்துவழி, மொழியானது தொடர்பினை நேருக்கு நேர் நின்று பேசும், சூழ்நிலைகளில் மட்டுமின்றி, உலகப் பகுதிகளுக்கு அப்பாலும் நின்று, தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள வழி செய்கின்றது.

முதலாவதாக மனிதர்களுக்குள் ஏற்படும் இடை வினைகளுக்கு உட்தொடர்புகளுக்கு ஓர் அடிப்படை மூலமாக அமைவது மொழியே. இம் மொழி இல்லாது இருந்தால் உடல்நிலை அளவினின்று மாறுபட்டு மேற்போக்காக மன நிலையில் எண்ணங்கள், கருத்துகள் போன்ற மனப்பகுப்பு நிலையில் 'எண்ணங்களால் வாழும்' இத்தகைய ஒரு மேம்பட்ட வாழ்க்கையினை மனிதன் அடைந்திருக்க இயலாது. இரண்டாவதாக முன்னரே கூறியது போன்று மனித சமூகத்தின் செல்வங்களான, சேமிப்புக்களான, பாரம்பரியச் சொத்துக்களான பழக்க வழக்கங்கள், சட்டங்கள், ஒழுக்க நீதி, போதனைகள், தத்துவம், மதம், அறிவியல போன்றவற்றை ஒரு சந்ததியினர் மற்றொரு சந்ததியினருக்கு மொழி வழியேதான் கைம்மாற்றித்தந்து விட்டுச் செல்கின்றனர். மூன்றாவதாக மொழியே எல்லோருக்கும்

பொதுவான ஓர் அர்த்தத்தை, பொருள் வரையறையைக் கருத்துக் கோட்பாடுகளை, எண்ணப் பகுப்புக்களை மனித சமுதாயத்திற்கு வழங்கி அவற்றின் வழி மனித நடத்தையை ஒரு கட்டுப்பாட்டிற்குள் வைத்து இயங்க வழி செய்கின்றது. இறுதியாகப் பிறந்த குழந்தையைச் சமூக மனிதனாக மாற்றும் அரிய செயலினை மொழியே செய்விக்கின்றது. குழந்தை பேசக் கற்றுணர்ந்த பின்னரே சமூக வாழ்வில் அடியெடுத்துவைத்து முழு மனிதன் என்னும் பதத்திற்கு ஏற்ற தகுதியை அடையப் பெறுகின்றான். தனித்துச் சமூக அமைப்பினின்று ஒதுங்கி வளர்க்கப் பெறும் குழந்தைகள் பிற்காலத்தில் உடல் அமைப்பைப் பொறுத்தவரையில் மனிதர் எனக் கூறப்பெறலாமெனினும் உள்ளத்தைப் பொறுத்தவரையில், உளம்சார்ந்த வாழ்க்கையைப் பொறுத்த வரையில் மனிதர்களாகவே கருதப்படமாட்டார்கள்.

உளத்தைப் பொறுத்தவரை, உளம் சார்ந்த வாழ்க்கையைப் பொறுத்தவரை-பிறந்த குழந்தையை முழு மனிதனாக மாற்றித் தருவது மொழியே ஆகும். மொழி இங்ஙனம் முற்றிலும் கல்லைப் போன்றும் மண்ணைப் போன்றும் ஒரு பொருளாக இருந்த மனிதனைப் பண்பாடு, கலாசாரம் மிக்க ஒரு நாகரிக மனிதனுக்கும் வகையில் ஒரு பெரும் மாற்றத்தினைச் செயல்பாட்டினைச்–செய்கிறது. மொழி இன்றிச் சமூகக் கலாசார வாழ்க்கை என ஒன்றே இல்லை என்றும் மனிதனை மற்ற விலங்குகளினின்று வேறுபடுத்திக்காட்டும் மரபு, கலை, அறிவியல் போன்ற எதுவும் இல்லை என்றும் கூறலாம். இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்தது மொழியாகும். மொழியைச் சமூக உளவியலார் படிப்பதென்பது, சமூகத்தையே, சமூக அமைப்பையே, சமூகமெனும் தத்துவத்தின் தோற்றம், வளர்ச்சி போன்ற அடிப்படைக் கோட்பாடுகளை ஏன் சமூக நடத்தையே ஆராய்கின்ற ஒரு செயலாகும்.

### மொழியின் தோற்றம்

மொழியின் தோற்றம் இதுதான்என்று அறுதி இட்டு உறுதியாக எதையும் கூறமுடியாது. மொழியின் தோற்றம் மனித இனத்தோற்றத்திற்கு முன்னரே விலங்குகளிடம் சமூக நடத்தை தொடங்கிய போதே தோன்றியது எனலாம். இவ்வகையில் எண்ணற்ற கோட்பாடுகள் மொழியின்தோற்றம் பற்றி விளக்கிக் கூறுவனவாய் இப்போது எழுந்துள்ளன.

மொழியின் தோற்றம்பற்றி ஆராயும் விருப்பம் பழங்காலத்திலும் இருந்தது எனக் கிரேக்க சரித்திர ஆராய்சியாளர் ஹெரடோடஸ் (Herodotus) கூறுகின்றார் எகிப்திய அரசன் ஒருவன் எகிப்திய மொழிதான் முதலில்தோன்றியதா என ஆராய

இரு சிறுவர்களைத் தனித்து ஒரு தீவில் அவர்கள் எந்தவித மொழியையும் கற்க இயலாத சூழ்நிலையில் வைத்திருந்தான் என்றும், ஒருசில ஆண்டுகளுக்குப் பிறகு அச் சிறுவர்களைக் காண அரசன் சென்றபோது அவர்கள் 'becas' எனக் கத்திக்கொண்டு அவனை நோக்கி ஓடி வந்தனர் என்றும் எகிப்திய மொழி இயல் வல்லுனர்கள் அந்தச் சப்தத்தை ஆராய்ந்து அது கிரேக்க மொழி அல்லவென்றும் சீரியன் (Phrygian) மொழி என்றும் அதற்கு ரொட்டி எனப் பொருள் என்றும், முடிவு செய்ததாக ஹெரடோடஸ் கூறுகின்றார். இதே போன்று மொகலாய மன்னர் அக்பர் என்பார் முதலில் தோன்றிய மதத்தை ஆராய குழந்தைகளைத் தனித்து ஓர் இடத்தில் வளர்த்ததாகவும் சில ஆண்டுகளுக்குப் பின்னர் பரிசோதித்துப் பார்த்தபோது அவர்கள் ஊமைகளாக மாறிவிட்டிருந்தனர் என்றும் சரித்திரத்தின் வழி நாம் காணுகின்றோம். இவைகளை நோக்குமிடத்து மொழியின் தோற்றம் பற்றி ஆராய்கின்ற ஓர் ஆவல் இன்றைய சமூக உளவியலாளருக்கு மட்டுமின்றி முற்காலத்தில் வாழ்ந்த அரசர்கள், செல்வந்தர்களிடமும் கூட இருந்தது என நாம் அறியலாம்.

மொழி என்பது ஒருவன் சமூகத்திடையே எதிர்ப்பார்க்கும் துலங்கல்களை ஏற்படுத்த உதவும் ஒரு கருவியாகும். இம் மொழியின் தோற்றம் குழந்தையிடமும், ஆதிகால மனிதனிடமும் சைகையாக முதலில் தோன்றியது. பின்னர் உணர்ச்சி வழி கருத்துப் பரிவர்த்தனை செய்ய முயன்ற மனிதன் சைகை வழி, தான் கூற வந்ததை எடுத்துக்காட்டி உடல் அசைவுகளின் மூலம் அதை விவரிக்கையில் கூடவே ஒலியையும் எழுப்பக் கற்றுணர்ந்தான். மிருகங்களைப் போன்றே ஆதிகால மனிதன் மகிழ்ச்சி அடைந்தபோது கத்தத் தொடங்கினான். ஆபத்தில் சிக்கிக் கொண்டபோதும், பயமடைந்த நேரங்களிலும் தன்னை மறந்து அலறத்தொடங்கினான். நாளடைவில் அந்தச் சப்தங்களும் ஒலிகளும், அந்தச் சூழ்நிலைப்பட்ட நிகழ்ச்சிகளை விளக்குவனவாய் அமைந்தன. பின்னர் சைகைகள் 'ஒலிகள் போன்றவற்றில் சில தனித்தன்மைகளைச் செயல் திறன்களைக் கண்டுணர்ந்து அவற்றைத் தமது தேவையுணர்ந்து பயன்படுத்தக் கற்றான். இதன் மூலம் தன்னுடன் ஒன்றி வாழும் சமூகத்துடன் இணைந்து வாழத் தன்னடத்தையையே மாற்றிக்கொள்ளவும் சீர்படுத்திச் செயல்படவும் ஆரம்பித்தான். இங்ஙனம் மொழியின் பயன் அறிந்து திறமையாக அதைப் பயன்படுத்தத் தொடங்கி மனிதன் சமூகமாக இணைந்தான். ஆகவே சமூகம் எனும் அமைப்பே மொழியின் தோற்றத்தில், அதன் வளர்ச்சியில், அதனின் சிறப்பு மிக்கத் திறமையின் விளைவில் எழுந்ததாகும். எனவேதான் சமூகம்

பற்றிப் பயில முற்பட்ட நாம் ஈண்டு மொழியினையும் நமது படிப்பின் ஓர் அங்கமாகக் கொண்டு பயிலுகின்றோம்.

மனித இனம், மூன்று வகைத்தான மொழியினை சமூகத்தைக் கட்டுப்படுத்தும் திறன்மிக்கக் கருவிகளாகக் கொண்டுள்ளது. அவையாவன : (1) வாய்ப்பேச்சு (2) குறிவரையீடுகள் (3) சைகைகள். மொழியின் தோற்றம் பற்றிக் கூறப்புகுந்த அறிஞர்களும் இம் மூன்று பிரிவுகளில்தான் மொழி தோன்றியது எனக் கூறுகின்றனர்.

**மொழியின் தோற்றம் பற்றிய கருத்துக் கோட்பாடுகள் (Thories of the origin of langauge)**

மொழியின் தோற்றம் பற்றி ஊகிக்கப் புகுந்தபோது அதன் வழி எண்ணற்ற கருத்துக் கோட்பாடுகள் தோன்றின ; எனினும் குறிப்பாக மூன்று கருத்துக் கோட்பாடுகளை நாம் முக்கியமானதாகக் கருதலாம். அவையாவன : சைகை கருத்துக் கோட்பாடு (gesture theory), வியப்பிடைச் சொல் கருத்துக் கோட்பாடு (introjection theory) ஒலி அனுகரண கருத்துக் கோட்பாடு (onomatopoetic theory) என்பனவாம்.

**சைகைக் கருத்துக் கோட்பாடு**

இதில் ஊண்ட் (Woundt) என்பார் மொழியின் தோற்றம் சைகளின் வழி தோன்றியது எனக் கூறுகின்றார். ஆதிகால மனிதன், மொழி அறியா நாட்டிடைப்பட்ட மனிதன், காது கேளாதவன், பேச இயலாதவன், சிறு குழந்தைகள் போன்றோர், சைகைகளின் வழியே தங்களின் உள்ளக்கிடக்கையை வெளி உலகிற்கு உணர்த்திக் காட்டுவதை எடுத்துக் காட்டி, அதன் செயல்பாட்டினை வலியுறுத்தி, மொழியென ஒன்று தோன்றுவதற்கு முன்னரே அடிப்படைத்தோற்றமாகச் சைகையே இருந்தது என ஊண்ட் வலியுறுத்துகின்றார். இப்போது நுண் அறிவுத் திறனில் குறைந்த முட்டாள்களைக் கூட நம்மால் சைகை வழி கட்டுப்படுத்த முடியும் என்பதும், காது கேளாதவரும் ஊமையும், பேசும்திறன் படைத்த மனிதர்களைப் போன்றே தங்களின் பரிவர்த்தனையை நடத்திக் கொள்வதை நாம் கண்ணுறுவதும், இவரின் கருத்துக் கோட்பாட்டின் சிறப்பினை நமக்கு நன்கு தெளிவுறுத்துகின்றன.

சிறு குழந்தை எடுத்த எடுப்பில் சைகைகளின் வழியே தன் தேவைகளை மற்றவர்களுக்கு உணர்த்துகின்றது. உடல் அசைவுகளோடு கையைக் காட்டுதல், முகத்தைச் சுழித்தல் போன்ற செய்கைகள் தங்களுக்கெனப் பொதுவாக ஒரு மொழி

யைக் கொண்டிராத உலகத்தினராலும் கூட அறிந்து கொள்ளப் படுகின்றன. கீழ் இன விலங்குகளிடத்தும் சைகைகளே மற்ற பிராணிகளின் நடத்தைகளைக் கட்டுப்படுத்தும் ஓர் உத்தியாக விளங்குகின்றது. இந்த நோக்கில் பார்த்தால் மொழி என்பது உணர்ச்சிகளின் வெளிப்பாடு ஆகும். ஏனெனில் சைகைகள் என்பது உணர்ச்சிகளை வெளிப்படுத்துதலின் வழி ஏற்பட்ட வெளி நடத்தைகளே. இங்ஙனமே சைகை போன்ற வெளி நடத்தைகள் உள்ள உணர்ச்சிகளின் தூண்டுதல்களில் ஏற்பட அதிலும் 'உள்ள உணர்ச்சிகள்' சரிவர வெளியிடப்படாததைக் கண்டு அதிருப்தியுற்று ஒலி வழியே முயன்று இறுதியில் மனிதன் மொழியினைக் கண்டு பிடித்தான். எனவே, உள்ள உணர்ச்சி களுக்கும் மொழிக்கும் இடையே—இடைப்பட்ட வளர்ச்சி நிலை யாகச் சைகைகளே செயல்பட்டன என ஊண்ட் கருதுகின்றார்.

சைகைகள் மூன்று வகைப்படுவன: (1) மன எழுச்சி வழிச் சைகைகள் (Emotional gestures) (2) செய்கை வழிச் சைகைகள் (Demonstrative gestures) (3) குறியீட்டுவழிச் சைகைகள் (Graphical gestures).

**மன எழுச்சி வழிச் சைகைகள்**

உடல் அசைவுகள் ஆதிகால வாசியின் இயற்கையான மன எழுச்சி வழிச் சைகைகளாகப் பயன்பட்டன. கோபத்தில் கண் சிவப்படைதல், கையை ஒரு பக்கமாக அசைத்து ஒரு காலைச் சட்டெனத் தரையில் உதைத்தல், ஒரு விரலைத் தனித்து உயர்த்திக் காட்டி முன்னும் பின்னுமாக அசைத்தல் போன்றவை வழிச் சைகைகள் ஆகும்.

மன எழுச்சிவழிச் சைகைகள் கருத்துப் பரிமாறுதல் தொடர்பில் ஒரு பக்கச் சார்பினுக்கே அதிகப் பயனுள்ளதாகப்படுகின்றது. அதாவது உணர்ச்சி வயப்பட்டோனின் முகத்தோற்றத்தைக் கண்டு எதிர்ப்பட்டவன், அதற்கு ஏற்பத் தன்னைச் சரிப்படுத்திக் கொள்கின்றான். இங்ஙனம் இருவர் கருத்துப் பரிமாற்றத்தில் ஒருவர் மூலம் மற்றவர் தூண்டப்படுகின்றார். இரண்டாவது நபர் மூலம் முதலாவது நபருக்குச் செய்திகள் ஏதும் இதன் வழிக் கடத்தப் படுவதில்லை. இருப்பினும் ஒரு புறத்து உள்ளக் கிடக்கைகளை தெள்ளத் தெளிய எடுத்துரைப்பதில் இந்த மன எழுச்சி வழிச் சைகைகள் நன்கு செயல்படுகின்றன. மொழியறிவு குறைந்த மிருகங்களிடம் கூட ஒன்றை ஒன்று கட்டுப்படுத்தவும் அடி பணிய வைக்கவும் மன எழுச்சிச் சைகைகளே பயன்படுகின்றன.

**செய்கைவழிச் சைகைகள்:** ஒருவன் ஒரு பொருளை நோக்கித் தன் விரலை நீட்டி அதன்வழி அவன் கருதும் நினைவுகளை—எண்

ணங்களைக் கருத்துக்களை பிறருக்குத் தெரிவிப்பது செய்கைவழிச் சைகைகள் ஆகும். அந்தப் பொருள் குறிப்பிட்ட ஒருவகையில் பயன்படுத்தப்படும்போது, அதனைச் சுட்டிக்காட்டி அப் பொருளின் பண்புகளை எடுத்துக்காட்டுதல் சிறப்பாக அமைகிறது. எடுத்துக்காட்டாக நல்லவன்போல் உள்ள ஒருவன் பிறர் அறியா வண்ணம் அடுத்தவனின் பொருளைத் திருடும்போது—சட்டென அவன் செய்கையைச் சுட்டிக் காட்டுவதின் வழிப் பேச இயலாத எண்ணற்ற கருத்துகளை நாம் செய்கைவழிச் சைகை மூலம் வெளியிடுகிறோம்.

செய்கை வழிச் சைகைகளில் பேசும் வார்த்தைகளுக்கு இடம் இல்லை என்று நாம் சொல்லுவதற்கு இல்லை. இருப்பினும் பேசும் மொழி தோன்றுவதற்கு முன்னர் நிகழ்ந்த இடைப்பட்ட வளர்ச்சி நிலைகளை இங்கு நாம் விளக்கப் புகுவதால் மொழி தோன்றுவதற்கு முனனரே செய்கை வழிச்—சைகைகள் மூலம் மனிதன் கருத்துப் பரிவர்த்தனை செய்து கொண்டான் எனக்காணுகின்றோம். எனவே, பேசும் வார்த்தைகள் ஓசை உச்சரிப்புகள், இக்காலத்தில் உள்ளது போன்று சிறப்பாக, அக் காலத்தில் இருந்திருக்காது எனினும், செய்கை வழிச் சைகைகாட்டிய மனிதன் ஓர் அளவிற் கேனும் ஒலி எழுப்பி, தன் உள்ளக் கிடக்கையை வெளிக்காட்டி இருக்கலாம் என ஊகிக்க இடம் உண்டு. எடுத்துக்காட்டாக ஒரு வீட்டின் மேலுள்ள பறவை ஒன்றினைப்பற்றிக் கருத்துப் பரிவர்த்தனை செய்ய விரும்பியவன் தன் எதிரே இருப்போருக்கு அவ் வீட்டைச் சுட்டிக்காட்டி, அவன் விளங்கிக்கொள்ளாதபோது, கூரை, சுவர், போன்ற அமைப்புகளைக் கைச் செயல்கள் மூலம் எடுத்துக்காட்டி, அதன் மேல் இருக்கும் பறவையினைக் குறிக்க, அப் பறவை எழுப்பும் ஒலியினைப்போன்றே ஒலி எழுப்பி அவனுக்கு உணர்த்தி இருக்கலாம்.

**குறிவரையீட்டுச் சைகைகள் :** பல வகைகளில் குறியீட்டுச் சைகைகள் குழந்தைகள் ஆதிகால மனிதன் போன்றவர்களின் மொழியினை விளக்குவதாக அமைகின்றது. எழுத்துக் குறியீடுகளின் வழி மனிதன் தன் கருத்தினை உணர்த்திய தொடக்கக் காலத்தில், ஒரு சிறு கரையும் மாவுக்கல்லை எடுத்துப் பெரிய கல்லில் இழுத்துப் பார்த்து அது ஓர் அடையாளத்தை ஏற்படுத்துவதை உணர்ந்து நாளடைவில் அப்படிச் செய்வதின் மூலமே தன் எண்ணக்கிடக்கையை வெளியிட ஒரு வழியினைக் கண்டான். இதன்வழியே குறிரையீட்டுச் சைகைகள் தோன்றி நாளடைவில் எழுத்து வடிவில் இயங்கும் ஒரு மொழி தோன்றியது.

மீடு (G.H. Mead) என்பார் மொழியின் வளர்ச்சிபற்றி விவாதிக்கும்பொழுது சைகைகளை ஆராயப்புகுந்து அதன்வழி நாய்ச்

சண்டை ஒன்றை ஓர் உதாரணமாக எடுத்துக்கொண்டு காட்டுகின்றார். நாய்ச்சண்டையின்போது முதல் நாய் ஈடுபடும் நடத்தை மற்ற நாயின் நடத்தையைப் பொறுத்திருக்கின்றது. தன்னைத் தாக்கவரும் நாயின் செய்கைகளை உடல் அசைவுகளைக் கண்ணுற்ற முதல் நாய் அதற்கேற்பத் தன் நடத்தையில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்திக்கொண்டு தன்னைத் தயாராக்கிக்கொள்ளுகின்றது. இத்தகைய முதல் நாயின் மாற்றம்–அசைவுகள், செய்கைகள் அடுத்த நாயிடம் ஒரு மாற்றத்தை, ஏற்படுத்துகின்றது. இச் செய்கை மாற்றங்கள் உண்மையான சண்டை தொடங்குவதற்கு முன், சில வினாடிகளே நீடிக்கின்றன. இருப்பினும் இந்த சைகைகள் மற்ற ஒரு மிருகத்தின் நடத்தையில் ஒரு குறிப்பிட்ட மாற்றத்தை விளைவிக்கும் அடையாளங்களாக அமைகின்றன. இங்ஙனம் மொழியின் தோற்றம் பற்றிச் சைகைக் கருத்துக் கோட்பாடு விளக்குகின்றது.

சைகைமொழி சாகுமா ?

இன்று மொழி எவ்வளவோ வகைளில் வளர்ந்திருந்தாலும், சைகையை விட்டுத் தனித்து நிற்க இயலவில்லை. இன்றும் சைகைகள் மொழியாகப் பயன்பட்டு வருகின்றன. பச்சைக் கொடியும் சிவப்புக் கொடியும் காட்டுவது, புகைவண்டி இயக்குபவரிடம் காணப்படுகிறதன்றோ? கருப்புக்கொடி பிடித்தல் கருப்புத் துணி அணிதல்–இவை அடையாளங்கள்தாமே. மேலும் புறப்படும்போது ‘டாடா’ எனக் கையை ஆட்டுவது என்ன? வளர்ந்த அமெரிக்காவில், வழியில் செல்வோன் கையிலுள்ள பெருவிரலை உயர்த்திக்காட்டினால் என்னைத் தாங்கள் தங்கள் காரில் ஏற்றிச் செல்லுங்கள் எனக் கேட்பதாகப் பொருள் கொள்கின்றனரே? பள்ளிச் சிறுர்கள் தண்ணீருக்குப் பெரு விரலை உயர்த்துவதும், கழிவுப் பொருள் அகற்ற ஒரு விரல், இரு விரல்களைக்காட்டுவதும் சைகைகள்தாமே. ஏன், காதலர் கண்ணில் சைகைகள் காட்டுவதை வள்ளுவர் காலந்தொட்டு இன்றுவரை காண்கின்றோமன்றோ? எனவே, பேச்சு மொழி எந்த அளவு வளர்ந்தாலும், சைகை மொழி உலகில் இருந்தே தீரும் அன்றோ?

வியப்பிடைச் சொல் கருத்துக்கோட்பாடு :

இக்கருத்துக்கோட்பாடு மனிதன் விலங்கினின்று அதிகமாக வேறுபடாத வகையில் வாழ்ந்த காலத்தில், அக்கால மனிதனிடம் எழுந்த ஒலி உணர்ச்சி வயப்பட்ட கத்துதல்கள், அவர்கள் தங்களை அறியாது பயத்தில் அல்லது மகிழ்ச்சியில் எழுப்பிய ஒலிகள் போன்றவற்றை மொழி வளர்ச்சியின் ஆரம்பகால நிலைகளாக எடுத்துக் கூறுகின்றது. ஒலியின் தொனிக்கும், இவ்

வியப்பிடை ஒலிகளுக்கும், இவ்வகையில் ஒலி எழுப்பும் மற்ற நபர்களுக்கும் இடையே நிறைய வேறுபாடுகள் இருக்கலாம். உதாரணமாக ஒருவனின் குரல் கட்டைத் தொனியிலும் மற்றவர் களின் குரல் கீச்சுக்குரலும் கம்மியத் தொனியிலும் அல்லது அதிக சப்தம் எழுப்பும் தொனியிலும் இருப்பதைக் கொள்ளலாம். 'ஆ' என்ற ஒலியினையும் 'ஐயோ' என்ற ஒலியினையும் எல்லோரும் ஒரே வகையாக வெளியிட்டிருக்க இயலாது. வேறுபாடுகள் இவற்றிடையே இருந்திருக்கலாமெனினும் வியப்பிடைச் சொல் வழி அவர்கள் தங்களின் நிலையினை, மனப்போக்கினை எடுத்து விளம்பி இருக்க முடியும் என நம்புவதற்குத் தடை ஏதும் இல்லை.

ஒலி அனுகரணக் கருத்துக் கோட்பாடு

மொழியின் தோற்றம் பற்றிக் கூறும் கருத்துக் கோட்பாடு களில் மிகவும் சிறந்ததாக, ஜெர்மன் தத்துவ அறிஞர் ஹெர்தர் (Herder) என்பாரின் ஒலி அனுகரண (onomatopoetic theory) கருத்துக் கோட்பாட்டினைக் கூறலாம். இக் கருத்துக் கோட் பாட்டின்படி மனிதன் இயற்கைச் சப்தங்களைப் போலியாகப் பாவித்துக் கத்தியபோது அவை வார்த்தைகளாயின என ஹெர்டர் கருதுகின்றார். இதன் வழி பாம்பின் சீற்றத்தைக் குறிக்கையில் 'இஸ்ஸ்' என்றும் பெரும் பொருள் ஒன்று மேலே இருந்து விழும்போது 'தொப்' என்றும், முகம் பார்க்கும் கண் ணாடி கீழே விழுந்தபொழுது 'பளார்' என்றும் காய்ந்த குச்சியை ஒடித்தபோது 'பட்' என்றும் சப்தம் எழுந்ததாக இப்போதும் நாம் கூறுகின்றோம். இதன் வழியே மொழியும் எழுந்தது என ஹெர்டர் கூறுகின்றார்.

மொழியின் தோற்றம்பற்றிக் குறிப்பிடும் மற்றொரு கருத்துக் கோட்பாடு பேசட் (Paget) என்பாரால் எடுத்தாளப்படுகின்றது. சைகைவழி ஏற்பட்ட தொடர்புகள் பின்னால் வாய்ப் பேச்சாக வளர்ந்து ஒரு மொழி எனத் தோன்றலாயிற்று என்று கருதப்படு கின்றது. சைகைகள் வளர்ந்துவிட்டபோது மனிதன் தன் இரு கைகளையும் பயன்படுத்திக் கொண்டிருக்கையில் மற்றவருடன் தொடர்புகொள்ள நேரிட அங்கு ஒலி எழுப்பிப் பேசத் தொடங் கினான் என்றும், இருட்டான சூழ்நிலைகளில் சைகைகள் பயனற் றுப்போக, இன்னும் ஒருசில இடங்களில் ஒலி நன்கு பயன்பட, நாளடைவில் மொழி தோன்றலாயிற்று என்றும் இவர் கருது கின்றார்.

பாட்டு மொழிக் கருத்துக் கோட்பாடு (The Lyric theory)

ஆட்டோ ஜெஸ்பெர்சன் (Otto Jesperson) என்பவர் இக் கொள்கையைக் கண்டவராவார். தொடக்க நிலையில் மக்கள் ஒரு

காரணமும் இல்லாமல் மழலை ஒலிகளை ஒலிக்கும் குழந்தைகளைப் போல் பேசி வந்தார்கள். அப்போது அவை கருத்தை உணர்த்த வில்லை. வெறும் பொழுதுபோக்கு விளையாட்டே ஆவன. பொழுதுபோக்கும் இன்பப் பாட்டாக இருந்தது. அதனைப் பாட்டு எனலாம். ஏனெனில் மொழியின் தோற்றம் இன்பமான விளையாட்டுப் பகுதியில் காணப்படுவதே அன்றி, கவலையான வாழ்வுப் பகுதியும் காண இயலாது. அறிவை விட, உணர்வு கொண்ட நிலையில், இன்பமாய் விளையாடிய நிலையில் மொழி பிறந்தது. இன்ப ஆடல்களில் சிறந்தது காதல் விளையாட்டு கவலையற்ற உள்ளத்தில் பாட்டு பிறக்கும். இன்றும் காட்டு மிராண்டிகள் வாழ்க்கையில் இதனைக் காணலாம். முதற்காலத்து மக்கள் இவ் வாறு ஆடுகின்ற நிலையிலேயே மொழியைத் தோற்றுவித்தார்கள். அவர்கள் பாட்டு முதலில் வெற்றொலிகளாக இருந்து, நாளடைவில், படிப்படியே ஒலிகள் பொருளுணர்த்தத் தொடங்கின. இவ்வாறு கூறிச் செல்கிறார் ஆட்டோ ஜெஸ்பர்சன். இதனைப் பாட்டு மொழிக்கொள்கையென மொழி நூலார் அழைக்கின்றனர்.

### சிந்தனை—உள்பேச்சு—மொழி

மொழிக்கும் சிந்தனைக்கும் இடையே உள்ள உண்மையான தொடர்புபற்றியப் பிரச்சினை உளவியலாளர்களால் அடிக்கடி விவாதிக்கப்படுகின்றது. வாட்சனின் நடத்தைக் கொள்கை யினர் (The behaviorist-Watson) மொழியும் சிந்தனையும் ஒன்று என்றே கருதுகின்றனர். இவர்களால், சிந்திப்பது ஒலி எழுப்பா வண்ணம் உள்ளாகப் பேசுவது எனக் கருதப்படுகின்றது. இங் ஙனமே மாக்ஸ் முல்லர் (Maxmullar) என்பார் மொழியும் சிந்தனை யும் மனிதனிடத்து ஒரே சமயத்தில் தோன்றுகிறதென்றும் ஒன் றில்லாது மற்றொன்று தோன்றவியலாது என்றும் கூறுகின்றார். விலங்குகள் மனிதனைப் போன்று மொழி பேசுவது இல்லை என்பதால் அவற்றால் சிந்திக்க முடிவது இல்லை என்றும், சிந்திக்க முடியாததால் பேசமுடிவது இல்லை என்றும் அவர் விளக்குகின்றார். எனினும் பிரச்சினை அவ்வளவு எளிதில்லை. சிந்தனையும் மொழியும் ஒன்றல்ல என்றாலும் அவை மிகவும் நெருக்கமாகத் தொடர்பு கொண்டுள்ளன என்பதை யாரும் மறுக்க இயலாது. சிந்தித்தல் என்பது உள் பேச்சு என்று விவரிக்கும் அளவிற்கு ஒன்றுக்கு ஒன்று அவை தொடர்பு கொண்டுள்ளன. உள்ளாக விளையும் இந்த உள் பேச்சினை அறிய நாம் தீவிரமாகச் சிந்திக்கும்போது நமது விரலைத் தொண்டையின் மேல் வைத்தால் அங்கே உள்ள தசைகளும் பகுதிகளும் சுருங்குவதையும், விரி வடைவதையும், மாறுபாடு அடைவதையும், இன்னும் இவை போன்ற சலனங்கள் ஏற்படுவதையும் காணலாம். ஆனால்

சிந்தித்தல் என்பது உள் பேச்சு என்று மட்டுமோ உள் பேச்சுக்கு அப்பாற்பட்டது அன்று என்றோ கணித்துவிட இயலாத நிலையில் இருக்கின்றோம். அதற்குரிய காரணங்களாவன.

1. நாம் ஒருசில சொற்பொருள்களை எண்ண அளவில் நமது மூளையில் வைத்து இருக்கலாம். ஆனால் அவை மொழியில் எடுத்துச் சொல்லத் தேவையான சொல் அம் மொழியில் இல்லாததை உணர்ந்து தடுமாறலாம். மொழி என்பது உள் பேச்சு எனக் கருதினால் இந்நிலை ஏற்படாது. மொழியில் சொல் அற்ற ஓர் எண்ணமோ கருத்தோ நம் மூளையில் இருக்காது.

2. கணிதத்தில் $A = B$ எனில் $B = A$ என்பதாகும். இந்த அடிப்படைத் தத்துவத்தில் சிந்தனை = உள் பேச்சு என்றால் உள் பேச்சு = சிந்தனை என்ற நியதியைத் தரவேண்டும். ஆனால் இது உண்மையாக அமைவது இல்லை. நமக்குப் பழக்கமான மனப் பாடப் பகுதிகளை அப் பகுதிகளின் பொருள் என்னவெனத் தெரிந்து கொள்ளாதபோதும், வேறு ஒன்றினைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டு இருக்கும்போதும் ஒப்புவிக்க இயலும். இதிலிருந்து உள் பேச்சு சிந்தனையிலிருந்து மாறுபட்டது என்றும், அல்லது வேறு ஒன்றினைப் பற்றிய சிந்தனையில் இருக்கும்போதும் கூட நிகழக்கூடியது என்றும் அறியலாம்.

3. சிந்தனை என்பது ஏதாவது ஒரு பொருளைப் பற்றியது, சொற்களுக்கு இடையே உள்ள தொடர்பினைப் பற்றியது—எண்ணங்கள் கருத்துருவங்கள் போன்ற மொழியின் உள் பேச்சின் விளைவுகளை, முடிவுகளைத் தனது சிந்தனைக்கு ஏற்ற அடிப்படைப் பொருளாகக் கொள்வது—என்பதாகும். இங்கே சிந்தனை, 'மொழி உள் பேச்சு' இவற்றை இயக்கும் இயக்குநராக, இவற்றின் தரங்களைச் செயல்பாடுகளை நிர்ணயிக்கும் அதிகாரியாகச் செயல் படுகின்றது.

4. மிக உயர்ந்த நிலையான சிந்தனையில் மொழிக்கோ உள் பேச்சிற்கோ இடம் இல்லை. ஆங்கே வரைபட வடிவில், உருவ அமைப்பில், வெறும் மனப் பகுப்புக்களே அச் சிந்தனைக்கேற்ற கருப்பொருள்களாகப் பயன்படுத்தப்படுகின்றன.

5. அமைதியாகப் படிக்கின்றபோது ஒரு பகுதியை மிகவும் விரைவில், தேவைப்படுகின்ற நேரத்தில் குறைந்த அளவில், ஒவ்வொரு சொல்லையும் உச்சரிக்க வேண்டிய அவசியம் இல்லாமலேயே, சொற்களைத் தொட்டுத் தாண்டிக்கொண்டு, எளிதில் முடிக்க இயலும். இங்ஙனம் சிந்தனை என்பது உள்பேச்சு எனக் கொண்டால் வெளிப்படையாக அச் சொற்களை ஒலி வடிவில்

படிக்கத் தேவைப்படும் முழு நேரமே, அவற்றை மௌனமாகப் படிக்கும்போதும் செலவழிக்கப்படும். இந்நேரம் அரைப் பகுதி யாகவோ அல்லது கால் பகுதியாகவோ குறைவதில் இருந்தும், நாம் மௌனமாக வாசிக்கின்றபோது ஒவ்வொரு சொல்லையும் உச்சரிக்காமலேயே தொட்டுத் தாண்டிக்கொண்டு செல்வதில் இருந்தும், மொழி என்பது உள் பேச்சு அன்று, உள் பேச்சு மொழியைவிட மிகவிரைவில் குறைந்த நேரத்தில் நிகழக் கூடியது என்றும் உணரலாம்.

6. சிந்தனையில் ஈடுபட்டிருக்கும்போது, கூடவே அச் சிந்தனையை உடனுக்குடன் வெளியிடத் தேவையான மொழியின் சொற்களை அச் சிந்தனைக்கு முன்னர் அடுக்கிவைத்துக்கொண்டும் தேவையான சொல் கிட்டாதபோது அவ் விடைவெளியைச் சைகை வழி பூர்த்தி செய்தும், நாம் தொடர்ந்து சிந்திக்கின்றோம். இதிலிருந்து சிந்தனை, 'மொழி, உள் பேச்சு' என்பனவற்றோடு ஒன்றாக விளையக்கூடியது எனினும், சிந்தனை, இவற்றிலிருந்து அப்பாற்பட்டது என்பதையும் சிந்தித்த பின்னரே மொழியும் உள் பேச்சும் செயல்படுகின்றன என்றும் உணரலாம்.

இவற்றினின்று மொழி, சிந்தனை, உள் பேச்சு எனும் இவை மூன்றும் ஒன்றுக்கு ஒன்று நெருங்கிய தொடர்பு கொண் டுள்ளன. எனினும் ஒன்றுதான் மற்றொன்று என்பது இல்லை என்றும், ஒன்று மற்றதிற்கு அப்பாற்பட்டது என்றும் நாம் தெரிந்து கொள்ளலாம்.

### தனியவனும் மொழியும்

**தனியவனிடம் மொழி வளர்ச்சி:** பிறந்த குழந்தை, நரம்பு களும் தசைகளும் குரல்வளையும் முதிர்ச்சி அடையப்பெற்றதும் பேசத் தொடங்குகின்றது. முதலில் ஆ, உ, ம், ந் ன், ங், க் எனக் குழந்தை மாறி மாறி ஒலியெழுப்பத் தொடங்குகிறது. மூன்றரை வயதுவரை இங்ஙனம் பேசும் மொழியினை நாம் மழலை எனக் கூறுகிறோம். இதனைத் தொடர்ந்தே தாதா, பாபா மாமா, ம்மா, க்கா, ங்ஙா, ந்நா எனத் தனித்தனி மழலைகளைக் குழந்தை பேசத் தொடங்குகிறது. இவ்வாறு குழந்தை, தனக்கு உள்ளாகவே பேசித் தானே கேட்டுக்கொள்ளும்போது தன் வாய் அசைவால் ஒருசில ஒலி மாறுதல்கள் ஏற்படுவதையும் ஒலிகளுக்குள் உள்ள மாறுபாடுகளையும் வேறுபாடுகளையும் ஓரளவுக்கு அறிந்து கொள் கின்றது. இங்ஙனம் குழந்தை ஓரசைச் சொற்களை உச்சரித்துத் தனக்குள்ளாகவே அதன் வேறுபாடுகளை ஓரளவிற்கு உணரும் நிலை, மொழியின் வளர் நிலையில் முதல் கட்டமாகக் கருதப்படு கின்றது.

இரண்டாவது நிலையில் முதல் நிலையில் தேறிய குழந்தை வெளி உலகுடன் தொடர்பு கொள்ளுகின்றது. காகா, எனத் தானே ஒலி எழுப்பி, அவ்வொலியைப் புரிந்துகொண்ட குழந்தையிடம் தாயோ, தந்தையோ, உறவினரோ அக் குழந்தைக்கு எதிரே உள்ள காகத்தைக் காட்டி, காகா எனக் கூறுகின்றனர். இப்பொழுது அக் குழந்தை காகா எனும் சொல் பிறரால் உச்சரிக்கப்படுவதையும் அவ் ஒலியோடு கூட ஒரு பொருள் தனக்குக் காட்டப்படுவதையும் தொடர்புபடுத்திக் கொள்ளுகின்றது. இங்ஙனம் காகா என அக் குழந்தை அப் பொருளைக் காணும்போதெல்லாம் ஒலி எழுப்பி அப் பொருளோடு ஓர் ஒலியைத் தொடர்புபடுத்தி அறிந்துகொள்ளுகிறது. இந் நிலை இரண்டாம் மூன்றும் நிலைகளில் அமைகின்றது. இங்ஙனம் இரண்டாவது நிலை பிறர் கூறக் கூற அவ் ஒலிகளைத் திரும்பத் திரும்பக் கூறும் கிளிப் பேச்சு நிலையாகவும், மூன்றுவது நிலை, அப் பேச்சோடு ஒரு பொருளைத் தொடர்புபடுத்திக் கூறப்படுவதை அறியும் நிலையாகவும் அமைகின்றது. காகா எனக் கூறிய சொற்களைக் கேட்ட குழந்தை திரும்பத் திரும்ப அச் சொற்களைக் கூறித் தானே அச் சொல்லின் ஒலியினை உணரும் இரண்டாவது நிலை, காகா என ஒரு சொல் ஒலிக்கப்படும்போது அச் சொல்லோடு தொடர்பு கொண்டு ஒருபொருளும் காட்டப்படுவதை உணரும் மூன்றுவது நிலையாக மாறுகின்றது

நான்காவது நிலை வளர்ந்துவிட்ட மனித நிலையை நமக்கு உணர்த்துகின்றது. இந் நிலையில் காகத்தைக் கண்ட குழந்தை காகா எனத் தன்னை அறியாதே ஒலி எழுப்பக் கற்றுக் கட்டுப்படுத்தப்படுகிறது. இங்ஙனமே அது பிற பொருள்களின் பெயரையும் அப் பெயருக்கு உரித்தான ஒலியையும் கற்றுக் கொண்டு ஒரு மொழியைக் கற்கின்றது.

இவ்வாறு குழந்தைக்கு மொழி வளர்ச்சித் தோன்றும் நான்கு கட்டங்களை இன்னும் சிறப்பாக ஐந்து நிலைகளில் நம்மால் பகுக்க இயலும். (1) மொழிக்கு முந்தையது பிறந்த குழந்தையின் அழு நிலை. (2) குழந்தை தவழ்ந்து நடை பயின்று மழலை பேசும் நிலை. (3) சிறு குழந்தை மற்றவர்களின் ஒலி கேட்டு அவற்றைத் திரும்பத் திரும்பக் கூறும் ஒலிப்பாவனை நிலை. (4) குழந்தை ஒருசில வார்த்தைகளை அறிந்து கொண்டு ஆனால் அதே நேரத்தில் அவற்றைப் பயன்படுத்தத் தெரியாத நிலை. (5) கற்ற வார்த்தைகளைத் தெளிவாகப் பயன்படுத்தும் இறுதி நிலை.

பெரும்பாலான சமூக உளவியலாளர்கள் இந்த நிலைகளில் மொழி வளர்ச்சியினைப் பற்றி ஆராய்வதில் ஓரளவே கவனம்

செலுத்துகின்றனர். மாறாகக் குழந்தை சொற்றொடர்களைப் பயன்படுத்தும் முறையினை அவர்கள் ஆழமாக ஆராய்கின்றனர். குழந்தை தனித்தனிச் சொற்களை முதலில் கற்றுப் பின்னர் அவற்றை ஒரு பொருளில் சொற்றொடராக இணைக்கின்றது என்று பொதுவாக நம்பப்பட்டது. ஒருசில ஆராய்ச்சியாளர்கள் தங்கள் குழந்தைகள் தாங்கள் பேசும் வார்த்தைகளைத் திரும்பத் திரும்பக் கூறி அவற்றைக்கொண்டு ஒரு வாக்கியத்தை அமைத்துக்கொள்ள முயலுவதை ஆராய்ந்து இந்த நம்பிக்கையைக் கைவிட்டனர். எந்தக் குழந்தையுமே எடுத்த எடுப்பில் பெரும் பெரும் சொற்களைக் கொண்ட சொற்றொடர்களை எடுத்துப் பேசி விடுவதில்லை. அம்மா என்று கூறும் சொல்லில் அம்மா வா, அம்மா போகிறாள், அம்மா பசிக்கிறது. அம்மா பயமாக இருக்கின்றது என்ற எண்ணற்ற பொருள்களைக் குழந்தை காணுகின்றது. அதேபோன்று பந்து என்ற வார்த்தை, 'தட்டினால் எழும் பொருளை' மட்டுமின்றி அதோடு தொடர்புடைய எண்ணற்ற பொருள்களைக் குறிக்கின்றது. ஒரு குழந்தை ஒரு சொல்லில் எந்தப் பொருளைக் குறிக்கின்றது என்பதை அறிய, அது என்ன செய்கின்றது என்பதைக் காணவேண்டும் என்று டெ, லாகுணா (De Laguna) என்பார் கூறுகின்றார். இவ்வாறு குழந்தையிடம் தோன்றும் ஆரம்ப மொழி வளர்ச்சி அவ்வளவு தெளிவாகப் பொருள் கற்பிக்கமுடியாததாக இருக்கின்றது.

குழந்தை தனித்தனி அசைகளாக அன்றிச் சிறு சிறு சொற்களாகவே பேசத்தொடங்குகின்றது. மற்றவர்களோடு கலக்க நேரிடும்போது சிறு குழந்தை தனது சொற்கள் பிறரால் அறியப்பட முடியாததை அறிந்து அவற்றைத் தவிர்த்துப் பிறரால் அறிந்துகொள்ள இயலும் சொற்களைக் கண்டு பயன்படுத்தத் தொடங்குகின்றது. இவ்வாறு குழந்தை பிறரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட மொழியினைக் கற்றுக்கொள்கிறது.

### தனியவன் வாழ்க்கையும் மொழியும்

தனித்துப் பிறந்த ஒரு சிறு குழந்தை தான் பிறந்துள்ள சமூகத்தில் ஓர் உறுப்பினனாக மாற, அதன் மூலம் தன்னைச் சமூகப்படுத்திக்கொள்ள, அவன் முதலில் மொழியினை கற்கவேண்டியவனாக இருக்கிறான். படிப்படியாகவே அவன் பல்வேறு நிலைகளில் இயங்கும் பல்வேறு சொல்லினையும் அவற்றின் பல்வேறு வகைப்பட்ட பயன்களையும் செயல் திறன்களையும் அறிகின்றான். பின்னர் அவற்றைக் கையாண்டு தான் எதிர்பார்க்கும் ஒரு மாற்றத்தை, எதிர விளைவுகளைத் தன்னைச் சார்ந்த சமூகத்தில் நிகழ்த்துகின்றான். அதன்வழி அவன் அச் சமூகத்தைக் கட்டுப்படுத்தி

அவனது ஆளுமைக்குக் கீழ்க்கொண்டு வந்தோ அல்லது தன்னை அச் சமூகத்தின் கட்டுப் பாட்டிற்கு உட்படுத்தியோ, அவ்வகையில் அச்சமூகத்துடன் இணைந்து ஒன்றி, ஒரு சமூக மனிதனாகவே வாழக் கற்றுத் தேறுகின்றான். இதற்கு இடையில் அவனிடம் எண்ணற்ற தவறுகளும் அம் மொழியைக் கற்பதில் எண்ணற்ற இடர்ப்பாடுகளும் ஏற்படுகின்றன. இங்ஙனம் ஒரு தனிமனிதன் குழந்தைப் பருவம் தொடங்கி இளையோர் பருவத்தில் சமூகத்தின் ஓர் அங்கமாக வளர்ச்சி அடைந்து மனிதப் பருவத்தில் சமூகத்தை இயக்கும் தலைவனாக மாறுகின்றான்.

மேலும், தனியவன் சமூகத்துலங்கல்களின் வசப்பட்டு வளர்ந்து வரும்பொழுது அவனது உள் தூண்டுதல்கள், பழக்க வழக்கங்கள், அவன் எடுத்துக்கொண்ட குறிக்கோள்கள், நோக்கங்கள் முதலியவற்றை அடைவதில் அவன் பெற்றுள்ள அனுபவ அறிவுகள்-இவற்றினிடையே அவனது மொழியும், அதை அவன் பயன்படுத்தும் திறனும், ஒருசில சொற்களைத் தேர்ந்தெடுத்த வகைகளில் பயன்படுத்தும் ஆற்றலும், வளர்ந்து வருகின்றன. இங்ஙனம் தனியவனின் அறிவு வளர்ச்சியோடு மொழியும் வளர்ச்சி அடைகின்றது. மொழிவழி தனியவன் தனது பண்பாட்டு அமைப்பினைக் கற்றுக்கொண்டு பின்னர் அச் சமூகத்தின் பண்பாடுகளை, அறிவு வளர்ச்சி முதிர்ச்சிகளில் விளையும் படைப்புகளை, மொழி வழியே உலகிற்கு நல்கி, தனது சமூகத்தின் மேம்பாட்டினைப் பிறருக்கு எடுத்து உணர்த்துகின்றான். இங்ஙனம் மொழி சமூகப்படுத்தலுக்குக் கருவியாகவும் அதே நேரத்தில் ஒரு சமூகத்தின் பண்பாடு, பழக்கவழக்கங்களைத் தெரிந்துகொள்ள உதவும் கருவியாகவும் செயலாற்றுகின்றது. இத் தொடர்பு தனியவனின் இளம் பருவத்திலேயே தொடங்குகின்றது. மொழிவழியே சமூகப் படுத்துதலில் ஆட்பட்ட தனியவன் மொழிவழியே தனது பண்பாட்டையும் தனது சமூகப் பண்பாட்டு அமைப்புகளையும் கற்றுத் தேறுகின்றான். பின்னர் அம் மொழி வழியே தனது சமூகத்தின் சிறப்பியல்புகளைப் பற்றிப் பிறருக்கு எடுத்து உணர்த்துகின்றான்.

### மொழியும் சமூகமும்

மனிதனின் குரல் ஒரு குறிப்பிட்ட தூரம் வரைதான் தன் பணியை ஆற்றவல்லதாக இருக்கின்றது. ஆனால், மொழியின் வழி அதிகாரத்தில் உள்ளோர் வெகு தூரத்தில் உள்ள, தன் அதிகாரத்திற்கு உட்பட்டோருக்குக் கூடக் கட்டளையிட முடிகிறது. இங்ஙனம் சமூகத்தைக் கட்டுபடுத்தும் முக்கிய காரணிகளில் முதன்மை வாய்ந்தது மொழியே. திறன்மிக்க முறையில்

மொழியைப் பயன்படுத்திச் செயல்படுவது ஒரு சிறந்த கலை. இந்தக் கலையில் தேர்ச்சி பெற்றுள்ள நிலையிலிருந்து ஒரு சமூகத் தின் மேம்பாட்டினையும் உன்னத நிலையையும் பெருமைகளையும் நாம் அறிய இயலும்.

எடுத்துக்காட்டாக, போஸ் என்பார் அமெரிக்க இந்திய மொழியெனும் புத்தகத்தில் (Boss hand book of American Indian languages) எஸ்கிமோக்கள் பனிக்கு அதன் பல்வேறு நிலைகளில், பல்வேறு பெயர்களை அவர்களது மொழியில் கொண்டுள்ளனர் எனக் காட்டுகின்றார். நாம் சாதாரணமாகப் பனி என ஒரே சொல் லில் கூறுகின்ற ஒரு சொல்லுக்கு எஸ்கிமோக்கள் 'தரை மீது இருக்கும் பனி', 'கட்டிப் பனி', 'விழுகின்ற பனி', 'தூறுகின்ற பனி,' என்ற பல்வேறு பொருள்களில் பெயர்ச்சொல்லாகவே, பல்வேறு சொற்களை அவர்களின் மொழியில் கையாளுகின்றனர் என அவர் கூறுகின்றார். இதன் வழி அவர்களின் மொழியில் பனி என்ற சொல்லினை அதன் பல்வேறு நிலைகளில் உள்ள பொருளினை நாம் எடுத்து ஆராய்ந்தால் எஸ்கிமோக்கள் பனி என்ற ஒன்றினைப்பற்றி அதன் பல்வேறு நிலைகளில் பெற்றுள்ள தனித்தனி அறிவினைப் பற்றியும், பல்வேறு நிலைகளில் பனியின் செயல்பாடுகள் குணாதிசயங்களைப் பற்றி அவர்கள் கொண்டுள்ள தேர்ந்த அனுபவங்களைப்பற்றியும், நாம் அறிதல் இயலும். இதன்வழி 'பனி' எனும் ஒரு சொல்லினைக் கொண்டு 'எஸ்கி மோக்கள்' சமூகத்தின் தராதரத்தை அறிவு வளர்ச்சியை, நம்மால் காண இயலுகின்றது. இங்ஙனமே டூப் (W.L. Doob) என்பார் இதனைப்பற்றி ஆராய்ந்து நீண்ட சொற்களுடன் வழங்கும் மொழி அம் மொழி உபயோகிப்போரின் கூரிய தெளிந்த, பல்வேறு நிலை களில் ஒரு பொருள்களை அலசி ஆராய்கின்ற அறிவினைக் காட்டு கின்றது என்று கூறுகின்றார். இதனை நோக்குமிடத்து மொழி யில் தேர்ச்சி பெற்றுள்ள நிலையினைக்கொண்டு அல்லது பல்வேறு நிலைகளில் பயன்படுத்தக் கூடிய அம் மொழியின் திறன் கண்டு, அம் மொழியை உபயோகிக்கும் சமுகத்தினரின் வாழ்க்கையையும் தராதரத்தையும் பண்பாட்டு வளர்ச்சியையும் நாம் எளிதில் கணிக்க இயலும் என அறியலாம். எனவே, ஒரு மொழியின் வளர்ச்சி அச் சமூகத்தின் வளர்ச்சியை எடுத்துக் காட்டுவதாக அமைகின்றது.

### மொழியின் செயல்கள் (Functions of Languages)

மனித சமூகமே ஒருவகைக் கருத்துப் பரிவர்த்தனை என்று குறிப்பிடுகிறார் பான்னர் (Bonner). சமூகம் கருத்துப் பரிவர்த்தனை யில்தான் இருக்கிறது என்கிறார் டூவே (Dewey). கருத்துப் பரி வர்த்தனை மூலமாகவே நாகரிக உலகு முழுவதும் உருவாக்கப்

பட்டுள்ளது என்றார் சாபிர் (Sopir). இவ்வறிஞர்களின் கூற்று களைச் சிந்தித்து ஆராய்ந்தால் மொழியின் செயல்பாடுகளை நாம் நன்கு அறிதல் இயலும். மனித சமூகம் என்பது என்ன? விலங்குகளின் சமூகத்திற்கும் மனித சமூகத்திற்கும் இடையே என்ன வேறுபாடு? மொழி என ஒன்றே இல்லையெனில் இக் கேள்விகளுக்குப் பதில் என்ன? மொழியின் செயல்கள் இங்கே தான் அடங்கி இருக்கின்றன.

மொழி சமூக இயல்பினை அடிப்படையாகக் கொண்டது. மொழி, விலங்குச் சைகைகளினின்று குழுக்களில் உள்ள மக்களின் தேவைகளை நிறைவேற்றுவதற்காகச் சிறிது சிறிதாக வளர்ந்திருக்கின்றது. பெரும்பாலான தனியவனது தேவைகள் குழு வாழ்வினால் நிறைவேற்றக் கூடியவை. ஆனால் குழுவில் வாழும் தனியவர்களுக்கிடையே உட்தொடர்பிற்கு ஒரு வழி இல்லையெனில் அவன் தேவைகள் நிறைவேற்றப்படமாட்டா. மொழி இதற்கான ஒரு வழியாக, தனியவனின் தேவைகள் நிறை வேற்றப்பட வகை செய்யும் ஒரு முக்கிய கருவியாக அமை கின்றது. தனியவர்களைச் சமூகக் குழுவுடன் ஒன்றுபடப் பிணைக்கும் திறனாலேயே மொழி எழுந்தது என்றும் தனியவர் களைத் தொடர்ந்து குழுவுடன் வாழவைப்பதினாலேயே அது காக்கப்படுகின்றது என்றும் சமூக உளவியலாரில் ஒரு சாரார் கருதுகின்றார்கள்.

மொழி இருவகைகளில் சமூக முக்கியத்துவம் பெற்றிருக் கின்றது. கருத்துகளைப் பரிமாறிக்கொள்ளவும், பிறரைத் தூண்டுவதற்கும் இது வழி செய்கின்றது. ஆசிரியர், நூல்கள் போன்றவற்றின் மூலம் பலவகைக் கருத்துகளும் எண்ணங்களும் பரப்பப்படுகின்றன. இவை மனிதனின் அறிவாற்றலை அடிப் படையாகக் கொண்டு நடைபெறுகின்றன. இவ்வாறு அறி வினைச் சார்ந்து நடைபெறும் இடைவினைக்கு ஆதாரமாக அமை வது மொழியே. இரண்டாவதாக ஒருவர் மற்றவர்களைத் தூண்டு வதற்கும் மட்டுப்படுவதற்கும் உதவுவதாக மொழி அமைகின்றது. குழந்தை தன் தேவைகளைப் பிறருக்கு உணர்த்தும் செயல், பிறரது நடத்தையினைக் கட்டுப்படுத்துகின்ற செயலின் துவக்க நிலையினைக் காட்டுகின்றது எனலாம். அதேபோன்று முதியவர் களது நடத்தையைக் குழந்தை பின்பற்றி நடப்பதற்கும் மொழியே துணைசெய்கின்றது. 'இதைச் செய்யாதே', 'அதைச் செய்', 'அவ்வாறு செய்தால்தான் நல்ல பையன்; இல்லையெனில் நீ கெட்ட பையன்' என்றெல்லாம் கூறுவது கட்டுப்பாட்டினை விளைவிப்பதாகவே அமைகின்றது.

மொழி, குழு வாழ்வில் ஈடுபட்டுள்ள மக்களைத் தூண்டவல்ல தாகவும் குழுவின் கூட்டுறவுக்குக் கட்டுப்படுத்தும் கருவியாக வும் செயல்படுகின்றது. குழுவின் குறிக்கோள்களுக்கும், வழி முறைகளுக்கும் கட்டுப்பட்டு நடப்பதன் அடிப்படையிலேயே குழு வில் தனியவன் இடம்பெறமுடியும். இதற்கு மொழியே துணை செய்கின்றது.

மனவெழுச்சிகள், உணர்ச்சிகள் போன்றவற்றைச் சொற்கள் மூலம் வெளிப்படுத்த மொழி உதவுகின்றது. குழு வாழ்வில் ஒருவரது உணர்ச்சிகளைப் பிறர் புரிந்துகொள்ள மொழி பெரிதும் உதவுகின்றது. இதுவன்றியும் குறைகளைக் குணப்படுத்தவல்ல தாகவும் மொழி அமைகின்றது. சோர்ந்த உள்ளத்திற்குப் புத் துணர்ச்சி ஊட்டியும், இரக்கப்படவேண்டிய நிலைகளில் ஆறுதல் படுத்தியும் எடுத்த செயலினைச் செம்மையாக முடிக்க இது உதவு கின்றது. மொழியை முக்கிய கருவியாகக்கொண்டு உளப்பகுப் பாய்வு (Psycho analysis) என்னும் மருத்துவ முறையே செயல் படுகின்றது.

### அதிகாரச் சுருக்கம்

மொழி இல்லையேல் மனித இனத்திற்குச் 'சமூக வாழ்க்கை' என ஒன்றே தோன்றி இருக்காது. மனித சமூக நடத்தைக்கு உயிர் கொடுக்கின்ற காரணிகளான மதம், கலாசாரம், நீதி போதனைக் கருத்துகள் ஒரு சந்ததியினரிடமிருந்து மற்றொரு சந்ததியினருக்கு இம் மொழியின் மூலமாகத்தான் கிடைக் கின்றன. மனிதர்களுக்குள் ஏற்படும் இடைவினைகளுக்கு அடிப் படை மூலமாகவும் அமைவது மொழியே. எனவே மனித சமூ கத்தின் நடத்தையினைப் பற்றிப் பயிலுகின்ற நாம் மொழியின் தோற்றம், அமைப்புப் பற்றியும் பயிலவேண்டியிருக்கின்றது.

மொழியின் தோற்றம் பற்றி எண்ணற்ற கருத்துக் கோட் பாடுகள் தோன்றியுள்ளன. எனினும் குறிப்பாக மூன்று கருத்துக் கோட்பாடுகளை நாம் முக்கியமாகக் கருதலாம். அவையாவன: (1) சைகைக் கோட்பாடு, (2) வியப்பிடைச் சொல் கோட்பாடு, (3) மொழி அணுகரணக் கோட்பாடு. தனியவன் மொழியினைக் கற்றுத் தேர்ச்சி அடைவதின் மூலமே சமூகமாக்கப்படவும் செய் கின்றனன். சமூகத்தில் மொழியின் பணி, செயல் தன்மைகள் பரந்தனவாகவும், முக்கியத்துவம் வாய்ந்தனவாகவும் காணப் படுகின்றன.

# 6. சமூகத் தூண்டல்களுக்குத் துலங்கல்கள்

## (Responses to Social Stimulations)

சமூகம் என்பது ஒரு தனித்த கோட்பாடு அன்று. ஆங்கே எண்ணற்ற சூழ்நிலைகளில் எண்ணற்ற துலங்கல்கள் நிகழ்கின்றன. மக்கள் ஒரு சமூகமாக ஒன்றி வாழும்போது அவர்களிடையே எண்ணற்ற நடத்தைகள் காணப்படுகின்றன. இவை அனைத்தையுமே இருவகையான சமூக நடத்தைகளாகக் கொள்ளலாம். தனியவன் எத்தகைய செயல்களால் பிறரைத் தூண்டுகின்றான் என்பது மட்டுமின்றி எத்தகைய தூண்டல்களுக்கு அவன் எதிர்த்துலங்குதலைச் செய்கிறான் என்பதும் சமூக நடத்தையே ஆகும். இங்கே நாம் சமூகத் தூண்டல்களுக்கு எத்தகைய துலங்கல்கள் கிட்டுகின்றன என்றும் அது எங்ஙனம் சமூக நடத்தையால் மேம்படச் செய்கின்றன என்றும் காண்போம்.

நாம் துலங்கல்களுக்காகக் கையாளுகின்ற எல்லா நடத்தைகளுமே இவ் வதிகாரத்தில் காணப்படவேண்டிய முக்கியத்துவம் வாய்ந்தவை இல்லை. இங்கு நாம் காணுகின்ற துலங்கல்கள், குறிப்பாகச் சமூகப் பொருள்களின்பால் எழும் நடத்தைகளாகக் காணப்படுகின்றன. உதாரணமாகச் 'சாலை மூடப்பட்டது' என்ற அறிவிப்புப் பலகைக்கு 'இங்கே நிற்காதே', 'இவ் வழியாகப்போ', 'ஒரு வழி', 'இது நுழையும் வழியல்ல' போன்ற எண்ணற்ற போக்குவரத்தினைக் கட்டுப்படுத்துகின்ற அறிவிப்புப் பலகைகளுக்கு, ஒருவன் செவிசாய்த்துப் பிரதித் துலங்கல்களில் ஈடுபடுவது சமூகத்தின் பொருட்களுக்கு அப்பாற்பட்டதாகும். ஒருவன் மற்றவரின் உணர்ச்சிக்கு இரங்கி மற்றவரின் துயரம் கேட்டுப் பரிவுகொண்டு, அவன் துன்பம் கண்டு தேற்றியும், துயர் துடைத்தும், அவனுடன் அளவளாவி மகிழ்ந்தும், அவனைப் போன்றே நடையுடை பாவனைகளில் ஒருமித்து நடந்துகொண்டு

செயலுறும் துலங்கல்கள் முன்பு கூறிய துலங்கல்களைவிட முற்றிலும் மாறுபட்ட நிலையில் காணப்படுகின்றன. சமூக உளவியலாளர்கள் சமூகத் துலங்கல்கள் என்ற பகுப்பின் கீழ் இவ்வகையான நடத்தைகளையே ஆராய்ந்து அவற்றை (1) இரக்கவுணர்ச்சி (Sympathy), (2) பாவிப்பு நடத்தை (Imitation), (3) கருத்தேற்றம் (Suggestion), (4) சிரிப்பு (Laughter), என்ற தலைப்புகளில் பார்த்து விளக்குகின்றனர்.

சமூக உளவியலின் மூன்று முக்கிய கொள்கைகளைக் குறிப்பனவாக இரக்கவுணர்ச்சி (Sympathy), பாவிப்பு நடத்தை (Imitation), கருத்தேற்றம் (Suggestion) ஆகியவை விளங்குகின்றன. பிளேட்டோ (Plato) அன்புகெழுமிய (affection), மன எழுச்சி நிலை (cornation), அறிவு நிலை (cognition) எனும் மூன்று பகுதிகளாக உள்ளம் இருப்பதாகக் கருதினர். இவருக்குப்பின் மற்ற அறிஞர்களும் இக் கருத்தை ஏற்றுக்கொண்டுள்ளனர். எனவே மனிதனின் சமூக நடத்தையை இம் மூன்றினைக்கொண்டு விளக்கப் பலரும் முயன்றுள்ளனர். இம் முயற்சியின் விளைவாகவே இரக்கவுணர்ச்சி, பாவிப்பு நடத்தை, கருத்தேற்றம் பற்றிய கொள்கைகள் எழுந்துள்ளன. இரக்கவுணர்ச்சி மனிதனின் அன்புக்கெழுமிய நிலை கொண்டும், பாவிப்பு நடத்தைக் கொள்கை மனிதனின் எழுச்சி நிலையைக்கொண்டும், கருத்தேற்றம் மனிதனின் அறிவு நிலையைக்கொண்டும் சமூக நடத்தையை விளக்க முற்படுகின்றன. ஒருசில வேளைகளில் இம் மூன்றும் ஒன்றினை ஒன்று குறிப்பனவாகப் பயன்படுத்தப்படுவதும் உண்டு. பாவிப்பு நடத்தை மூலம் ஓர் ஆசிரியர் விளக்க முற்படும் ஒரு நிகழ்ச்சியினையே இன்னொருவர் கருத்தேற்றத்தாலும், வேருெருவர் இரக்கவுணர்ச்சியாலும் விளக்க முற்படலாம். இதுவன்றி ஒரே ஆசிரியர் இரண்டு தொடர்களை ஒரே பொருளில் பயன்படுத்தலாம். ராஸ் (Ross) கருத்தேற்றம், பாவிப்பு நடத்தை இரண்டையும் ஒரே பொருளில் பயன்படுத்துவதை நாம் காண்கிறேம். ஆதாம் ஸ்மித் (Adam Smith), ஹேபர்ட் ஸ்பென்ஸர் (Herbert Spencer), பீட்டர் கிரெப்டோகின் (Peter Kreptokin), ட்ரோட்டர் (Trotter), மெக்டூகல் (McDougal), ரிபாட் (Ribot) போன்ற அறிஞர்கள் இரக்கவுணர்ச்சியின் அடிப்படையில் சமூக நடத்தையின் இயல்பை விளக்க முற்பட்டுள்ளனர்.

## இரக்கவுணர்ச்சி (Sympathy)

மனிதன் தான் பிறர்பால் காட்டுகின்ற அன்பு, கழிவிரக்கம், இரக்கவுணர்ச்சி போன்ற தன்மைகளால் அவன் விலங்கினத்திலுனின் வேறுபடுத்திக்காட்டப்படுகிருன். உணர்வே இல்லாத

மரக்கட்டை அன்று மனிதன். ஆனால் அதே நேரத்தில் அவன் தன் உணர்வு மிகப்பெற்றுத் தனக்காகவே எதையும் சாதிக்கும் விலங்கும் அன்று. இவ் விருபண்புகளுக்கும் இடையில் அவன் தன்னைப்போன்றே பிறரையும் கருதிப் பொதுநல நோக்கில் கழி விரக்கம்கொண்டு செயல்படுகிறான். இங்ஙனம் அவன் தன்னைப் போலவே பிறரையும் கருதும் பண்பினால் ஒரு சமூகத்தில் ஒன்றி வாழ்கிறான். இங்ஙனம் மனிதன் சமூகத்தில் ஒன்றி வாழத் துணைசெய்யும் எத்தனையோ துலங்கல்களில் இரக்கவுணர்ச்சியும் ஒன்று. ஒருசில சமூக உளவியலாளர்கள் ஒருவன் எங்ஙனம் சமூகத்தில் ஒன்றி வாழ்கிறான் எனக் காட்டும்போது அவன் இவ் வுணர்ச்சியின் பாலே ஒன்றி ஒரு சமூகத் தன்மையினனாக வாழ் கிறான் என்று கூறுகின்றனர்.

இவ் விரக்கவுணர்ச்சி பிறவியிலேயே தோன்றுகின்றது என மெக்டுகல் கருதுகின்றார். ஆனால் இவரது கருத்தை ஆல்போர்ட் என்பார் மறுக்கிறார். இரக்கவுணர்ச்சி ஒருவனுக்குக் கற்றறிந்த கல்வியினால் ஏற்படுகின்றது என்று சமூக உளவியலாளர்கள் கருதுகின்றனர். எனினும் இந்த உணர்ச்சி மனித சமூகத்தி னிடமே சிறப்பாகக் காணப்படுகிறது என்பதில் அனைவரும் ஒத்த கருத்தினைத் தெரிவிக்கின்றனர்.

மெக்டுகல் (McDougall) என்பார் ஒவ்வோர் உணர்ச்சி வயப் பட்ட தன்மையும் இருவழிகளில் உணர்ச்சிகளைப் பெற்றவை யாக, உணர்ச்சி வசப்பட்ட தன்மையைக் கிளர்வனவாகக் காணப்படுகின்றன என்று கூறுகின்றார். முதன்மையாகக் கோபம், பயம், நடுக்கம் போன்றவற்றை உண்மையான பொருட் களே நம்முன் நின்று நமக்கு உருவாக்குகின்றன என்றும், இரண்டாவது தன்மையாக மற்றவரது நடத்தைகளின் மூலம் அல்லது அவரது உணர்ச்சி வயப்பட்ட தன்மை, முகக்குறி, சைகை, கத்துதல், அசைதல் போன்ற நடத்தைகளைக் கவனிப் பதன் மூலம் நமக்கு அத்தகைய கோபம், பயம், நடுக்கம் தோன்று கின்றன என்றும் அவர் கூறுகின்றார். முதலாவதான வகையில் நம்முன் ஏற்படும் உணர்ச்சி வயப்பட்ட தன்மை நேரிடையாகப் பொருள்கள் அல்லது விலங்குகளிடமிருந்து கிடைப்பனவாக அமைகின்றன. இரண்டாவதான வகையில் அப் பொருட்களுக் கும், பிராணிகளின் செயல்களுக்கும் அப்பாற்பட்டு, ஒருவரின் துலங்கும் நடத்தை அல்லது உணர்ச்சி வயப்படும் தன்மைகளிட மிருந்தும் நமக்குக் கிட்டுகின்றன. மெக்டுகலின் இத்தகைய பகுப்பு அவருக்குப் பின்னால் வந்த எண்ணற்ற உளவியலாளர்களால் ஏற்கப்படவில்லை.

ஆதாம் ஸ்மித் இரு அடிப்படை இரக்கவுணர்ச்சிகளைக் கூறுகிறார். முதல் வகை, உடனடியாக மறுவினை போன்று ஏற்படும் துலங்கல் வகையினைச் சுட்டுகிறது. யாராவது ஒருவருக்கு அடிபட்டதும் நாம் அவர்பால் இரக்கவுணர்ச்சி கொள்கிறோம். கழைக்கூத்தாடிக் கயிற்றில் நடப்பதைக் காணும் நம்மிடம் விழிப்புணர்ச்சி, கவன உணர்ச்சி ஏற்படுவது இயல்பே. இவ்வேளைகளில் நாமும் இவற்றில் செயல்படுவர் போன்றே உணர்ச்சிகளை அடைகிறோம். இரண்டாவது வகை, அறிவினைச் சார்ந்து ஏற்படுகின்றது. நெருங்கிய ஒருவர் வெற்றி பெறுவதைக் கண்டு மகிழ்கிறோம், தோல்வியுறுவதைக் கண்டு வருந்துகிறோம். மனிதனின் நீதியுணர்வே இரக்கவுணர்ச்சியின் அடிப்படையில் ஏற்படுகின்றது என்பது ஸ்மித்தின் கருத்து. ஸ்பென்சரும் ஸ்மித்தைப் போன்றே இருவகை இரக்கவுணர்ச்சி பற்றிக் கூறுகிறார்.

ரிபாட் (Ribot) சமூக வாழ்விற்கு அடித்தனமாக இரக்கவுணர்ச்சி அமைகிறது என்று கூறியுள்ளார். இந்த உணர்ச்சி மூன்று வகையாகக் காணப்படுகின்றது. முதலாவது தானுக உடனடியாக ஏற்படக்கூடியது; இது நிலைவழிக் கட்டுப்படுத்தப்பட்ட துலங்கலை ஒத்தது. இரண்டாம் வகைப் பரிவுணர்ச்சி நிலையில், இரக்கவுணர்ச்சி பெறுபவர் தன் உளநிலைப் பற்றித் தன்னுணர்வு பெறுகிறார். மூன்றும் வகை அறிவினைச் சார்ந்ததாகவும், நன்றியுடைமை, பொறுமை போன்றவற்றையும் பரிவுணர்ச்சியாகக் கொள்ளலாம் என்றும் கூறுகிறது.

மர்பி (Lois Murphy) எனும் அம்மையார் குழவிப் பள்ளிக் குழந்தைகள் அனைத்தையும் உற்று நோக்கி ஆராய்ந்து இக்குழந்தைகளிடையே இரக்கவுணர்ச்சி நடத்தையைக் காட்டிலும் ஆக்கிரமிப்பே பெருமளவு காணப்படுவதாக எடுத்துக்காட்டியுள்ளார். ஒருசில பண்பாட்டுச் சூழ்நிலையினின்று வரும் சிறுவர்களிடமும், இரக்கவுணர்ச்சி கொள்ளும் சூழ்நிலையில் ஏற்கனவே அனுபவம் பெற்ற சிறுவர்களிடமே இத்தகைய உணர்வு பெரிதும் காணப்படுவதனை இவ் வாய்வு வலியுறுத்துகின்றது.

**இன்றைய உளவியலார் கருத்து**

இரக்கவுணர்ச்சியினைச் சமூக ஆக்கநிலையிறுத்தத்தின் கட்டுப்படுத்துதலின் (Social conditioning) விளைவாகக் கொள்ளுதலே இன்றைய உளவியலார்கள் பெரிதளவு ஏற்றுக்கொள்ளும் கருத்து ஆகும். பானர் (Bonner) வலியுறுத்துவது போன்று இரக்கவுணர்ச்சி புலன் தூண்டுதல்களன்று, உடன் பிறந்த பண்புமன்று. சமூகத்தில் கற்கப்படுவதும் பண்பாட்டு மூலம் பெறப்படுவதுமான மனத் துலங்கலே இரக்கவுணர்ச்சி நடத்தையாகும்.

அதன் வளர்ச்சியும் விரிவும் மக்கள் ஒருவருக்கொருவர் கொள்ளும் உறவுகளினுலேயே தீர்மானிக்கப்படுகின்றன. இவ் வுறவுகளின் பிணைப்பு அதிகரிக்க அதிகரிக்க மக்கள் ஒருவரை ஒருவர் முற்றி லும் புரிந்துகொள்ள இயலுகின்றது.

**இரக்கவுணர்ச்சியும் கூட்டுறவும்**

இரக்கவுணர்வின் வழி நாம் ஒத்த மனநிலை கொண்டுள்ள தனியவனுடன் பழகி அவனது நோக்குகளை நம்முள் உண் டாக்கிக் கொள்கிருேம். ஒருவருக்காக இரக்கவுணர்ச்சி நம்மிடம் ஏற்படும் நிலையில் அவரது நோக்குகள் நம்மிடம் ஏற்படுவதனுல் அவரது செயலில் நாமும் பங்கு கொள்கிருேம். அவராகவே நாமும் உணர்கிருேம்.

இவ்வாறு இருவரும் கூட்டுறவு (co-operative) நிலையில் இரக்கவுணர்ச்சிகளைப் பறிமாறிக்கொள்ளும் நிலையிலேயே அவ் வுணர்வு ஏற்படுகின்றது. இதனுல் தனியவனது தொடர்புகள் அதிகரிக்கின்றன. இத்தகைய தொடர்பின் வழி நட்புகள், அறிமுகங்கள் ஏற்படுவதோடு நாம் ஏற்கனவே கொண்டுள்ள உறவு முறையும் வலுப்படுகிறது.

**இரக்கவுணர்ச்சியின் சமூக முக்கியத்துவம் (The Social significanc of sympathy)**

இரக்கவுணர்ச்சி ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு ஒன்றி வாழ்வதற்காக உதவுவதாக மட்டும் இல்லை. நாம் பிறர்பால் இரக்கப்படுவதும் அவர்பால் எழுந்துள்ள துன்பத்தைத் துடைக்க மட்டுமின்றி நம்பால் எழுந்த ஒரு வேதனைமிக்க மனநிலையை மாற்றிக்கொள்வதற்கும் ஆகும். நம் கண்ணெதிரே ஒருவன் அடி பட்டுக் காயத்தில் துன்பப்படும்போது அதைக்கண்டு நாம் மனம் சகிக்கப் பெருதவர்களாகின்ருேம். இரக்கவுணர்ச்சியின் உச்சக் கட்டத்தில் நின்றதால்தான் வள்ளுவர் ‘கொல்லாமை’யைப் பாடுகிருர். அந் நிலையில் நம் மனவேதனை நீங்க நாம் வலிய முன் சென்று அவரை மருத்துவ நிலையத்திற்கு எடுத்துச்சென்று அவ ரது காயத்திற்கு மருத்துவச் சிகிச்சை அளிக்க உதவுகின்ருேம். எனவே, இரக்கவுணர்ச்சி நடத்தைப் பொது நலத்தின்பால் மட்டு மின்றிச் சுயநலத்தின்பாலும் நன்மை பயப்பதாக அமைகின்றது.

இவையேயன்றி இரக்கவுணர்ச்சி, தற்காப்பு நடத்தை, தன் நிலைக்காக வருந்துதல் போன்ற இரு வகையான செயல்களின் பாலும் ஏற்படுகின்றது. கைகால் ஊன முற்று மேலெல்லாம் புண்களாய்க் கையில் தடியூன்றி நம்மைப் பார்த்துப் பிச்சை கேட்பவனிடம் நாம் பரிவுகொண்டு பிச்சை போடுவது அறம். பொது நலம் என்ற கட்டுப்பாட்டிற்கு ஆட்படுவதனுல் மட்டு

மின்றி நமக்கும் அச சூழ்நிலை வந்தால் நாமும் அவனுக மாற நேர்ந்தால் ஏற்படும் துன்பத்தினை நினைந்தும் அப்போது பிறரும் இங்ஙனமே நமக்கு உதவவேண்டும் என்ற தற்காப்பு உற்றுணர் விற்கு ஆட்பட்டும் செயல்படுவதாகும். இதனை நன்குணர்ந்த ஒருசில அறிவுமிக்கப் பிச்சைக்காரர்கள் 'தர்மம் தலைகாக்கும்' என்ற பல்லவியில் பிச்சை கேட்கத் தொடங்கி நாம் மறுத்து விட்டு மீறிச் செல்லும்போது 'என் நிலையைப் பார்த்து ஏளனம் செய்யாதே ஐயா' என்று கெஞ்சத் தொடங்க நாம் கையிலுள்ள ஒருசில பைசாக்களையும் அவனுக்குக் கொடுத்துவிட்டுச் செல் கிறோம்.

இவ் விரக்க வுணர்ச்சி தன் நிலைக்காக வருந்துவதாலும் ஏற் படுகின்றது. ஒரு காலத்தில் நிலைதவறித் துன்பப்பட்டவர், ஏழ்மைத் தன்மை, ஒருசில உடல் வியாதி போன்றவற்றினுல் முன்னுல் பீடிக்கப்பட்டுப் பின்னுல் முன்னேற்றம் கண்டவர்— தனது பழைய நிலையினில் காணப்படும் எவரையும் காணும் போதெல்லாம் அவர்பால் இரக்கவுணர்ச்சி தன் நிலைக்காகவருந்து கின்றமையால் ஏற்படுகின்றது.

இரக்க வுணர்ச்சி இங்ஙனம் சுய நலததினுல் ஏற்படுகின்றது என நாம் கூறுவது பொருந்தாது. பெரும்பாலான வேளைகளில் இவ்வுணர்ச்சி சமூகத்திற்கு நன்மை பயக்கின்ற பொது நலத்தின் பாலே விளைகின்றது. சமூக வாழ்விற்கு இவ்வுணர்ச்சி மிகவும் இன்றியமையாததாகும். ஒத்த உள்ளுணர்வு கொள்ளுகின்ற மனிதர்களே ஒருவரை ஒருவர் அண்டி, ஒன்றிச் சமூகமாக வாழ் வர். இதனடிப்படையிலேயே நாம் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு மற்றவர்களுடைய நடத்தைகளைப் புரிந்துகொள்ள வும் அதற்கேற்ப நம் நடத்தைகளை மாற்றிக்கொள்ளவும் முடி கின்றது. இந்த இரக்கப் பரிவுணர்வின் விளைவாகவே நாம் நம் நண்பர் யார், எதிரி யார் என்பதைக் கண்டு கணிக்கவும் இயலு கின்றது. இவ் வுணர்ச்சி மனிதனைத் தெய்வமாக மாற்றும் பண்புமிக்கது. மனிதன் தன் மிகச் சிறந்த இரக்க வுணர்ச்சியின் காரணமாகவே பிறரால் மதிக்கப்படுகின்ருன். அம் மதிப்பே அவ னுக்கு வாழ்க்கையில் வெற்றியையும் சமூகத்தில் சிறந்த தகுதி களையும் தேடித் தந்து அவனை உயர்த்துகின்றது.

## பாவனை நடத்தை (Imitation)

பாவனை நடத்தை என்பது ஒருவர் பிறரது நடத்தைகளைப் பாவித்துப் பின்பற்றி நடக்கும் செயல்களாகும். இப் பாவனை நடத்தை மனிதனை வாழ்வில் இந்தத் துறையில்தான் நிகழ்கிறது என்றோ இந்த இந்தத் துறைகளில் அது நிகழ்வதில்லை என்றோ

நாம் உறுதியாகக் கூறமுடியாது. மனித வாழ்வின் எல்லாத் துறைகளிலும் பாவனை நடத்தைக் காணப்படுகின்றது. சமூக வாழ்வில் நாம் நாகரிம், பண்பாடு, என்பவற்றைப் பின்பற்றி நடந்துகொள்கின்ளேம். இங்கே தேசபத்தி, கலாசாரப் பற்றுதல் போன்றவை காரணங்களாகக் கருதப்பட்டாலும் நடை, உடை, பேச்சு மாற்றம், பாவனை ஒருசில பண்பாடு மிக்கச் செயல்கள் பாவனை நடத்தையின் வழியே பின்பற்றப்படுகின்றன. சமூக வாழ்வில் சிறியோர், பெரியோரையும், குறைந்த அறிவுடையோர், அறிவாளிகளையும், மக்கள் சமூகச் சீர்திருத்த வாதிகளையும் பின்பற்றிப் பாவனை நடத்தையில் துலங்குகின்றனர். ஒரு மகன் தன் தந்தையைப் பின்பற்றுகிருன். மகள் தன் தாயைப் பின்பற்றுகின்ருள். தந்தையோ தன் அலுவலகத்தில் திறம்படச் செயலாற்றும் நிர்வாகியையோ, இயக்குநரையோ பின்பற்று கின்ருர். தாய் தனது வழி வந்த மூதாதையர்களையோ அல்லது, தான் கற்கப் பெறும் சரித்திரக் கதாநாயகிகளையோ பின்பற்றி ஒழுக முனைகின்ருள். இங்ஙனம், சமூக வாழ்வே ஏதாவதொரு அடிப்படையில் ஒருவரை ஒருவர் பின்பற்றும் பாவனை நடத்தையாகக் காணப்படுகிறது.

அரசியல் துறையில் தொண்டர் தலைவர்களையும், தலைவர்கள் தனக்கு முன்ஞல் நின்று செயல்படும் பெரியவர்களையும், அப் பெரியவர்கள் காலத்தால் தோன்றி மறைந்த பெரும் பெரும் அரசியல் தலைவர்களையும் தங்கள் வழிகாட்டிகளாகக் கருதி அவர்களைப் பின்பற்றி அவர்களின் பாணியிலேயே தாங்களும் செயல்பட விழைகின்றனர். கல்வி, இலக்கியம், சமயம் போன்ற பல்வேறு துறைகளிலும் பாவனை நடத்தைச் சிறப்பாகக் காணப் படுகின்றது. இங்கெல்லாம் பாவனை நடத்தைத் தொடர்ந்து மரபு வழி வரும் பண்புகளை, அறிவுகளை, ஒழுக்கம், நீதிக் கருத்துகளை ஒரு சந்ததியினரிடமிருந்து மற்ருெரு சந்ததியினர் ஏற்று ஒழுகும் செயலாக அங்ஙனமே பிந்திய சந்ததி முந்திய சந்ததியின் தோளின் மேலமர்ந்து நடப்பதாகப் பாவனை நடத்தைக் காணப் படுகின்றது.

கருத்தேற்றம்

கருத்தேற்றத்தை எண்ணங்களின் இணைப்பு என்ற (Association of ideas) அடிப்படையில் விளக்க பிரௌன் (Thomas Brown), பிரென்ஹெயிம் (Bernheim), டிச்னர் (Titchner) போன்ருேர் முயன்றுள்ளனர். நடத்தைக் கொள்கையினரோ இதனை நிலை வழிக் கட்டுப்படுத்தலின் மூலம் விவரிக்க முயன்றுள்ளனர். எஃப். எச். ஆல்போர்ட், பிட்ச்ட்ரு (Bechtereu) ஹல், (Hell) ஆகி

யோர் இம் முறையிலேயே கருத்தேற்றத்தை விளக்குகின்றனர். ஆனால் இவ்விருவகை விளக்கங்கள் கருத்தேற்றத்தை ஏனைய சாதாரண எண்ணங்களின் இணைப்பினின்றோ, தூண்டல்-துலங்கல் இணைப்புகளினின்றோ பிரித்தறிவதில்லை. ஆனால் கருத்தேற்றம் ஏனைய சாதாரண எண்ணங்களின் இணைப்பினின்று வேறுபட்டதாகும். கருத்தேற்றத்தின்போது ஒருவன் தன்னிடம் முன்பு ஏற்பட்டுள்ள எண்ணங்கள் அனைத்தையும் பயன்படுத்துவதில்லை. அவனிடம் ஏற்கனவே ஏற்பட்டுள்ள இணைப்புகள் பலவும் அடைபட்டு நிற்கின்றன. ஒருசில குறிப்பிட்ட இணைப்புகளே கருத்தேற்றத்தினைத் தீர்மானிக்கின்றன. சிக்கலான தர்க்க ரீதியான பல எண்ணங்கள் கருத்தேற்றத்தின்போது கட்டுப்படுத்தப்பட்டு விடுகின்றன. பெண்மணி ஒருவர் கடையில் ஒருசில பொருள்களை வாங்குகின்றார் என்று கொள்வோம். அப்போது அவர் பொருளின்விலை, சொந்த விருப்பம், பொருளின் தரத்தைப் பற்றிய ஐயங்கள், ஆகிய கருத்துகளின் அடிப்படையில் அதனை வாங்குவது இயல்பு. இவ்வளவில் திறமையான வணிகரே அப் பொருளின் புதுமை, அதனை அனைவரும் வாங்கிச் செல்வது, அதனைத் தயாரிக்கும் நிறுவனத்தின் பெருமை ஆகியவற்றைப்பற்றி எடுத்துக் கூறுகிறார். இதனால் கருத்தேற்றத்திற்குட்பட்ட அப் பெண்மணி பொருளை வாங்கிச் செல்கிறார். இங்கு வணிகரின் கருத்தேற்றத்தின் இரு பண்புகளைக காண்கிறோம் :

(1) வாங்க வந்தவரின் செயலினைத் தீர்மானிக்கும் எண்ணங்களைக் கருத்தேற்றம் அதிகரித்துள்ளது.

(2) வாங்குதலைத் தவிர்க்கக்கூடிய காரணங்களை (கருத்துகளை)க் குறைத்திருக்கிறது.

**கருத்தேற்றத்தில் தானியாள் வேற்றுமைகள்**

கருக்தேற்றத்தில் பெருமளவு தனியாள் வேற்றுமைகள் காணப்படுகின்றனர். 'பினே' தன் பரிசோதனையில் பங்கு பெற்ற சிறுவர்களிடையே 'தலைவர்கள்', 'பின்பற்றுவோரை' (followers) காட்டிலும் குறைந்த அளவு கருத்தேற்றத்திற்குட்படுவதாகக் கண்டுள்ளார்.

'ஆடு' போன்ற ஒருசில விலங்கினங்கள் ஏனைய விலங்கினங்களைக் காட்டிலும் கருத்தேற்றத்திற்குட்படுபவையாக உள்ளன. சில இனத்தினர் வேறுசில இனத்தினரைக் காட்டிலும் அதிகக் கருத்தேற்றத்திற் குட்பட்டுள்ளனர். சிறுவர்கள் பெரியவர்களைக் காட்டிலும் அதிகமாகக் கருத்தேற்றம் பெருகின்றனர். பெண்கள் ஆண்களைக் காட்டிலும் கருத்தேற்றத்தை ஏற்பவர்

களாகக் காணப்படுகின்றனர். பொறுமை போன்ற உணர்ச்சி வசப்பட்ட நிலையில் விரைவில் கருத்தேற்றம் ஏற்படுகிறது; மதிப்பு வாய்ந்தவர்களால் எளிதில் கருத்தேற்றம் ஏற்படுகிறது. கூட்டத்தில் இருக்கையில் கருத்தேற்றம் மிகுதியாக உண்டாகிறது; திரும்பத்திரும்ப ஒன்றையே கூறுவதனால் அவ்வாறு கூறுவது கருத்தேற்றம் செய்யும் வலிமை கொண்டதாகிறது என்பது போன்ற கருத்துகளை ராஸ் (Ross) தன் நூலில் வெளியிட்டுள்ளார். ராஸின் கூற்றுகள் அனைத்தையும் அவ்வாறே ஏற்றுக்கொள்வதற்கில்லை.

ஆண், பெண் என்ற அடிப்படையில்கருத்தேற்றத்தில் வேறுபாடுகள் காணப்படுபடுவதாக ஹல் (Hull) கண்டுள்ளார். பொதுவாகப் பெண்கள் ஆண்களைக் காட்டிலும் அதிகஅளவு கருத்தேற்றத்திற் குட்படுவதை ஹல்லின் ஆய்வுகள் எடுத்துக்காட்டியுள்ளன. 'எஃப். எச். ஆல்போர்ட்டும்' இதே கருத்தை வெளியிட்டுள்ளார். மாஸர்ச்மைட் (Messerschmidt) வயதின் அடிப்படையில் கருத்தேற்றத்தன்மை மாறுபடுவதாகத் தன் பரிசோதனை மூலம் எடுத்துக்காட்டியுள்ளார்.

கருத்தேற்றத்தைப் பற்றிய ஆய்வுகள் ஒரே போக்கினைக் கொண்டவையாக உள்ளன என்பதை கிரெச்சும், கிரட்ச்ஃபீல்டும் (Krech and Krutchfield) சுட்டிக் காட்டியுள்ளனர். கருத்தேற்றம் ஒரு பொதுப்படையான பண்புக் கூறு (General merit) அன்று என்று இவர்கள் எடுத்துக் காட்டுகின்றனர். எந்த ஒரு பெண்ணும் எப்போதுமே ஒரே மாதிரியாகக் கருத்தேற்றத்திற்கு உட்படுவதில்லை. கடையில் பேரம் செய்தல், குழைந்த வளர்ப்பு, வீட்டை அழகு செய்தல் போன்ற துறைகளில் நல்ல அறிவு பெற்றுள்ள காரணத்தால் பெண்கள் இத் துறைகளில் ஆண்களைக் காட்டிலும் குறைந்த அளவே கருத்தேற்றத்திற்குட்படுகின்றனர்.

**கருத்தேற்றத்தின் சமூக முக்கியத்துவம்**

கருத்தேற்றத்தின் சமூகப் பயன் மிகவும் வலிமை மிக்கதாகும். பொதுமக்கள் கருத்தினை உருவாக்கிக் கருத்துப் பரப்பலின் வழி (Propaganda) அதனைப் பரப்பி மக்களின் மனப்போக்கையும், நடத்தையையும் மாற்ற விழையும் சமூக, சரித்திர சமய அரசியல் சீர்திருத்த வாதிகள், கருத்தேற்றத்தின் மூலமாகவே தங்களின் முயற்சியில் வெற்றி காணுகின்றனர். மனிதன் ஒரு சமூகத்தில் ஏன் ஒன்றி வாழ்கின்றான் என்ற கேள்விக்குக் 'கருத்தேற்றத்தின் மூலமாகத்தான்' என்ற விடையைச் சமூக உளவியலாளர்கள் தருகின்றனர்.

கருத்தேற்றம் வாழ்வின் ஒவ்வொரு பகுதியிலும் சிறப்பாகச் செயல்படுகின்றது. பிறந்த குழந்தை தாய் தந்தையரால் கருத்தேற்றத்தின் மூலமே ஒழுக்கம், கட்டுப்பாடு, சமூகப் பண்பாடு போன்றவற்றைக் கற்றுக்கொள்ளுகின்றான். கல்வித்துறையில் அடியெடுத்துவைக்கும் அவன் அங்கே ஆசிரியர்களாலும் அறிஞர்களாலும் கருத்தேற்றம் செய்யப்பட்டுக் கல்வியைக் கற்கிறான். பிற்காலத்தில் பொது மக்களைக் கருத்தேற்றம் செய்தே அவன் தன் தொழிலில் சிறந்து விளங்குகின்றான். ஆக மனித வாழ்வின் எல்லா நிலைகளிலும் கருத்தேற்றம் இன்றியமையாததொரு துலங்லாகக் காணப்படுகின்றது.

**ஒன்றுணர்ச்சி (Empathy)**

ஒன்றுணர்ச்சி இன்னமும் ஒரு புதிராகவே காணப்படுகிறது. இதுபற்றி அறிவியற்பாங்கான விளக்கங்கள் இன்னமும் வரவில்லை என்றே கூறலாம். பரம்பரையியலின் அடிப்படையிலும், கருத்தேற்றத்திற்கான வழியிலும் ஒன்றுணர்ச்சி சமூகக் கற்றலின் அடிப்படையாக அமைகிறது. எந்த ஒரு பாவிப்பு நடத்தைக் கொள்கையிலும் மையமாக விளங்குவது ஒன்றுணர்ச்சியே.

பாவிப்பு நடத்தை எவ்வாறு ஏற்படுகிறது என விளக்க எழுந்த கொள்கைகளால் ஒன்றுணர்ச்சி நடத்தையைத் தெளிவாக விளக்க இயலவில்லை. கூலி (Coolay) போன்ற அறிஞர்கள் எண்ணம் இயக்கக் (ideo-moter) கொள்கையின் அடிப்படையில் ஒன்றுணர்வை விளக்க முயன்றுள்ளனர். செயலைப்பற்றிய எண்ணமே அச் செயலில் ஈடுபடுத்தித்தூண்டவல்லதாக இருக்கிறது. பெரும்பாலான நம் எண்ணங்கள் பிறர் செயல்களில் ஈடுபட்டுள்ளதனைக் காணும்போதே நம்மிடம் எழுகின்றன. இதனடிப்படையிலேயே நாம் காணுவதனைப் பின்பற்றி அதே போல் ஈடுபடுகிறோம் என்பதே இவ் வறிஞர்கள் கூறும் விளக்கம்.

ஹம்ப்தி (Humphrey), ஆல்போர்ட் (Allport), ஹோல்ட் (Holt) ஆகிய அறிஞர்கள் பாவ்லாவின் (Pavlovian) நிலைவழிக் கட்டுப்படுத்தலின் அடிப்படையில் ஒன்றுணர்ச்சி நிகழ்ச்சிகளை விளக்கக் கட்டும் முயன்றுள்ளனர். ஹோல்ட் தன் விளக்கத்திற்கு எதிரொலி நியதி (echo principle) என்று பெயரிட்டுள்ளார். ஒரு குழந்தை ஒரு செயலில் ஈடுபட்டு இருக்கும்போது அதே செயலில் இன்னொரு குழந்தை ஈடுபடுவது அதன் புலனுறுப்புகளில் எதனையாவது தூண்டுமாயின் அக் குழந்தை அதே செயலைத் திரும்பவும் எதிரொலிககக் கற்கிறது என்பதே ஹோல்டின் நியதி. குழந்தை சாய்ந்தாடக் கற்பதனை இதற்குச் சான்று கூறலாம். முதலில்

குழந்தை எதேச்சையாகவே சாய்ந்தாடுகிறது. இதனைக் காணும் பெற்றோர் அதனை அசைந்தபடி 'சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு' என்று கூறத் துவங்குகின்றனர். இதனடிப்படையில் குழந்தை பெற்றோர் அசைவதனைக் கண்டதும் அல்லது 'சாய்ந்தாடம்மா' என்ற சொல்லைக் கேட்டதும் சாய்ந்தாடத் துவங்குகிறது.

பிற்கால ஆசிரியர்கள் மேலே கூறிய விளக்கத்தின் தூண்டல்–துலங்கல் அமைப்பினை ஏற்றுக்கொள்கின்றனர். ஆனால் இவர்கள் மேலே கூறிய பாவ்லாவின் நிலைவழிக் கட்டுப்படுத்தலை ஏற்பதில்லை. அதற்குப் பதிலாகக் கருவிசார் நிலைவழிக் கட்டுத்தலை (Instrumental conditioning) அடிப்படையாகக் கொண்டு இவர்கள் ஒன்றுணர்ச்சியை விளக்க முற்படுகின்றனர். பாவிப்பு நடத்தைப் பயன் விளைப்பதாக அமைவதாலேயே கற்கப் படுகிறது என்பதே இவர்கள் கருத்து. மில்லரும் டோலர்டும் (Millar and Dollard) இக் கொள்கையின் அடிப்படையிலேயே பாவிப்பு நடத்தைகள் அனைத்தையும் விளக்க முற்படுகின்றனர். ஆனால் இக் கொள்கை குழந்தைகளிடம் காணப்படும் எளிய நிகழ்ச்சியான இயக்கப் பின்பற்றலுக்குப் பொருந்துவதே இல்லை. அதேபோல் தெளிர்வுணர்வு நிலையில் பிறரை அப்படியே பின் பற்றுவதனையும் இக் கொள்கையால் தெனிவாக விளக்க இயலுவதில்லை.

கெஸ்டால்ட் கொள்கை

கெஸ்டால்ட் (Gesralt) கொள்கையினரான ஃகோலர், ஆஷ் (Kohler, Ash) போன்றோர் வேறொரு வகையில் இந் நிகழ்ச்சிகளை விளக்க முற்படுகின்றனர். இவர்கள் வெகுமதியின் (reward) அடிப்படையில் கூடப் பாவிப்பு நடத்தையின் போக்கு நிலை வழிக் கட்டுப்படுத்த முடியுமா என்பது ஐயத்திற்குறியதே என்று கருதுகின்றனர். ஒரு முன்மாதிரியைப் (model) பாவித்து நடக்க வேண்டுமாயின் 'குறிக்கோள், அடையும் வழி' இவ்விரண்டிற்கும் இடையே உள்ள உறவினைப் புரிந்துகொள்ளவேண்டிய கட்டாயம் காணப்படுவதாக கெஸ்டால்ட் கொள்கையினர் குறிப்பிடுகின்றனர். இவ்வாறு இவர்கள் விளக்குவது தெளிவுணர்வு நிலையில் வேண்டுமென்றே அப்படியே பாவித்து நடத்தலைச் சுட்டுவதாகவே அமைகின்றது. இத்தகைய பாவித்து நடத்தல், உட்காட்சி (insight) மூலம் ஏற்படுவதாக ஒருசில அறிஞர்களும் அறிவுசார் கற்றல் நியதி (Cognitive Principle of learning) மூலம் ஏற்படுவதாக வேறுசில அறிஞர்களும் கருதுகின்றனர்.

உணர்ச்சி வயப்பட்ட அளவியலும் பாவிப்பு நடத்தை நிகழுவதை விளக்க ஒருசில அறிஞர்கள் முயன்றுள்ளனர். அடை

யாளப்படுத்திக்கொள்ளல் (identification) மூலம் பாவிப்பு நடத்தை நடைபெறுகிறது என்று உளப்பகுப்பாய்வினர் (Psychoanalysts) கருதுகின்றனர். இது உணர்ச்சி நெகிழ்வு நிலைப்பாவிப்பு நடத்தை யினையே சுட்டுகிறது. குழந்தை பெற்றோருடன் தன்னை அடையாளப்படுத்திக் கொள்கிறது. மாணவர்கள் பேராசிரிய ரோடு தங்களை அடையாளப்படுத்திக் கொள்ள விழைகின்றனர். ஆசிரியக் கட்சியினர் தம் தலைவரோடு தங்களை அடையாளப் படுத்திக் கொள்கின்றனர். இதனடிப்படையிலேயே குழந்தை சமூக வயமாக்கப்படுவதனை (உடன்படு நடத்தை) விளக்க இவ் வறிஞர்கள் முயன்றுள்ளனர். ஃபிராய்ட் (Freud) நாம் யார் யாரிடம் குறிப்பிடும்படியான தெளி உணர்வு நிலையில் முக்கியத் துவ மற்ற தொடர்பு கொண்டுள்ளோமோ அவர்களைபெல்லாம் பரிவு உணர்ச்சியின் மூலமாகவும், யார்யாரிடம் குறிப்பிடும்படி யான தெளிவுணர்ச்சி முக்கியத்துவம் கொண்ட உறவு கொண் டுள்ளோமோ அவர்களையெல்லாம் அடையாளப்படுத்திக் கொள் ளல் மூலமாகவும் புரிந்து கொள்கிறோம் என்று குறிப்பிட்டுள்ளார்.

## சிரிப்பு (Laughter)

சிரிப்பு, சமூகத் தூண்டுதலின் ஒரு துலங்கல். இதன் தோற் றம் பற்றி ஆராயும்போது ஏனைய சமூக நடத்தைகளைப் போன்று இஃது ஏதாவது ஓர் உடல்வொகு நோக்கத்தில் (Biological-puspos) தோன்றுததால் இதனைப்பற்றி விளக்கம் தருவது சிறிது கடினமாக இருக்கிறது. விஞ்ஞானிகள் சிரிப்பின் தோற்றம் பற்றி விளக்கும்போது வயது வந்தவர்களின் ஓர் இயற்கைப் பண்பு என்று இதனைக் குறிப்பிடுவதும், இளம் வயதில் அதன் தொடக்கத்தை ஆராய விரும்பாததும் நாம் சிரிப்பின் தோற்றம் பற்றி ஆராய்வதில் இன்னும் ஒரு கடுமையை விளைவிக்கின்றது. தற்போது நகைப்புக் கூறு (humour), அறிவு வளர்ச்சி பெற்ற (intellectualised) மக்களின் பண்பாகக் கருதப்படுவதால் சிரிப்பும் இங்ஙனமே கருதப்படுவதாய் உள்ளது.

உடம்பின் உணர்ச்சி தரும் பாகங்கள் அல்லது சிரிப்பை ஊட்டும் பகுதிகள் போன்றவற்றைத் தூண்டும்போது அதற்குப் பிரதிவினையாகச் சிரிப்புத் தோன்றுகிறது. சிரித்தல் என்னும் பண்புப் பிறப்பிலேயே மனிதனுக்குக் கிட்டுகின்றது எனினும் அவன் சிரிப்பிற்காக எடுத்துக்கொள்ளும் பொருள்களோ அவன் அடையும் அறிவு வளர்ச்சியையும் அனுபவத்தையும் பொறுத்து இருக்கின்றன. பிறந்த குழந்தையின் சிலிர்ப்பான பகுதிகளைத் 'தொட்டு கிச்சுக்கிச்சு' மூட்டுவதில் நாம் திடீரென வாய் நிறைய சப்தம் மிக்க சிரிப்பை அக் குழந்தையிடமிருந்து வரவழைக்கலாம்.

இச் சூழ்நிலை மனித வளர்ச்சியில் சிறிது சிறிதாக மாறுபடு கின்றது. வளர்ந்த பெரியவனிடம் நாம் இத்தகைய 'கிச்சுக் கிச்சு' மூட்டுவதனுல்கூடச் சிரிப்பை வரவழைக்க முடியாது என்பதனுல் இது வளர்ச்சிப் பருவத்திற்குத் தக மாறுகின்றது என அறியலாம். பெரியவர்களிடம் குழந்தைகளைப் போன்றே இத்தகைய சிலிர்ப் பான பகுதிகளைத் தொட்டதும் சிரிக்கின்றனர் என்பதும் ஒரு சிலர் மரத்துப்போய் மறக்கடடைகளாய் எந்தவித உணர்ச்சியு மின்றிக் காணப்படுகின்றனர் என்பதும் இங்கு நாம் எண்ணிப் பார்க்கவேண்டி இருக்கின்றது.

காண்ட் (Kant) சிரிப்பின் தோற்றம் பற்றிக் கூறும்போது சிக்கலான, மன அழுத்தம் மிக்க ஒரு பிரச்சினையை நாம் எதிர் பார்த்துக் கொண்டிருக்கும்போது அது ஒன்றுமில்லாததாய்ச் சட்டனெ மாறிவிடும்போது திடீரெனச் சிரிப்புத்தோன்றுகின்றது என்று கூறுகின்ருர். இத்தகைய சிரிப்புகளை நாம் தெருக்களில் நடந்துபோகும்போது திடீரென நான்கைந்து சிறுவர்கள் நம்மை வந்து தடுத்தி நிறுத்தி நமக்கெதிரே பெரிய வெடி ஒன்று வெடிக்க வைக்கும் விருப்பத்தைச் சுட்டிக்காட்டும்போது நாமும் அது எழுப்பும் மிகப் பெரிய சப்தத்திற்குப் பயந்து காதைப் பொத்திக் கொண்டிருக்கையில் அது சிறிது சிறிதாகப் புகைந்து எல்லோரும் ஆவலோடு எதிர்ப்பார்த்திருக்கும் நேரத்தில் 'புஸ்...ஸ்...ஸ்!' என வெத்து வேட்டாக மாறுகையில் அங்குக் குழுமியுள்ளோரிடை எழும் சிரிப்பு அந்த அதிர்வேட்டைவிடச் சற்றுப் பலமாகக் கேட்ப தைப் பலமுறை அனுபவித்திருக்கிருேம்.

லிப்ஸ் (Lipps) என்பார் பிரச்சினை மிக்க, அழுத்தமான, ஆழமான மனோ நிலையிலிருந்து திடீரென இலகுவான, கனமற்ற நிலைக்கு ஒரு செயல் நம்மை மாற்றும்போது அங்கே சிரிப்புத் தோன்றுகின்றது என்று கூறுகின்ருர். நாம் இத்தகைய சிரிப் பினை சர்க்கஸ் கோமாளிகளின் மூலம் அடிக்கடிக் காணுகின்ருேம். சர்க்கஸின் கோமாளி நடக்கமுடியாத ஒரு காரியத்தைப் பற்றி மிகவும் கடினமான ஆபத்து நிறைந்த ஒரு விளையாட்டுச் செய லைப்பற்றி நீண்ட நேரம் பேசுகின்ருர். இறுதியில் தாமே அச் செயலைச் செய்யப்போவதாகக் கூறி நம்மையெல்லாம். பயம் மிக்க, கவலை மிக்க ஒரு மன நிலைக்கு உட்படுத்துகின்ருர். நாம் அவர் கூறியபடியே செய்துவிடுவார் எனக் கவலையில், பயத்தில் ஆழ்ந் திருக்கும்போது ஒரு சிங்கத்தினிடம் சென்று தன் தலையை அதன் திறந்த வாயில் வைப்பதாகக் கூறி அவர் ஒரு சிங்கமுள்ள கூண்டை அனுகுகிருர். அனுகியவர் கூண்டைத் திறப்பது போல் நடிக்கையில் உள்ளிருந்து சிங்கம் திடீரென உறும இவர்

விழுந்தடித்துக்கொண்டு ஓடி வருகின்றார். இங்கே அவர் செயல் இங்ஙனமே நமக்குச் சிரிப்பைத் தோற்றுவிக்கின்றது.

சிரிப்பு என்பது சற்றும் எதிர்பாராத விதமாக ஏற்படுவது. உதாரணமாக நாம் நமது நண்பருடன் பேசிக்கொண்டிருக்கையில் அவர் சற்றும் எதிர்பாரா நேரத்தில் நாம் வெளியிடும் விகடப் பேச்சுகள் அவரிடம் சிரிப்பை வரவழைக்கக் கூடியனவாய் அமைகின்றன. ஒருசில நேரத்தில் சாதாரணப்பேச்சு வார்த்தையினூடே திடீரெனச் சிரிப்புத் தோன்றுவதும் உண்டு. ஒருவன் மற்றவனைப் பார்த்துப் பேசிக் கொண்டே போனான். நமக்கு மிகப் பெரிய தலைவேண்டும், மிகப்பெரிய தலை என்றால் மிகப் பெரிய மூளை; மிகப்பெரிய மூளை மனிதனுக்கு மிகமிக அவசியம், முடிகள் அப்போதுதான் அதன்மீது அதிகமாக வளரும்'!-சிரிப்பு.

இங்கே மூளை மனிதனுக்கு அவசியம் என்பது வரை எந்த விதச் சிரிப்பும் தோன்றுவதில்லை. ஆனால் சட்டென அப்போது தான் தலைமுடி அதிகமாக மூளைக்கும் என அவன் கூறும்போது மூளை தலைமுடி வளரத்தான் பயன்படுகின்றது என அவன் கூறியது சிரிப்பை வரவழைக்கின்றது.

ஃபிராய்டைப் பொறுத்தவரை சிரிப்பு என்பது அழுத்தம் பெறப் பெற்ற மனவுணர்வுகள் திடீரென வெளிவரும் தன்மையினால் நிகழ்வதாகும். உதாரணமாக ஒரு குழந்தை தன் விளையாட்டுத் தோழன் ஒருவன் முகமூடி அணிந்துகொண்டு அதன் முன்வர அக் குழந்தை அப் புதியவனைக் கண்டு பயமும், பொருள் புரியாத உணர்வும் அடைகின்றது. இப்போது அதனுள் அப் பய உணர்வுகள் வெளிப்படாது மனத்தினுள் அழுந்தப் பெறுகின்றது. அவ் விளையாட்டுத் தோழன் சட்டென முக மூடியை அகற்றிவிட்டுப் 'பே' எனக் கத்தும்போது மிரண்ட குழந்தை மறுகணம் தனக்குத் தெரிந்த, பழகிய நண்பன்தான் அவன் என உணர்ந்தும் பய உணர்வினின்று விடுதலை பெற்றுச் சிரிக்கின்றது. ஃபிராய்டைப் பொறுத்தவரை வளர்ந்த மனிதனிடம் தோன்றுகின்ற சிரிப்புகள் யாவும் இங்ஙனம் மன அழுத்தங்கள் திடீரென விடுதலை பெற்று வெளி வருவதனாலேயே விளைவதாகும் என்பதாம். நாம் நமக்குப் பிடிக்காதக் கொடூரமான ஒருவர் நம் தெருவின் வழி வருவதைக் காண்கின்றோம். இங்கே அவர் அதிகாரத்தில் இருப்பவர்; நம்மை அடக்கி ஆளக் கூடியவர் என்ற பயம் நாம் அவர் பால் கொண்டுள்ள வெறுப்புணர்ச்சியை அடி மனத்தில் அழுத்திவிடுகின்றது. இங்ஙனம் அடிமனத்தில் அவரைப்பற்றிய வெறுப்புணர்ச்சி அழுத்தப் பட்டிருத்தலை நாம் அறியாதபோதே வீதிவழி வந்த அவர் வாழைப்பழத் தோலில்

காலை வைத்து நம் கண்ணெதிரேயே வழுக்கி விழுகின்றார். இப்போது நாம் சட்டெனச் சிரிக்கத் தொடங்கித் தொடர்ந்து விழுந்து விழுந்து சிரிக்கின்றோம். இங்கே அவரைப் பற்றி நாம் கொண்டிருந்த வெறுப்புணர்ச்சி, அவர்பால் எழுந்த மரியாதை பயம் போன்றவற்றால் அடி மனத்தினுள் அழுந்தப் பெற்றிருந்தாலும்–திடீரென விடுதலை பெற்றுச் சிரிப்பாக வெளி வருகின்றது. இங்கே நாம் இன்னொரு விதத்திலும் இப் பிரச்சினையை அணுகலாம். அங்ஙனம் வழுக்கி விழுந்தவர் நமது நண்பராயிருந்தால் என்ன நடந்திருக்கும் என ஒருவர் கேட்கலாம். அதற்கு ஃபிராய்டும் அப்போது நாம் சிரிக்காமல் நண்பருக்கு உதவ விழுந்தோடி வருவோமென அவர் பதிலிருக்கலாம். எனினும் நாம், நண்பர் விழுந்துவிட்ட சூழ்நிலையிலும் சிரிக்கின்றோம் என்பதும் நமக்கு முன்பின் அறிமுகமில்லாத ஒருவர் அங்ஙனம் விழுந்தபோதும் சிரிக்கிறோம் என்பதும் அதே முதல் நிகழ்ச்சி மனிதர் விழுந்து விட்ட நேரத்தில் எங்கே சிரித்தால் நம்மைத் தவறாகப் புரிந்து கொள்வாரோ என்று அஞ்சி உடன் உதவிக்கு ஓடிச் செல்வோம் என்பதும் ஃபிராய்டின் கருத்தை மறுத்துக் கூறுகின்றனர்.

**சிரிப்பின் சமூக முக்கியத்துவம்**

சிரிப்பு என்பது மனித சமூகத்திற்கே உரிய ஒன்றாகும். விலங்குகளும் பொருள்களும் சிரிப்பதில்லை. அதேபோன்று விலங்குகளும் பொருள்களும் மனிதனுக்குச் சிரிப்பைத் தருவதில்லை. ஒருசில நேரங்களில் மிருகங்கள் நமக்குச் சிரிப்பை ஊட்டுகின்றன என்றாலும், அப்போதெல்லாம் நாம் அவற்றின் செயல்களை மனித சமூகத்தின் செயல்களோடு ஒப்பிட்டுப் பார்க்கின்றோம். அங்ஙனம் மிருகங்களை மனித நடத்தைகளோடு ஒப்பிடாத நேரத்தில் அவை நமக்குச் சிரிப்பைத் தருவதில்லை. எனவே, பொதுவாக மனித இனம்தான் சிரிக்கின்றது. மனித இனம்தான் மனிதனுக்குச் சிரிப்பை வரவழைக்க உதவுகின்றது என்று கூறப்படுகின்றது. மிகப் பெரிய பாறையின் அருகில் ஒரு சிறிய கல்லினைப் பார்க்கும்போது அல்லது மிக உயரமான ஒட்டகச்சிவிங்கியினருகில் ஒரு சிறிய ஆட்டுக் குட்டியைப் பார்க்கும்போது நமக்குச் சிரிப்பேதும் தோன்றுவதில்லை. ஆனால் மிக நீண்ட ஒல்லியாக வளர்ந்திருக்கும் ஒருவனின் அருகில் மிகவும் குள்ளமான தடித்த ஆள் ஒருவர் வரும்போது நாம் சிரிக்கின்றோம். எனவே மனிதர்கள்தான் மனிதர்களுக்குச் சிரிப்பை வரவழைக்கின்றனர் என்று கூறுகின்றோம்.

நாம் பிறர்பால் மட்டுமன்றிப் பிறரோடு சேர்ந்துகொண்டும் சிரிக்கின்றோம். இங்ஙனம் நாம் மனம்விட்டுச் சிரிக்கும்போது நம்

எதிரில் இருப்பவர் எதிரியாக இருந்தாலும் அவரும் தன்னை மறந்து நம்மோடு சேர்ந்து சிரிக்கின்றார். இப்போது நமக்கும் நம் எதிரிக்கும் இருந்த பகைமை மாறி அன்புணர்ச்சி வளர ஏதுவாகின்றது. இதுவன்றியும் சிரிப்புக் கவலையைப் போக்கும் அருமருந்தாகும். அதனாலன்றோ 'இடுக்கண் வருங்கால் நகுக' என்றார் திருவள்ளுவர். கவலையை மறந்து நாம் சிரிக்கக் கற்றுக் கொண்டால் வாழ்வில் முன்னேற ஏதுவாகும். 'வாழ்வில் சிரித்துக் கொண்டேயிரு' என்றும் 'மற்றவர்களுடன் சிரித்தே பழகு' என்றும் பெரியவர்கள் நம்மை வேண்டிக்கொள்வதும் இதன் காரணத்தினால்தான்.

### அதிகாரச் சுருக்கம்

தனியவன் தன் செயல்களால் பிறரைத் தூண்டுவதோடு மட்டுமின்றிப் பிறரின் தூண்டுதல்களுக்கு எதிர்த்துலங்குதல்களையும் செய்கின்றான். சமூக உளவியலாளர்கள் சமூக எதிர்த்துலங்குதல்கள் என்ற பகுப்பின் கீழ் நான்கு வகை நடத்தைகளைப் பற்றிப் பயிலுகின்றனர்.

இரக்கவுணர்ச்சியின் மூலமாகவே மனிதன் யாருடன் ஒன்றி ஒரு சமூகமாக வாழ்கின்றான் எனக் கருதுகின்றார். ஆல்போர்ட் என்பார் இதனை மறுத்து, இவ்வுணர்ச்சி ஒருவனுக்குக் கற்றறிந்த கல்வியினால் தான் ஏற்படுகிறது என்று கூறுகின்றார். ரிபாட் என்பார் சமூக வாழ்விற்கு அடித்தளமாக இவ்வுணர்ச்சி அமைகின்றது எனக் கூறுகின்றார். ஆனால், இன்றைய உளவியலாளர்கள் நிலைவழிக் கட்டுப்படுத்தலின் மூலமே இரக்கவுணர்ச்சி பெறப்படுகின்றதென்று கருதுகின்றனர்.

இரக்கவுணர்வின் வழி நாம் ஒத்த மன நிலையைக் கொண்டுள்ள தனியவனுடன் பழகி அவனுடைய நோக்குகளை நம்முள் உண்டாக்கிக் கொள்ளுகின்றோம். இதனால் தனியவனது தொடர்புகள் அதிகரிக்கப் புதிய நட்புகளும் அறிமுகங்களும் ஏற்படுகின்றன. நாம் ஏற்கனவே கொண்டுள்ள உறவு முறைகளும் வலுப்படுகின்றன.

பாவனை நடத்தை என்பது ஒருவர் பிறரது நடத்தைகளைப் பாவித்துப் பின்பற்றி நடக்கும் செயல்களாகும். இது மனித வாழ்வின் எல்லாத் துறைகளிலுமே காணப்படுகின்றது. இதன் மூலமே நடை, உடை, பேச்சு, மாற்றம், பாவனை போன்ற ஒருசில பண்பாடு மிக்கச் செயல்களும் கலாசாரமும் பின்பற்றிப் பரவி வளருகின்றன.

கருத்தேற்றத்தை எண்ணங்களின் இணைப்பு என்ற அடிப் படையில் சிலர் விளக்க முயன்றுள்ளனர். நடத்தைக் கொள்கை யினரோ இதனை நிலைவழிக் கட்டுப்படுத்துதலின் மூலம் விவரிக்க முயன்றுள்ளனர். ஆனால் கருத்தேற்றம் ஏனைய சாதாரண எண்ணங்களின் இணைப்பினின்று வேறுபட்டதாகும். கருத்தேற் றத்தில் பெருமளவு தனியாள் வேற்றுமைகள் காணப்படுகின்றன. ஆண் பெண் என்ற அடிப்படையிலும் வேறுபாடுகள் காணப்படுவ தாகவும் பொதுவாகப் பெண்கள் ஆண்களைக் காட்டிலும் அதிக அளவு கருத்தேற்றத்திற்கு உட்படுவதாகவும் ஆய்வுகள் எடுத் துக் காட்டியுள்ளன.

கருத்தேற்றத்தின் சமூகப் பயன் மிகவும் வலிமை மிக்க தாகும். பொதுமக்கள் கருத்தினை உருவாக்கிக் கருத்துப் பரப்ப லின் வழி அதனைப் பரப்பி மக்களின் மனப்போக்கையும் நடத்தை யும் மாற்ற விழையும் சமூகச் சரித்திர, சமய, அரசியல், சீர்திருத்த வாதிகள் கருத்தேற்றத்தின் மூலமாகவே தங்களின் முயற்சியில் வெற்றி காணுகின்றனர். இக் கருத்தேற்றத்தின் மூலமாகவே மனிதன் ஒரு சமூகமாக ஒன்றி வாழ்கின்றான் எனச் சமூக உள வியலாளர்கள் கருதுகின்றனர்.

ஒன்றிய உணர்ச்சியைப் பற்றிய அறிவியற் பாங்கான விளக் கங்கள் இன்னும் வரவில்லை. சிலர் இதனை நிலைவழிக் கட்டுப் படுத்துதலின் வழி விளக்க முற்படுகின்றனர். ஆனால் பிற்கால ஆசிரியர்கள் தூண்டல், துலங்கல் அமைப்பில் இதனை விளக்கு கின்றனர். பாவிப்பு நடத்தைப் பயன் விளைப்பதாக அமைவதா லேயே கற்கப்படுகின்றது என்பது இவர்களின் கருத்து. உணர்ச்சி வயப்பட்ட அளவிலும் பாவிப்பு நடத்தை நிகழ்வதை விளக்க ஒருசில அறிஞர்கள் முயன்றுள்ளனர்.

சிரிப்பு உடல் வாகு நோக்கத்தில் தோன்றுவதால் இதனைப் பற்றி விளக்கம் தருவது சிறிது கடினமாக இருக்கின்றது. சிரித்தல் என்னும் பண்புப் பிறப்பினாலேயே மனிதனுக்குக் கிட்டு கின்றது எனினும் அவனது அறிவு வளர்ச்சியும் அனுபவமும் அதனைச் சிறப்பிக்கின்றன.

காண்ட் என்பார் சிரிப்பின் தோற்றம் பற்றிக் கூறும்போது சிக்கலான மன அழுத்தம் மிக்க ஒரு பிரச்சினையை நாம் எதிர்ப் பார்த்துக் கொண்டிருக்கும்போது அது ஒன்றும் இல்லாததாய்ச் சட்டென மாறிவிடும்போது திடீரெனச் சிரிப்புத் தோன்றுகின் றது என்று கூறுகின்றார். லிப்ஸ் என்பார் பிரச்சினை மிக்க அழுத்தமான ஆழமான மனோ நிலையிலிருந்து திடீரென இலகு

வான கனமற்ற நிலைக்கு ஒரு செயல் நம்மை மாற்றும்போது அங்கே சிரிப்புத் தோன்றுகின்றது என்று கூறுகின்றார். சிரிப்பு என்பது சற்றும் எதிர்ப்பாராதவிதமாக ஏற்படுவது.

பிராய்டைப் பொறுத்தவரை மனிதனிடம் தோன்றுகின்ற சிரிப்புகள் யாவும் இங்ஙனம் மன அழுத்தங்கள் திடீரென விடுதலைபெற்று வெளிவருவதனாலேயே விளைவதாகும்.

சிரிப்பு என்பது மனித சமூகத்துக்கே உரிய ஒன்றாகும். மனித இனம்தான் சிரிக்கின்றது. மனித இனம்தான் மனிதனுக்குச் சிரிப்பை வரவழைக்கின்றது. நாம் மனம் விட்டுச் சிரிக்கும்போது நம்முன் நிற்கும் நம் எதிரியும் நம்மோடு சேர்ந்து சிரிக்கின்றார். இதுவன்றியும் சிரிப்புக் கவலையைப் போக்கும் அருமருந்தாகும். கவலையை மறந்து நாம் சிரிக்கக் கற்றுக்கொள்ளும் போதே நம் வாழ்வில் முன்னேற்றத்தைக் காண்கின்றோம்.

# 7. குழுவும் குழு வாழ்க்கையும்

குடும்பம் அல்லது அலுவற்குழுப் போன்ற குழுக்கள் சமூகத்தின் அலகுகள் ஆகும். அவற்றினுள்ளே உலகின் பெரும்பாலான அலுவல்கள் நிறைவேற்றப்படுகின்றன. ஒரு சமூக அமைப்பின் இன்றியமையாத அனைத்தினையும் குழுக்கள் கொண்டுள்ளன ஒன்றினையொன்று சார்ந்த கூட்டுறவு, வேலைப் பங்கீடு, இலட்சியங்களைப் பங்கிடுதல் வரம்புகள் போன்றவற்றையும் கட்டுப்பாடு தலைமை போன்ற செயல்களையும் குழுக்களில் நாம் காண்கின்றோம். பரந்த சமூகப் பரப்பினின்று மனிதனின் சமூகத் தன்மை, குடும்ப உறுப்பினர், நண்பர், கூட்டாளிகள் ஆகியவர்களுடன் ஏற்படும் அன்றாடத் தொடர்புகள் மூலமாகவே தனியன்களை அடைகின்றன என்று கருத ஆதாரம் உள்ளது. இதன் காரணமாகவே அண்மைக் காலத்தில் குழுக்களைப் பற்றிய விரிவான ஆய்வு செய்வதில் அக்கறை பெருகியுள்ளது.

மேலும் குழுக்களின் செயல்முறைகளைப் பற்றி நாம் அதிகம் அறிய வேண்டியுள்ளது. ஒவ்வொரு குழுவிலும் தனித் தன்மை இருப்பதனை நாம் காண்கிறோம். அடுத்தடுத்துள்ள இரு பள்ளிகள் ஒன்றுபோல் இருப்பதில்லை; ஒன்று அமைதியாகவும், முயற்சி மிக்கதாகவும் காணப்படுகிறது; அடுத்தது பிரச்சினை மிக்கதாகவும், ஒழுக்கம் குறைந்ததாயும்; காணப்படுகிறது. ஒரே தொழிற்சாலையில் உள்ள தொழிற் பிரிவுகள் கூட ஒன்றினின்று ஒன்று மாறுபட்டதாகவே உள்ளது. ஒரு பகுதியில் பூசல்களும், வேலையினைவிட்டு நீங்குதலும், தொழிலுக்கு முறையாக வராமையும் வேறொரு பிரிவினில் இருப்பதைக் காட்டிலும் மிக அதிகமாகக் காணப்படுகின்றன. இத்தகைய வேறுபாடுகள் அவ்வக் குழுக்களின் உறுப்பினர்களது தன்மைகளின் அடிப்படையில் மட்டும் அமைவதில்லை; வேறு வகையிலும் அமைவதாக இருக்கின்றது. இப் பிரச்சினைகளுக்கு ஏற்ற ஒரு தீர்வினைக் காணவும் நாம் சமூக உளவியல் குழுக்களைப் பற்றியும் குழு வாழ்க்கையினைப் பற்றியும் அறியவேண்டும்.

குழுக்கள்

சமூக உளவியலில் சமூகம் என்பது எண்ணற்ற தனி மனிதர்களைக்கொண்டு அமைவது என்றும், சமூக நடத்தை அந்த எண்ணற்ற தனியவர்கள் ஒருவரோடொருவர் தொடர்பு கொண்டு செயல்படுவதில் விளையும் நடத்தை என்றும் முன்னர் கண்டோம். இங்கே குழுக்களும் கூட்டங்களும் (crouds) எங்ஙனம் சமூக நடத்தைக்கு வழி செய்கின்றன என்றும் குழு நடத்தை, கூட்ட நடத்தை எங்ஙனம் தனியவனின் நடத்தையைப் பாதிக்கின்றன என்றும் காண்போம்.

மனிதன் சமூக விலங்காக வாழ்வதற்கான காரணிகளும், மனிதனைச் சமூகமாக வாழ வைக்கின்ற காரணிகளும் இங்கே குழு வாழ்விற்குத் தேவை என்று கொள்ளலாம். மேலும் குழு வாழ்க்கை எங்ஙனம் தொடங்கியது என்ற வினாவுக்குச் சமூக வாழ்க்கை எங்ஙனம் தொடங்கியது என்ற வினாவுக்கான விடையையே இங்குத் தரலாம். எனவே, குழு வாழ்க்கையின் தோற்றமும், அமைப்பும் சமூக வாழ்க்கையின் தோற்றத்தையும், அமைப்பையும் ஒத்து இருக்கின்றன.

எனினும் சமூக உளவியலாளர்கள் குழு வாழ்க்கை தோன்றியதற்கான காரணங்களை விளக்கும்போது விலங்குகளைப் போன்றே மனிதனும் தன்னிறைவு பெறவேண்டும் என்பதற்காகக் கூடி வாழத் தொடங்க அது குழு வாழ்க்கையாகப் பரிணமித்தது என்றும், மனிதன் பிறப்பினாலே கூடி வாழும் தன்மை படைத்தவன், அவனால் தனித்து வாழ இயலாது என்பதால் குழுவாக வாழக கட்டுப்படுத்தப்படுகிறான் என்றும், குழு வாழ்க்கை என்பதே உளவியல் அடிப்படையில் தோன்றியது என்றும் மூன்று வகைக் கூற்றுக்களைக் குழு வாழ்க்கைத் தொடங்கியதற்கான காரணிகள் எனக் கூறுகின்றனர். குழு வாழ்க்கை எனும் சொல்லை இங்கு நாம் பயன்படுத்தும்போது எண்ணற்ற உறுப்பினர்கள் ஒன்றுகூடி இருக்கும் ஒரு சூழ்நிலைப்பட்ட வெளிச் செயலை மட்டுமில்லாது எண்ணற்றோர் ஒருவரோடொருவர் உள வழித் தொடர்பு கொண்டு ஒன்றிணைந்து வாழும் உளவாழ்க்கையையும் அதாவது உளவியல் வாழ்க்கையையும் இங்கு நாம் குழு வாழ்க்கை என்ற சொல்லால் குறிப்பிடுகின்றோம்.

மனிதக் குழு

மனித இனத்தைத் தவிரப் பிராணி இனங்களில் கூடக் குறிப்பாகத் தேனீக்கள், எறும்புகள் போன்றவற்றிடம் குழு வாழ்க்கைக் காணபபடுகின்றது. மனிதக் குழுவில் மட்டுமே ஒரு தனியன் குழுவின் நடவடிக்கைகளால் தன் ஆளுமைத் தன்மை

யில் மாற்றம் பெறுகின்றான் என்பதாலும், ஏனைய பிராணி இனங்களின் குழுக்களில் தனி விலங்குக்குக் குழுவினால் அவ்வளவு மாற்றம் ஏற்படுவதில்லை என்பதாலும் சமூக உளவியல் மனிதக் குழுக்களை மட்டுமே எடுத்துப் பேசுகின்றது.

மனிதன் சுதந்திரமானவன் என்றாலும் தன்னிறைவு பெற்றவன் அல்லன். மிருகங்களோடு ஒப்பிடும்போது அவன் உதவியற்றவன். எப்போதுமே நிரந்தரமாக மற்றவர்களை நம்பி வாழ்பவன். அதாவது அடிப்படைத் தேவைகளும் பிறவும் குழு வாழ்வினால் மட்டுமே நிறைவேற்றப்படக் கூடியனவாய் அமைகின்றன. எனவே, தனியன் ஒரு குழுவில் இணைந்து வாழ்கிறான்.

இக் குழுவில் கருத்தேற்றம், பின்பற்றல், ஒத்துணர்வு, போன்ற சமூக இடைவினைகள் நடைபெறுகின்றன. அச்செயல்பாடுகளே குழுக்களை அமைக்கின்றன எனில் அது மிகையானதன்று. இவ்வாறு தனியன்களிடையே ஏற்படும் இடைவினை ஒரு குழுவை உருவாக்குகின்றது. அதாவது இடைவினை புரியும் இரண்டு அல்லது அதற்கும் மேற்பட்ட தனியன்கள் கூடி ஒரு சிறு சமூகக் குழுவாக அமைகின்றனர். இந்நிலையில் குழுவினை இடைவினைபுரியும் ஆளுமைகளின் ஒருமைப்பாடு என்று கூறலாம். மனிதத் தேவைகள் குழுவினாலேயே நிறைவேற்றப்படுகின்றன எனக் கண்டோம். உயிர்ப் பிழைத்தல், பாதுகாப்பு, நட்பு, அன்பு போன்ற மனிதத் தேவைகளும், அக்கறைகளும் நிறைவெய்துவதில் குழுவின் பணி இன்றியமையாததாகக் காணப்படுகின்றது. தனியாக, அடைய இயலாத இலட்சியங்களை ஒன்றுபட்ட முயற்சியின் மூலம் அடைய இயலும் என்பதினால் குழுத் தோன்றுகிறது. இதனை மனதில் இருத்திக் குழுவினை 'ஒரு தொகுதியான அக்கறைகள் கொண்டவர்களது இணைப்பு' (An association of persons having a Community of interests) என்று வரையறுத்தல் கூடும்.

இங்குக் குறிப்பிட்டுள்ள இரு வரையறைகளும் ஒன்றுக்கொன்று துணை செயப்படுவன, முரணானவையல்ல. முதல் வரையரை குழுவின் இடைவினைத் தன்மையினைக் கவனத்திற்குக் கொண்டு வருகிறது. இரண்டாவது வரையறை குழுவின் உறுப்பினர்களுக்குப் பொதுவான அக்கறைகள், நடவடிக்கைகள் ஆகியவற்றை வலியுறுத்துகின்றது. முதல் வரையறை செயல்முறையையும் (process) இரண்டாவது வரையறை உள்ளீட்டையும் (Content) சுட்டுகின்றன. இவ்விரு வரையறைகளும் ஒருங்கிணைந்து மனிதக் குழுவின் முழு வடிவை நமக்குப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

இங்ஙனம் மனிதத் தேவைகளையும், விருப்பங்களை, பாது காப்பு, உதவி, நட்பு, அன்பு போன்ற தேவைகளையும் நிறை வேற்றுவதாய்க் குழு அமைகின்றது. இத் தேவைகளைத் தனி யவன் தானாகவே நிறைவேற்றிக்கொள்ள இயலாது என்பதால் கூட்டு முயற்சியின் வழியாகக் குழு தோன்றுகின்றது. ஆக, குழு என்பது சமூகத் தேவைகளை நிறைவேற்ற மனிதர்கள், ஒன்று கூடிச் செயல்படும் ஓர் அமைப்பு ஆகும். இதன் முக்கியத்துவத் தைப் பாரதியின் 'கூடித்தொழில் செய்' என்ற ஆத்திசூடி வலி யுறுத்துகிறது. குழுவில் வாழ்க்கையின் தேவையை நிறை வேற்றும் முறையும், குழுவின் பணிகளும் அடங்கியுள்ளன.

குழுவானது மக்கள் கூடிய எண்ணிக்கைத் தொகுதியன்று. பொதுவான நோக்கங்கள் இருப்பதன் பயனால் ஏற்பட்ட—திட்ட வட்டமான வடிவமைப்புக்கொண்ட உறவு முறைகளில் அமைந்த தனியவர்களது ஓர் அமைப்பே குழு எனப்படும். குழுவின் உறுப்பினர்கள் ஒரு குறிப்பிட்ட அமைப்பிற்கு ஏற்றவகையில் செயலுறும் நிலையிலேயே குழுவினைப் பற்றிப் பேசுகிறோம். பொதுவான அக்கறைகளைக் கொண்டுள்ள தனியன்கள் இடை வினைபுரியும் ஓர் உளவியற் பரப்பினையே குழு என்று குறிக்கின் றோம். இத்தகைய உறுப்பினர்கள் ஒரே பண்பாட்டினைக் கொண்டவர்களாயும் காணப்படுகின்றனர்.

## குழுவின் தன்மைகள்

குழு என்றாலே பலர் கூடிச் செயல்படுவதைக் குறிக்கின்றது. இந்தக் குழுவில் ஒத்த குறிக்கோளும், ஒருமித்த செயற்பாங்கும், ஒரே வகையான வேலைத் தன்மையும் அவசியமாக இருக்க வேண்டும். கருத்து வேறுபாடு கொண்டவர்கள் ஒரு குழுவாக இணைந்து செயல்படலாம் எனினும் அக் கருத்து வேறுபாடுகள் முற்றிலும் எதிர்மாறாக அமையும்போது ஆங்கே அவர்கள் ஒரு குழுவாக இணைந்து செயல்படல் இயலாது. ஒரேவகைக் கருத்துக் களைக் கொண்டவர்களே குழுவாக இணைந்து செயல்பட இயலும். எனவே, குழு வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாத தன்மை களாக ஒன்றிய கருத்துப்பாடு, ஒத்த மன நோக்குகள், ஒத்த மனப் போக்குடன் செயல்படும் தன்மை போன்றவை இன்றியமை யாதன என்று கருதப்படுகின்றது. குழு வாழ்க்கைக்கு, இன்றி யமையாத இரண்டாவது தன்மை நம்பிக்கையாகும். குழு உறுப் பினர்கள் அனைவரும் ஒருவருக்கொருவர் நேர்மையாகவும், ஒருவர் நடத்தையில் மற்றவர் நம்பிக்கை உள்ளவராகவும் குழுவின் செயல்களில் கட்டுப்பாடும், நாணயம் மிக்கவராகவும் எங்நிலை வரினும் குழுவின்பால் உறுதியான பற்றினைக் கொண்டுள்ள வராகவும் இருத்தல் குழு வாழ்வுக்கு இன்றியமையாதனவாகும்.

சமூக உளவியலார் குழுவை ஓர் அடிப்படை அலகாக (basic unit) எடுத்துக்கொண்டு சமூகப் பிரச்சினையை ஆராய்கின்றனர். அங்ஙனம் அவர்கள் குழு ஒன்றினை அடிப்படை அலகாக நிர்ண யிக்கும்போது கீழ்க்கண்ட குணங்கள் ஒவ்வொரு குழுவிடமும் காணப்படவேண்டியது இன்றியமையாதன ஒன்று கருதுகின் றனர்.

## சார்புத் தன்மை (Inter-dependence)

ஒருவருக்கொருவர் சார்ந்து இருத்தல் மனிதக் குழுவில் காணப்படுகின்ற அடிப்படையானதும் மிகவும் முக்கியமானது மான செயல் முறையாகும். ஒருவருக்கொருவர் சார்ந்திருப்பதை விடச் சார்புத்தன்மை மனிதக் குழுவில் மிகவும் முக்கியத்துவம வாய்ந்தது. சார்ந்திருத்தல் என்பது எந்தவிதக் கவனமுமின்றிக் குழந்தை தன் தேவைகள் அனைத்திற்கும் தன் தாயினைச் சார்ந் திருப்பதற்கொப்பாகும். ஆனால், உள்ளிடைச் சார்புத் தன்மை என்பது இன்னும் சிறந்ததும் ஒரு படி மாறுபட்ட பொருளிலும் பயன்படுத்தப்படுகின்றது. இதை நாம் கனவன் மனைவிய ரிடையே காணப்படுகின்ற சார்புத் தன்மைக்கு ஒப்பிட்டுக் கூறலாம். கனவனும் மனைவியும் எந்தவிதக் கவனமும் இன்றிக் குழந்தையைப்போல் தங்களது எல்லாத் தேவைக்கும் கனவன்–மனைவியையோ, மனைவி–கணவனையோ சார்ந்திருக்காது. அவசிய மான தேவைகளுக்கு மட்டுமே ஒருவர் மற்றவரைச் சார்ந்திருப்ப தாகவும், ஒருசில விஷயங்களில் ஒருவர் மற்றவருக்குச் சார்புத் தன்மைக்கு ஏற்ற பொருளாக அமைவதாகவும் காணப்படுகின் றனர். மேலும், சார்புத்தன்மையில் நேரடித் தொடர்பு மிகவும் இன்றியமையாததாக அமைகின்றது. ஆனால் உள்ளிடைச் சார் புத் தன்மையில் அது அங்ஙனம் இன்றியமையாததாக அமைவ தில்லை. உதாரணமாகக் காலை உணவின்போது தன் உண வோடு காப்பியைத் தன் வீட்டில் அருந்துகின்ற ஒருவன் காப்பித் தோட்டத்தில் வேலையாற்றுகின்ற பணியாளை நம்பியிருக்கின் றான். அவ் வேலையாளோ காப்பி குடிப்பவன் தருகின்ற பணத்தை நம்பி வேலை செய்ய முற்படுகின்றான். இந்த உள்ளிடைச் சார்புத் தன்மையில் இங்ஙனம் தொடர்பு, நேரடியாக அன்றி மறைமுக மாகவே பெரும்பாலும் நிர்ணயிக்கப்படுகின்றது.

குழுவின் சார்புத் தன்மைச் செயல்பாடுகளில், தன்னால் இயலக் கூடிய–தனது செயல்பாட்டுத் திறமைக்கும் தகுதிக்கும் ஏற்ற தன்னால்தான் செய்ய முடியும் என்று நம்பிவிடப்பட்ட வேலை களை, ஒருவன் ஏற்றுச் செயல்படுகின்றான். அவனது வேலையின் தன்மையையும், சிறப்பினையும், வெற்றியையும் நம்பி மற்றவன்

செயல்படத் தொடங்குகின்றான். முதலாமவனே மூன்றாவது மனிதனின் செயல்பாட்டில் நம்பிக்கை வைத்துத் தன் பணியை ஆற்றுகிறான். இங்ஙனம் குழுவின் பணியில் உள்ளிடைச் சார்புத் தன்மை மிகவும் இன்றியமையாததொரு பண்பாக அமைகின்றது.

## சமூகக் கட்டுப்பாடு (Social Control)

பெரும் குழுககளில் குழு நபர்கள் அனைவருமே குழுவின் கட்டுப்பாடுகள், சட்ட திட்டங்களால், கட்டுப்படுத்தப் பெறுகின்றனர். குழுவின் செயல் தன்மையையும் அடையும் இலக்கினையும் ஆராய்ந்து, அவ் வழியில் சிறந்த செயல்பாட்டுத் தன்மைக்காகக் குழு உறுப்பினர்கள் இவ்வாறுதான் நடந்து கொள்ளவேண்டுமென்று ஒருசில சட்டதிட்டங்களைக், கோட்பாடுகளைக் குழு நிர்ணயிக்கின்றது. இந்தச் சட்டதிட்டங்கள், கோட்பாடுகள், குழு உறுப்பினரின் நடத்தைகளைக் கண்காணித்துக் கட்டுப்படுத்துகின்றன. இக் கட்டுப்பாடுகள், கட்டாயமாகச் செய்யப்பட வேண்டியவை, கடைப்பிடிக்கப்பட வேண்டிய விதிகள், செய்யக்கூடாதவை, ஒதுக்கப்படவேண்டிய பிரச்சினைகள், குழுவின் செயல்பாட்டில் ஒத்துக்கொள்ளப்படுகின்ற செயல் தன்மைகள், குழுவின் நடவடிக்கைகளினின்று ஒதுங்கி அமையும் செயல்கள் போன்றவற்றை விளக்குவனவாய் அமைகின்றன. இச் சட்டதிட்டங்கள், கட்டுப்பாடுகள் குழு வாழ்விற்கு வேண்டிய இரு முக்கியமான நன்மைகளைக் கருதி அமைகின்றன

(i) குழு உறுப்பினர்களுக்கு ஒருசில விதிகளை அளிப்பதன் மூலம் குழு உறுப்பினரின் நடத்தையினால் குழு எதிர்ப்பார்க்கின்ற விளைவுகளை விளக்கிக் குழுவின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துகின்றன.

(ii) அச் சட்டதிட்டங்கள் குழுத் தன் நோக்கினின்று ஒதுங்கிவிடாது, அல்லது தன் முயற்சியினின்று பின் தங்கிவிடாது தொடர்ந்து செயல்பட வைக்கும் பாதுகாப்பு அமைப்பாக அமைகின்றது. இச் சமூகக் கட்டுப்பாடுகள் குழுவின் செயல்களைப் பொறுத்தும் அதனது இலக்குகளைப் பொறுத்தும் அமைகின்றன.

## செயல்பாட்டிசைவு (Consensus)

சமூகக் கட்டுப்பாட்டில் தனித் தன்மைக்கும் சுதந்திரமான செயல்களுக்கும் இடம் இல்லை என்று கண்டோம். எனினும் குழுவின் நோக்கம் பொதுவாக இருக்கும்போது, தனியவனுக்கு, அங்

நோக்கத்தின் ஒரு பகுதி செயல்பட வேண்டியதாய்ப் பிரித்து விட்டிருக்கும்போது இங்கே குழு அந்த ஒரு பகுதியின் பாற்பட்ட செயலைப் பொறுத்தவரை அவனுக்குத் தனித் தன்மையையும் சுதந்திரத் தன்மையையும் அளிக்கிறது. இவ் வகையில் தனியவன் தனது தனிப்பட்ட உந்துகளுக்கும், ஆளுமைத் தன்மைக்கும் ஏற்ற வேலைகளைப் பெறுகின்றான். இங்கே குழுவின் சட்ட திட்டங்களுக்கும், கட்டுப்பாடுகளுக்கும் பயந்து தனியவன் தன்னை ஒப்புக் கொடுப்பதாகவோ அல்லது கீழ்ப்படிந்து தடைகளை ஒத்துக்கொள்வதாகவோ அமையாது. அவனது செயலைப் பொறுத்தவரை ஒருசில எதிர்ப்பார்ப்புகளுக்கோ உள்ளாகத் தனித் தன்மையும், சுதந்திரத்தன்மையும் கொடுக்கப்பட்டிருப்பதால் அந்தச் செயல்பாட்டிசைவின் காரணத்தினால்–தனியவன் சட்ட திட்டங்களையும், கட்டுப்பாடுகளையும், பொது நோக்குகளையும் ஏற்றுத் தனது துன்பங்களையும், உணர்வுகளையும் அவற்றுக்கேற்பச் சரிப்படுத்திக்கொண்டு குழுவின் வெற்றியே தன் வெற்றி என்ற நோக்கில் செயல்படுகின்றான். இங்கே தனியவன் தனது சொந்த விருப்பங்களையும், ஆவலையும் குழுவின் வெற்றியோடு ஒன்றுபடுத்திக்கொண்டு குழுவின் விருப்பமே தனது விருப்பமெனவும், குழுவின் நோக்கமே, தனது நோக்கமென்றும் எடுத்துக்கொள்கின்றான். இங்ஙனம் செயல்பாட்டிசைவின் மூலம் ஒரு குழுவின் உறுப்பினர்கள் அனைவரும் தாங்கள் கட்டுப்படுத்தப்படுகின்றோம் என்ற உணர்வின்றியே செயல்படுகின்றனர். எனவே, குழுவின் இன்றியமையாத குணமாகச் செயல்பாட்டிசைவு வேண்டப்படுகின்றது.

**குழுக்களின் வகைகள்**

குழுக்களை நாம் (i) அகக்குழு–புறக்குழு, (ii) முதல்நிலைக் குழு–இரண்டாம் நிலைக்குழு என்ற இருவகை அடிப்படையில் பிரிக்கலாம்.

(i) அகக்குழு–புறக்குழு (In groups *vs* out groups)

அகக்குழு, நம் குழு என்றும் அழைக்கப்படுவதுண்டு. இவர் நம்மவர், இவர் நம் குழுவைச் சேர்ந்தவர், இவர் நம்மைப்போன்று மனப்போக்கு உடையவர், இவர் நம்மை மாதிரி மனிதர் எனும் உணர்வுகள் நாம் சந்திக்க நேரிடுகின்ற ஒருசிலரிடையே நமக்கு எழுகின்றது. இதுவே அகக் குழு என்ற வகையில் நாம் ஒரு சிலரை நம் குழுவினராய் ஏற்றுக்கொள்ள வைக்கின்றது. அகக் குழு அல்லது நம் குழுத் தொடர்புகளை நாம் வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் இயல்பாகக் காணலாம். சென்னை மாநிலக் கல்லூரியில் படித்தவனுக்கு அக் கல்லூரியில் இதற்கு முன் படித்தவர்களும், அவனோடு படித்தவர்களும், அவன் வெளியேறிய பிறகு

படிப்பவர்களும் ஒரு குழுவினராய் அமைகின்றனர். அவர்களை அவன் தனித்துக் காணும் நேரங்களிலெல்லாம் அவன் அவர்களை ஓர் அகக்குழுப் பிரதிநிதியாகக் கருதியே செயல்படுகின்றான். அகக் குழு உணர்வையே நாம் நம் குடும்பங்களின் தொடர்பாலும், ஊர், நாடு, மொழி, சமயம், அரசியல் கட்சிகள் போன்றவற்றின் வழியிலும் காண்கிறோம்.

அகக்குழு உறுப்பினர்கள் தம் குழுவினருக்காக எதையும் செய்பவர்களாகக் காணப்படுகின்றனர். ஒருவகையில் இவர்களின் நோக்கம் சுயநலத்தின்பால் பட்டாலும் மறுவகையில் அது பொது நலம் பயப்பதாகவே அமைகின்றது. வேறு ஒரு நாட்டில் சந்திக்கின்ற ஒரே நாட்டவர் விரைவில் நண்பர்களாகின்றனர். ஒருவரையொருவர் நம்பிச் செயல்படுகின்றனர். அவர்களைப் போன்றே அந்நிய நாட்டில் தடுமாறும் அவர்களின் நாட்டவரை ஒருங்கு சேர்த்து ஒரு குழுவாக உருவாக்குகின்றனர். இங்கே அகக்குழு ஊக்கம் சுயநலத்தின் பாலன்றிப் பொது நலத்தின் பாலே நன்மை பயப்பதாய் அமைகின்றது.

புறக்குழு (Out groups): புறக்குழு என்று தனியாகக் குழுக்கள் ஏதும் இல்லை. ஒரு குழுவைச் சேர்ந்தவர்கள் அக்குழுவினைச் சேராத மற்றவர்களைப் புறக்குழுவினர் என்று கருதுகின்றனர். மற்றவர்களும் இவர்களைப் புறக்குழுவாகக் கருதுகின்றனர். எனவே, அகக்குழுத் தன்மையில் அடங்காத அனைவரும் புறக்குழுவாகக் கருதப்படுகின்றனர். ஒரு மொழி பேசுபவர்கள், ஓரினத்தைச் சேர்ந்தவர்கள், பிற மொழியாரை, பிற இனத்தவரைக் காணும்போது அவர்கள் புறக்குழுவினர் என நினைத்து ஒதுங்கிச் செல்லுகின்றனர். அவர்கள் சந்தித்து உரையாட நேர்ந்தாலும் ஒருசில விஷயங்களில் மிகவும் ஒன்றிச் செயல்பட வற்புறுத்தப் பட்டாலும் ஏதோ கடமைக்காக இணைந்து செயல்படுவர்களே ஒழிய அத்தகைய ஒரு மனப்பிடிப்பு அவர்களிடையே ஏற்படுவதில்லை. ஆனால், அதே நேரத்தில் ஒரு மொழி பேசுபவன் தன் மொழி பேசும் ஒருவனைக் காணும்போது அவனுக்கும் தனக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லாத நேரத்திலும்கூட அத் தொடர்பு அவசிய மற்றது, கூடாது என்ற நிலையில் இருந்தாலும்கூட, இவன் அவனோடு நம்மைச் சேர்ந்தவன், நம் மொழியைப் பேசுபவன், என்ற நம்மவன் உள்ளுணர்வில் தொடர்பு கொள்ளுகின்றான்.

(ii) முதல்நிலை, இரண்டாம்நிலை குழுக்கள் (Primary and Secondary groups)

கூலி (Cooly) என்பார் முதல்நிலைக் குழுக்களைப்பற்றிக் கூறும்போது நேருக்கு நேர் தொடர்புடைய கூட்டமைப்பில்,

ஒத்துழைப்பில் நெருங்கிய உறவினை உடையவர்கள் முதல்நிலைக் குழுவினராக மாறுகின்றனர் என்று கூறுகின்றனர். பக்கத்து வீட்டுக்காரர், விளையாட்டுக் குழுவில் உடன் விளையாடுபவர், ஒரு கிராமத்தைச் சேர்ந்தவர் போன்றவர்கள். முதல்நிலைக் குழுவினராய் அமைகின்றனர். இக் குழு உறுப்பினர்களின் இடைவினைகள் நேரடியானவைகளாகவும், நேருக்கு நேரானவையாகவும், சொந்தமானதாகவும் காணப்படுகின்றனர். மனிதர்களைச் சமூக வாழ்விற்கும் ஒற்றுமையான அமைப்பிற்கும் தூண்டுவதாகவும் சமூகப் பாரம்பரியத்தினைக் காப்பதாய் அமைவதாகவும் காணப்படுவதால் முதல்நிலைக் குழு மனித சமூகத்தில் முக்கியத்துவம் மிக்கதாய் விளங்குகிறது.

**இரண்டாம் நிலைக் குழுக்கள்**

இத்தகைய குழுக்களில் நெருங்கிய தொடர்பற்ற மறைமுகமாகத் தொடர்பு கொண்டுள்ள உறவு முறை நிலவுகிறது. பள்ளி, கல்லூரி, அரசியல் கட்சிகள், ஒரு குறிப்பிட்ட வேலையில் செயல்படும் குழுக்கள், சமயக் குழுக்கள், தொழிற் சங்கங்கள் போன்றவை இரண்டாம் நிலைக் குழுக்களாக அமைகின்றன. முதல்நிலைக் குழுவில் நாம் உறுப்பினர் தன்மை (membership) நமது இசைவின்றியே ஏற்பட்டுவிடுகின்றது. ஆனால் இரண்டாம் நிலைக் குழுவில் நாமாகவே முன்வந்து குழுவில் உறுப்பினராக மாறவேண்டியுள்ளது. முதல்நிலைக் குழுவில் தொடர்புகள் அன்பு, உணர்ச்சித்தன்மை போன்றவற்றால் கட்டுண்டிருக்கும் போது இரண்டாம்நிலைக் குழுவில் தொடர்புகள் அறிவு சார்ந்ததாகவும் புறத்தன்மையானதாகவும் அமைகின்றன.

அகக்குழுவும், புறக்குழுவும் முதல்நிலைக் குழுவாகவோ அல்லது இரண்டாம்நிலைக் குழுவாகவோ அமையலாம். இதனைப் போன்றே முதல்நிலைக் குழுவும், இரண்டாம்நிலைக் குழுவும் அகக் குழுவாகவோ அல்லது புறககுழுவாகவோ இருக்கலாம். நமது குடும்பம் நம்மைப் பொறுத்தவரை அகக் குழுவையும், முதல் நிலைக் குழுவையும் சேர்ந்திருக்கின்றது. பக்கத்து வீட்டு நண்பர் நம்மைப் பொறுத்தவரை புறககுழுவிலும் ஆனால் அதே நேரத்தில் முதல் நிலைக் குழுவாகவும அமைகின்றனர். எனவே, குழுவின் பகுப்புகள் அனைத்தும் ஒவ்வொரு விதமான கண்ணோட்டத்தின் பால் அமைவதென்றும் ஒரு நோக்கு மற்றொரு நோக்கத்தின் பால் அடங்குவதாய் இருக்கலாம் என்றும் நாம் அறியலாம்.

**குழுமனம்** GROUP MIND

தனித்தனியே செயல்படும் ஒரு குழுவின் உறுப்பினர்கள் ஒன்றி ஒரு குழுவின் நோக்கத்திற்காகச் செயல்படும்போது அவர்

களின் மனோநிலை பாதிக்கப்படுகின்றது. உறுப்பினர் அனைவரும் தத்தம் தனிக் குணங்களையும், அறிவையும், ஆளுமைத் தன்மையையும் ஒதுக்கிவைத்து அக் குழுச் செயல்பாட்டினால் ஏற்படும் குழு மனத்தின் செயல் தன்மையில் கவரப்பட்டு-அதற்கேற்பவே செயல்படுகின்றனர். இப்போது எண்ணற்றோர் கூடியுள்ள ஒரு குழுவில் ஒரே ஒரு மனம் தோன்றிச் செயல்படத் தொடங்குகின்றதென்றும், அக் குழு மனத்தின் தன்மைகளுக்கேற்பவே குழு உறுப்பினர்கள் செயல்படுகின்றனர் என்றும், அக் குழு மனம் அக் குழுவின் உறுப்பினரது தனித்தனி மனங்களினின்று வேறுபட்டதாகவும், அக் குழு உறுப்பினர்களது மனங்களின் கூட்டுத் தொகுதிக்கு அப்பாற்பட்டதாக அமைவதாகவும்-அக் குழுமனமே அக் குழுவின் நடவடிக்கைகள் அனைத்திற்கும் காரணமாக அமைகின்றது என்றும் சமூக உளவியலாளர்கள் கருதினர். இதுபற்றிய விபரத்தை இங்கு நாம் சிறிது காண்போம்.

குழுக்கள் உருவாகும் தன்மையினை ஆராய்வது சமூக உளவியலின் முக்கியமானதோர் பிரச்சினையாகக் காணப்படுகின்றது. இதனை இரு வேறுபட்ட கோணங்களினின்று உளவியலாளர்கள் அணுகிக் குழு உருவாகும் தன்மையினை விளக்க முயன்றுள்ளனர். முதற் கோணத்தில் குழுவாக இயங்கத் தேவைப்படும் குணங்களும் இன்றியமையாத பண்புகளும், தேவைகளும் ஒன்று சேர்ந்து குழுவாக மாறுகின்றது என்று ஒருசிலர் கருதுகின்றனர். அதாவது தேவையே குழுவை ஏற்படுத்துகின்றது என்பது இவர்களின் கருத்தாகும். மற்றொரு கருத்து ஒருசில தனியவர்களின் கூட்டு முயற்சியில் தாங்களாகவே விரும்பிச் செயல்பட்ட அமைப்பின் வழித் தோன்றியது குழு என்பதாகும். இவ்விரு கருத்துகளும் ஓரளவுக்கு உண்மைகளைப் பெற்றிருப்பினும் அவை ஒரு சார்பாய் அமைவதால் எண்ணற்றோர்களால் மறுக்கப்படுகின்றன. முதல்நோக்குத் தனியவனின் முக்கியத்துவத்தைக் குறைத்து மதிப்பிடுகின்றது. இரண்டாவது நோக்கோ தனியவனின் தனித் தன்மைதான் குழு என்று சுட்டிக் காட்டுகின்றது. இவ்விரு கூற்றுகளும் உண்மையே என்றாலும் குழுத் தேவைகளினால் மட்டும் அமைவதில்லை என்பதும், தனியவர்களின் தனித் தன்மையினால் மட்டும் ஒரு குழுத் தோன்றி விடுவதில்லை என்பதும், இக் கூற்றை ஒருதலைச் சார்புடையது என்று கருத வைக்கின்றது.

சமூகக் குழுக்கள் தனியன்களின் தனித்தன்மை இன்றி நிலைத்திருத்தல் இயலாது. அதே நேரத்தில் தனியன்களைச் செங்கற்களாகவும் குழுவினை அக் கற்களைக் கொண்டு எழுப்பப்

பட்ட கட்டடமாகவும் கருத இயலாது. எனவே, குழுவின் அமைப்பினைப் புதியதோர் உள்ளமாகக் கருத வேண்டிய நிலையும், தேவைகளுக்கும், தனித்தன்மைக்கும் அப்பாற்பட்டு அமைவதாக எண்ணவேண்டிய நிலையும் ஏற்பட்டது. இங்கேதான் குழுமனம் என்ற கொள்கை உருப்பெறத் தொடங்கியது.

மாரிஸ் இன்ஸ்பர்க் என்ற சமூக இயல்பேராசிரியர் குழுமனம் என்ற சொல் முக்கியமான கொள்கையைக் கொண்டது எனக் குறிப்பிடுகின்றார். அதனை நான்கு வகையாகக் கீழ்ககண்டவாறு அவர் விளக்குகின்றார்.

முதலாவதாகக் குழுமனம் என்ற தொடரினைப் பற்றி உரைக்கும்போது குழுவுக்கு அதனிடம் இல்லாத ஒரு கற்பனையான ஒருமைப்பாட்டுத் தன்மையை ஏற்றிக் கூறுகின்றோம். இந்தக் கற்பனையின் உருவாக்கத்தால் தனித்தன்மையும் குழுவின் இன்றியமையாத பண்புகளும் அவ்வளவாக மதிக்கப்படுவதில்லை. அதே நேரத்தில் ஒரு குழுதோன்றுவதற்கு இன்னின்ன பண்புகள் தான் இருக்கவேண்டுமென்று வரையறையும், அக்குழுவில் உறுப்பினராகச் சேர இத்தகையத் தகுதிகளை உடைய தனியன்களே வேண்டுமென்ற எண்ணமும் திரிந்து எந்தத் தேவைக்கும் எந்த விதத் தனித்தன்மையும் குறிப்பிட்ட ஆற்றல் தன்மையற்ற வரும் ஒரு குழுவாகச் சேர்ந்து செயல்படலாம் என்று எதிர்ப் பார்க்கப்படுகின்றது. குழுமனம் எனும் கொள்கை குழுவின் முக்கியப் பண்புகள், தனியனின் ஆளுமைத் தன்மைகள் போன்றவற்றின் விளைவாகவோ அல்லது கூட்டுத் தொகுதியாகவோ அமையாது அவற்றினின்று முற்றிலும் மாறுபட்டதாய் அமைவதால் எவரும் எக் குழுவிலும் சேர்ந்து அத்தகைய ஒரு குழு மனத்தின் ஆதிக்கத்தின் கீழ் செயல்படுவர் என்ற நம்பிக்கை தோன்றுகின்றது. இது குழுவின் நடைமுறைப் பண்புகளுக்கு முற்றிலும் மாறுபட்டதாய் அமைகின்றது.

இரண்டாவதாகக் குழு மனம் எனும் கொள்கை மறைமுகமாக நமக்குத் தன்னிச்சைத் தன்மையையும், சர்வாதிகாரத்தையும் நினைவூட்டுவதாய் அமைகின்றது.

மூன்றாவதாகக் குழு மனம் இறைவனின் நிலைக்கு உயர்த்தப்பட்டு,-தனியன்கள் ஒருசில ஒழுக்க நியதிகளுக்கு அடங்கி நடப்பது போன்று குழு மனத்தின் செயல்களுக்கும் அடங்குவதாய் பொருள்படுத்திக் கூறுகின்றது.

நான்காவதாகக் குழு மனம் தனியனின் தனி மனத்திற்கும் ஆளுமைத் தன்மைக்கும் அப்பாற்பட்டதாய் அமைவதால் அவன்

அக் குழு மனத்தினைப் பின்பற்றியே செயல்பட வேண்டியவனாய் அமைகின்றான். இல்லையெனில் அவன் அக் குழுவின் நடவடிக்கைகளினின்று ஒதுங்கிக்கொள்ள நேரிடுகின்றது. இக் குழு மனம் முற்றிலும் மாறுபட்டதாய் அமைவதால் தனியன் அதனைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றுகின்றானே ஒழிய, அறிவு சார்ந்த வழியில் எதையும் ஆராய்ந்து செய்ய அவன் முயற்சிப்பதில்லை. விளைவு அவன் தன் தனித்தன்மையை இழப்பதோடு ஆட்டு மந்தையில் தானும் ஓர் ஆடாய் மாறிவிடுகின்றான்.

இவ்வாறு மோரிஸ் கின்ஸ்பர்க் நான்குவகையாகக், 'குழு மனம்'—எனும் கொள்கையின் அடிப்படைப் பண்புகளை விளக்குகின்றார்.

குழு மனக்கொள்கையில் இருவகைக் கருத்துக்கோட்பாடுகள் நிலவுகின்றன. முதல்வகையில் எஸ்பினாஸ் (Espinas) போன்ற அறிஞர்களின் குழாம்,—தனியவர்களின் உள்ளங்கள் அனைத்தும் ஒரு குழுவில் ஒன்றிச் செயல்படும்போது, ஆங்கே கூட்டு மனம் ஏற்படுகின்றது என்று கருதுகின்றனர். இரண்டாவதாக ஊண்ட் (Wundt) போன்ற அறிஞர்கள் அந்தக் குழு மனம் தனியன்களது உள்ளங்களையும், ஆளுமைத் தன்மையையும், தனித்தன்மையையும் கடந்து செல்லும் உள்ளம் என்று கருதுகின்றனர்.

எஸ்பினாஸின் கருத்துப்படி குழு மனம் கூட்டு மனம் அல்லது நனவு நிலைப்பெருக்கம் (Conscious multiple) ஒன்றினைக் கொண்டுள்ளது. ஒன்றிய எண்ணங்களும் செயல்பாடுகளும் தனியன்களின் உள்ளங்களினின்று எழுந்து பிணைந்து பெருக்கமாய்த் தோன்றுகின்றது. தனியவர்களது 'தான்' என்ற உணர்வு பிறரது 'தான்' என்ற உணர்வுகளை ஒன்று கூட்டி 'நாம்' என்ற நனவு எழுவதுபோன்று இங்கே குழு மனம் எழுவதாக எஸ்பினாஸ் கருதுகின்றார். இந்த நனவு நிலை பிரிக்க முடியாத முழுமையன்று. 'நாம்' என்ற உணர்வை நாம் விரும்புகின்றபோது பிரித்துக் கொள்ளுவதனைப்போன்று குழு மனமும் பிரித்தறியக் கூடிய ஒன்றாய் அமைகின்றது.

ஊண்ட்டின் கருத்துப்படி குழு மனம் கூட்டு மனத்தினின்று மாறுபட்டதாகும். அம் மனத்தில் தனியன்களின் தனித்தன்மையுடைய மனம் சிறிதுகூடக் காணப்படுவதில்லை. அவற்றின் கூட்டு மனத்தின் தன்மைக்கு அப்பாற்பட்டதாகவும், தனியன்களின் ஆளுமைத் தன்மைகளின் கூடுதல்களுக்கெல்லாம் மாறுபட்டதாகவும், அவற்றைக் கடந்த நிலையில் இவரது குழுமனக் கோட்பாடு இயங்குகிறது.

மெக்டுகல் (McDougall) என்பார் இவ்விரு கொள்கைகளுக்கும் மாறுபட்டதாய் ஒரு கொள்கையினைக் குழு மனம் பற்றி எடுத்துரைக்கின்றார். இருவகையான பொருள்களில் அவர் குழு மனத்தினைக் குறிப்பிடுகின்றார். முதலாவதாகக் குழு மனம் என்பது ஒருவகை உணர்ச்சி நிலை என்றும் இரண்டாவதாக எந்த ஒரு தனி உள்ளத்தினுலும் அமையாது, தனக்கென ஒரு சிறப்புத் தன்மையைப் பெற்றதாயும் குழு மனம் இருப்பதாக இவர் கருதுகின்றார்.

**கூட்டம் (Crowd)**

கூட்டத்தினைப் பற்றிப் பலர் பல விதமாகப் பொருள் வரையறை செய்கின்றனர். அவ்வகையில் லீபான் (Lebon) என்பார் கூட்டம் என்ற சொல்லை மிக விரிவான பொருள்படக் கையாண்டுள்ளார். உளவியற் கூட்டத்தினை உருவாக்குவதற்கு உடலியல் தோற்றம் தேவையற்றது என்று அவர் கருதுகிறார். பல மக்களது எண்ணங்களும், உணர்ச்சிகளும் ஒரே திசையில் திரும்பி அதன் காரணமாக ஏற்படும் ஒருவகை ஒன்றுபட்ட கூட்டு உள்ளமே உயவியற் பொருளில் கூட்டத்திற்கு இன்றியமையாத தேவை என்று லீபான் கூறுகிறார்.

மார்டின் கன்வே (Martin Conway) கூடக் கூட்டம் என்ற தொடரைத் தனியாக, நனவு நிலைகொண்டு இருக்கக்கூடிய எல்லா மனிதக் குழுக்களையும் குறிக்கப் பயன்படுத்துகிறார். இதனுல் பொதுக்கூட்டங்கள் இனம், பேரரசு, நாடு போன்ற வெவ்வேறுபட்ட தொகுதிகளையும், கூட்டம் என்ற ஒரே சொல்லால் குறிக்கப்படுகின்றது. டார்டே என்பவர் கூட்டத்தையும், பொதுமக்கள் குழுவையும் வேறுபடுத்திக் காட்டுகின்றார். எனவே நல்ல சிறந்த உளவியல் முடிவுகளைப் பெற நாம் சமூகத் தொகுதிகளை முறையாகப் பகுக்க வேண்டியதாகின்றது.

தொடக்க நிலையில் நாம் சமூகத்தொகுதிகளை அமைப்புடையவை (Organized) என்றும், அமைப்பற்றவை (Unorganized) என்றும் பிரிக்கலாம். அமைப்பற்ற சமூகத் தொகுதிகளை நேரடி உடல் சார் தொடர்பு கொண்டவையென்றும், உள்ளத் தொடர்பற்றவையென்றும் பகுக்கலாம். கூட்டம் (crowd), கும்பல்கள் (mobs) போன்றவை முதல் வகுப்பைச் சார்ந்தவை. பொதுமக்கள் குழு (Public groups) இரண்டாவது பிரிவினைச் சேர்ந்ததாகும்.

இந்தப் பகுப்பில் நாம் கூட்டத்தினை ஆராய்ந்தால் கூட்டத்தினை, குழுவினின்று இலகுவாகப் பிரித்துக் காட்டுதல் இயலும்.

நாம் குழு வாழ்வினைப் பற்றிப் பார்க்கும்போது குழு வாழ்க்கை என்றும் ஓரிடத்தில் எண்ணற்றோர் குழுமிச் செயல்

படுவதால் மட்டும் ஒருகுழு வாழ்க்கைத் தொடங்கிவிடாது என்றும் கண்டோம். இங்கே குழு வாழ்விற்கு மிகவும் இன்றியமையாதது உளவழித் தொடர்பு ஆகும். உளவழித் தொடர் பற்ற குழுக்கள், குழுக்களாக அழைக்கப்படமாட்டா. மாறுகக் கூட்டம் என்று அழைக்கப்படும். எனவே, குழுவும், கூட்டமும் உளவழித் தொடர்பு என்ற கருத்தில் மாறுபட்டு வெவ்வேறான பொருளினைத் தருகின்றன. உளவழித் தொடர்பற்ற குழுக்கள் அனைத்தும் கூட்டங்களாகும். இதனைப்போன்றே உளவழித் தொடர்பு கொண்ட கூட்டங்களனைத்தும் குழுவாக மாறிவிடும்.

### குழுவும் கூட்டமே

நாம் சென்னைக் கடற்கரையில் மாலை நேரத்தில் அமர்ந்திருக்கும்போது எண்ணற்றோர் தன்னந்தனியாக வந்து மணலில் அமர்வதைக் காண்கின்றோம். இந்நிலையில் அங்கு வந்த வித்தைகாட்டி ஒருவன் தன் உடுக்கையை அடித்து ஒலி எழுப்பித் தன் பையிலிருந்த பொருள்களை எடுத்து வெளியே வைக்கத் தொடங்குகின்றான், மறுகணம் அவனைச் சுற்றித் தனித்தனியாக அமர்ந்திருந்த மக்கள் அனைவரும் ஒன்றாகக் கூடி நிற்கின்றனர். இதுவே கூட்டமாகும். இக் கூட்டத்தில் திடீரென்று யாராவது ஒருவர் மயங்கி விழுந்தால் அனைவரும் அவரது மயக்கத்தைத் தீர்க்கச் செயல்படுகின்றனர். இங்கே அம் முயற்சியில் ஈடுபடும் அனைவரின் நோக்கமும் ஒன்றாக அமைவதில், அனைவரும் அம் மயக்கத்தைத் தீர்ப்பதற்கான வழிகளை ஒருவர்பால் ஒருவர் யோசனை கூறியும், கலந்தாலோசித்தும், கருத்துமாற்றங்கள் செய்துகொண்டும், செயல்படுவதால் இப்போது அக் கூட்டம் ஒரு குழுவாக மாறத் தொடங்குகிறது. இம் முயற்சியும், திட்டமிடுதல், அடிக்கடி வெற்றிகளைப் பற்றிப் பரிசோதித்தல் போன்ற இடைவிடாத செயல்தன்மைகளும் கொண்டிருந்தால் அது ஒரு குழுவாகும்.

எனவே ஒத்த நோக்கத்தின் பால்படாத கூட்டங்கள் ஒத்த நோக்கங்களைப் பெறும்போதும் உளவழித் தொடர்பற்ற கூட்டங்கள் அத் தொடர்பினைப் பெற நேரிடும்போதும் குழுவாக மாறிவிடுகின்றன என்று கொள்ளுகின்றோம்.

கூட்டம் குழு ஆவதினைப் போன்றே குழுவும் கூட்டமாக அவ் வுளவழித் தொடர்பு அறுந்துவிடும் சூழ்நிலையில், அல்லது ஒத்த நோக்கம் முடிவெய்திவிடும் சூழ்நிலையில், கட்டளைக் கிணங்கி ஒன்றாகச் செயல்படும் வீரர்கள் அக் கட்டளை நீக்கப் பெற்றதும் ஒத்த கருத்து மாறிவிடுவதால் அவர்கள் கூட்டமாக மாறிவிடுகின்றனர். ஒரு நாட்டின் எல்லையில் போரிடும் வேளை

யில் குழுவாக இணைந்து செயலாற்றும் அவ் வீரர்கள் நாட்டின் எல்லையைக் கடந்து நாட்டிற்குள் புகுந்து அந் நாட்டினைத் தங்களது ஆட்சி ஆதிக்கத்திற்கு உட்படுத்தி வரும்போது ஒவ்வொருவரும் தத்தம் நோக்கில் செயல்படுவதால் அக் குழு கூட்டமாக மாறிவிடுகின்றது.

எனவே, கூட்டத்திற்கும், குழுவிற்கும் இடையே உள்ள ஒரே ஒரு வேறுபாடு ஒத்த நோக்கும் உளவழித் தொடர்பும் ஆகும்.

**கூட்டத்தின் செயல் தன்மைகள்**

குழுவின் உளவழித் தொடர்பற்ற எல்லாத் தன்மைகளையும் கூட்டமும் கொண்டிருக்கின்றது. கூட்டம் எண்ணற்றோர் ஓரிடத்தில் கூடியிருக்கும் ஒரு கூட்டு ஆகும். ஆங்கே அனைவரும் தனித்தனியாக நின்றே செயல்படுவர். வேடிக்கை பார்க்கும் கூட்டம், விபத்தைக் காணும் கூட்டம், போன்றவற்றில் ஒவ்வொருவரும் தனித்தனியாகவே நின்று ஒருவருக்கொருவர் நேரான தொடர்பு அற்றுச் செயல்படுவர். கூட்டம் வன்முறைப் போராட்டங்களில் ஈடுபடும்போது அதற்கென ஒரு நோக்கு இல்லாததால் கூட்டத்தினர். அனைவரும் தங்கள் தங்கள் போக்கில் செயல்படுவர். நிகழ்ச்சி நடைபெறும் இடத்தில் நிற்கும் கூட்டத்தினர், கூட்டத்தின் ஓரத்தில் நிற்கும் தனியன்களைவிட அதிகமாகச் செயல்படுகின்றனர். அக் கூட்டத்தின் வன்முறைச் செயலுக்குச் சிந்தித்துச் செயல்படும் திட்டமிட்ட நோக்கு எதுவும் அடிப்படைக் காரணமாக அமையாது,–அப்போதைக்கப்போதே எழும் உணர்ச்சிக் கட்டங்களைப் பொறுத்திருக்கின்றது. தொழிற்சாலை ஒன்றில் தொழிலாளி ஒருவனை ஏதோ அத் தொழிற்சாலை நிர்வாகி தனித்து விசாரித்துக்கொண்டிருக்கையில் ஆங்கே கூடுகின்ற கூட்டம் எந்தவித நோக்கமும் இன்றி வன்முறைச் செயல்களில் ஈடுபடவேண்டும் என்ற எண்ணமும் இன்றிக் கூடுகின்றனர். எனினும் நிர்வாகி அந்தத் தொழிலாளியை முறை தவறி நடத்துவதைக் காணும்போதும், ஏனையோர் அத் தொழிலாளிக்காகப் பரிந்து பேசுவதை அந் நிர்வாகி புறக்கணித்து மற்றவர்களின் தலையீட்டினைத் தடுக்க முயற்சிக்கும்போதும் அக் கூட்டத்தின் தன்மானம் பாதிக்கப்படுவதாகக் கருதி அவர்கள் குரலெழுப்பத் தொடங்குகின்றனர். இந்நிலை இன்னும் சிறிது மோசமாகி விடும்போது அனைவரும் வெறிகொண்டு நிர்வாகியைத் தாக்கும் பொருட்டு ஓடுகின்றனர். நிர்வாகி தப்பித்து தன் அறைக்குள் ஓடிக் கதவைப் பூட்டிக்கொள்ளும்போது வெறிகொண்ட கூட்டம் வெளியே நின்றவண்ணம் முழக்கங்களை எழுப்புகின்றனர். அல்லது வன்முறைச் செயலில் ஈடுபட்டு அவ் வலுவலகத்தைத்

தாக்கத் தொடங்கி, கண்ணாடி, மரச்சாமான்கள் போன்வறறை உடைத்துச் சேதம் விளைவிக்கின்றனர். இப்போது நிர்வாகியின் தொலைபேசிச் செய்திக்குச் செவிசாய்த்து அக் கூட்டத்தினரை அடக்குவதற்காக ஆங்கே போலீஸ் காவலர்கள் உள்ளே வரும் போது அச்சம் மிகுந்த கூட்டத்தினர் நாலா பக்கமும் சிதறி ஓடு கின்றனர்.

இங்ஙனம் கூட்டத்தின் செயல் தன்மைகள் நிரந்தரமற்றவை களாகவும் ஒரு முடிவு நோக்கிச் செயல்படு தன்மையற்று அப்போதைக்கப்போதே மாறும் மன நிலையின் அடிப்படையில் அமைவதாகவும் அமைகின்றன. இக் கூட்டக்தினர் எதையும் எளிதில் நம்பிவிடுவர். பின்விளைவுகளை எண்ணிப் பாராது செயல்படத் தொடங்குகின்றன.

கூட்டத்தின் அமைப்புநிலை மிகவும் குறைந்ததாகவே காணப் படுகின்றது. குழுச் சிந்தனையில் ஒவ்வோர் உறுப்பினரும் குறிப் பிட்ட சிந்தனைக்குரியப் பிரச்சினையைப் பற்றித் தத்தம் அனுபவத் தின் மூலம் உணர்ந்த உண்மைகளை வெளியிட்டு ஒவ்வோர் உறுப்பினரது எண்ணங்களையும் பரிமாறிக் கொள்ளும் நிலையி லேயே சிறந்த முடிவுகள் உருவாகின்றன. அம் முடிவுகள் அதே உறுப்பினர்கள் தனித்துச் சிந்திக்கும் நிலையில் தோன்றும் முடிவு களைக் காட்டிலும் மேன்மையானவையாகக் காணப்படுகின்றன. ஆனல் கூட்டநடத்தையிலோ இத்தகைய எண்ணங்கள் பரிமாறிக் கொள்வது தவிர்க்கப்படுகின்றது. பெரும்பான்மைக் கூட்டத் தினர் ஒருவர் பேசுவனவற்றிற்கு உடன்பாட்டோடு கேட்பவர் களாகவே உள்ளனர். இதனுல் கூட்டங்களின் மனப்போக்கு களை உணர்ந்த ஒருசிலர் அதன் நடத்தைகளின் மேல் ஆதிக்கம் செலுத்த முடிகின்றது. இந்நிலையில் வாதங்களும் அறிவுசார்ந்த சிந்தனைகளும் பயன்னற்றவைகளாகின்றன. காட்டாக, மன எழுச்சியை ஊட்டவல்ல சொற்கள் ஆகியவை மிக்க வல்லமை படைத்தவையாகின்றன.

கூட்டத்தால் கூட்டுநிலையில் சிந்திக்க முடியாததால் தலை வர்கள் கூறுவதனை அவ்வாறே ஏற்றுச் செயல்படவே, அதனுல் இயலுவதால் கூட்டத்தினரின் அறிவுநிலை மங்கிய நிலையில் அங்கே கருத்தேற்றம் அதிகரிக்கிறது. கருத்தேற்றம் மிக்க நிலை யில் புதிய வழிகளில் சிந்தனை ஓட்டம் தடைப்படக் கூட்டத்தின் செல்வாக்குப் பெற்றவர்கள் கூறுவன எல்லாம் ஆணையாக மேற் கொள்ளப்பட்டு நிறைவேற்றப்படுகின்றன. கவன ஒரு முனைப் பும் (Fixation of attention) மன எழுச்சிக் கிளர்ச்சியுமே கூட்டத் தில் காணப்படும் நிகழ்ச்சிகளாகத் தோன்றுகின்றன.

லீபான் குறிப்பிட்டது போன்றே தனியன் தன் கூட்டத்தில் பொறுப்புணர்ச்சியினை இழக்கின்றான். கூட்டத்தின் நடத்தைகளுக்கான பொறுப்புக் கூட்டத்தினர் அனைவரிடமும் பரவி நிற்பதாலும், தான் செய்வன அனைத்தையும் பிறரால் கண்டுபிடித்தல் இயலாது என்பதாலும் இத்தகைய பொறுப்பற்ற நிலை தனியவனிடம் ஏற்படுகிறது. பொறுப்புணர்ச்சிக் குறைவும். கருத்தேற்றத்தின் அதிகரிப்பும் கூட்டத்தினைக் கொடுமைமிக்கதாக ஆக்குகின்றன. கூட்டத்தில் இருக்கும் தனியன் பிறரால் தன்னைக் கண்டுகொள்ள இயலாது என்ற தைரியத்தினால், உரக்கச் சத்தமிடுகிறான், சிரிக்கின்றான், தன்னை மீறியச் செயல்களில் ஈடுபடுகின்றான். இந்த மனோ நிலையே கூட்டத்தைப் பெரும்பாலும் வன்முறைச் செயல்களிலும் ஒழுக்கமற்ற கொடுமையான செயல்களிலும் ஈடுபடவைக்கின்றன.

கூட்டநடத்தையினை விளக்கப் பல கருத்துகள் வழங்கப்படுகின்றன. இங்கே லீபானின் கொள்கையின் அடிப்படையில் அமைந்த மூன்று கருத்துகளைக் காண்போம்.

முதலாவது, கூட்டநடத்தைக் கூட்டத்தில் ஒரு புதிய உள்ளம் தோன்றுவதனால் ஏற்படுகிறது என்று கருதப்படுகிறது. இதனாலேயே தனியன்கள் ஒரே மாதிரியாக உணருகின்றனர், சிந்திக்கின்றனர், செயலுறுகின்றனர். தனித்த நிலையில் செயல்படுவதற்கு முற்றிலும் மாறுபட்ட வகையில் நடந்து கொள்கின்றனர்.

இரண்டாவது, இக் கூட்டத்தினர் தாம் கூட்டத்தில் இருக்கின்றோம் என்ற உணர்வு மேலெழுவதன் காரணமாகக் கூட்ட நடத்தை ஏற்படுகின்றது என இக் கருத்துக் கூறுகின்றது.

மூன்றாவது, கூட்டத்தினரிடம் அறிதுயில் (Hynotism) படுத்துவது போன்றதோர் விளைவினை கூட்டம் ஏற்படுத்துவதாக இக் கருத்து கூறுகிறது.

**கூட்டத்தின் வகைகள்**

கூட்டங்களை நோக்கமற்றதாய் அமையும் கூட்டம் என்றும் ஒரு நோக்கத்தின்பால் கூடுகின்ற கும்பல் என்றும் கொள்ளலாம். திரைப்படக் கொட்டகையில் கூடுகின்ற கூட்டம், ஒரு சொற்பொழிவாளரின் பேச்சினைக் கேட்பதற்காகக் கூடுகின்ற ஒரு கூட்டம், நடனம், நாடக நிகழ்ச்சிகளில், பட்டிமன்றம், சமயச் சொற்பொழிவு போன்ற நிகழ்ச்சிகளில் கூடும் கூட்டம் போன்றவற்றில் ஒரு நோக்கத்திற்காகக் கூடுகின்றன. இவை ஒரு நோக்கமற்றதாய்க் கூடும் கூட்டத்தின் செயல் தன்மைகளினின்று ஒரு சிறிதே மாறுபடுகின்றன. ஒரு நோக்கத்தின்பால் குழுமியக் கூட்டத்தினர் அந்நோக்கத்தை அறிந்து கொண்டே

ஏனைய தனியவர்களும் ஆங்கே கூடியுள்ளனர் என்ற நம்பிக்கையில் ஒன்றிச் செயல்படுகின்றனர். நிகழ்ச்சிகளின்போது கைதட்டுதல், சிரித்தல் போன்றவற்றை அனைவரும் சேர்ந்தே செய்கின்றனர். இக் கூட்டம் நோக்கமற்று அமையும் கூட்டத்தின் செயல் தன்மைகளின்று இங்ஙனம் ஒரு சிறிது வேறுபட்டாலும் குழுவாக மாறுவதில்லை.

**அதிகாரச் சுருக்கம்**

சமூகம் என்பது எண்ணற்ற குழுக்களைக் கொண்டது. எனவே சமூக உளவியல் குழுக்களைப் பற்றியும் குழு வாழ்க்கையினைப் பற்றியும் ஆராய்கின்றது. குழு வாழ்க்கையின் தோற்றமும் அமைப்பும் சமூக வாழ்க்கையின் தோற்றத்தையும் அமைப்பையும் ஒத்து இருக்கின்றன. மனிதக் குழு மனிதனின் தேவைகளையும் விருப்பங்களையும் நிறைவேற்றுவதற்காக ஏற்பட்டவை. ஒரேவகைக் கருத்துகளைக் கொண்டவர்களே ஒரு குழுவாக இணைந்து செயல்படுவர். எனவே, குழு வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாத தன்மைகளாக ஒன்றியக் கருத்துப்பாடு ஒத்த மனநோக்குகள் ஒத்த மனப்போக்குடன் செயல்படும் தன்மைகள் போன்றவற்றை வலியுறுத்திக் குழுவின் அமைப்பினைச் சமூக உளவியலாளர்கள் நிர்ணயிக்கின்றனர். மேலும் சமூகச் சார்புத் தன்மை, சமூகக் கட்டுப்பாடு. செயல்பாட்டு இசைவு போன்றவை இன்றியமையாத ஒரு குழுவின் குணங்கள் எனக் கருதுகின்றனர்.

குழுக்களை நாம் (1) அகக்குழு–புறக்குழு (2) முதல் நிலைக் குழு–இரண்டாம் நிலைக்குழு என்ற இருவகை அடிப்படையில் பிரிக்கலாம்.

தனியவர்கள் பலர் ஒன்றாக இணைந்து ஒரு குழுவாகச் செயல்படும்போது அங்கே அத் தனியவர்களின் குணங்களும், அறிவும், ஆளுமைத் தன்மையும் புறக்கணிக்கப்பட்டுக் குழுவின் நடவடிக்கையில் ஒரு குழுமனம் தோன்ற, அக் குழு மனத்தின் தன்மைகளுக்கேற்பவே குழு உறுப்பினர்கள் செயல்படுகின்றனர்.

கூட்டத்தினைப் பற்றிப் பலர் பலவிதமாகப் பொருள் வரையறைசெய்கின்றனர். கூட்டம் அமைப்பற்ற சமூகத் தொகுதிகளால் எழுவது. குழுவும் ஒரு கூட்டமே; ஆனால், குழுவில் உளவழித் தொடர்பு இல்லாதபோது அவை கூட்டமாக மாறுகின்றன கூட்டத்தின் செயல் தன்மைகள் நிரந்தரமற்றவை; அடிககடி மாறுவதாய் அமைபவை. இக் கூட்டத்தினர் எதையும் எளிதில் நம்பிவிடுவர். பின் விளைவுகளை எண்ணிபபாராது செயல்படுவர் இதுவே கூட்டத்தைக் குழுவினின்று பிரிக்கிறது.

# 8. தலைமைத் தன்மை

'தோன்றின் புகழொடு தோன்றுக'—திருவள்ளுவர்

ஒழுங்குபடுத்தப்பட்ட குழுவின் தன்மையைப்பற்றி எண்ணும்போது நாம் தலைமைத் தன்மையைப் பற்றியும் விவாதிக்க வேண்டியவர்களாக இருக்கின்றோம். மனிதச் சமுதாயத்தின் முன்னேற்றத்தில் வரலாறு தொடங்குகின்ற காலத்திலிருந்தே தலைமைத் தன்மை மிகவும் முக்கியப் பங்கு ஏற்று இருக்கின்றது. வரலாற்று ஆய்வாளர்கள், போர்க்களத்தில் வீரர்கள் ஆற்றியச் செயல்களையும், அச் செயல்களின் முக்கியத்துவத்தையும் அவை எதிர்கால வரலாற்றை மாற்றியமைக்கும் முறையையும் பற்றித் தெளிவுற விளக்கியுள்ளார்கள். இதனைப் போன்றே அரசியல் தலைவர்கள் எங்ஙனம் அரசியல் அமைப்பை ஏற்படுத்தி அரசியலின்பால் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தினர் என்றும், சமூகச் சீர்த்திருத்தவாதிகள், தத்துவ அறிஞர்கள், ஒழுக்க நீதி நெறிகளைப் போதிக்கும் அற நெறியாளர்கள், எவ்வாறு தனித்து விலங்குபோல் காட்டிலும், மேட்டிலும் வாழ்ந்த மனிதனை உரு மாற்றிப் பயன்படுத்தி அறிவு வளர்ச்சியில் முன்னேற்றி அவனைச் சிறந்த பண்பாடு மிக்கவனாக உருமாற்றினார்கள் என்பதனையும் எடுத்து விளக்குகின்றனர். இதன் மூலம் தலைவர்களின் பணியையும், அவர்களின் தேவைகளையும் நாம் நன்கு உணர முடிகின்றது. எனவே நாம் அவர்களைப் பற்றியும் அவர்களின் பணியால் சமூகத்தில் ஏற்படும் மாற்றங்களையும் அம் மாற்றங்களின் தன்மை, வகைப் போன்றவை பற்றியும் சிந்திப்போம்.

இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மக்கள் எங்குக கூடுகிறார்களோ அங்குதான் ஒரு தலைவனைக் காணமுடியும். ஒரு குழு அமையத்தொடங்கும்போது ஒருசிலர் மற்றவர்களைக் காட்டிலும் மிகப் பெரும் பங்கு ஏற்க முற்படுகின்றனர். மற்றவர்களைக் காட்டிலும் அவர்கள் பிறரால் நேசிக்கவும், மதிக்கவும் படுகின்

ருர்கள். அன்றியும், தலைவர்கள் பிறரிடம் செலுத்துபவர்களிடமும் விளக்குகின்றனர். குழுவில் நிகழ்கின்ற இந்த இடைவினையே, குழுவில் தலைவர்கள் பின்பற்றுபவர்கள் என்னும் பிரிவுக்குத் தொடக்கமாக அமைகிறது. குழுத் தொடர்ந்து வளரும் நிலையில் தலைவர், பின்பற்றுவோர் என்ற பாகுபாடு இன்னும் வலுப்பெறுகின்றது.

தனியன் தன் வாழ்வு முழுவதையும் குழுக்களின் தொடர்பிலேயே கழிக்கின்ருன் என்பது உண்மையாளுல், அவன் தன் வாழ்நாள் முழுவதையும் மேற்பார்வையாளர், அதிகாரிகள், முதன்மையாளர்கள், தலைவர்கள் போன்றவர்களது செல்வாக்கின் அடிப்படையிலேயே கழிக்கின்ருன் என்று கூறலாம். தனியனது சமூக வாழ்வும், அவனுக்குக் குழுவிலுள்ள தொடர்பும், தலைவன் வழிப்படுத்தலைப் பொறுத்து அமைகின்றன. எனவேதான் மனிதனது சமூக நடத்தையைப் புரிநதுகொள்ளத் தலைமையைப் பற்றிப் புரிந்துகொள்வதும் இன்றிமையாததாகும்.

மக்கள், இணைந்து ஏற்படுத்தும் குழுக்கள் எண்ணிறந்தன. ஏதாவது ஒருவகையான தலைமைத்தன்மை எல்லாக் குழுக்களிடையேயும், காணப்படுவதும் உண்மை. ஆயினும் தலைவனுக மலர்கின்ற தனியன் வழி நடத்தும் சூழ்நிலைகள், அக் குழுவின் இயற்கைத் தலைவனைப் பின்பற்றுவோரின் ஆளுமைப் பண்புகள் ஆகியவற்றைப் பொறுத்துப் பல்வேறு வகையான தலைவர்கள் உருவாகின்ருர்கள். எனவேதான் தலைமையை வரையறுப்பதும், ஒரு குழுவில் இவர்தான் தலைவர் என உடனடியாகக் குறிப்பிட்டுக் கூறுவதும் அத்துணை எளியதன்று.

ஒரு குழுவின் தலைவரைப் பிரித்து அறிய இரண்டு முக்கிய முறைகள் உள்ளன. அவையாவன (1) தன்னறிக்கை (Self-report) முறை, (2) உற்றுநோக்கல் முறை.

(1) தன்னறிக்கை முறை இருவகையில் இன்று மேற்கொள்ளப்படுகிறது.

(i) கேட்டறிதல் முறை (Field interview method)

(iii) சமூக அளவை முறை (Sociometrtc method)

கேட்டறிதல் முறை: ஒரே குழுவில் உள்ளவர்களை ஒவ்வொருவராக 'நீங்கள் யார் இக் குழுவுக்கு வழிகாட்டியாக இருக்கத் தகுதியானவர் என்று கருதுகிறீர்?' எனக் கேட்டறிவதே இம் முறையாகும்.

(2) உற்றுநோக்கல் முறையில் வேண்டிய விவரங்களைச் சேகரிப்பதற்கு இரு வழிகள் பின்பற்றப்படுகின்றன.

(i) தர அளவு முறை (Rating Scale method)
(ii) பாகுபாட்டு அமைப்பு (Category system)

தர அளவு முறை: இம் முறையில் நடத்தையினை உற்று நோக்கும் ஆய்வாளர் உற்று நோக்கிய நடத்தையின் பாகுபாட்டு நிலைகளுக்கு அல்லது பரிமாணங்களுக்கு (dimension) எண்ண அளவீட்டு முறையில் (quantitative method) மதிப்பீடுகள் அளித்துக் கணக்கிட முற்படுகின்றார்.

பாகுபாட்டு அமைப்பு: இம் முறையில் நடத்தையைப் பல்வேறு பாகுபாட்டு அமைப்புகளில் தனித்தனியாகத் தொகுக்கின்றார். உற்று நோக்குபவர்களைக் குழுவில் உள்ளவர்களில் அதிகச் செல்வாக்குச் செலுத்தும் உறுப்பினர்கள் யார் என்று குறிப்பிடும்படிக் கேட்கலாம்.

தலைமைத் தன்மையும் ஆதிக்கமும் (Leadership and Dominance)

விலங்குகளிடமும், பறவைகளிடமும் கூட அடிபணிந்து போதல், ஆதிக்கம் செலுத்தல் ஆகியவை காணப்படுகின்றன. ஒரு பறவை மற்றொன்றையோ ஒரு விலங்கு மற்றொன்றையோ ஆதிக்கம் செலுத்தி அடிபணிய வைக்கின்றது. எந்த இரு பறவைகளும், விலங்குகளும் ஒன்றை ஒன்று ஆதிக்கம் செலுத்தாமலோ, ஒன்றுக்கு ஒன்று அடிபணிந்து போகாமலோ இருப்பதில்லை. மனித இனத்தில் கூட இருவர் தனித்து இருந்தால் அவர்களுள் யார் யாரின்மேல் ஆதிக்கம் செலுத்துகின்றார் என்றும் யார்யாரை நம்பி இருக்கின்றார் என்றும் அறிந்திருப்பர். குழந்தைகளிடையே ஓரிரு மாதங்கள் வயது வேறுபட்டிருந்தாலும் ஒன்றைஒன்று ஆதிக்கம் செலுத்துகின்றது. இந் நிலையில் தலைமைத் தன்மை என்பது-இத்தகைய 'ஆதிக்கம் செலுத்தும் செயலா' என நம்முள் ஐயம் எழலாம். இந்த ஐயம் மனித இனத்தைப் பொறுத்தவரை ஒத்துவராது. ஏனெனில் ஆதிக்கம் என்பது விலங்குகளிடையே காணப்படுகின்ற உடல் சக்தியால் விளைகின்ற முரட்டுத்தனமான-மற்றவையின் இசைவையோ அல்லது விருப்பத்தையோ ஏற்றுச் செயல்படாமல் தன் போக்கில் தன் சுய நல விருப்பத்தின் நிறைவையே கருதிச் செயல்படும் தன்மையுடையதாக அமைகின்றது. இதன் அடிப்படையில் நாம் தலைமைத் தன்மையை ஆராய்வோமானால் தலைமைத்தன்மை இவற்றிற்கெல்லாம் நேர்மாறான பண்புகளைப் பெற்றிருக்கின்றது. அதனால் ஆதிக்கத் தன்மை, தலைமைத் தன்மை ஆகாது. ஆனால் தலைமைத் தன்மையில் ஆதிக்கம் இடம் பெறலாம். சில வேளைகளில் தலைமையில் ஆதிக்கம் இடம் கொண்டுள்ளது. ஏனெனில் மனிதனைத்தவிர விலங்குகளிடம்

தலைமைத் தன்மை உடல் பலத்தைக் கொண்டும் அதன் வழி செயல்படும் செயல்களைக் கொண்டும் அமைகின்றது. ஆனால் மனிதச் சமூகத்தில் மட்டுமே இத் தலைமைத் தன்மை உடல் பலம் அல்லாத அறிவுத் திறன், செயலாற்றும் திறன், ஆளுமைத் திறன் பிரச்சினைகளை அணுகி ஆராய்கின்ற நுட்பத் தன்மை உள்ளத் திறன், மனோதிடம் போன்ற எண்ணற்ற காரணிகளைப் பொறுத்ததாக உள்ளது.

மேலும் இதனைப் பற்றித் தெளிவான கருத்தினைப் பெறத் தலைமைத் தன்மையைப் பற்றி வரையறை செய்யவேண்டும். தலைமைத் தன்மையென்பது ஒருவனின் எந்த ஒரு நடத்தை மற்றவர்களின் நடத்தையில் மாறுதலை—தன்னில் மற்றவர்களின் நடத்தை ஏற்படுத்தும் மாற்றத்தைவிட—அதிகமாக ஏற்படுத்துகின்றதோ அந்த நடத்தையே தலைமைத்தன்மை எனப்படும். தலைவர்கள் என்பவர்கள் தங்களின் பின்னால் எண்ணற்றோர் தொடர்ந்துவர அவர்களை நடத்திச்செல்லும் பொறுப்பை ஏற்று முன் நடப்பவர்கள் ஆவர். எனவே தலைவனின் நடத்தை மற்றவர்களின் நடத்தையைத்தான் அதிகமாகப் பாதிக்கின்றதே யொழிய, மற்றவர்களின் நடத்தை தலைவனின் நடத்தையை அவ்வளவாகப் பாதிப்பதில்லை. இதையே வேறுவகையாகக் கூறின் தலைவன் என்பவன் தன் குழுவினிடைப்பட்டோரின் நடத்தையில் ஒரு மாற்றத்தைப் பெரும்பாலும் விளைவிக்கின்றானேயன்றி அக் குழுவின் நடத்தையால் தன் நடத்தையில் ஒரு மாற்றத்தையோ அல்லது குழுவின் செயல்களுக்கு ஏற்பத் தன்னை அவன் மாற்றிக் கொள்வதோ மிகுதியும் இல்லை.

இங்கேதான் ஆதிக்கமும் தலைமைத் தன்மையும் மாறுபடுகின்றன. முன்னது உடல் பலத்தில், கட்டாயத்தில் நிர்பந்தத்தில் ஏற்படுவது. பின்னது சுய இசைவில் பின்பற்றுவோர் தாங்களாகவே முன்வந்து தலைவனின் ஆதிக்கத்திற்குத் தங்களை அர்பணித்துக்கொள்வது.

### தலைவர் என்பதின் பொருள்

குழுவில் ஒரு தனியன் பெற்றுள்ள செல்வாக்கினையே 'தலைமை'க் குறிக்கின்றது. குழு உறுப்பினர்களது நோக்கங்களையும், எண்ணங்களையும், கருத்துகளையும் வழிப்படுத்தியமைக்கும் திறனே செல்வாக்கு ஆகும். இவ் வகையில் குழு உறுப்பினர் ஒவ்வொருவருமே ஒவ்வோர் அளவிற்குத் தலைமை கொண்டவர்களாக விளங்குகின்றார். குழுவில் செல்வாக்கு இன்றி உறுப்பினர் இருப்பது அரிது. எனவே குழுவில் ஒரு

சிறிது செல்வாக்கும் இல்லாதவர் உறுப்பினராக இடம் பெறுவது இல்லை.

இப்படிப் பார்த்தால் குழுவின் ஒவ்வோர் உறுப்பினரும் தலைவரே. தலைவர் பின்பற்றுவோரிடமிருந்து, தன்மையில் வேறுபடுவதில்லை. அளவிலேயே வேறுபடுகின்றார். இருப்பினும் ஒருசிலர் ஏனையக் குழு உறுப்பினரைக் காட்டிலும் குறிப்பிடும்படியாக அதிகச் செல்வாக்குக்கொண்டவர்களாக இருக்கின்றனர். இவர்களையே நாம் உளவியல் தலைவர்கள் என்று கொள்கிறோம். குழுவின் பெரும்பாலான உறுப்பினர்கள் எவருடைய ஆதிக்கத்தையும், அதிகாரத்தையும் ஏற்று நடக்கும் நிலையில் செயல்படுகின்றார்களோ அவரே தலைவர் ஆகின்றார்.

தலைவராக ஏற்றுக் கொள்ளப்படும் தனியரும் எப்போதுமே 'தலைமை' கொண்டவராக இருப்பதில்லை. தலைவரும் குழுவின் ஓர் உறுப்பினரே. எனவே அவரும் குழுவின் செல்வாக்கிற்கு உட்பட்டவராகவே சில சமயத்தில் நடந்துகொள்ள வேண்டியுள்ளது.

### தலைவர்–தலைவர் அல்லாதார்

தலைவரும் ஒரு குழுவின் உறுப்பினர் என்பதும் அதிக அளவில் அவர் ஏனைய உறுப்பினர்களிடமிருந்து மாறுபட்டவர் அல்லர் என்பதும் 'தலைவர்' என்னும் சொற்பொருள் சிறப்பினைச் சிறிது குறைவாக எடுத்துக்காட்டலாம். எனினும் எல்லாத் தலைவர்களும் ஒரு குழுவின் உறுப்பினர்களே என்றாலும் எல்லா உறுப்பினர்களும் தலைவர்களாக ஆகிவிட முடியாது. தலைமைத் தன்மை என்பது ஒருசில பண்புகளின், சத்திகளின், செயலாற்றலின் கூட்டுத் தொகுதி அன்று. மாறாக அது உளவியல் ரீதியில் அக் கூட்டுச் சேர்க்கையிலிருந்து மாறுபட்டு இலங்குவதாம். அது ஒரு தனிப்பட்ட ஆளுமைத்தன்மையாம். (distinct personality) இவ் வகையில் யார் தலைவர், யார் தலைவர் அல்லாதோர் என்ற நிலையைத் தலைவரின் உளவியல் நீதியின் பாற்பட்ட சிறப்பு நன்கு எடுத்துக்காட்டும்.

ஆராய்ச்சியாளர்கள் நடைமுறைப் பிரச்சினைகளின் அடிப்படையில் வெவ்வேறு ஆராய்ச்சிகள் வழி வெவ்வேறு வகையான வரையறைகளின் மூலம் தலைவர்களைப் பிறரிடமிருந்து பிரித்தறிய முயன்றுள்ளனர். இத்தகைய வரையறைகளை, கிப் (Gibb C.A.) என்பவர் ஆறு பிரிவுகளாகப் பகுத்துக் கூறியுள்ளார்.

(1) பல்கலைக்கழகம் ஒன்றில் ஷார்ட்டல் (Shartle), ஸ்டாக்டில் (Stogdill) ஆகிய அறிஞர்கள் நடத்தியக் கடற்படைத் தலைமை

பற்றிய ஆய்வுகளில் தலைவர்களை மிக எளிய ஒரு வரையறையின் மூலம் பிரித்துக் காட்டியுள்ளனர். 'பொதுவாகத் தலைமைத் திறன் தேவைப்படுவனவாகக் கருதப்படுகின்ற அலுவலகப் பொறுப்புகளில் வேலை செய்வோரே தலைவர்கள் என்பது இவர்கள் கையாண்ட வரையறை, கப்பற்படை, போன்ற ஒருங்கமைப்பு மிக்கக் குழுக்களிலேயே இத்தகைய வரையறையினை நாம் கையாள முடியும். இத்தகைய ஒருங்கமைப்புக் குன்றியக் குழுக்களிலும், மரபு அற்ற குழுக்களிலும் ஒருங்கமைப்புக் குன்றியக் குழுக்களிலும், மரபு அற்ற குழுக்களிலும் (Traditionless) இது போன்ற தலைமைப் பொறுப்புகள் அவ்வளவாகக் காணப்படுவது இல்லை. இத்தகைய வரையறையினை மேற்போக்காகவே நாம் ஏற்க இயலும். எனவே இன்னமும் ஆழ்ந்த அறிவியற்பாங்கான வரையறைகளே ஆய்வுகளில் பயன்படுத்தப்படுகின்றன.

(2) தலைமை ஒரு குழு உறவுமுறையே (relationship). எனவே, வெவ்வேறுபட்ட குழு உறவு முறைகளின் தன்மைகளைக் கொண்டே நாம் தலைவரை வரையறுக்க இயலும். இந்த உண்மை ஃபிராய்டு என்பவரால் பெரிதும் வலியுறுத்தப்படுகிறது. ரீடல் என்பவரும் இதனையே தலைமை பற்றிய ஆய்வுகளில் பயன்படுத்தி 'மையமானவர்' (Central person) என்ற புதியக் கருத்தினைத் தோற்றுவித்துள்ளார்.

(3) ஜென்னிங்ஸ் (Jennings) சிறு குழுக்களின் தலைமை அமைப்பினை ஆராய, மொரீனோவின் சமூக அளவை (Morenos Sociometry) முறையினைப் பயன்படுத்த முடியும் என்பதை எடுத்துக் காட்டியுள்ளார். கிப் (Gibb), வெர்ரி (Wherry), ஃப்ரேயர் (Fryer) போன்றோரும் இம்முறையினைப் பயன்படுத்தித் தலைவர்களைத் தேர்ந்தெடுகக முடியும் என்று தங்கள் ஆய்வின் மூலம் எடுத்துக் காட்டியுள்ளனர். சமூக அளவீட்டு முறையும் ஒருசில வரையறைகளுக்குட்பட்டனவாகவே உள்ளன. இதில் பயன்படுத்தப்படும் கேள்விகளும், இதன் அடிப்படையில் தலைவரைத் தேர்ந்தெடுக்கப்படும் பாங்கும் ஆய்வு முடிவுகளைப் பாதிக்க வல்லனவாக இருப்பதைப் பல ஆய்வாளர்கள் கண்டுள்ளனர்.

கிப் (Gibb), சீமன் (Seamen) மாரிஸ் (Morris), பிக்கோர்ஸ் (Pigors) போன்ற ஆய்வாளர்கள் பிறர்மேல் செல்வாக்குக் கொண்டவரே (influence) தலைவர் என்று அறுதியிடுகின்றனர். கேட்டல் (Cattell), முழுக் குழுவின் (Syntatity) மேல் குறிப்பிடத்தக்க செல்வாக்குக் கொண்டவரே தலைவர் என்று வரையறுக்கிறார் கார்டர் (Carter), ஹெம்பில் (Hemphill) ஆகியோர் ஒருவருக்கொருவர் தொடர்புகொண்ட ஒரு பிரச்சினையின் முடிவினைக்

காண்பதற்கான முயற்சியில் உதவுவதாகப் பிறரது செயல்களுக்கெல்லாம் ஆரம்பமாக அமையும் வினைகளையே தலைமை வினைகள் எனலாம் என்றும், இவ்வாறான தலைமை வினைகளில் ஈடுபடுபவரே தலைவர் என்றும் கூறுகின்றனர்.

மேலும் தலைவர்களை அறிந்துகொள்ள மேறகொள்ளும் எல்லா முயற்சிகளும் தனியவர், தன் சக உறுப்பினர்களின் மேல் செலுத்தும் செல்வாக்கின்-அடிப்படையில் அமைவதால், ஒரு குழுவின் செயல்களைத் தன் செல்வாக்கால் செயல்படுத்துவோரே தலைவர் எனவும் கூறலாம். இஃது ஓர் எளிய வரையறை. இவ் வரையறை மூன்று கருத்துகளைப் பிரதிபலிப்பதாக அமைகிறது.

முதலாவதாக இவ் வரையறையின்படி குழுவின் உறுப்பினர்கள் அனைவருமே, குறைந்தது ஓரளவாவது தலைவர்கள் என்று கருதப்படவேண்டியவர்கள் ஆவர். ஏனெனில் ஒவ்வொரு உறுப்பினரும் ஓரளவிற்குக் குழுவில் ஏனையவரிடம் செல்வாக்குப் பெற்றிருப்பர். ஆகவே தலைமை ஓர் எண்ணளவு மாறியாக (Quantitative variable) அமைகிறது. இதுவே எல்லாம்-அல்லது ஒன்றுமே யில்லை (all-or-none) என்ற நிகழ்ச்சியன்று. இந்நிலையில் தலைவர்கள் பின்பற்றுபவர்கள் என்று கூறுவதைக் காட்டிலும், குறிப்பிட்ட தனியனிடம் ஏற்றிவைக்கப்பட்டுள்ள தலைமையின் அளவுபற்றிப் பேசுவதே சிறப்பு. இங்கே குழுவில் மற்றவர்களிடமிருந்து செல்வாக்கின் அளவில் வேறுபட்டு விளங்கும் நபரைக் குறிப்பிடும் ஒரு சொல்லாகத் தலைவர் என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது.

இரண்டாவதாகத் தலைமைச் செயல்கள் தனித்த ஒருவரின் ஒரு செயல் அன்று. மாறாகப் பல தலைவர்களின் இடைவினைகளின் விளைவில் நிகழ்வது ஆகும்.

மூன்றாவதாகத் தலைவர்களை அலுவலகத் தலைவர்களிடமிருந்து பிரித்தறிய இவ் வரையறை நன்கு பயன்படுகிறது. தலைவர் என்னும்போது குறிப்பிடுமளவிற்குச் செல்வாக்கு வாய்ந்த ஒருவரையே சுட்டுகிறோம் என்பதால், குறைந்த அளவு செல்வாக்குப் பெற்றுள்ள அலுவலகத் தலைவர்கள் இத் தலைவர்களிடமிருந்து வேறுபடுகின்றனர். அதாவது அமைப்பு நிலைத் (formal) தலைவர்களாக விளங்கும் அனைவரையும் உண்மை நிலைத் (actual) தலைவர்களாகக் கருதுதல் இயலாது. உளவியல் நோக்கில், தலைமை, தலைவர் ஆகியவற்றைப்பற்றி ஆராயும்போது இவ் வுண்மைகளனைத்தையும் மனதில் கொள்ளுதல் அவசியம்.

**தலைமைத் தன்மையை நிர்ணயிப்பதில் உள்ள இடர்ப்பாடுகள்**

ஆரம்பகால ஆராய்ச்சிகள் தலைமைத் தன்மையைப் பற்றி நிர்ணயிக்கின்றபோது தலைவர்களின் தனித்தன்மைதான் குழுவின் அமைப்பையும் செயல் தன்மையையும் நிர்ணயிக்கின்றது என்றும் குழு நபர்களிடமிருந்து கிட்டும் திறமையும், செயல்பாட்டுத் தன்மையும் குழுவின் வெற்றிக்கோ அல்லது செயல்பாட்டிற்கோ அவ்வளவாக உபயோகப்படுவது இல்லை என்றும் எடுத்துக்காட்டியுள்ளன. இவ் வகையில் கிப் என்பார் தலைவர்களையும், தலைவர்கள் அல்லாதவர்களையும் அவர்களின் தனித்தன்மையில்–செயல்திறம், ஆளுமைத் தன்மை ஆகிய சிறப்பில் ஒப்பிட்டு ஆராய்ந்து, அதன்வழித் தலைவர்களைத் தலைவர்கள் அல்லாதவர்களிடமிருந்து பிரிக்கின்ற, வேறுபடுத்திக் காண்பிக்கின்றன. சில அடிப்படை அம்சங்களைக் கண்டறிய முற்பட்டார். அவரது முயற்சியின் இறுதியில் அத்தகைய அடிப்படை அம்சங்களைக் கண்டறிவது இயலாது என்றும், தலைமைத் தன்மையை நிர்ணயிக்கின்ற அடிப்படைக் காரணிகளை அங்ஙனம் எளிதில் குறிப்பிட்டச் சில பண்புகளாகப் பிரித்து ஆராய்வது இலகுவான செயல் இல்லை என்றும், அவர் முடிவுக்கு வந்தார். அதற்கான காரணங்களாகக் கீழ்க்கண்டவற்றை விளக்கியுள்ளார்.

(1) தலைவர்களிடம் காணப்படும் தலைமைத் தன்மையை நிர்ணயித்து ஆராய உதவும் ஒரு சிறந்த அளவீட்டு முறை இதுவரையிலும் கண்டுபிடிக்கப்படவில்லை.

(2) இப்பொழுது கையாளப்படும் ஒருசில அளவீட்டு முறைகள் அவ்வளவாக நம்பத்தக்கனவாகவும், பயனளிக்கக் கூடியனவாகவும் காணப்படவில்லை.

(3) குழுவினிடையே காணப்படுகின்ற வேறுபாடுகள் தனிப்பட்ட தலைவர்களிடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை மறைத்துவிட இயலும். எனவே, தலைமைத் தன்மையை நிர்ணயிக்கக் குழுவைத் தனிமைப்படுத்தி அதன்வழி ஒவ்வொரு தலைவருக்கும் ஒவ்வொரு புதிய சூழ்நிலையை ஏற்படுத்தி அங்கே வெளிப்படும் தலைமைத் தன்மையை நிர்ணயிக்கின்ற அடிப்படைத் தன்மைகளை ஆராயவேண்டும். அங்ஙனம் குழுவைக் குழுக்களிடமிருந்து பிரித்து, ஒரு குழுவினிடையே சூழ்நிலைக் கட்டுப்படுத்தி அதன்வழித் தலைவர்களின் செயல்திறனை ஆராய்வது எளிய செயலாக இல்லை.

(4) ஒருசில தனிப்பட்ட பிரச்சினைகளிலே ஒருசில தலைவர்கள் வெற்றி காண இயலுகின்றது. எனவே, தலைவர்களுக்கும் அவர்களின் ஆளுமைத் தன்மை, செயல்பாட்டுத்தன்மை

ஆகியவற்றின் வழி எழுகின்ற பிரச்சினைகளுக்கும் இடையே ஒரு தொடர்பு இருக்கின்றது. இத் தொடர்பு மிகவும் சிக்கலாக இருப்பதால் தலைவர்களை நிர்ணயிக்கின்ற அடிப்படைப் பண்புகளும், செயல்பாடுகளும் இத்தகையவைதாம் என வரை யறுக்க முடியாது. இவ் வரையறையின் கீழ் ஒருசில தலைவர்கள் ஒருசில சூழ்நிலைகளில் இப்படித்தான் நடந்து கொள்வார்கள் எனக் கணித்தலும் இயலாது.

### தலைமைத் தன்மையின் பண்புகள்

தலைமைத் தன்மையின் அடிப்படைப் பண்புகளை நிர்ணயிப்பதில் அதிருப்தி ஏற்பட்டது. இது மறுவகையில் தலைமைத் தன்மை குழுவின் காணப்படுவது இயலும் என்றும் அதனைத் 'தலைமைத் தன்மையும் அதன் அமைப்பும்' என்ற தலைப்பில் நமக்குத் தந்துள்ளது. இவ்வகையில் நடத்தப்பட்டப் பரிசோதனைகள் தலைமைத் தன்மையைக் கணிக்கத் தேவைப்படும். பல்வேறு விதமான பண்புகளை நிர்ணயிப்பதில் பெரும்பாலும் முயற்சிக்கவில்லை. குழுவினுல் தேவைப்பட்ட எந்தச் செயல் எத்தகைய நியதிகளின் அடிப்படையில் அக்குழுவின் வெற்றிக்கு உதவுகின்றது என்றும், எங்ஙனம் பல்வேறு குணங்களையுடைய தனிப்பட்டத் தனியர்கள் ஒருங்கே இணைந்து ஒரு குழுவாகச் செயல்பட முடிகின்றது என்றும், இவ்வாராய்ச்சிகள் கண்டறிவதாக அமைகின்றன. தலைமைத் தன்மை என்பது குழு தன் நடவடிக்கையில் தான்விரும்பிய வெற்றியை அடைய உதவும் செயல் என்பதாக இங்கே பொருள்படுகின்றது. இச் செயல், குழுவின் பணி என்ற முறையில் இருப்பின் அக் குழுவின் பணியை இன்னதென முடிவு செய்து குழுவை ஓர் இலக்கை நோக்கிச் செய்யவைக்கும் பணி தலைமைத் தன்மையின் பாலானது.

இங்ஙனம் தலைமைத் தன்மையின் நடத்தையை நிர்ணயிக்கிறபோது தலைமைத் தன்மையின் நடத்தையென்பது குழுவின் வெற்றியை–இலக்கை அடைய உதவும் செயல், குழுவினிடைச் சத்தியினையும், வலிமையையும், ஒற்றுமையையும் ஏற்படுத்திப் பாதுகாக்கும் செயல் என்றும் கொள்ளலாம். தலைவன் என்பவன் குழுவின் இலக்கை நிர்ணயித்து அதை அடையும் வழிமுறைகளை எடுத்துக்காட்டி அதனைச் செயல்படுத்துவதற்குத் தேவையான யோசனைகளைக் கூறி அக் குழுவை இலக்கின்பால் நடாத்திச் செல்கையில், அம் முயற்சியைத் தடை செய்கின்ற அகக் குழுப் பிரச்சினைகளையும், புறக் குழுப் பிரச்சினைகளையும் திறமையான முறையில் தீர்த்துவைத்து வெற்றி காண்பவன் ஆகின்றன். குழுவின் சத்தியையும், வலிமையையும், பாதுகாக்கும் தலைவனது

செயலானது அதே நேரத்தில் சமூகம் குழுவினிடை எதிர்ப்பார்க்கின்ற தேவையைப் பூர்த்தி செய்வதாகவும், குழு நபர்களை உற்சாகப்படுத்தித் தளர்ந்த காலத்து ஊக்கப்படுத்துவதாகவும், குழுவின் இலக்கை நோக்கி உழைக்க முன்வரும் ஒவ்வொருவருக்கும் கண்டிப்பாக வாய்ப்பளித்துச் செயல்படும் தன்மையாகவும் இருக்கவேண்டும்.

தலைவர்களின் தன்மையைப் பற்றி விளக்குவதில் இருவகையான நோக்குகள் காணப்படுகின்றன. முதல் நோக்கின்படி 'தலைவர்கள் என்பவர்கள் அத்தகைய முக்கியத்துவம் வாய்ந்தவர்கள் அல்ல;—அவர்கள் திடீரெனத் தானாகவே தோன்றிவிடுவதில்லை; அவர்கள் சூழ்நிலை சந்தர்ப்பங்களின் செயலால்தான் தோற்றுவிக்கப்படுகின்றனர்; அவர்கள் மக்கள் எதிர்ப்பார்க்கின்ற தேவைகளை நிறைவேற்றும் தன்மையைப் பொறுத்தும், அவர்களின் பணி தேவைப்படுகின்ற கால அளவைப் பொறுத்தும்—நிலைத்துப் பெயர் எடுக்கின்றார்கள்' என்பதாகும்.

இரண்டாவது நோக்கின்படி 'தலைவர்கள் நமது கனவுகளை நனவாக்கும் இலட்சியவாதிகள். இவர்கள் பிறப்பினாலேயே தலைவர்களாகப் பிறக்கின்றார்கள். இயற்கை அன்னை அவர்களை ஒருசில பணிக்காக, இலட்சியத்திற்காகப் பிறக்கின்றான்' என்பதாம். மனிதச் சமுதாயம் அறநெறியினின்று மாறுபட்டு செல்லுகின்றபோது அதைச் சரிப்படுத்திச் சீர்திருத்துவதற்காக மனித குலத்தின் அறத்தையும், ஒழுக்கம், நீதிநெறிகள் போன்ற பண்புகளையும் நிலைநாட்டவே காந்தி அடிகள், இயேசு, திருவள்ளுவர் போன்ற தலைவர்கள் பிறந்தார்கள் என்பது கருத்தாம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிறப்பினாலேயே தலைவர்கள் (Born Leaders) என்ற கொள்கை ஏற்றுக்கொள்ளப்பட்டு ஒரு சமூகத்தில் அந்தந்தக் காலங்களில் தொடர்ந்து ஒருவர் பின் ஒருவராகத் தலைவர்கள் தோன்றுகிறார்கள் என்று நம்பப்பட்டது.

இருபதாம் நூற்றாண்டின் சிம்மல் (Simmel) என்பார் தலைமைத் தன்மை என்பது சூழ்நிலைகளின் நியதியில் வரம்பில் தோன்றுவது என்ற கருத்தைப் பரப்பினார். தலைமைத் தன்மை என்பது தனித் தலைவனிடம் காணப்படும் பல்வேறு அம்சங்கள் அல்லது குணாதிசயங்கள் என்பதன்றித் தலைமைத் தன்மை என்பது ஒரு குறிப்பிட்ட குழுவில் ஒருவர் நடந்துகொள்ளும் முறையில் மற்றவர்கள் அவரின் நடத்தையை அங்கீகரிக்கும் செயல் என்பதாம். 'சமூக அளவீட்டு முறை' (Sociometric) என்ற முறையின் பய

னுல் உள்ளிடைக் குழுவின் தொடர்பினை ஆராய்ந்ததின் வழித் தலைமைத் தன்மை இங்ஙனம் தனிப்பட்டவர்களின், பிறர் தொடர்பில் எழும் நெருக்கமே என்ற கருத்து நிலைபெறுகின்றது. மேலும் தலைமைத் தன்மையைப் பற்றிப் பயிலும்போது, எந்த வகையில், யாருக்கு, எத்தகைத்தான குழுவில் தலைமைத் தன்மை என்ற கேள்வியையும் தற்காலத்தியக் குழுச் செயல்பாடுகளில் காண வேண்டும்,

## தலைவர்களும் குழுச் சிக்கலமைப்பும் (Leaders and Group Complexity)

குழுப் பெரியதாகி அதன் பணிகளும் குழுவின் துணைச் செயல்களும் பெருகுகின்ற நிலையில் ஓர் அடுக்கடுக்கான வகையுள்ள (hierarchy) தலைமை வளரத் தொடங்குகிறது. இத்தகைய அமைப்பின் உச்சியில் முதல்நிலைத் தலைவர்கள் (Primary Leaders) காணப்படுகின்றனர். அதனை அடுத்து படிப்படியாக வழிநிலைத் தலைவர்களும் (Secondary Leaders), பரப்புநிலைத் தலைவர்களும், (Territory Leaders) தோன்றுகின்றனர். அடித்தளத்தில் அமைபவர் பின்பற்றுவோரே. உதாரணமாக, அலுவலக இயக்குநர், துணை இயக்குநர், நிர்வாகி, துணை நிர்வாகி, மேற்பார்வையாளர், தலைமை எழுத்தர், ஏனைய சிப்பந்திகள் கொண்ட அமைப்பினைக் கூறலாம். இத்தகைய அமைப்பு வளர்வது தலைமைப் பரவலைக் (Spreading of Leadership) குறிக்கும். சில வேளைகளில் இத்தகைய அமைப்பு ஒரு தனியனிடம் தலைமை ஒருங்காக்கம் ஏற்படச் செய்கிறது என்று கருதப்படுகிறது. இஃது உண்மையன்று. ஏனெனில் பெரிய சிக்கல் வாய்ந்த குழுக்களும் நிறுவனங்களும் எண்ணிறந்த தலைவர்களுக்கான தேவையைத் தோற்றுவிக்கின்றன. எனவே, பல தலைவர்கள் தோன்றுவதற்கான சூழ்நிலை உருவாவதால் தலைமை ஒருங்காக்கம் ஏற்பட வழியில்லை.

## தலைவர்களும், நெருக்கடியும் (Leaders and their Crisis)

குழுவின் இலக்கிற்கான முன்னேற்றம் சில வேளைகளில் தடைபடக் கூடும். அப்பொழுது தலைவர்களது விழிப்புணர்ச்சி குறிப்பாகத் தேவைப்படுகின்றது. இத்தகு நிலைகளில், குழு உறுப்பினர்களிடையே இலக்கினை அடைய அல்லது ஆபத்தினின்று விடுதலை பெற எவ்விதமான செயல்களை மேற்கொள்ள வேண்டும் என்பது குறித்துக் கருத்து வேறுபாடுகள் தோன்றக் கூடும். இந்நிலையில் குழுவின் ஒரு தனியனை அவனது சொந்தப் பண்பு நலன்களின் அடிப்படையில், அதாவது வீரம், திறமை, அறிவாற்றல் போன்ற பண்புகளின் அடிப்படையில், 'இலக்

கினை அடையக் கருவியாகக்' குழுக் காணுமாயின் அத்தகையத் தனியன் தலைவனாக எழுச்சிபெற வாய்ப்புமிக்கவனாகிறான்.

குழுவினை எதிரிடும் அச்சுறுத்தலின் அளவும் அப்பணியின் கடுமையும், தலைமையின் எழுச்சியினை மட்டுமின்றித் தலைமைப் பரவலையும் ஒருவனின் செல்வாக்கிற்குட்படுத்துகின்றன. பிரச்சினை சூழ்நிலையில் வலிமை வாய்ந்த ஒருமுகப்படுத்தப்பட்டத் தலைமை ஏற்படத் தலைப்படுகின்றது. ராபர்ட் ஹம்லின் என்பவர் (Robert and Hamlin) பிரச்சினை சூழ்நிலையின் விளைவுகள் பற்றிய ஓர் ஆய்வினை மேற்கொண்டார். இவ்வாய்வின் முடிவுகள் இரு உண்மைகளை வலியுறுத்துகின்றன.

(1) தலைவர்கள் பிரச்சினை சூழ்நிலைக் காலத்தில், பிரச்சினையில்லாத சூழ்நிலைக் காலத்தைக் காட்டிலும் அதிக அளவு செல்வாக்கும் பெற்று விளங்குகின்றனர்.

(2) பழைய தலைவர் பிரச்சினை சூழ்நிலையை விரைவாகவும், திட்டவட்டமாகவும், சமாளிக்கத் தவறும் நிலையில் குழுவால் நிராகரிக்கப்பட்டுப் புதிய தலைவர் தோற்றுவிக்கப்படுகின்றனர்.

எதேச்சாதிகாரத் தலைவர்கள் அரசியலமைப்பில் உடனடியான மாறுதல்கள் ஏற்படவேண்டியப் பிரச்சினை சூழ்நிலைகளில் தோன்றுகின்றனர் என்பதனை வரலாற்றுப் பகுப்பாய்வுகள் எடுத்துக்காட்டுகின்றன.

குழுவினை எதிரிடும் பிரச்சினைகள் மிகவும் கடினமாகும் நிலையில் தலைமை இயக்க நிலைகள், எண்ணிறந்தவர்களுக்கிடையில் பரவலாக அமைகிறது. பணிகளின் கடினத்தன்மைக் குறையக் குறையத் தலைமையின் ஒருங்காக்கம் அதிகமாகியவண்ணம் செயல்படுகிறது. ஆனால் ஒரு குறிப்பிட்ட அளவு கடினத்தன்மையை இழந்த நிலையில் தலைமை மீண்டும் பரவலாக மாறத் தொடங்குகிறது. குறிப்பிட்ட பணியாளர் வேண்டுமானாலும் செய்து முடிக்கும் அளவிற்குப் பணிகள் மிக எளிதாக இருப்பதே இதன் காரணம்.

தலைவர்களும் குழு நிலையின்மையும் (Leaders and Instability)

அகக் குழுவும், புறக் குழுவும் தலைமையின் எழுச்சிக்கு மிக உன்னத வாய்ப்பினை அளிக்கின்றன. துணைக் குழுக்களின் இடையே தோன்றும் (எதிர்ச்சிக்கல்) ஆற்றல்களைச் சில வேளைகளில் ஒரு சக்தி வாய்ந்த தலைவன் சம நிலைக்குக் கொண்டுவர இயலும். இந்நிலையில் அவன் ஓர் 'சக்திச் சமநிலை'த் (balance of powed) தகுதியினைப் பெறுகிறான். குழு ஒன்றுபடும் நிலையில் துணைத் தலைவர்கள் முழுமைத் தலைவரால் இடமாற்றம் பெறுகின்றனர்.

குரோக்கெட் (Crockett) என்பார் பிரிவுபட்டக் குழுக்கள், பழைய தலைவர்களை அகற்றிப் புதிய தலைவர்கள் எழுச்சி பெற வாய்ப்பளிக்கும் ஒரு விளைநிலமாக இருப்பதனை ஆய்வு முடிவுகள் மூலம் நிலைநிறுத்தி இருக்கின்றார். இவர் வணிகம், அரசு, தொழிற்சாலை நிறுவனங்கள் ஆகியவற்றின் 72 கருத்தரங்கக் குழுக்களில் புதிய தலைவர்கள் எழுவதனை ஆராய்ந்தார். குழுவின் இலக்கு அதனை அடைவதற்கான வழி முறை, ஆகியவற்றில் கருத்து வேறுபாடுகள் கொண்ட குழுக்கள், கருத்து வேறுபாடு அற்ற குழுக்களைக் காட்டிலும் அதிக 'அமைப்பற்ற' (informal) தலைவர்களைத் தோற்றுவிப்பதனை இவர் காட்டுகிறார்.

அமைப்பு நிலைத் தலைவன் (formal leader) அல்லது அலுவலகத் தலைவன் (official head) தலைமையின் பணிகள், நிருவாகம் ஆகியவற்றைப் போதிய அளவு நிறைவேற்றத் தவறுகின்ற நிலைகளில் புதிய தலைவர்கள் எழுதல் கூடும்.

### தேவைகளே தலைவர்களை உருவாக்குகின்றன

தலைவராகத் தோன்றுவதற்கு வன்மைப் பெற்ற (potential leader) தனியவன், ஏனைய உறுப்பினரைப் போன்றே குழுவின் இலக்குகளை அடைய முயல்கிறான்; அதேபோல் தனது தேவைகளையும் நிறை செய்ய முயல்கிறான். ஆனால் அத்தகையவனிடம் காணப்படும் ஒருசில தேவைகள் குறிப்பாகத் தலைமை அங்கத்தின் மூலம் நிறைவுபெறக்கூடியனவாக் இருக்கின்றன. இத்தகைய தேவைகளே அவனை ஏனைய உறுப்பினரிடமிருந்து வேறுபடுத்துகின்றன. ஆதிக்க வன்மை (powder) கௌரவம் (prestige) ஆகியவற்றிற்கான தேவைகள் முதல் நிலையானவை யாகும். குழுவில் இத்தகையத் தேவைகள் கொண்ட உறுப்பினர்கள் போதிய அளவு இருக்கும் நிலையிலேயே நாம் தலைவர் எழுச்சி பற்றி நம்பிக்கையுடன் எதிர் நோக்கலாம். 'தலைமை வன்மை அதிகமாக நிறைந்த ஒரு குழுவில் பரவல் பெற்ற தலைமை தோன்றுதல் கூடும்; இத்தகைய வன்மைப் பெற்றவர்கள் குறைந்து இருக்கும் குழுக்களில் அதிக அளவு குவிக்கப்பெற்ற தலைமை எழக்கூடும். இத்தகைய உறுப்பினர்களே இல்லாத குழுவில் தலைமையே எழுதல் இயலாது. எனவே குழுக் கலையத் தொடங்குவது திண்ணம்.

### தலைவரும், பின்பற்றுவோரும் (Leader and the follower)

தலைவன்–பின்பற்றுவோர் இவர்களிடையே நிலவும் தொடர்பு பொதுவாக (1) நேருக்கு நேர் நிகழும் தொடர்பு (2) குழு விடையே ஏற்படும் தொடர்பு (3) சமூகப் பின்னணியில் ஏற்படும் தொடர்பு

என்று மூன்று வகையாகக் காணப்படுகின்றது. தலைவன் என்பவன் தன்னைப் பின்பற்றுவோரிடையே ஏதாவது ஒருவகையில் எழுத்து வழியிலோ பேச்சின் வாயிலாகவோ தொடர்பு கொண்டவனாக இருக்கவேண்டும். தலைவன் எழுதுகிறான், அல்லது ஒன்றைப்பற்றிப் பேசுகிறான் எனில் அவனைப் பின்பற்றுவோர் அதைக் கடைப்பிடிக்கின்றனர். அல்லது செவி மடுத்துக் கேட்கின்றனர். பின்னர் அவற்றைத் தங்களின் தலைவனின் கொள்கைகள், கருத்துகள் என்பதாகப் பிறருக்குப் பரப்புகின்றனர். இத்தகைய ஒரு தொடர்பு இல்லாத இடங்களிலும் தலைவர் பேசுவதை அல்லது எழுதுவதை ஏற்றுக்கொள்ளாத—மறுத்து அவனின் குரலுக்கோ வேண்டுகோளுக்கோ, செவி சாய்க்காத இடங்களிலும் தலைமைத் தன்மை காணப்படாது. இந்தத் தொடர்பு நீடிக்கின்றவரைதான் தலைமைத் தன்மையும் நீடிக்கும்.

வெற்றிகரமான தலைவர்கள் பற்றியப் பெரும்பாலான ஆய்வுகள், தலைவர், குழுவின் உறுப்பினர்களுடைய பண்புக் கூறுகளைத் தாமும் பெற்றிருக்கவேண்டும் என்பதைக் காட்டுகின்றன. அவரை 'நம்மில் ஒருவர்' என்று உறுப்பினர்கள் கருதவேண்டும். வெளியிலிருந்து வருபவராக அல்லது வேற்றொருவராகக் கருதப்படல் கூடாது. குழுவிற்கு வெளியிலிருந்து வருபவருடன் குழு உறுப்பினர்கள் ஒன்றுதல் மிகக் கடினம்.

குழுவின் மையமான மதிப்பீடுகளை ஏற்பதால் மட்டும் ஒருவர் தலைவராகிவிடமுடியாது. தலைவராக விளங்க இருக்கின்றவர் 'நம்மில் ஒருவராக' மட்டுமன்றி நம்மில் மிகச் சிறந்தவர்களுள் ஒருவர் என்று பின்பற்றுவோரால் கருதப்படுதல் வேண்டும். இவர் 'நம்மில் மிகச் சிறந்தவர்களில் ஒருவர். ஏனென்றால் இவரே மிகவும் பலரறிய உயர்ந்தவராக விளங்குகின்றார். குழுவின் எடுத்துக் காட்டாகத் திகழக்கூடியத் தகுதி இவருக்கே உண்டு' என அத் தலைவரைப் பின்பற்றுவோர் ஒவ்வொருவரும் நம்ப வேண்டும். இதனால்தான் அவர் தந்தை உருவாகவும் (Father figure) விளங்குகிறார்.

தலைவர், பின்பற்றுவோரில் மிகச் சிறந்தவராக இருக்கலாம். ஆனால், வெளிப்படையாக அவர் மிகச் சிறந்தவராக இருத்தல் கூடாது. குழந்தைகளிடையே ஆய்வினை மேற்கொண்ட ஹாலங்வொர்த் (Hollingworth) என்பார் தலைவருக்கும் பின்பற்றுவோருக்கும் இடையே நுண்ணறிவு ஈவிற்கும் (I Q) அதிக அளவு வேறுபாடு காணப்பட்டபோது தலைவர், பின்பற்றுபவர் உறவு வளர்வதில்லை; வளர்ந்தாலும் விரைவில் சிதறுண்டு விடுகின்றது என்று கூறுகின்றார்.

நுண்ணறிவில் காணப்படும் பெரும் வேறுபாடு தலைமையினைப் பாதிப்பதற்குப் பல காரணங்கள் உள்ளன. முதலாவதாக 'மிகமிக நுண்ணறிவு' மிக்கவனாக விளங்கும் ஒருவர் குழுவில் ஒருவராகக் காணப்படமாட்டார். இரண்டாவதாக அவரது அக்கறைகளும் குழுவின் நோக்கத்தினின்று மிக விலகிய ஒன்றாக அமையும். அதனால் குழுவிற்கு உதவும் ஊக்கமின்மையும், தூண்டுதல் இன்மையும் ஏற்படுதல் கூடும். மூன்றாவதாக நுண்ணறிவு வேறுபாட்டின் காரணமாகக் கருத்துப் பரிவர்த்தனைப் பிரச்சினைகள் தோன்றுதலும் கூடும். இறுதியாக உயர்ந்த நுண்ணறிவு உடையவர் குழு ஏற்கத் தயாராக இல்லாத புதியனவற்றைப் புகுத்த முயலுதல் கூடும்.

மேலும் தலைவர், பின்பற்றுபவர்களது எதிர்ப்புகளுக்கு ஒத்தவராக இருத்தல் வேண்டும். ஒரு தலைவர் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் எந்தெந்தப் பணிகளை மேற்கொள்ள வேண்டும் என்பது பற்றிய பொதுவான கருத்துகளை ஒரு குழுவின் உறுப்பினர்கள் கொண்டிருத்தல் கூடும். இவ் வெதிர் நோக்குகளுக்கு எவரெவர் பொருந்துகின்றனரோ அவர்களையே தலைவர்களாக உறுப்பினர்கள் தேர்ந்து நீடிக்குமாறு செய்வர்.

தலைவர் பின்பற்றுவோரின் பிரச்சினைகளை ஏற்றுக்கொள்பவராக விளங்கவேண்டும். தந்தையின் உருவாகத் தலைவர் தோன்றவேண்டும் என்று முன்பே கூறியுள்ளோம். இதிலிருந்து தனியவனது சார்புடைமை (dependency) இணைந்திருத்தல் (afflication) இன்ன பிற தேவைகளை நிறைவு செய்ய வல்லவராக எவர் காணப்படுகின்றாரோ, அவரே பின்பற்றுவோரால் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுவர் என்று கருத வாய்ப்பிருக்கிறது.

## தலைவர்களுக்குரிய தன்மைகள் (Qualities of Leadership)

தலைவர்-பின்பற்றுவோர் இவர்களிடையே நிகழும் பல்வேறு தொடர்பின் அடிப்படையில் தலைமைத்தன்மையை நிர்ணயிக்கின்ற பண்பு நலன்களும், அடிப்படைக் காரணிகளும் மாறுபடுகின்றன. ஒரு குழுவில் திறன்மிக்கத் தலைவனாக விளங்கும் ஒருவன் மற்றொரு குழுவில் அங்கத்தினராகக் கருதப்படக் கூடத் தகுதியற்றவனாகக் காணப்படலாம். இவ்வகையில் ஒரு முட்டாள் கூட ஒருசில சந்தர்ப்பங்களில் தலைவனாகிறான். எனவே ஒருவனைத் தலைவன் என்று மட்டும் வெறுமனே கூறுவது அர்த்தமற்றது. எனவேதான் தலைவன் என்றால் எதில் தலைவன் என்ற வினா எழுகின்றது. தலைமைத் தன்மை, மற்ற மனிதர்களிடமிருந்து பிரித்துச் சிறப்பாகப் பேசப்படக் கூடிய ஒருசில திறைமைகளையும், செயல் திறன்களையும் குறிக்கின்றது. ஆனால் எந்த ஒரு

தனித்த திறமையும் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் எல்லா மக்களின் பாலும் செயல்படுவதாக அமைவதில்லை, அல்லது ஒருவனுக்குத் தலைமைத் தன்மையைத் தேடித் தருவதில்லை. எனவே தலைவரின் பங்கானது அவனிடம் காணப்படுகின்ற பரிபூரணப் பண்புகளாலோ, திறமைகளாலோ நிர்ணயிக்கப்படாமல், காலச் சூழ்நிலையின் தேவைகளால் நிர்ணயிக்கப்படுவதாக அமைகிறது. இருப்பினும் ஒருசில ஆய்வாளர்கள் தலைமைத் தன்மையின் பண்புகளை நிர்ணயிப்பதில் முயற்சி செய்து வெற்றியும் பெற்றுள்ளனர்.

ஒரு தலைவரது பண்புக் கூறுகள், அவர் வெளியிடும் தலைமையின் வகை, குழுவின் இலக்குகளை அடையத் தேவைப்படும் செயல்திறன், அதில் அவர் பெறும் வெற்றி இன்னும் தலைவரது ஆளுமைச் சிறப்புப் போன்றவற்றைப் பொறுத்து அமைகின்றன. வெவ்வேறான தலைவர்கள் வெவ்வேறு விதங்களில் தங்கள் பங்கினை ஆற்றுகின்றனர். தலைவர்கள் பலவகையாக அல்லது பல்வேறு பங்கினைப் பெற்றவர்களாக அமைவர்.

தலைவர்களனைவருக்கும் பொதுவானவை என்று நாம் எந்த ஒரு பண்புக் கூற்றினையும் குறிப்பிட இயலாதெனினும், பல பண்புக் கூறுகள் பலவிதமான சூழ்நிலைகளில் தலைவர்களிடம் காணக்கூடியனவாக உள்ளன என்பதை மறுப்பதற்கில்லை. தலைவர்கள் நுண்ணறிவு மிக்கவர்களாக (ஆனால் மிக அதிக நுண்ணறிவு கொண்டவர்களாக அன்றிக்) காணப்படுகின்றனர். பெரும்பாலான ஆய்வுகள், தலைவர்கள் பின்பற்றுவாரைக் காட்டிலும் நல்ல பொருத்தப்பாடுடையவர்களாகவும், அதிகமாக ஆதிக்கம் கொண்டவர்களாகவும், அதிகமாகப் பொதுநல நோக்குக் கொண்டவராகவும், அதிக ஆண்மையினராகவும், குறைந்த அளவு மாறுந்தன்மையினராயும் காணப்படுவதாகக் குறிப்பிடுகின்றன.

தலைவர்களிடம் காணப்படும் ஆளுமைப் பண்புக் கூறுகள், அவர்கள் தலைவர்களாக நடந்துகொள்வதின் மூலம் அவர்களிடம் ஓரளவு வளர்தல் கூடும் என்று கருதுவதற்கு இடமுண்டு. ஒரு குழுவினை வழி நடத்தும் பிரச்சினைகளை ஒரு தனியவன் சமாளிக்கின்ற நேரங்களில் இப் பண்புக் கூறுகள் அவனிடம் வலுப்படுத்தப்பெறுகின்றன. இதனால் தலைமைப் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்படுவதாலேயே இப் பண்புகள் ஒருவரிடம் வளர்ந்து விடுகின்றன என்று கொள்ளுதலும் தவறு. ஆனால் உயர் நிர்வாகி, வணிகர், ஆசிரியர் போன்ற தொழிற் பங்கினை நீண்டகாலம் தனியவன் ஏற்கும்போது அவனது ஆளுமை அவற்றிற்கேற்ப

மாறுதல் கூடும் என்ற கருத்தையே இங்கே வலியுறுத்த விழைகிறோம்.

தலைமை நடத்தையின் பரிமாணங்கள் (Dimensions of Leadership Behavier)

குழுவாழ்வின் சிகரமாக விளங்கும் தலைவர் எவ்வித நடவடிக்கைகளில் ஈடுபடுகிறார் என்பது பற்றிப் பல அறிஞர்கள் எடுத்துக் கூறியுள்ளனர். தாம் ஈடுபடும் செயல்களின் அடிப்படையிலேயே தலைவர் தன் தலைமையை நீடிக்கச் செய்கின்றார். தலைவர் தம் செயல் தன்மைகளைப் புரிந்துகொள்வதன் மூலம் தலைமையின் முக்கியப் பண்புகளையும் நாம் அறிந்து கொள்ள இயலும்.

கார்டர் (Carter, J. H.) என்பவர் வெற்றிகரமாக விளங்கிய படைத்தலைவர்களையும், ஏனைய தலைவர்களையும், ஆராய்ந்ததில் தலைமை நடத்தைக்குக் கீழ்க்காணும் செயல்கள் தேவைப்படுவதாகக் கண்டுள்ளார்.

(1) செய்யும் தொழிலில் செயல்திறன், நுணுக்கம் பெற்றிருத்தல்.

(2) தன்கீழ் வேலை செய்வோரை நன்கு அறிந்திருத்தலும் அவர்களுக்குச் சலுகை அளித்தலும்.

(3) தன்னுடன் ஏனையோர் எவ்விதத் தடையுமின்றிக் கருத்துப் பரிவர்த்தனை செய்ய வாய்ப்பளித்தல்.

(4) தாமாகவே பொறுப்பினை ஏற்றுக்கொள்ளலும், தன் பணியில் மற்றவர்களுக்கு முன் எடுத்துக்காட்டாக விளங்கலும்.

(5) நல்ல பல செயல்களை ஆரம்பித்தலும், நன் முறையில் அவற்றைச் செயல்படுத்தலும்.

(6) குழப்பமற்ற நிலையில், செயல்பாடுகளின் தீர்மானங்களை இயற்றுதல்.

இதுபோன்று பிரஸ்டன் (Preston) என்பார் 640 விமானப் படை அதிகாரிகளை ஆராய்ந்து விமானப் படை அதிகாரிப் பதவிக்கு மிக இன்றியமையாத தேவைகள் எவை என்பதனை ஆராய்ந்துள்ளார். இவ்வாறு பிரஸ்டன் இன்றியமையாத தேவைகள் என்று குறிப்பிடும் தலைமைப் பண்புகளாவன :

(1) தாமே, வேலை செய்வோரை மேற்பார்வையிட்டு, செயலைத் தம் நேரடிப்பார்வையில் வைத்திருத்தல்.

(2) தாமே பிறரிடம் தள்ளிவிடாது, செயல்களைத் திட்டமிடல், தொடங்குதல், வழிப்படுத்தல்.

(3) தம் செயலில் நிர்வாக நுணுக்கங்களைக் கையாளுதல்.

(4) தாமாகவே முன்வந்து செயலின் பொறுப்புகளை ஏற்றுக் கொள்ளுதல்.

(5) குழு அமைப்பிற்கான சார்புடைமை, நன்றியுடைமை ஆகியவை கொண்டிருத்தல்.

(6) சிறப்பான தொழில் நுணுக்கத்துடன் ஈடுபடல்.

ஹால்பினும், வின்னரும், (Halpni and Winer) ஓஹியோ பல்கலைக் கழகத்தில் தலைமைப் பற்றி விரிவான ஆய்வுகள் நடத்தியுள்ளனர். இவ் வாய்வுகளின் முடிவுகள், நான்கு காரணிகள் தலைமை நடத்தையில் பெரும்பங்குக் கொண்டிருப்பதனை எடுத்துக் காட்டியுள்ளன.

### (i) பிறர்நலச் சிந்தனை (Consideration)

தன் தலைமைச் செயல் நிலைகளில் ஏற்படும் வேளையில் தலைவர் தன்னைப் பின்பற்றுவோரின் நலனில் சிந்தனை மிக்கவாராகக் காணப்படுகிறார். ஆனால் அவர் கடமைகளை நிறைவேற்றுவதில் குறுக்கிடுவதில்லை. பின்பற்றுவோரிடம் சொந்த உறவு கொள்ளல், செயல்களுக்கான விளக்கங்கள் அளிக்க முன்வருதல், கீழேயுள்ளோரின் குறைகளுக்குச் செவி மடுத்தல் ஆகிய பண்புகள் ஒன்றுகூடி இக் காரணியைத் தோற்றுவிக்கின்றன.

### (ii) குழு அமைப்பினைத் தொடங்கிவைத்தல் (Initiating Structure)

தனக்கும் தன்னை அடுத்த குழு உறுப்பினர்களுக்கும் உள்ள உறவினை வரையறுத்தலையும், அவ்வழி ஏனைய உறுப்பினர்களின் நிலை அமைப்பினைத் திட்டவட்டமாக்குதலையும் குறிக்கின்றது. வேலை செய்வதில் திட்டவட்டமான தகுதி நிலையைக் கொண்டிருத்தல், தான் குழுவில் பெற்றுள்ள இடத்தினைப் பிறர் நன்கு புரிந்துகொள்ளுமாறு செய்தல்; உறுப்பினர் மேல் தான் கொண்டுள்ள நோக்கினைத் தெளிவாக்கல்; பின்பற்றுவோர் தங்களின் பதவித் தகுதிக்கு ஏற்பச் செயலாற்றுமாறு கவனித்தல்; குழு உறுப்பினர்களுக்குக் குறிப்பிட்டச் செயல்களை அளித்தல் போன்ற செயல்களை இக் காரணி குறிக்கின்றது.

### (iii) உற்பத்திக்கு வலியுறுத்தல் (Production Emphasis)

வேலையை நிறைவேற்றுவதற்குத் தலைவர் மேற்கொள்ளும் செயல்களை இக் காரணி காட்டுகின்றது. வேலையை நிறைவேற்ற உதவும் நடத்தைகளைத் தலைவர் வலியுறுத்துகிறார் குழுவினை ஊக்குவித்தல், செய்யவேண்டிய வேலையை அல்லது குழுவின் குறிக்கோளை வலியுறுத்தல், உறுப்பினர்களை ஒன்று கூட்டுதல்,

ஊக்குவித்தல், செய்யவேண்டிய அலுவல்களுக்கு அட்டவணை தயாரித்தல், போன்றவற்றை இக்காரணி குறிப்பிடுகின்றது.

(iv) சமூக நுண்ணுணர்வு (Social-auareness)

குழுவின் ஏனைய உறுப்பினருடன் ஈடுபடும் இடைவினைகளில் சமூக இயல்பாக ஏற்றுக்கொள்ளத்தக்க உறவு முறைகளைக் கையாளுவதை இக் காரணி குறிக்கின்றது. செய்யும் முறைகளில் மாறுதல்கள் செய்வதனைத் தலைவர் ஏற்றுக்கொள்கிறார். தவறிழைக்கும் உறுப்பினர்களைத் தூற்றுவதில்லை. தன் தோல்விகளைத் தன்னை அடுத்தவர் மீது ஏற்றித் தான் தப்ப விழைவதில்லை. உறுப்பினர்களின் உணர்வுகளை நன்கு உணர்பவராகத் தலைவர் விளக்குகின்றார். குறிப்பாகப் பின்பற்றுவோரிடையே உளப் போராட்டங்கள் ஏற்படும்போது தலைவர் அவற்றை நன்கு உணர்ந்தவராகக் காணப்படுகின்றார்.

கிரட்சு என்பவரும், கிரட்ச்ஃபீல்டு என்பவரும், தம் பணிகளைப் பல வழிகளில் பிரித்து விளக்கியுள்ளார்கள். தலைவர் செயல்படுத்துபவராக, திட்டமிடுபவராக, செயல் வல்லுநராகக் குழுவின் புறத்தொடர்பிற்குக் குழுவின் பிரதிநிதியாக, உள் உறவுகளைக் கட்டுப்படுத்துபவராக, தண்டனைகளையும் பரிசுகளையும் வழங்குபவராக, நடுவராக, குழுவின் குறியீடாக, குழுவினரின் செயல்களுக்குப் பொறுப்பேற்பவராக, இலட்சியவாதியாக, தந்தை உருவாக, மனமுறிவுகளைத் தாங்கும் சுமை தாங்கியாக இன்னும் பல்வேறு பணிகளில் ஈடுபட்டு விளங்குவதனை இவ்வாசிரியர்கள் விரிவாக விளக்கியுள்ளார்கள்.

தலைவர்–செயல்படுத்துபவராவார் (Leader as an Executive)

குழுவின் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்துவதும், செயல்படுத்துவதும், எந்த ஒரு குழுத் தலைவரிடமும் காணப்படும் திட்டவட்டமான செயற்பாங்காகும். குழுவின் கொள்கைகள் அல்லது குறிக்கோள்கள் ஆகியவற்றைத் திட்டமிடுவதில் நேரடியாகப் பங்குப் பெற்றிருந்தாலும் சரி, பெறாவிட்டாலும் சரி, அவற்றைச் செயல்படுத்துவது மேற்பார்வையிடுவது போன்ற பொறுப்புகள் தலைவரையே சாரும். பெரும்பாலும் தலைவர்தாமே இந் நிர்வாகத்தினை ஏற்றுக் கொள்வதில்லை; இதனைக் குழுவின் பிற உறுப்பினரிடம் விட்டுவிடுவது இயல்பு; ஒருசில வேளைகளில் தலைவர் தம் பொறுப்புகளையும், அதிகாரங்களையும், பிறரிடம் விட்டுக் கொடுக்க இயலாமல் போகலாம். அப்போது குழுவின் நடவடிக்கைகளில் தலைவர் தாமே நேரடியாகப் பங்குக் கொள்ளவேண்டிய அவசியம் நேரிடலாம். எனினும் எல்லாச் சூழ்நிலைகளிலும் குழு

வின் பணிகளைச் செயல்படுத்தும் பொறுப்புத் தலைவரையே சாருகின்றது.

**தலைவர்–திட்டமிடுபவராவார் (The Leader as Planner)**

குழுவின் முடிவுகளை அடைய மேற்கொள்ளும் வழிமுறைகளை உருவாக்குபவராகத் தலைவர் அமைகிறார். இலக்கினையடைய உடனடி நடவடிக்கைகளையும், நீண்டகாலத் திட்டங்களையும், திட்டமிட்டுச் செயல்படுத்துபவர் தலைவரே. தலைவர் அல்லது ஏனைய குழு உறுப்பினர்கள் குழுவின் வெற்றிக்கான திட்டங்களை உத்திகளைப் பெற்றிருப்பினும் அவை பெரும்பாலும் சிறு சிறு பகுதிகளாக அமைவதால் முழுமையான திட்டத்துடன் ஒன்றியவர்களாக இவர்கள் காணப்படாததால், அவை அத்துணை முக்கியத்துவம் பெறுவதில்லை.

**தலைவர் கொள்கை வகுப்பவராவார் (The Leader as policy maker)**

குழுவின் நோக்கங்களையும், கொள்கைகளையும், வகுப்பவர் தலைவரே. பொதுவாகக் குழுவின் நோக்கங்களும், கொள்கைகளும் மூன்று நிலைகளினின்று தோன்றக்கூடும்.

(1) மேலிடத்திலிருந்து: குழுவிற்கும் மேம்பட்ட ஓர் அதிகாரம் பெற்ற உயர்ந்தவர்களிடமிருந்து கொள்கைகள் உருவாதல் உண்டு. உயர் இராணுவ அதிகாரிகளிடமிருந்து கீழ்நிலை இராணுவத் தலைவர்களுக்கு அனுப்பப்படும் ஆணைகளும், நிறுவனங்களின் உயர்மட்டத்தில் செய்யப்பட்டக் கொள்கை முடிவுகளும் இதற்குச் சான்றுகள்.

(2) கீழிடத்திலிருந்து: இவை குழுவின் உறுப்பினர்கள் அனைவரும் சேர்ந்து மேற்கொள்ளும் முடிவுகள் ஆகும். இந்நிலையிலும் தலைவர் முக்கியப் பங்குப் பெறுகிறார். விவாதங்களை ஒழுங்குபடுத்தி வழிப்படுத்துவதன் மூலம் இந்நிலையில் தலைவர் மிக முக்கியப் பங்குப் பெறுகிறார்.

(3) தலைவர் தானாகக் கொள்கைகளை முடிவு செய்ய அதிகாரம் பெற்ற நிலைகளில், தலைவரிடமிருந்தே கொள்கைகள் உருவாகின்றன. இம் மூன்று நிலைகளில் எந்த ஒரு நிலையினதாகக் கொள்கை முடிவு அமையினும் சரி அம் முடிவினை உருவாக்குவதில் தலைவர்–மிக முக்கியப் பங்குப் பெற்றுவிடுகிறார்.

**தலைவர்–செயலில் நிபுணராவர் (The Leader as Expert)**

குழுவின் செயலுக்கு வேண்டியச் செய்திகளும், திறமைகளும் உடனடியாகப் பெறக்கூடியக் களமாகத் தலைவர் கருதப்படுகிறார். குழுவின் அதிகப்படியான வேலை நேரத்திலும் சிறப்பான செயல்

களிலும், நுட்பமான செயல்பாடுகளில் குழு ஈடுபட்டிருக்கும் போதும் தலைவர், நுட்ப உதவியாளர்கள் (Technical assitants), அறிவுரை கூறுவோர் (advisers) ஆகியவர்களின் உதவியை நாடுவதும் உண்மையே. ஆனல் அவர்களால் தலைவரின் சிறப்புத் தன்மைப் பாதிக்கப்படுவதில்லை. மாருக அவரே செயலில் தேர்ந்தவர் என்ற பெருமையினை அடையப்பெறுகின்ருர். மலைமீது ஒரு குழு ஏறுகிறதென்று வைத்துக்கொள்வோம். வழிகாட்டியாக அமைப்பவர் குழுவின் தலைமையை ஏற்ருலும், அவரது தன்மை வழிகாட்டும் செயலைத் தாண்டிச் செல்லாமலிருக்கலாம். அதுபோலவே, தலைவரின் அரியச் செயலுக்கு ஏனைய உறுப்பினரின் அறிவுரைகள் உதவலாம். அவர்கள் கூறுவதைத் தாண்டி அடுத்து அந்த யோசனையைச் செயல்படுத்த ஏனையோர் சக்தியற்று இருக்கும்போது, தலைவரே அதனைச் செயல்படுத்துகிருர்.

**தலைவர் புறத்தொடர்பு குழுவிற்குப் பிரதிநிதியாவார் (The Leader as External group Representative)**

குழுவின் உறுப்பினர் அனைவரும் தாமாகக் குழுவிற்குப் புறத்தேயுள்ளோரிடம் தொடர்புகொள்ளுதல் இயலாது. எனவே தலைவரே குழுவின் வெளி உறவுகளில் குழுப் பிரதிநிதியாக இயங்குகிருர். குழுவினின்று வெளிச் செல்லும் கருத்துப் பரிவர்த்தனைகளை வழிப்படுத்துவது மட்டுமன்றி, வெளியினின்று உட்செல்லும் கருத்துப் பரிவர்த்தனைகளையும் தலைவரே மேற்கொண்டு வழிப்படுத்துகிருர். இதனை லீவின் என்பவர் ‘வாயிற் காப்போன்’ என்று குறிப்பிட்டுள்ளார்.

**தலைவர் உள் உறவுகளைக் கட்டுப்படுத்துபவராவார் (The Leader as Controller of internal relations)**

ஏனைய உறுப்பினர்களைக் காட்டிலும் தலைவரே அதிக அளவு குழுவின் அமைப்புப் பற்றிய விவரங்களில் கவனத்தைச் செலுத்துகிருர். எனவே இந் நிலையில் அவர் குழுவின் உறவுகளைக் கட்டுப்படுத்துபவராக இயங்குகிருர். ஒருசில குழுக்களில் அக உறவுகள் தலைவர் தம்மாலேயே வழிபடுத்தப்படுகின்றனர். ஒருசில குழுக்களில் தலைவர் குழுவிடமிருந்து மிகவும் விலகி அமைவதால் ஒருசில தனிச் சிறப்பான உறுப்பினர்கள் இப் பணியை ஏற்கின்றனர். இன்னும் ஒருசில குழுக்களில் தலைவரும் உறுப்பினரும் ஒன்ருகவே காணப்படுதல் உண்டு.

**தலைவர் – தண்டனைகளையும், பரிசுகளையும் வழங்குபவராவார் (The Leader as Surveyor of Rewards and Punishments)**

இதுவே, தலைவர், குழுவிலுள்ள ஏனைய உறுப்பினர்மேல் கொண்டுள்ள கட்டுப்பாட்டிற்கு வழி கோலுகிறது. பரிசுகளும்,

தண்டனைகளும் பெரும்பாலும் புதிய நியமனங்களாக இருக்கும். சில வேளைகளில் குழுவின் உயர்ந்த பொறுப்புகளையும், தகுதியையும் உயர்த்துவதின் மூலம் பரிசளித்தல் நடைபெறலாம். ஒருசில வேளைகளில் ஒழுங்கு நடவடிக்கை மூலம் ஓரிரு உறுப்பினரைக் குழுவைவிட்டு வெளியேற்றலாம். இத்தகைய செயல்கள் தலைவரையே சாரும்.

**தலைவர் நடுவராவர் (The Leader as Ablitrator and Mediator)**

குழுவின் உள் ஏற்படும் சிக்கல்களைத் தீர்க்கும் நிலையில் தலைவர் நடுநிலையாளராகவும், சமாதானத்தை உருவாக்குபவராகவும் அமைகிறார். சில வேளைகளில் அவரது சொந்த நலன் கருதி ஒற்றுமையை உருக்குலைத்தல் உண்டு.

**தலைவர் முன்மாதிரியாவார். (The Leader as Exampler)**

குழு உறுப்பினர்கள் என்ன செய்யவேண்டும் என்பதை வெளிப்படையாகத் திட்டவட்டமாகக் காட்டுவதற்குத் தலைவர் ஒரு முன் மாதிரியாக அமைதல் சிறப்பு. தயங்காது போர்முனையில் முன்னேறும் போர்ப்படைத் தலைவர் இதற்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாம்.

**தலைவர்–குழுவின் உருவகமாவார் (The Leader as a Symbol of the Group)**

குழுவைத் தனித்துக காட்ட, ஒரு திட்டவட்டமான முழுமையாக (distinct entity) எடுத்துக்காட்ட வழிகோலும் எந்த ஒரு காரணியும் குழுவின் ஒற்றுமையினை உயர்த்துகிறது. இதன் பொருட்டு அடையாள வில்லைகள் (Badges). சீருடைகள் (Uniform), தனித்த பெயர்கள் போன்றவை பயன்படுத்தப்படுகின்றன. தலைவரும் இவ் வகையில் சில வேலைகளில் செயல்படுகிறார். அவரைக் கொண்டே அக் குழுவினை அடையாளம் கண்டுகொள்ளும்படியாக ஒரு குழுவின் உருவமாகச் சில வேலைகளில் அவர் விளங்குகிறார். குழு செயல்படாத காலத்தும் தொடர்ந்து பணியாற்றுது, சிறிது இடைவேளை ஏற்பட்டிருக்கும்போது குழுவினை அறிந்து கொள்ள இவ்வுருவகம் தேவைப்படுகிறது. குழு உறுப்பினர் அனைவரும் சென்றபின்னும் தலைவர் நீடித்துத் தலைமைப் பங்கினை வகிப்பதன் மூலம் குழுவிற்குத் தொடர்ச்சியை அளிக்கலாம்.

**தலைவர் தனியாள் செயல்களுக்குப் பொறுப்பேற்பவராவார்: (The Leader as Substitute for individual responsibility)**

ஒரு சில வகைக் குழுக்களில் தனியவர்களை அவர்கள் விரும்பாத அவர்களின் சொந்தக் காரணங்களினால் செயல்களினின்று விலகும்போது அவர்களைப் பொறுப்புகளினின்று விடுவிப்பவ

ராகத் தலைவர் காணப்படுகிறார். தானாக முயன்று தன் குழப்பங்களை விலக்க விரும்பாத தனியவன் தனது பொறுப்பினைத் தலைவனிடம் விட்டுவிட்டு விடுதலை பெறுகிறான். இவ்வாறு தலைவர் தனியவனின் சொந்த முடிவுகளையும் தீர்மானிக்கும் காப்பாளராக விளங்குகிறார்

**தலைவர்–லட்சியக் கோட்பாட்டினராவார் (The Leader as Ideologist)**

தனி உறுப்பினரது நம்பிக்கைகள், மதிப்பீடுகள், லட்சியக் கோட்பாடுகள் ஆகியவற்றின் தோற்றக்களமாகக் தலைவர் விலங்குதலும் உண்டு. ஒரு குழு உறுப்பினரிடம் காணப்படும் கோட்பாடுகள் அத் தனியவர்களது எண்ணங்களைக் காட்டிலும் அவர்களது தலைவர்களின் எண்ணங்களையே பிரதிபலிக்கின்றன. குழு ஏற்கும் கோட்பாடுகள் தனியவனது நோக்கங்களினின்று எவ்வளவு மாறுபட்டிருந்தபோதிலும் கொஞ்சம் கொஞ்சமாக வழிப்படுத்துகின்றன.

**தலைவர்–தந்தையின் உருவாவார் (The Leader as father figure)**

தலைவர் தந்தையின் நிலையிலிருந்து ஏனைய உறுப்பினர்களுடன் செயல்படுகிறார். தலைவர் இவ்வாறு விளங்கத் தவறிய நிலைகளில் பின்பற்றுபவர்கள் தாமாகவே முன்வலிந்து இப் பண்புகளைத் தலைவரிடம் ஏற்றிக் காண்கின்றனர்.

இரண்டாவது உலகப்போரின்போது ஜெர்மனி வீழ்ச்சியுற்ற காலத்திலும் ஜெர்மானியப் போர்வீரர்கள் ஹிட்லரைத் தகுதி மிக்க ஒருவராகவே கருதிவந்தனர். இந் நிலையில் உண்மையான ஹிட்லரின் குணங்களை இவர்கள் காணாது தங்களின் ஊகங்களை உயர்ந்த எண்ணங்களை அவர்மேல் ஏற்றித் தங்கள் நம்பிக்கையினின்று வழுவாது இருந்தனர்! இதனை அன்ஸ்பாச்சரின் (Ansbacher) ஆய்வு காட்டுகிறது.

**தலைவர்–பிறர்பழி ஏற்பவராவார் (The Leader as Scapegoat)**

தோல்விக் காலங்களில் தலைவர் தூற்றப்படுதலும் உண்டு. மனமுறிவு, ஏமாற்றம், குழுப் பணிகளில் வெறுப்பு ஆகியவையால் பாதிக்கப்பட்ட குழுத் தன் தலைவரைத் தூற்ற முற்படுகிறது. தன் தவறுகளுக்கும் அவரையே பொறுப்பாளியாக்குகிறது. இதனால் மனமுறிவுற்றோரின் ஆதிக்கத் தாக்குதல்களுக்குத் தலைவர் ஆளாதலும் உண்டு. இப்பொழுதெல்லாம் அவர் ஒரு பிறன் பழி ஏற்பவராகவே விளங்குகிறார்.

**தலைமைத் தன்மையின் வகைகள் (Types of Leaderships)**

சமூகத் தன்மையின் அடிப்படையில் தலைவர்களைப் பல பிரிவினராகப் பிரிக்கலாம். இவ்வகையில் சமூகத்தில் தாம் பெரும்

தகுதிகளின் அடிப்படையில் ஒருவர் தலைவராக விளங்குதல் கூடும். இவ்வாறு சமூகத் தன்மைகளின் மூலம் தலைவர்களைப் பாகுபடுத்த பல அறிஞர்கள் முயன்றுள்ளனர்.

ஷிவார்ஸ் (Schwarz D.L.) என்பவர் சிந்தனையாளர் (Men of thought) என்றும் செயல் திறனாளர் (Men of action) என்றும் இரு பிரிவுகளாகத் தலைவர்களைப் பகுக்கிறார். சிந்தனையாளர்கள் தம் கூர்த்த அறிவினால் அறிவு துறைகளில் தலைவர்களாக விளங்கு கின்றனர். இத்தகையோர் பாமர மக்களிடையே அவ்வளவாகச் செல்வாக்குப் பெற இயலுவதில்லை. செயல் திறனாளர்கள் செயல் களில் வல்லவர்களாகக் காணப்படுகின்றனர். நிர்வாகத்தில் பங்குறுவோரும் அலுவலகத் தலைவர் போன்றோரும் இவ்வகை யைச் சார்ந்தவரே.

மார்ட்டின் கான்வே என்பவர் (Martin Conway) கூட்டத்தின் பிரதிநிதி (Crowd representative) என்றும் கூட்டத்தைக் கவர் பவர் என்றும் (Crowd compeller), கூட்டத்தின் கருத்தினை விளக்குபவர் என்றும் (Crowd exponent), என்று மூன்று வகை யான தலைவர்களைப் பற்றிக் கூறுகின்றார்.

பார்ட்லெட் என்பவர் (Bartlet, F.C.) தலைவர்களை நிறுவன வகையினர் (Institutional type) என்றும், ஆதிக்க வகையினர் (Dominant type) என்றும், இணங்க வைக்கும் வகையினர் (Persnasive type) என்றும், மூன்று வகைகளாகப் பகுக்கின்றனர்.

**நிறுவனத் தலைவர்கள் (Institutional leaders)**

நிறுவனத் தலைவர்கள் உத்தியோக முறையில் நியமிக்கப் படுகின்றார்கள். அவர்களின் தலைமைத் தன்மைக் கௌரவம் வாய்ந்ததாகவும், பொறுப்புள்ளதாகவும், ஓர் அலுவலகம், தொழிற்சாலை, போன்ற நிறுவனங்களின் பெருமைக்காகப் பாடு படக் கூடியதாகவும் அமைகின்றது. இத்தகைய தலைவர்கள் பாரம்பரிய வழியிலும், நியமனத்தின் மூலமும் உருவாகலாம் அரச பதவி, கம்பெனி, நிறுவனங்களின் பங்கு வழிக் கிட்டும் இயக்குநர் பதவிப் போன்றவற்றிற்குத் தலைவர்கள் பாரம்பரியத் தின் வழித் தோன்றலாம். அலுவலகத்தின் இயக்குநர், நிர்வாகி, மாவட்ட முதல்வர் போன்றவர்கள் நியமனத்தின் மூலம் தோன்று கிறார்கள்.

இத்தகைய தலைவர்கள் நேருக்கு நேர் குழுவின் பிற உறுப் பினர்களை விரும்பினால் சந்திக்கலாம். அல்லது சந்திப்பதைத் தவிர்க்கலாம். ஓர் அலுவலகத்தின் நிர்வாகி தன் கீழ்ப் பணி புரியும் ஏனைய உறுப்பினர்களை நிர்வாகி நேரிடையாகவோ

அல்லது தனக்கு அடுத்து பொறுப்பில் அல்லது அதிகாரத்தில் இருக்கும் அதிகாரிகளின் வழியாகவோ கண்காணித்துத்தொடர்பு ஏற்படுத்திக்கொண்டு செயல்படலாம். அவர் விரும்பினுல்தான் தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள விரும்புகின்ற கடைநிலை ஊழியரைக் கூட நேருக்கு நேர் சந்தித்து உரையாடலாம். இங்கே தலைவன்–பின்பற்றுவோர் தொடர்பு இங்ஙனம் நேருக்கு நேராகவும், மறைமுகமாகவும் ஏற்பட ஏதுவாகின்றது.

### ஆதிக்கத் தலைவர்கள் (Dominant Leaders)

ஆதிக்கத் தலைவர்கள் பெரும்பாலும் ஆதிக்க உணர்வு படைத்தவர்களாகக் குழுவின் தேவையை, பிரச்சினைகளை, உடனுக்குடன் அதிகார முறையில் தீர்வு செய்பவராக விளங்குகின்றனர். இத்தகைய தலைவர்கள் பெரும்பாலும் குழுவை எதிர்நோக்கியுள்ள பிரச்சினைகளைப் பொறுமையோடு ஆராய்ந்து அதற்கு ஒரு தீர்வினைக் காணுது தங்களின் முடிவில் நிலையாகவும் இருந்து செயல்படாது, பிரச்சினைகளைச் சிந்தித்துக் கொண்டிருப்பதைவிடப் பிரச்சினைக்குத் தீர்வு காணச் செயல்படுவதே சாலச் சிறந்தது என்ற நோக்கில் பணியாற்றுவர். இவர்கள் தங்களின் செயல்களில் விளையும் தவறுகளையோ, தங்களின் ஆணையை ஏற்றுச் செயல்பட்டதில் பின்பற்றுவோருக்கு விளைந்த தீமைகளையோ பற்றி ஒரு சிறிதும் கவலைப்படார். நெப்போலியன், ஹிட்லர், ஸ்டாலின் போன்றவர்கள் இவ்வகையிலேயே சர்வாதிகாரிகளாக (Dictatorship) விளங்கினர். இவர்களின் குறிக்கோளை அடையும் முயற்சியினை முன்னுல் எந்தக் குறுக்கீடுகளும் நிற்கமாட்டா. ஐயங்கொள்பவர்களையும், ஐயங்களையும் இவர்கள் ஒதுக்கி அறவே ஒழித்து விடுவர். எவ்வகையிலாயினும் தாங்கள் எய்திய முடிவு நல்லதோ, கெட்டதோ அதை அடைவதிலேயே இவர்கள் உறுதியாய் நிற்பார்கள். இவர்களின் செயல்தன்மையில் பின்பற்றுவோருக்கு அதிக வேலை இல்லை. பின்பற்றுவோர் செய்யவேண்டியதெல்லாம் சர்வாதிகாரியின் ஆணைக்கு அடிபணிந்து செயல்படுவதேயாகும். இங்கே தலைவனின்பால் ஏற்படும் மதிப்பும், மரியாதையும் இன்றி அவன்பால் கொண்டுள்ள பயமே பின்பற்றுவோரை இலக்கை நோக்கிச் செயல்பட வைக்கிறது.

### இணங்கவைக்கும் தலைவர்கள்

எல்லா வகையான தலைவர்களிலும் இணங்கவைக்கும் தலைவர்களே தங்களைப் பின்பற்றுவோரிடை அதிகத் தொடர்பும் நன்மதிப்பும் பெற்றிருப்பர். இத்தகைய தலைவர்கள் குழுவினிடைச் செயல்படும்போது, குழுவில் உள்ள ஒவ்வொருவரையும் தனித்தனியாகச் சந்தித்து அவர்களின் பிரச்சினைகளை ஆராய்ந்து அவர்

களின் மன நிலைக்கு ஒப்பப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பர். இத்தகைய தலைவர்களின் நோக்கம் குழுவினிடைப்பட்ட ஒவ்வொரு பின்பற்றுவோரிடமும் உள்ள பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதும், அவர்களின் தனிப்பட்ட நலனுக்குப்பொதுவாகவே ஒரு வழியைக் காண்பதுமாகும். இத்தகைய தலைவர்களின் பணி பொதுத்தன்மை உடையதாகவும், உறுப்பினர் அனைவரின் நலனையும் கருதிச் செயல்படுவதாகவும், அமைகிறது. ஜனநாயக சமத்துவத்தை விரும்பும் ஒருசில அரசியல் தலைவர்களும், மதவழியில் மக்களை முன்னேற்றும் மதப்போதகர்களும், சமூகச் சீர்த்திருத்த வாதிகளும் இத்தகைய இணங்கவைக்கும் தலைவர்களாகவே செயல்படுகின்றனர்.

இவ்வாறு ஹிவார்ஸ், காண்வே பார்ட்லர் ஆகியோரது தலைவர் பகுப்புகள் தலைமை பற்றிய பொதுப்படையான பண்புகளையே சுட்டிக்காட்டுகின்றன. ஆனால் ஒவ்வொரு தலைவரின் பகுப்பும் அடிப்படை ஆளுமை அமைப்பிலும், அவர் வகிக்கும் தலைமையின் பண்பினைப் பொறுத்தும் மாறுகின்றன. கிம்பால் யங் (Kimbal Young) ஒவ்வொரு தலைவரையும் அவர் செயலுறும் துறையின் அடிப்படையில் பிரித்து அறிவது சிறப்பு என்று எடுத்துக் கூறுகின்றார். பொதுவாகச் சமூகத்தில் காணப்படும் தலைவர்களைக் கிம்பால் யங், அரசியல் தலைவர் (Political boss) அதிகாரி (Sureanerat), ராஜ தந்திரி (The Diplamat), சீர்த்திருத்தவாதி (reformar), ஆர்ப்பாட்டக்காரர் (Agitator), கொள்கையாளர் (theorist) என ஆறுவகைகளில் பிரித்து விளக்குகிறார் யங்.

**அரசியல் தலைவர்**

அரசியல் தலைவர்கள் எல்லாவகையான அரசியலமைப்புகளிலும் இடம் பெறுகின்றனர். அரசியல் தலைவர் நகர் அளவிலோ, மாநில அளவிலோ அல்லது நாட்டளவிலோ தலைவராகச் செயலாற்றலாம். இவர் அரசியல் அமைப்புடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளார். தேர்தல்களில் வெற்றி பெற்று நாட்டின் பிரச்சினைகளைக் கட்டுப்படுத்துவது அரசியல் தலைவர்களது முக்கியக் குறிக்கோளாகும். எனவே கட்சி அமைப்பின் அடிப்படையில் தலைவர்கள் தலைமை பெறுகின்றனர். தலைவரிலிருந்து தொண்டர்வரை அதிகாரப்படியமைப்புத் திட்டவட்டமாக ஏற்படுகிறது. இவ்வதிகார அமைப்பிற்குக் கீழ்ப்படியாதவர்கள் தண்டிக்கப்பட்டுத் திருத்தப்படுகின்றனர். முற்றிலும் மாறுபடாதவர்கள் துரோகிகள் என வெளியேற்றப்படுகின்றனர்.

அரசியல் அமைப்பின் அங்கத்தினராக விளங்குவதால் அரசியல் தலைவர் அடிக்கடி நாட்டின் நிலைமைக்கு ஏற்ப உளப்

போராட்டம் (conflicts) நிறைந்தவராகக் காணப்படுகிறா. அரசியல் அதிகாரத்திற்காக எழும் பூசல்களும், போட்டிகளும் இவர் தன் தலைமையைப் பாதுகாத்துக்கொள்ள வழி கோலுகின்றன. எனவே போராட்டங்களைச் சமாளிக்கும் திறனும், திட்டங்கள் தீட்டும் வல்லமையும் கொண்டவராக அரசியல் தலைவர் காணப்படுகிறார். தேர்தல்களில் வெற்றி பெறவும், உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் உரிய வகையில் பரிசளிக்கவும் திறமை கொண்டவராக அரசியல் தலைவர் இருக்கிறார். தேர்தல்களின் அடிப்படையிலேயே தன் அதிகாரத்தை நீடிக்கும் இவர் தன் நடவடிக்கைகளுக்கு இடையூருக விளங்கும் அரசியல் அமைப்பிலேயே மாற்றங்கள் செய்ய முயல்கிறார். தனக்கு ஒவ்வாத அரசியல் அமைப்புகளை இவர் பொருட்படுத்துவதே இல்லை. அரசியல் புதிய மாற்றங்கள், புரட்சிகரமான கொள்கைகள் ஆகியவற்றில் அரசியல் தலைவருக்கு நம்பிக்கை இருப்பதில்லை. இவற்றைக் கண்டு அவர் அஞ்சுவதும் இயல்பே. தகுதியின் அடிப்படையிலேயே இத் தலைவர் தன் தலைமையைப் பாதுகாத்துக் கொள்கிறார்.

அரசியல் தலைவரிடம் மனிதாபிமானம் பெருமளவு காணப்படுவதும் உண்மையே. குறை கூறுவதற்கான அடிப்படைக் காரணங்களை உணர்ந்தவராக இவர் காணப்படுகிறார். தன்னை அடுத்து நெருங்கியுள்ள பின்பற்றுவோரிடமும், வாக்காளர்களிடமும் இரக்கம் கொண்டவராகவும், கடமை உணர்வு மிகக் கொண்டவராகவும் அரசியல் தலைவர் விளங்குகிறார். அரசின் நடவடிக்கைகளில் இத்தகைய இரக்கச் சிந்தையையும் சொந்த நட்புணர்வையும், பிரதிபலிக்கச் செய்பவர் அரசியல் தலைவரே. புரட்சியாளர், ஆர்ப்பாட்டக்காரர், அதிகாரிகள் ஆகியோரிடம் இத்தகைய உணர்ச்சிகள் காணப்படுவது இல்லை.

**அதிகாரி**

அரசியல் அமைப்பு நிலையாகி, அரசியல் அடிப்படையில் நிர்வாகம் திட்டவட்டமாக அமைகையில் ஊதியம் பெருகின்ற தலைவர்கள் நிர்வாகப் பொறுப்புகளை ஏற்கின்றனர். அரசினை நேரடியாக நடத்தும் மேல்மட்ட அதிகாரிகளிடமிருந்து இவர்களைப் பிரித்தறிய வேண்டும். மந்திரிகள், தேர்ந்தெடுக்கப்பட்ட இயக்குநர்கள் போன்றோரிடமிருந்து அதிகாரிகள் வேறுபடுகின்றனர். அரசின் அன்றாடக் கடமைகளை நடத்திச் செல்லும சாதாரண அதிகாரிகளையே இங்கு நாம் குறிப்பிடுகிறோம். அரசின் சட்டங்கள், விதிகள், ஆணைகள் ஆகியவற்றை நிறைவேற்றுவோராய் இவ்வதிகாரிகள் காணப்படுகின்றனர்.

இத் தலைவர்கள் தங்கள் அலுவல்களைப் பொறுத்தவரை நடைமுறைகளில் தேர்ந்தவர்களாகவும், முறைப்படி நடப்போராகவும், ஒழுக்கம் வாய்ந்தோராகவும் உள்ளனர். தாமாகத் தீர்மானங்கள் எடுக்க இவர்கள் விரும்புவதில்லை. தோல்வி ஏற்படக்கூடியப் பொறுப்புகளை ஏற்க இவர்கள் முன் வருவதில்லை. இதனால் இவர்கள் அதிகாரத்தை விரும்புவதில்லை என்பதற்கில்லை. தங்களுக்குட்பட்ட வரையறைக்குள் அன்றாட அலுவல்கள், மேற்பார்வை, கண்காணிப்பு ஆகியவற்றில் அதிகாரம் செலுத்துவதில் இவர்கள் பெருமளவு விருப்பம் கொண்டவர்களாக உள்ளனர். இவர்களிடம் கற்பனையும், புதியதாக ஒன்றினைத் துவக்கும் திறமை அவ்வளவாகக் காணப்படுவதில்லை. தங்களுக்குப் பழக்கப்பட்ட அலுவலக வரம்பிற்குள் போதிய அளவு திறமையும் திறனும் கொண்டே இவர்கள் செயலுறுகின்றனர். இவர்கள் தயக்கம் மிக்கவர்களாகவும், நன்றியுணர்வு கொண்டோராயும், தங்கள் சொந்தப் பாதுகாப்பில் ஆழ்ந்த வேட்கை கொண்டோராயும் காணப்படுகின்றனர். வியாபார உலகில் முதலாளியின் ஏற்றத் தாழ்வுகளில் பங்குப்பெற விழையாத கணக்கராக இத் தலைவர் காணப்படுகிறார். அரசினர் நடவடிக்கைகளிலோ அல்லது தேர்தல் திருப்பங்களாலோ தங்களுக்கு எவ்விதப் பாதிப்பும் ஏற்படாது பார்த்துக் கொள்ள விரும்பும் அதிகாரியாக இவர் காணப்படுகிறார். இவர் திட்டவட்டமான விதிகளையும், திட்டவட்டமான வருவாயினையுமே பெற்றுச் செயலாற்ற விழைகிறார்.

## இராஜதந்திரி

பொதுவாக நாடுகளுக்கிடையேயுள்ள உறவுகளுடனேயே இராஜதந்திரியை நாம் காண்கிறோம். ஆனால் ஒரே அரசாங்கத்துள் இடம்பெறும் வெவ்வேறு குழுக்கள், பூசல்கள், சச்சரவுகள் ஆகியவற்றில் ஈடுபடக்கூடிய நிலையிலும் இராஜதந்திரி முக்கிய இடம் பெறுகிறார். அதேபோல் இரு அரசாங்கங்களுக்கிடையே பூசல்கள் எழும் நிலையிலும் இராஜதந்திரி முக்கியத்துவம் பெறுகிறார். பொதுவாக, இராஜதந்திரி தான் இடம் பெறும் அரசின் பொதுவான நியதிகளை நன்கு உணர்ந்து அதன்படி நடக்கிறார். இவர் சூழ்நிலைகளையும், பிறரையும் தன் விருப்பப்படி செயலுறுமாறு செய்கிறார். ஆனால் இவ்வாறு செயலுறுவதில் அவர்கள் சொந்த விருப்பு அற்றவராக இருக்கிறார்கள். இவரும் அதிகாரத்திற்கான போராட்டத்தின் அடிப்படையிலேயே இச் செயல்களில் ஈடுபடுகிறார். இவர் நாணயத்தை அவ்வளவாகப் பின்பற்றுவதில்லை. இரட்டை வேடம் புனைவதற்கும் இவர் தயங்குவதில்லை.

இவர் சொற்களைத் திறமையுடன் பயன்படுத்துகிறார். தன் உண்மை நோக்கை வெளிப்படையாகத் தெரிவிப்பதே இல்லை.

**சீர்திருத்தவாதியாளர், ஆர்ப்பாட்டக்காரர்**

மக்களாட்சியில் காணப்படும் தலைவர்கள் வகைகளுள் சீர்த் திருத்தவாதியும் ஒருவரே. இவர் புரட்சிகரமான கருத்துகளைத் தெரிவித்தாலும் வன்முறையில் ஈடுபடும் புரட்சியாளர் அன்று. பொதுவாக எதிலும் நிறைவினை வலியுறுத்துபவரே இவர். நடைமுறையில் உள்ள இடையூறுகளை மறந்து கனவுலகில் வாழ்பவராக இவர் காணப்படுகிறார். மாறுதல்கள், புது அமைப்புகள் பற்றி உணர்ச்சிப் போக்கில் இத் தலைவர் எண்ணுகிறார். இவர் தன் கொள்கைகளினின்று சிறிதும் வழுவுவதில்லை. இவர் மக்களின் பகுத்தறிவில் நம்பிக்கை கொண்டவர்.

ஆர்ப்பாட்டக்காரரோ தீவிரமான புரட்சிக்காரர். இவர் புதுமையைப் புகுத்துவதில் தீவிரம் மிகுந்தவர். தன் புதுமைக் கருத்துகளை வன்முறையைப் பயன்படுத்தியாவது நடைமுறைக்குக் கொண்டுவந்துவிடவேண்டும் என இவர் விரும்புகிறார்; முயல்கிறார். ஆனால் இவரது திட்டங்கள் நடைமுறைப் பிரச்சினைகளை மனதில் கொள்வதே இல்லை. தன் கொள்கைகளில் 'வெறி' (fanatical) யாளராக இவர் காணப்படுகிறார். மாறுபட்டக் கருத்துகளை ஆர்ப்பாட்டக்காரர் பெரிதும் எதிர்க்கிறார்.

**கொள்கையாளர்**

கொள்கையாளர் உலகினைத் தர்க்க (Logic) ரீதியில் அணுகுகிறார். இவரது கருத்துகள் இலட்சியமானவையாக அமைதல் கூடும். கொள்கைகளை வெளியிடுவதே இவரது குறிக்கோள். இவர்கள் நடைமுறைகளில் அக்கறை காட்டுவதில்லை. தன் கொள்கைகள் நிறைவேற்றப்படவேண்டும் என்று போராடுவதும் இல்லை. அரசியல் உலகிலும் சரி, அறிவியல் உலகிலும் சரி, கொள்கையாளர் இதே தன்மை கொண்டவராகவே காணப்படுகிறார்.

**ஜனநாயக—ஆதிக்கவாதிக் கொள்கைத் தலைமை (Democratic–Authoritarian Leadership)**

அரசியல் துறையிலும், சமூகவாழ்விலும் எத்தகைய தலைமைத் தன்மை சிறப்பாக இயங்க முடியும் என்ற நோக்கத்திற்குப் பொதுஉடமை நாடுகள் ஆட்சி ஆதிக்கத்தலைமைத் தன்மையே பயன்படும் என்றும், குடியரசு நாடுகள் மக்களாட்சி முறைத் தலைமைத் தன்மையே பயன்படும் என்றும் வலியுறுத்துகின்றன. பொதுஉடமை நாடுகள் ஒரு கட்சி ஆட்சிக்கு வருவதன்மூலம், மற்றவர்களின் நடவடிக்கையை அடக்கி, ஒடுக்கிக் குழுவின் நோக்கத்

திற்கு ஏற்பச் சரிபடுத்தி மக்களின் பொது நலனைப் பூர்த்தி செய்ய இயலும் என்று நம்புகின்றன. குடியரசு நாடுகளோ ஒரு கட்சி ஆட்சிக்கு வருவதன் மூலம் நாட்டிலுள்ள மக்களின் தனிப்பட்டப் பிரச்சினைகளைத் தங்கள், தங்கள் பிரதிநிதிகளின் மூலம் எடுத்து முன்வைத்து ஆராய்ந்து அப் பிரதிநிதிகளின் மொத்த முயற்சியில் மக்களின் ஒத்துழைப்பையும் கொண்டே சமூகத்தின் தேவைகளை நிறைவேற்ற இயலும். அப்படி நிறைவேற்றுவதே சிறப்பானது என்று கருதுகின்றன.

இவ்விரு வகையான தலைமைத் தன்மைக்கும் செயல்படத் தேவைப்படும். சத்தி, ஆதரவு, வலிமை இவற்றின் மூல ஆதாரங்களிலிருந்தே இவ்விருவகைத் தலைமைத் தன்மையையும் வேறுபடுகின்றன. மக்களாட்சித் தலைவன் தன் செயலுக்கு வேண்டிய சத்தியையும், பலத்தையும், ஆற்றலையும் தன் குழுவின் உறுப்பினர்களிடமிருந்து பெறுகின்றான். ஆனால் ஆட்சி ஆதிக்கத் தலைவன் தன் செயலுக்கு வேண்டிய சத்தியையும், பலத்தையும் குழுவிற்கு அப்பாற்பட்ட முறையில் கிடைக்கப் பெறுகிறான். மக்களாட்சித் தலைவனின் ஒவ்வொரு முயற்சியும் செயல்பட இருக்கும் இலட்சிய நோக்குகளும் குழுவினர் அனைவரின் ஒப்புதல்களையும் கேட்டறிந்த பின்னரே, அவர்களின் மன நிலையையும், பிரச்சினைகளையும், அவர்களால் செய்ய இயலும் சத்தியையும் ஆராய்ந்து அறிந்த பின்னரே, நிறைவேற்றப்படுகின்றன. ஆனால் ஆட்சி ஆதிக்கத் தலைவன் தன் நோக்கத்தைப் பூர்த்தி செய்வதில் திட்டமிடும் எந்தத் திட்டமும் அல்லது முடிவும் அவனின் குழுவினரின் இசைவிற்கு அப்பாற்பட்ட முறையில் எழுகின்றது. அவன் குழுவினர் அம் முடிவை ஏற்றால், இசைந்தால் அதற்கு ஒப்புதல் தரலாம். அல்லது அவன் முடிவு அவர்களின் இசைவிற்கு அப்பாற்பட்டதாக, அவர்களின் கருத்திற்கு மாறானதாக இருந்தாலும், அவர்கள் அதை ஏற்றுச் செயல்பட வேண்டியவர்களாக இருப்பார்கள்.

எடுத்த நோக்கத்தைப் பூர்த்தி செய்யச் செயல்படும் முறையிலும் இவ்விரு தலைமைத் தன்மைகள் வேறுபடுகின்றன. மக்களாட்சித் தலைவன் குழுவின் நோக்கத்தைத், திட்டத்தைக் குழுவினரின் ஒப்புதல்களைக் கொண்டே கணித்தபோதிலும் அதைச் செயல்படுத்தும் போதும் அம்முறை எங்ஙனம் செயல்படும், எங்ஙனம் செயல்பட இயலும் என்பதையும் அதன் செயல் முறையின் இடையே ஏற்படும் தடைகளையும் அதை நிவர்த்தி செய்யும் முறைகளையும், அடிக்கடி தன்னைப் பின்பற்றுவோருக்கு எடுத்து விளக்கவேண்டியவனாகவே இருக்கிறான். செயல்படும் தன்மை இங்ஙனம் இருப்பதால் குழுவின் வெற்றியும், தோல்வியும், வெகு

மதிகளும், போற்றுதல்களும் ஆட்சி ஆதிக்கத் தலைமைத் தன்மை யில் ஒரு தனி நபரையே சாறுகின்றன. ஆனால் மக்களாட்சித் தலைமைத் தன்மையில் அக் குழுவின் வெற்றி, வெகுமதி போன் றவை தனிப்பட்ட ஒருவனுக்கு அன்றி, அக் குழுவின் வெற் றிக்காகப் பாடுபட்ட அனைவரின்பாலும் சென்று அடைகின்றன.

இவ்விருவகைத் தலைமைத் தன்மையும் சிறப்பாகச் செயல்பட அக்குழு ஏற்றிருக்கும் கலாசாரமும், அக்குழு நிலைத்திருக்கும் சூழ்நிலையும், சந்தர்ப்பங்களும், அக்குழுச் செயல்பட ஏற்றிருக்கும் நோக்கமும் பிரச்சினைகளும், பெரிதும் உதவிச் செய்வனவாக அமைகின்றன. ஒருசில கலாசார சூழ்நிலை இடைப்பட்டக் குழு வினிடை ஆட்சி ஆதிக்கத் தலைமைத் தன்மையோ அல்லது மக்களாட்சித் தலைமைத் தன்மையோதான் சிறப்பாகச் செயல்பட முடியும். உதாரணமாகக் குழுவின் சூழ்நிலையும், சந்தர்ப்பமும், அது ஏற்றிருக்கும் பணியும் மிகவும் இக்கட்டான நிலையில் மிக விரைவில் தீர்வுகாணக்கூடிய வகையில் மற்றவர்களின் ஒப்பு தல்களையோ, இசைவையோ பெருவதற்குப் போதிய நேரமோ, அவகாசமோ இல்லாத பொழுதில் ஆட்சிக்கு ஆதிக்கத் தலைமைத் தன்மையே ஏற்றது. ஆனால் கற்றறிந்த மக்களிடையேயும், பொறுப்புணர்ச்சி, விழிப்புணர்ச்சி கொண்ட உறுப்பினர் நிறைந்த குழுவினிடையேயும் மக்களாட்சித் தலைமைத் தன்மையே சிறப் பாகச் செயல்பட முடியும். எனவே மக்களாட்சித் தலைமைத் தன்மையா அல்லது ஆட்சி ஆதிக்கத் தலைமைத் தன்மையா, எது சிறந்தது என்று ஆராய்வதற்கு அவ்விரு தலைமைத் தன்மை யின் சிறப்பான செயல்பாட்டுத் தன்மைகளோடு அது செயல்பட வேண்டிய குழுவின் தன்மை அக்குழு இயங்கும் சூழ்நிலை அக் குழுவினிடைப்பட்டோரின் செயல்திறன், ஆளுமைத் தன்மை போன்றவற்றை நாம் சிந்தித்துப்பார்க்க வேண்டியவர்களாக இருக்கிறோம்.

### மக்களாட்சித் தலைமை

ஆதிக்கத்தினைப் பொருத்தவரை மக்களாட்சித் தலைவர், அதி காரத் தலைவரிடமிருந்து வேறுபடுவதில்லை. ஆனால் தனது ஆதிக் கத்தினைப் பயன்படுத்துகின்ற முறையில் இவர் அதிகாரத் தலை வரிடமிருந்து வேறுபடுகின்றார். குழுவின் குறிக்கோளைத் தீர் மானித்தலிலும் குழுவின் நடவடிக்கைகளில் ஒவ்வோர் உறுப் பினரும் மிக மிக அதிக அளவிற்குப் பங்குக் கொண்டு செயலுற வேண்டும் என்பதிலும் இத் தலைவர் முயல்கிறார். பொறுப் பினை ஒன்று கூட்டுவதனைக் காட்டிலும் பரவலாக்குவதற்கே இவர் விழைகிறார். குழு முழுவதிலும் உடன் இடைத் தொடர்பு

உறவுகள் உறுதியாவதற்கு ஆதரவளிப்பதின் மூலம் குழுவைப் பலப்படுத்துகிறார். குழுவின் உள்வய முனைப்பு, போராட்டம் ஆகியவற்றைக் குறைப்பதற்கு முயல்கிறார். தனிப்பட்டத் தனி மதிப்பு, தகுதி வேற்றுமைகள் ஆகியவை மிகுந்து விளங்கக் கூடிய வரிசைப்படி அமைப்பு, குழு அமைப்பு, தோன்றுவதனைத் தவிர்க்க முயல்கிறார்.

மக்களாட்சி அமைப்பின் வழி நடத்தப்படும் குழுக்களின் அமைப்பை விளக்கும் சமூக அளவைப் படம் (Sociometrc Picture) கீழ்க்கண்டவாறு அமைகிறது.







(சிறு குழுவில்) (பெருங் குழுவில்)

மக்கள் சார்புத் தலைமை அமைப்பு

குழுவின் முக்கியமான குவிய இடத்தினைத் தலைவர் கொண்டிருந்தாலும் ஏனைய உறுப்பினர்கள் ஒருவருக்கொருவர் மிக நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதனைச் சிறு குழு, பெரும் குழு ஆகிய இரண்டிலுமே காணலாம்.

ஆணையிடும் அதிகாரத் தலைவருக்கு மாறாக மக்கள் சார்புத் தலைவர் குழுவினது பிரதிநிதியாகவே காணப்படுகிறார், முடிந்த அளவிற்குக் குழுவின் செய்தியினையே இவர் நிறைவேற்ற முயல்கிறார். இன்னமும் கூறப்போனால் இவரது குழு உறுப்பினர்கள் தாமே இக் குழுவின் நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு இவருக்கு ஆதரவளித்து ஆவன செய்கிறார்கள். தலைவர் அகன்றால் நிலைகுலையும் குழுவாகக் காணப்படும் அதிகாரத்துவக் குழு போலல்லாது, மக்களாட்சித் தலைவர் தான் தற்காலிகமாக வெளியேறுகின்ற வேளைகளில் குழு எத்தனையளவு தானாகவே தன் பணிகளை மேற்கொண்டு செல்ல இயல்கிறது என்பதின் அடிப்படையில் தனது வெற்றியைக் கணக்கிடுகிறார்.

மேற்கண்ட முடிவுகளில் பல லிவின், லிப்பிட், ஒயிட் ஆகியோர் நடத்திய பரிசோதனை ஆய்வின் முடிவுகளினை அடிப்படையாகக் கொண்டவையாகும். 1938-ம் ஆண்டில் கர்ட் லிவின் தலைமையில் 'ரொனல்ட் லிப்பிட். ரால்ப். கே. ஒயிட்' ஆகிய உளவிய

லாளர்கள் வெவ்வேறு வகையான தலைமைத்தன்மை, வெவ் வேறு வகையான குழுச் சூழலில் எங்ஙனம் செயல்படுகின்றது என்ற உண்மைகளை அறிய சிறுவர் குழுக்களைக் கொண்டு பரி சோதனை வாயிலாக ஓர் ஆராய்ச்சியினை மேற்கொண்டனர். சிறுவர்கள் இரு குழுக்களாகப் பிரிக்கப்பட்டனர். ஒவ்வொரு குழுவிற்கும், ஒவ்வொரு பரிசோதனையாளர் தலைமை தாங்கினர். ஏற்கனவே திட்டமிட்டபடி இவ்விரு பரிசோதனையாளரும் இரு வெவ்வேறு வகைத் தலைமையினை வலிந்து மேற்கொண்டனர். அதாவது ஒரு பரிசோதனையாளர் அதிகாரத்துவத் தலைமையில் குழுவினை நடத்தினர். மற்றவர், மக்கள் சார்புத் தலைமையில் குழுவினை நடத்தினர். குழுக்கள் தனித்தனிச் செயல்களில் ஈடு பட்டன. ஒருசில வாரங்களுக்கு இவ்விரு குழுக்களும் தத்தம் தலைமையின் கீழ் ஒழுங்காகக் கூடிச் செயல்களில் ஈடுபட்டன.

### ஆட்சியாதிக்க அல்லது அதிகாரத்துவப் பாங்கு (Authoritarian style)

இங்குக் கொள்கை பற்றிய முடிவுகளனைத்தும் தலைவராலேயே செய்யப்பட்டன. இலக்குவினை அடைவதற்கான நுணுக்கங்களும் படிகளும் ஒரு நேரத்தில் ஒவ்வொன்ருக ஆணையிடப்பட்டன. எதிர்காலப் போக்குகள் பெருமளவிற்கு நிச்சயமற்றவையா யிருந்தன.

செய்யவேண்டிய செயல், இணைந்து கொள்ளக் கூடியக் கூட்டாளி ஆகியவற்றைத் தலைவரே ஆணையிட்டார். போற்று கின்றபோதும், தூற்றுகின்றபோதும் தலைவர் 'சொந்த' முறையி லேயே நடந்துகொண்டார். அவற்றிற்கு ஆன தகுந்த காரணங் களை வெளியிடவில்லை, செய்துகாட்டு நேரம் போக, எஞ்சிய வேளைகளில் குழுவுடன் தீவிரமாகப் பங்குக் கொள்ளாமல் ஒதுங்கி நின்ருர்.

### மக்களாட்சி அல்லது மக்கள் சார்புப் பாங்கு (Democratic Style)

குழுத் தீர்மானப்படி கொள்கைகள் வரையறுக்கப்பட்டு முதற் கூட்டத்திலேயே அவை செய்யப்பட வேண்டிய செய்முறைகளின் முழு வர்ணனை விளக்கங்களும் அளிக்கப்பட்டன. நுணுக்கமான செய்திகள் வருகின்ற கட்டங்களில் தலைவர் பலப்பல முறைகளை விளங்கினர். சிறுவர்களாக வேண்டிய முறையைத் தேர்ந்து எடுக்க வாய்ப்பளிக்கப்பட்டது.

உடன் செயலாற்றவேண்டியக் கூட்டாளிகளை சிறுவர் தாமே தேர்ந்தெடுத்துக் கொள்ளும் சுதந்திரம் அளிக்கப்பட்டது. அதே போல் செயல்களின் பங்கினையும் சிறுவர் தாமே ஏற்றனர். தலைவர்

போற்றுதலிலும் நடுவராக உண்மையான செய்திகளைக் கொண்டு செயல்பட்டார். வேலைகளில் அதிகம் ஆதிக்கம் செலுத்தாமல் குழு உறுப்பினர்களில் ஒருவர் உணர்வோடு காணப்பட்டார்.

**ஆராய்ச்சியின் குறிப்பிடத்தக்க முடிவுகள்**

(1) அதிகாரத்துவக் குழுக்கள் மக்கள் சார்புக் குழுக்களைக் காட்டிலும் ஆக்கிரமிப்புக் மிக்கவையாக அல்லது அதிக அளவு உணர்விழந்தவையாகக் காணப்பட்டன. ஆக்கிரமிப்பினைத் தலைவர்மேல் வெளியிடாது வேறு குழு உறுப்பினர்மேல் வெளியிடமுற்பட்டனர். இவ்வாறு துன்புற்ற சில சிறுவர்கள் இப்பகைமையைத் தாங்க இயலாமல் குழுவைவிட்டே வெளியேறினர். உணர்வற்ற குழுக்களில் கூடத் தலைவரது அடக்குமுறைகளாலேயே ஆக்கிரமிப்புச் செயல்கள் வெளிவரவில்லை. தலைவர் தற்காலிகமாகக் குழுவைவிட்டு வெளியேறியபோது ஆக்கிரமிப்பு வெடித்தெழும் நடத்தைகள் காணப்பட்டன.

(2) அதிகாரத்துவக் குழுவில் தலைவரை மிகவும் பயப் பணிவோடு அணுகினர்; மேலும் அவை பெரும்பாலும் கவனம் வேண்டுகின்ற தேவையைத் தெரிவிக்கின்றவைகளாகக் காணப்பட்டன. மக்கள் சார்புத் தலைவரிடம் ஏற்படுகின்ற அணுகல்கள் நட்புத்தன்மையினவாயும், செயல்பற்றியனவாயும் இருந்தன.

(3) அதிகாரத்துவக் குழுவில், மக்கள் சார்புக் குழுவினைவிடக் குழு உறுப்பினர்களுக்கிடையே உள்ள உறவுகள் மிக அதிக அளவு ஆக்கிரமிப்புத் தன்மையினதாய் இருந்தன.

(4) மக்கள் சார்புக் குழுக்களில் ஒற்றுமை ஓங்கியிருந்தது. துணைக் குழுக்கள் மிகவும் நிலையானவையாகக் காணப்பட்டன. அதிகாரத்துவச் சூழலில் இத்துணைக் குழுக்கள் சிதறுண்டன.

(5) அலுவல்களின் மாற்றங்கள் அதிகாரத்துவத் தலைவர் தற்காலிகமாக விலகிய சமயங்களில் மிகவும் அதிகமாக இருந்தன. ஆனல் மக்கள் சார்புத் தலைவர் இல்லாத நேரங்களில் ஓரளவே அலுவல்கள் குறைந்தன.

(6) பரிசோதனை வழி ஏற்படுத்திய அலுவற் சூழ்நிலையில் மனமுறிவுகளின்போது மக்கள்சார்புக் குழு இடுக்கண் நோக்கி நிறுவப்பட்டத் தாக்குதலை மேற்கொண்டது ஆனல் அதிகாரத்துவக் குழுக்கள் தனித்த ஏசல்கள், தூற்றதல்கள் மூலமாகத் தடைப்பட்டன உயர்ந்த செயலுக்கான ஊக்க மூட்டுதலுக்கு மக்கள் சார்புத் தலைமையே சிறந்தது என்பது போன்று மேற்கூறிய முடிவுகள் காணப்படுகின்றன. இருப்பினும் இம் முடிவுகளை அப்படியே ஏற்பதில் எச்சரிக்கை வேண்டும். லிப்பிட், ஒயிட் என்பவர்களின் சோதனைகளில் சிறுவர்கள் அனைவருமே அதி

காரத்துவத் தலைமைக்கு இயன்றளவு எதிர்வினை புரியவில்லை. பெரும்பாலான சிறுவர்கள் மக்கள் சார்புத் தலைமையினை இரகசிய மாக விரும்புவதாகக் கூறினாலும், சிறுவர்கள் அனைவருமே அவ் வாறு கூறவில்லை என்பதை நினைவில் இருத்தவேண்டும். பணி வான குழுக்கள் ஆணைகளை ஏற்பதில் முழுமையாக மனநிறைவு பெற்றிருந்திருக்கின்றனர். இச் சிறுவர்களில் ஒருசிலர் அதி காரத்துவ அமைப்புக் கொண்ட குடும்பங்களினின்று வந்திருக் கின்றனர் என்ற உண்மை குறிப்பிடவேண்டிய ஒன்றாகும்.

தொழிலாளிகள் மக்கள் சார்புத் தலைமையை எதிர்க்கக் கூடும் என்பதைப் பல ஆய்வாளர்கள் எடுத்துக் கூறியுள்ளனர். தங்கள் ஆசிரியர்மேல் உடன்பாட்டு நிலையில் சார்ந்திருக்கக் கற்றிருந்த மாணவர்கள் பற்றிப் பாய்லே (Bailey) என்பவர் விளக்கியுள்ளார். பங்குப் பெற்ற தலைமை மூலம் தன் பொறுப்புப் பெறுமாறு அவர் கள் பாய்லேவால் ஊக்குவிக்கப்பட்டபோது அவர்கள் இதனை விரும்பவில்லை. தலைவர் என்ற முறையில் அவரே வழிக்காட்ட (directive) வேண்டுமென அவர்கள் வாதாடியிருக்கின்றனர்.

### அதிகாரச் சுருக்கம்

இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மக்கள் எங்குக் கூடு கிறார்களோ அங்கு நாம் ஒரு தலைவனைக் காணமுடியும். ஒரு குழுவின் தலைவனைப் பிரித்தறியத் தன்னறிக்கை முறையையோ உற்று நோக்கல் முறையையோ பயன்படுத்தலாம். விலங்குகளிட மும் பறைவைகளிடமும் கூட அடிபணிந்து போதல், ஆதிக்கம் செலுத்துதல் ஆகியவை காணப்படுகின்றன. எனவே தலைமைத் தன்மை என்பது இத்தகைய ஆதிக்கம் செலுத்தும் செயலா என நம்முள் ஐயம் எழலாம். இது தவறு. ஆதிக்கத் தன்மை உடல் பலத்தைக் கொண்டு ஏற்படுவது, தலைமைத்தன்மை உடல் பலமல் லாத அறிவு திறன், செயலாற்றும் திறமை, ஆளுமைத்தன்மை, பிரச்சினைகளை அணுகி ஆராய்கின்ற நுட்பத்தன்மை, உள்ளத் திறம், மனோதிடம் போன்ற எண்ணற்ற காரணிகளைப் பொறுத்த தாக அமைகின்றது.

குழுவில் ஒரு தனியவன் பெற்றுள்ள செல்வாக்கினையே தலைமைக் குறிக்கின்றது. ஒரு குழுவின் தலைவர் பின்பற்றுவோர் இந்தச் செல்வாக்கின் அளவினாலேயே வேறுபடுகின்றனர், ஆராய்ச்சியாளர்கள் நடைமுறைப் பிரச்சினைகளின் அடிப்படை யில் தலைவர்களைப் பிறரிடமிருந்து பிரித்தறிய முயன்றுள்ளனர். இத்தகைய வரையறைகளைக் கிப் என்பார் ஆறு பிரிவுகளாய்ப் பகுத்துக் கூறுகின்றார். இருப்பினும் தலைமைத் தன்மையை நிர்ணயிக்கின்ற அடிப்படைக் காரணிகளைப் பிரித்து ஆராய்வது

இயலாது என்பதையும் அவர் அறிந்து அதற்கான காரணங்களை விளக்குகின்றார்.

தலைமைத் தன்மையின் அடிப்படைப் பண்புகளை நிர்ணயிப்பது சிறிது கடினம். தலைவர்கள் சூழ்நிலைச் சந்தர்ப்பங்களால் தோற்றுவிக்கப்படுகின்றனர் என்பது ஒரு சிலரது கருத்து. தலைவர்கள் பிறப்பினாலேயே உருவாக்கப்படுகின்றனர் என்பது மற்றொரு கருத்தாகும்.

தலைவன், பின்பற்றுவோர இவர்களிடையே நிலவும் தொடர்பு பொதுவாக (i) நேருக்கு நேர் நிகழும் தொடர்பு (ii) குழுவிடையே ஏற்படும் தொடர்பு (iii) சமூகப் பின்னணியில் ஏற்படும் தொடர்பு என மூன்று வகையாகக் காணப்படுகின்றது.

ஒரு தலைவரது பண்புக் கூறுகள் அவர் வெளியிடும் தலைமையின் வகை, குழுவின் இலக்குகளை அடையத் தேவைப்படும் செயல் திறன், அதில் அவர் பெறும் வெற்றி, இன்னும் தலைவரது ஆளுமைச் சிறப்புப் போன்றவற்றைப் பொறுத்து அமைகின்றன. ஹால்பினும், வின்னரும், பிறர்நலச் சிந்தனை, குழு அமைப்பினைத் தொடங்கிவைத்தல், உற்பத்திக்கு வலியுறுத்தல், சமூக நுண்ணுணர்வு போன்ற நான்கு காரணிகள் தலைமை நடத்தையில் பெரும் பங்கு கொண்டிருப்பதாகக் கருதுகின்றனர்.

கிரட்சும், கிரட்ச்ஃபீல்டும் தலைவர் தம் பணிகளைப் பல வழிகளில் பிரிதது விளக்கி உள்ளார்கள். தலைவர் செயல்படுத்துபவராக, திட்டமிடுபவராக, செயல் வல்லுனராக, குழுவின் புறத்தொடற்பிற்கு, குழுவின் பிரதிநிதியாக, உள் உறவுகளைக் கட்டுப்படுத்துபவராக, தண்டனைகளையும் பரிசுகளையும் வழங்குபவராக, குழுவின் குறியீடாக, குழுவினரின் செயல்களுக்குப் பொறுப்பேற்பவராக, இலட்சியவாதியாக, தந்தை உருவாக, பிறர்பழி ஏற்பவராக இன்னும் பல்வேறு பணிகளில் ஈடுபட்டு விளங்குவதை அவ் வாசிரியர்கள் விரிவாக விளக்கி உள்ளனர்.

சமூகத் தன்மையின் அடிப்படையில் தலைவர்களைப் பல பிரிவினராகப் பிரிக்கலாம். பார்ட்லட் தலைவர்களை, நிறுவன வகையினர், ஆதிக்க வகையினர், அன்புவழி இணங்கவைக்கும் வகையினர் என்று மூன்று பிரிவுகளாகப் பகுக்கின்றார். அரசியல் துறையிலும் சமூக வாழ்விலும் எத்தகைய தலைமைத் தன்மை சிறப்பாக இயங்க முடியும் என்ற நோக்கத்திற்கு ஆட்சி ஆதிக்கத் தன்மையே பயன்படும் என்று பொது உடமை நாடுகள் வலியுறுத்துகின்றன. குடியரசு நாடுகள் ஜனநாயக முறைத் தலைமைத் தன்மையே பயன்படும் என்று கூறுகின்றன

# 9. பொது மக்கள் கருத்தும் கருத்துப் பரப்பலும்

## (Public Opinion and Propaganda)

பொது மக்கள் வாழ்வினைக் கட்டுப்படுத்துகின்ற, சரிப் படுத்துகின்ற வலிமைமிக்க ஒரு காரணியாகப் பொது மக்கள் கருத்து விளங்குகின்றது. குடியரசு நாடுகளில் ஜனநாயக ஆட்சி முறை நிலவும் அரசாங்கங்களில் பொது மக்கள் கருத்து ஒரு தலை சிறந்த சமூகச் சக்தியாகக் காணப்படுகின்றது. எனவேதான் பொது மக்கள் கருத்தின் தன்மை, வேலைப்பாடுகள், அதனது உளவியற் பண்புகள், அளவீடுகள் போன்றவற்றைப் பற்றி அறிந்து கொள்வதில் சமூக அறிஞர்களும், அரசியல் வாதிகளும் அதிக அக்கறை காட்டுகின்றனர்.

பொது மக்கள் என்பது ஒரு பிரச்சினையை எதிர்க்கொண்டுள்ள குழுவினரையும், இப் பிரச்சினையை எவ்வாறு தீர்ப்பது என்பதில் கருத்து வேறுபாடு கொண்டுள்ள மக்கள் தொகுதியையும், அப் பிரச்சினை பற்றி விவாதிக்கும் ஒரு மக்கள் குழுவையும் குறிக்கின்றது. இக் குழு, திட்டவட்டமான அடிப்படையுடன் அமைவதில்லை. இது நன்கு நிறுவப்பட்ட ஒன்றும் அன்று. இஃது ஒரு பிரச்சினையின் அடிப்படையிலேயே தோன்றுவதால் இதன் நடத்தை எவ்வித மரபு அல்லது பண்பாட்டுச் சட்டதிட்டங்களால் கட்டுப் படுவதாக அமைவதில்லை. பிரச்சினை மாற மாற அதனடிப்படையில் எழும் பொது மக்கள் குழுவும் மாறியபடி இருக்கின்றது. பொது மக்கள் குழுவிற்கு மையமாக அமையும் பிரச்சினைகள் பண்பாட்டு நியதிகளினால் தீர்க்கப்பட முடியாதவைகளாகக் காணப்படுகின்றன. இப் பிரச்சினையை மக்கள் ஒன்று கூடிக் கலந்துரையாடியே தீர்க்க முடியும்.

சமூகத்தில் ஒரு குறிப்பிட்டப் பிரச்சினை எழும்போது அதனைத் தீர்க்க முயல வேண்டிய கட்டாயம் ஏற்படுகின்றது. ஆனால்

அத்தகைய தீர்வு எவ்வாறு இருக்கவேண்டும் என்பதைத் தீர்மானிக்க உதவும் நியதிகளோ, வரையறைகளோ காணப்படுவது இயல்பு. எனவே, ஏதாவது ஒரு செயலில் ஈடுபட வேண்டும் என்பதற்கான முயற்சியிலே பொதுமக்கள் குழுப் பங்கு பெறுகின்றது. பொது மக்கள் குழுவின் விநோதமான பண்பு அதனிடையே காணப்படும் கருத்து வேறுபாடு ஆகும். அக் கருத்து வேறுபாட்டின் காரணமாகவே விவாதம் எழுகின்றது. இதுவே கூட்ட நடத்தையினின்று பொது மக்கள் குழு நடத்தையைப் பெரிதும் வேறுபடுத்திக் காட்டுகின்றது. கூட்டத்தில் உள்ளோர் தம்முள் நேரடித் தொடர்பு கொள்கின்றனர். இவர்கள் அனைவரும் ஒரு முகமாக எவ்விதக் கருத்து வேறுபாடுமின்றிச் செயலில் ஈடுபடுகின்றனர். பொது மக்கள் குழுவோ பிரச்சினையைப் பற்றிய விளக்கங்களில் வேறுபாடு கொண்டதாக அமைகிறது. பொது மக்கள் குழுவில் இடம் பெறுவோர் தங்கள் தன்னுணர்வு பெருமளவு பெற்றவர்களாகவும், திறனாய்வு மிக்கவர்களாகவும் உள்ளனர். எனவே பொது மக்கள் குழுவில் விவாதம் ஏற்பட ஏதுவாகின்றது.

பொது மக்கள் குழு ஒரு சமூகத்தைப் போன்றோ, கூட்டத்தைப் போன்றோ, மக்கள் தொகுதியினைப் போன்றோ நடந்து கொள்வதில்லை. சமூகம் உடன்பாட்டினால், அல்லது நியதிகளினால் வழிப்படுத்தப்பட்டு நடக்கிறது. கூட்டமோ உளத் தொடர்பினை ஏற்படுத்திக் கொள்வதன் மூலம் செயல்படுறது. மக்கள் தொகுதியில் அவரவர் விருப்பப்படி நடந்து கொள்கின்றனர். ஆனால் பொது மக்கள் குழு இவற்றிற்கெல்லாம் மாறுபட்டதாகப் பிளவுபட்டதாகக் காணப்படுகின்றது. எனவே, எண்ணற்ற குழப்பங்கள் இதனிடைக் காணப்படுகின்றன. இறுதியில் கூட்டுக் கருத்து (collective opinion), அல்லது கூட்டுத் தீர்மானம் (collective decision) ஆகியவற்றின் அடிப்படையில்தான் பொதுமக்கள் குழு ஒன்றாக இணைய முடிகிறது.

## பொது மக்கள் கருத்து

பொது மக்கள் கருத்து ஒரு கூட்டு நடவடிக்கையின் விளைவாகும். எனவே, பொது மக்கள் கருத்து ஒவ்வொருவரும் ஏற்றுக் கொள்ளும் ஒருமுகமான கருத்தாக இருப்பதில்லை. பொதுவாகப் பொதுமக்களிடையே காணப்பட்ட எண்ணற்ற கருத்துகளின் அடிப்படையில் உருவான கட்டுக் கருத்தாகப் பொதுமக்கள் கருத்து அமைகின்றது. இவ்வளவில் பொதுமக்கள் அனைவர் தம் கருத்துகளையும் பிரதிபலிப்பதாகப் பொது மக்கள் கருத்துக் காணப்படுகின்றது.

பொதுமக்கள் ஒரு பிரச்சினையைப் பற்றி என்ன கருதுகின்றனர் என்பதைத்தான் மக்கள் கருத்துக் குறிப்பிடுகிறது. நம்மிடையே கூட ஏதாவது ஒரு பிரச்சினை எழும்போது, கூடவே ஊரும் உலகமும் அதைப்பற்றி என்ன நினைக்கும் என்ற பயமும் நம்மிடையே எழுகின்றது. இந்த ஊர், உலகத்தின் கூட்டு எண்ணம்தான் இங்கே பொதுமக்கள் கருத்து எனக் குறிப்பிடப்படுகின்றது. உண்மையில் அப்படி வரையறை செய்யப்பட்ட நிலையில் பொது மக்களின் கருத்து என ஒன்று இல்லாவிடினும், அப்படி ஒன்று இருப்பதாக எண்ணி அல்லது கற்பித்து நாம் அக் கற்பனைக்கு உயிர் கொடுக்கின்றோம். பொதுமக்கள் கருத்து எனும் இக கற்பனை உண்மையில் உயிர் பெற்றிருக்கவில்லை எனினும், நடைமுறையில் நமது நடத்தையைக் கட்டுப்படுத்துவதால் அக கற்பித்தக் கொள்கைக்கு நாம் உயிர் கொடுத்து உயிர் இருப்பதாக நம்புகின்றோம். இதுவே பொதுமக்கள் கருத்தாகும்

கருத்து என்பது ஒரு நம்பிக்கையைக் குறிக்கின்றது. எண்ணற்ற வகைகளில் நாம் ஒன்றின் மீது நம்பிக்கை வைக்கின்றோம். இந் நம்பிக்கை உண்மையாக இருந்தால் நாம் அதன் வழி அறிவு வளர்ச்சியைப் பெறுகின்றோம். பொய்யாக இருந்தால் அதைக் கற்பனை கனவு என ஒதுக்குகின்றோம். ஆனால் ஒருசில நேரங்களில் இந் நம்பிக்கை பொய்யாகவோ, அல்லது மெய்யாகவோ, இருந்தாலும் அவற்றிற்கு மதிப்பளிக்கின்றோம். இவ்வகையான நம்பிக்கையே பொது மக்கள் கருத்து ஆகும். பொது மக்கள் கருத்து ஒரு குழுவின் கருத்தாக இருப்பது உண்மையே. ஆயினும், அக் கருத்தே பெருவாரியானவர்கள் எடுத்த அல்லது ஒரே கருத்து என்று கூறுவதற்கில்லை. பொதுமக்கள் கொண்டுள்ள எண்ணற்ற கருத்துகளினின்று உருவாகும் ஒரு கூட்டுக கருத்து, அல்லது இத் தனியான கருத்துகளினால் உண்டாகும் மையப்போக்கு என்று பொதுமக்கள் கருத்தினைப் புளூமர் (Blumer) என்பவர் குறிப்பிடுகின்றார். கருத்துகள், விவாதங்கள் ஆகியவற்றிற்கிடையே ஏற்படும் மோதலின் விளைவாகப் பொதுமக்கள் கருத்து தன் இயல்பினைப் பெறுகின்றது. பொதுமக்கள் கருத்து ஒரே கருத்தாக அமையாவிடினும் எப்பொழுதுமே ஒரு தீர்மானத்தினை நோக்கியே செல்கின்றது.

### பொதுமக்கள் கருத்தின் தன்மை

பொதுமக்கள் கருத்து என்பது உணர்வுமிக்க ஒரு சமூகம். பொது முக்கியத்துவம் கொண்டதோர் பிரச்சினையினைப் பற்றி மக்கள் விவாதத்திற்குப் பிறகு மேற்கொள்ளும் கருத்தே ஆகும் என்று ஜேம்ஸ் யங் (James Young) என்பவர் வரையறுக்கிறார்.

பொது மக்கள் என்று குறிப்பிடக் கூடியமக்கள் தம்மிடையே பொது நிகழ்ச்சியைப் பற்றி உருவாக்கிக்கொண்டு மேற்கொண் டிருக்கும் முடிவான எண்ணங்களே பொதுமக்கள் கருத்து, என்று டுயி (Deuey) என்பவர் குறிப்பிட்டுள்ளார்.

தம்மைப்பற்றியும், பிறரைப்பற்றியும் தங்கள் தேவைகள், குறிக்கோள்கள், உறவு முறைகள் ஆகியவற்றைப் பற்றி மக்கள் மனதில் கொண்டுள்ள உளச் சித்திரங்களே, 'பொதுமக்கள் கருத்து' என்று வால்டர் லிப்மன் (Walter Lipmann) வெளியிட் டுள்ளார்.

ஒரு முடிவான கருத்து பொதுமக்கள் கருத்தாக ஏற்கப்பட வேண்டுமாயின் அது ஒருமித்த கருத்தாகவோ, (unanimous) அல்லது பெரும்பான்மையினர் கருத்தாகவோ இருக்கவேண்டும் என்பதில்லை. லோவல் (Lowell) கூறுவது போன்று அக் கருத் தானது சிறுபான்மையினரால் பகிர்ந்து கொள்ளப்படாத ஒன்று யிருப்பினும், அவர்களும் அக் கருத்திற்குக் கொள்கையியல்பாகக் (அச்சத்தாலன்றி) கட்டுப்படும் தன்மையினதாக அமைதல் வேண்டும்.

பொது மக்களின் கருத்து என்பது ஒரு பிரச்சினையைப் பற்றி ஒரு நேரத்தில் ஒருசில சமூகத்தில் வாழும் மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையாகும். எனவேதான் பொது மக்கள் கருத்துக் காலத் திற்குக் காலம் மாற்றம் அடைகின்றது. நாம் இவ்வகையில் பொதுமக்களின் கருத்தினைப் பழக்க வழக்கங்களில் இருந்தும் பிரித்துச் சொல்லலாம். பழக்க வழக்கங்கள் சமூக நடத்தையைக் கட்டுப்படுத்தும் சமூகக் கட்டுத் திட்டங்களாகும். பொது மக்க ளின் கருத்தும் இத்தகையதுதான் என்றாலும், பழக்க வழக் கங்கள் தொடர்ந்து சமூகக் கட்டுத் திட்டங்களாகச் செயல்பட்டு வருவன. ஆனால் பொது மக்கள் கருத்து ஒரு குறிப்பிட்ட நேரத் தில் மட்டுமே எழுந்து செயல்பட வல்லன. மேலும் பழக்க வழக் கங்கள் ஒரு செய்தியைப் பற்றிய சட்டமாக இருக்கையில், பொது மக்கள் கருத்து ஒரு சிக்கலைப்பற்றிய ஆனால் பல்வேறு கருத்து களைக் கொண்டதாக அமைகிறது.

பொதுமக்களின் கருத்து என்பது ஓர் உயிரற்றதும் ஒரே நிலையில் இருக்கின்ற கருத்துக்கோட்பாடும் அன்று. அது காலத் திற்கு ஏற்ப மாறும் தன்மை உடையது.

**பண்டைச் சமூகத்தில் பொதுமக்கள் கருத்து**

இன்றைய சமூகத்தில் நாம் காணும் பொதுமக்கள் கருத்து உருவாகும் செயல்முறைகள், பண்டைச் சமூகத்தில் காணப்

பட்டவற்றிலும் மாறுபட்டனவாய் அமைந்துள்ளன என்று நாம் கூறலாம். நம் இந்திய வரலாறு கிராமப் பஞ்சாயத்துகள் ஒவ்வொரு கிராமத்திலும் இருந்ததாக அறிவுறுத்துகிறது. பொதுப் பணிகள் குறித்து முடிவுகள் காணுவதற்காகக் கிராம மக்கள் உருவாக்கிக்கொண்ட அவையையே கிராமப் பஞ்சாயத்து என்று குறிப்பிடுகின்றோம். கிராமப் பஞ்சாயத்தினர் கிராமத்திற்குரிய பொதுப் பிரச்சினைகளிலே கவனம்செலுத்தி வந்தனர். இவ்வாறு ஒரு குறிப்பிட்ட பிரச்சினையில் அக்கறைகொண்ட மக்கள் சிலர் கோவில்களிலோ, கிராமப் பொது இடங்களிலோ வயற்புறங்களிலோ தங்கள் தங்கள் கருத்துகளைப் பரிமாறிக் கொண்டிருந்தனர். இத்தகைய வேளைகளில் கிராமத்தில் உள்ள முதியவர்களும், இன்றியமையாதவர்களுமே அன்றைய பொதுவாகத் திட்டமிட்டு உருவாக்குவதில் பெரும் பங்கு வகித்தனர். பொதுவாக, ஒழுக்க நியதிகள், சொத்துரிமைகள் பொதுப் பாதுகாப்பு, சுங்கம்அளித்தல், கல்விச்சாலைகள் ஆகியவை அமைத்தல் போன்ற பொதுப் பணிகளில் ஏற்படும் சிக்கல்களே மிக முக்கியத்துவம் வாய்ந்தனவயாய் இருந்திருக்கின்றன. இவ்வாறு அவ்வப்போது ஏற்படும் பிரச்சினைகளைத் தொடர்ந்து எழும் விவாதங்கள் ஒருவித இணக்கத்தில் முடிவாயின.

**பொதுமக்கள் கருத்து உருவாவதில் காணப்படும் படிகள்**

மக்களாட்சியில் பொதுமக்கள் கருத்து வெகுவாகப் பயன் படுத்தப்படுகிறது. பொதுமக்கள் கருத்தினை 'மக்களாட்சியின் முதுகெலும்பு' என்று கூறலாம். ஒருசில ஒழுக்க விதிகளை ஏற்றுக்கொள்வதிலும், பிறரிடமிருந்து எதிர்ப் பார்ப்பதிலும் ஓரளவு உடன்பாடு இருபபதன் அடிப்படையிலேயே பொது மக்கள் விவாதம் அமைகிறது.

பொதுமக்கள் கருத்து ஒருசில படிகளைக் கடந்து செல்வதாக நாம் கொள்ளலாம்.

முதலாவதாகப் பொதுமக்கள் கருத்து உருவாக வேண்டியதற்கான அடிப்படைப் பிரச்சினை இருத்தல் வேண்டும். அத்தகைய பிரச்சினை சமூகம் முழுவதையும் பற்றியதாகவோ, அல்லது அக் குறிப்பிட்ட சமூகத்தின் பெரும் பங்கினைப் பற்றியதாகவோ அமையலாம். இத்தகையதொரு பிரச்சினை பிறரிடம் ஒரு பௌதீக நிகழ்ச்சியாகக்கூட அமையலாம். சான்றாகப் பூமி அதிர்ச்சியினால் ஏற்பட்ட ஆபத்து, ஒரு சமூக நிகழ்ச்சியாகக்கூட அது அமையலாம்; புதிய நீர்ப்பாசனத் திட்டம் போன்ற பொதுத்துறைப் பணிகள் இதற்குச் சான்றுகளாகும்.

இவ்வாறு தனியவன்களும், குழுக்களும் விவாதிப்பதற்கு ஏற்ற வகையில் பிரச்சினையை வெளியிடுவதே பொதுமக்கள் கருத்தின் முதற்படி.

இதனைத் தொடர்ந்து இரண்டாவதுபடியாகப் பிரச்சினையைத் துருவி ஆயும் நிலை எழுகிறது. பிரச்சினையின் முக்கியத்துவம் என்ன? இதுபற்றிக் கவனிக்க அந்நேரம் ஏற்றதுதானா? இதனைத் தீர்த்தல் இயலுமா? இத்தகைய வினாக்களுக்கான விடைகள் பெற பொதுமக்கள் பல வழிகளிலும் முற்படுகின்றனர். பேச்சுக்கள், உரையாடல்கள், பேச்சுப் போட்டிகள், செய்திக்கதைகள், செய்தித்தாள் தலையங்கங்கள், வானொலி செய்திகள் முதலிய எல்லாவிதமான கருத்துப் பரிமாற்றத் தொடர்புகளின் வழியாகவும் பிரச்சினை அலசி ஆராயப்படுகிறது.

மூன்றாவது படியில் பொதுமக்கள் கருத்து ஓரளவு அமைப்புகள் கொண்டதாகக் காணப்படுகிறது. பிரச்சினையைத் தீர்ப்பதற்குப் பல்வேறுபட்ட தீர்வுகள் கூறப்படுகின்றன. இதன் விளைவாக ஒவ்வொரு தீர்விலும் விருப்பம் கொண்டவர்கள் கட்சிகளாகப் பிரிகின்றனர். இவற்றினடிப்படையில் விவாதங்கள் ஏற்படுகின்றன. ஒருசில தீர்வுகளுக்கு எதிர்புகள் எழும். அதே வேளையில் ஒருசில தீர்வுகளுக்கு ஆதரவு அதிகரித்தல் கூடும்.

நான்காவது படியில் பேச்சுகள், விவாதங்கள், பதிப்புக்கள் ஆகியவற்றின் காரணமாகத் தனியன்கள் ஓரளவு ஒரு முடிவிற்கு இணக்கம் தெரிவிப்பவர்களாகக் காணப்படுகின்றனர். மக்கள் சபை, நிர்வாகத்தினர் போன்றோர்க்குத் தீர்மானங்கள், மனுக்கள் அனுப்பப்படுகின்றன. மக்கள் சார்பான அரசியல் அமைப்புகளில் வாக்கெடுப்புகளின் மூலம் தீர்மானங்கள் இறுதியாக நிறைவேற்றப்படுகின்றன.

**பொதுமக்கள் கருத்தை உருவாக்கும் காரணிகள்**

பொதுமக்கள் கருத்தினை எண்ணற்ற காரணிகள் உருவாக்கின்றன. தனியன்கள் அறிந்துள்ள விவரங்களின் அளவு, பொதுமக்கள் கருத்தினை வெகுவாகப் பாதிப்பதுண்டு. தனியவர் தம் உள உருவகங்கள், நோக்குகள், பயன் மதிப்புகள் ஆகியவையும் அவர்தம் கற்பனையில் காணப்படும் உளச்சித்திரங்களும், பொதுமக்கள் கருத்தினைப் பெரிதும் வகைப்படுத்துகின்றன. மேலும் ஒருவர் உறுப்பினராக உள்ள குழுவின் தன்மைகள்–குறிப்பாகச் சமூக வகுப்பு–பொதுமக்கள் கருத்தில் முக்கிய இடம் பெறுவதனை நாம் காண்கின்றோம். இவையேயன்றி ஒருவர் பொதுமக்கள் கருந்து உருவாவதில் கலந்துகொள்ளும் நிலையில் அவர் தாம் சார்ந்துள்ள பல்வேறுபட்டக் குழுக்

களின் கொள்கைகளும் இடையே ஏற்படும் போராட்டத்தில் சிக்க நேரிடுகிறது. இவ்வாறு வெவ்வேறு குழுக்களினிடமிருந்து வரும் மாறுபட்ட அழுத்தங்கள் பொதுமக்கள் கருத்தினைப் பாதிக்கின்றன என்பதனை மறுப்பதற்கில்லை தலைமை, பொதுமக்கள் கருத்தினைப் பெருமளவு பாதிப்பதனை அறிஞர்கள் எடுத்துக் காட்டியுள்ளார். பொதுமக்கள் கருத்திற்கு அடித்தளமாகச் சில நிகழ்ச்சிகள் அமையும். இந் நிகழ்ச்சிகளின் தன்மையே பொது மக்கள் கருத்தினைப் பாதிக்கும் என்பது துணிபு. இவையன்றிப் பொதுமக்கள் கருத்திற்கான தொடர்பு முறைகளும், பொது மக்கள் கருத்தினைப் பெருமளவிற்குத் திட்டமாக அமைகின்றன.

பாட்ரிக் ஜான்ஸ், ஹெய்ன், விஹான்ஸ் கெர்த் (Patricke Johns, Heine and Hans-Greth) என்ற ஆசிரியர்கள் 1921-ம் ஆண்டு முதல் 1940-ம் ஆண்டு வரை ஒரு சிறந்த அமெரிக்கப் பத்திரிகையில் வந்த கதைகளை ஆராய்ந்தனர். பிற மக்களைப் பற்றிப் பெரும்பாலும் ஒவ்வொருவரும் எவ்வாறு கருத்துக் கொண்டுள்ளனர் என்பதே இவ்வாராய்ச்சியின் நோக்கமாகும். எனவே கதைகளில் வரும் தலைவன் தலைவி ஆகியோரின் வயது, தொழில், குணநலன்கள், கதை நிகழும் சூழல், கதையின் முக்கிய மான அம்சங்கள், ஆகியவற்றை இவர்கள் பிறித்துப் பகுத்து ஆய்ந்தனர்.

ஹெய்ன், கெர்த் ஆகியவர்களைப் போன்றே ஸ்பெரெய்டு கர்காயர் (Siegfried Kracamer) 1933-ம் ஆண்டில் இருந்து 1948-ம் ஆண்டு வரை வெளிவந்த அமெரிக்கத் திரைப் படங்களில் வரும் ஆங்கில, ரஷிய பாத்திரங்களை ஆராய்ந்திருக்கிறார். இவ்விரு ஆராய்ச்சிகளும், கதைகளிலும், திரைகளிலும் வரும் பாத்திரங்கள் பெரும்பாலும் சிலவகையில் ஒரே தன்மையானவையாகக் காணப் படுகின்றன என எடுத்துக் காட்டுகின்றன. இவ்வாறு சிலவகை யில் ஒரே தன்மையான புராண இதிகாசங்களும் பொதுமக்கள் கருத்தினைப் பாதிப்பதுண்டு.

தனியவன் அறிந்துள்ள செய்திகளின் அளவு, அவனது அறிவு போன்றவை பொதுமக்கள் கருத்தினைப் பாதிக்கும் அகக் காரணிகள் என்று நாம் குறிப்பிடலாம்.

தனியவனின் நோக்குகளும் பொதுமக்கள் கருத்தினைப் பாதிக் கின்றன என்பதை எண்ணிறந்த ஆராய்ச்சிகள் எடுத்துக் காட்டு கின்றன. ஜார்ஜ் ஸ்மித் (George-Smith) தேசியக் கருத்து ஓட்டு (National opinion Poll) முறையில் சேகரிக்கப்பட்ட புள்ளி விவரங்களை மீண்டும் ஆராய்ந்ததில் கீழ்க்கண்ட உண்மையைக் கண்டார். அதாவது அனைத்து நாடுகளையும் சம நோக்கில்

நினைக்கும் தன்மை, செய்தித்தாள் தனிததன்மையுரிமை போன்ற பிரச்சினைகளில் தனிமனிதன் தன் கருத்துகளைத் தடையின்றி வெளியிட்ட மக்கள் நன்கு கல்விபெற்றவர்களாயும், அதிகமான செய்திகளை அறிந்துள்ளவர்களாயுமே இருக்கின்றனர் என்பதே அவர் கண்ட முடிவு. இதிலிருந்து அதிகமான விவரங்களையும், கல்வியையும் பெற்ற தனியன்கள் பொது மக்கள் கருத்திற்கு ஊக்கமளிக்கின்றனர் என்பது தெளிவு.

## குறுக்கிடும் அழுத்தங்கள் (Pressures)

ஒருவர் சார்ந்துள்ள குழு அவர்க்கு முக்கியத்துவம் வாய்ந்த தாகும். சிக்கல் வாய்ந்த சமூகங்களில் மக்கள் பல்வேறு குழுக் களில் உறுப்பினராக இருத்தல் அவசியமாகிறது. பெரும்பாலான வேளைகளில் இக் குழுக்கள் வெவ்வேறுபட்ட குறிக்கோளையும், செயல்களையும் கொண்டவையாய் இருக்கின்றன. இந்த நிலையில் குழுக்கள் ஒன்றுக்கொன்று கருத்துப் போராட்டம் கொண்டவை யாய் இருத்தல் இயல்பு. இத்தகைய கருத்துப் போராட்டத்திற்கு வழிகோலும் குழுக்களது செல்வாக்குகளையே, நாம் ‘மாறுபட்ட அழுத்தங்கள்’ என்று குறிப்பிடுகிறோம். ஒரு தனியவன் அல் லது குழுவின்மேல், இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கருத் துத் தீர்மானிகள் உண்டாக்கும் ஆதிக்கத்தையே மாறுபட்ட அழுத்தங்கள் என்று கூறுகிறோம்.

வெவ்வேறுபட்ட கொள்கைகளையும், குறிக்கோளையும், கொண்ட பல குழுக்களிலும் உறுப்பினராக இருக்கும் ஒருவர் ஒரு குறிப்பிட்ட வேளையில் எந்தக் குழுவிற்கு ஏற்ப நடந்து கொள்வார் என்று அறிதல் இன்றியமையாத ஒன்றாகும். சமூக உளவியலார் இவ்வாறு பல்வேறு குழுக்களினின்றும் தனிய வனிடம் ஏற்படும் அழுத்தங்களை அறியப் பெரிதும் முயன் றுள்ளனர்.

மார்ட்டின் கிரிஸ்பர்க் (Martin Kriesberg) என்ற அறிஞர் அமெரிக்க, ரஷிய உறவுகள் பற்றிய கருத்துகளை ஒட்டி ஓர் ஆய்வை மேற்கொண்டார். இவர் ஆய்விற்கு எடுத்துக் கொண்ட உறுப்பினர்கள் கம்யூனிசக் கொள்கையினர் ஆதிக்க மிக்க ஒரு தொழிலாளர் ஒன்றியமாகும் (Union). இத் தொழிலா ளர் ஒன்றியத்தைச் சார்ந்த உறுப்பினர் பலர் கத்தோலிககக் கிறித்துவ மதத்தினராகக் காணப்பட்டனர். கம்யூனிசக கொள்கைகளுக்கும் கத்தோலிக்க சமயக் கோட்பாடுகளுக்கும் உள்ள வேறுபாடுகளை நாம் அனைவரும் அறிவோம். இவ்வாறு மாறுபட்ட இரு குழுக்களிலும் உறுப்பினராக உள்ள தனியவன் களிடம் இவ்விரு குழுக்களினிறும் ஏற்படும் அழுத்தங்களை

(Cross pressures) அறிவதே இவ் வாய்வின் அடிப்படை நோக்க மாகும்.

இவ் வாய்வில் கண்ட முக்கியமான முடிவுகளாவன :

(1) இத்தகைய மாறுபட்ட அழுத்தங்களினை உறுப்பினர்கள் மிக மிகக் குறைந்த அளவிற்கே உணர்ந்திருக்கின்றனர்.

(2) இயன்றவரை இத்தகைய மாறுபட்ட அழுத்தங்களுக்காளாகாமல் இருப்பதற்கே உறுப்பினர்கள் முயல்கின்றனர்.

(3) இத்தகைய உறுப்பினர்கள் வெளியிடும் கருத்துகள் சாதாரணமானவையாகவோ, அல்லது பொருத்துப் போகத்தக்கதாகவோ காணப்படுகின்றன. எந்த ஒரு குழுவினது தீவிரமான கருத்துகளையும் இவர்கள் சார்ந்திருப்பதில்லை.

(4) மாறுபட்ட அழுத்தங்கள் நீடித்திருககும் நிலைக்கு ஆளாவதைத் தொடர்ந்து துவங்குகிறது. சிறிது சிறிதாக இவ்விரு கோட்பாடுகளுக்கும் உள்ள வேறுபாட்டில் அக்கறை குறையத் துவங்குகின்றது.

சமூக வகுப்பின் செல்வாக்கு (Influence of Social Class)

தனியவன்களது கருத்துகளையும், நோக்குகளையும் பெருமளவு பாதிப்பனவற்றுள் மிக முக்கியமான ஒரு காரணியாக விளங்குவது சமூக வகுப்பு ஆகும். பொதுவாக, சமூகக் காரணிகளைப் பொருளாதாரத் தரத்தின் அடிப்படையிலும், பொருளாதாரமற்ற தரத்தின் அடிப்படையிலும் பிரித்தல் கூடும். வருவாய், தொழில் ஆகியவற்றின் அடிப்படையில் சமூக வகுப்புகளை வறையறுத்தல் இயலும். இவ்வாறு வருவாய், தொழில் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்த குழுக்களைச் சார்ந்த தனியவன்கள் தங்கள் கருத்துகள், நோக்குகள் ஆகியவற்றிலும் வேறுபட்டமைகின்றனர் என்பதனை ஆய்வுகள் எடுத்துக்காட்டியுள்ளன. சமூகப் பொருளாதாரக் காரணிகளுக்கும், வாக்களிக்கும் நடத்தைக்கும் (voting behaviour) ஓரளவு தொடர்பு இருப்பதனை உளவியல் அறிஞர்கள் கண்டிருக்கின்றனர். பொதுவாகக் குறைந்த குழுக்களைச் சேர்ந்தவர்களின் வணிகத்தினை அரசுக் கட்டுப்படுத்தல்; அரசினர் நல நிலையங்களை (Welfare Agencies) விரிவுபடுத்தல் போன்றவற்றை ஆதரிப்பவர்களாகக காணப்படுகின்றன.

**ஊடகங்களின்மேல் ஏற்படும் வற்புறுத்தல்கள் (Pressure on Media)**

ஒருசில தனியவன்கள் தங்களுக்கென்றே ஒருசில தனித்த அக்கறை கொண்ட தனியவன்கள் தங்கள் கருத்துகளிலேயே வலியுறுத்த முயலுகின்றனர். எனவே கருத்துப் பரவல் செய்வதில் ஈடுபட்டுள்ளவர்கள் ஊடகங்களைத் தங்கள் வயப்படுத்த முற்படுகின்றனர். அதனுல் கருத்துப் பரவலின்போது கருத்தைப் பரப்பும் ஊடகங்களின்மேல் ஒருசில தனியவர்களினுல் அழுத்தங்கள் ஏற்படுத்துவதை நாம் காணலாம். இவ்வாருன கருத்துகளைக்கொண்ட குழுக்களை 'வலியுறுத்தும் குழுக்கள்' (Pressure Groups) என்று கூறலாம்.

பல்வகையான கருத்துப் பரிவர்த்தனை ஊடகங்கள் தாமே பல வேளைகளில் இத்தகைய தனித்து அக்கறைக் குழுக்களின் வலியுறுத்தல்களுக்கு ஆளாதல் கூடும். பொதுமக்கள் கருத்துக்குரிய பொருளையும், பொதுமக்கள் கருத்து உருவாகும் போக்கினையும் வானெலி, பத்திரிகைகள் போன்றவை பாதிக்க வல்லவை என்று கருதப்படுகிறது. இதன் காரணமாகவே தனித்த அக்கறைகொண்ட தனியன்கள் கருத்துப் பரப்பும் ஊடகங்களைத் தங்கள் செல்வாக்கிற்கு உட்படுத்தப் பெரிதும் முயலுகின்றனர்.

இன்றைய செய்தித் தாள்கள் பெரிதும் தனியார் துறையைச் சார்ந்தனவாகவே இருக்கின்றன. இவை பெரும்பாலும் வணிகத்தையே நோக்காகக் கொண்டுள்ளன. இதனுல் விளம்பரம் அளிக்கும் வணிக நிறுவனங்கள் போன்ற ஆதரவாளர்களை இவர்கள் நாடி நிற்கும் நிலைமை காணப்படுகின்றது. இத்தகைய நேரங்களில், ஆதரவாளர்கள் தங்கள் செல்வாக்கினைப் பயன் படுத்திச் செய்தித் தாள்களின் தனித்தன்மையைக் கட்டுப்படுத்த முற்படுவதுண்டு. அமெரிக்கச் செய்தித் தாள்களைப் பொறுத்தவரையில் வணிகத்துறை, தொழிலாளர் துறை, வேளாண்மைத்துறை ஆகியவற்றைச் சேர்ந்தவர்கள் குழுவினராளர்களின் செல்வாக்குப் பெரும் அளவில் உள்ளதை வோகே என்பார் (Vokey, J.R.) தன் நூலில் கூறியுள்ளதை இங்கு நாம் குறிப்பிட விழைகிறேம். இம் மூன்று துறையினரேயன்றிப் பல ஏழைகள் தேசீயம், சமயம் ஆகியவற்றைச் சேர்ந்த குழுக்களிலிருந்தும் வலியுறுத்தல்கள் ஏற்படுகின்றன என்று ரால்ஃப் காசே (Ralph D. Casey) தன் ஆய்வில் கண்டுள்ளார். நெருக்கடிக் காலங்களில் அரசினர் இத்தகைய வற்புறுத்தும் குழுவாய் அமைவதனை நம் நாட்டில் ஏற்பட்டுள்ள நிகழ்ச்சிகள் எடுத்துக்காட்டுகின்றன.

தலைமையும் பொதுமக்கள் கருத்தும்

(1) பெரும்பாலும் தலைவர்களே பொதுமக்கள் கருத்துக் கேற்பச் சிக்கலை வரையறை செய்து கூறுகின்றனர்.

(2) சாதாரண மக்களில் தெளிவற்றுக் காணப்படுகின்ற ஆனால் வலிமைக்கு விளங்கும் உணர்ச்சிகளை மொழிவழியாக வெளியிடுவதுடன் தெள்ளத் தெளிவானவைகளாக எடுத்துக் காட்டுவது தலைவரே.

(3) சாதாரண மக்களின் விருப்பங்களையும், ஊக்கிகளையும் தங்கள் சொந்தக் குறிக்கோள்களுக்கு ஏற்றபடி மாற்றி அமைத் துக்கொள்வது தலைவர்களுக்கு இயலும். இது மக்களாட்சியில் அச்சுறுத்தவல்ல ஒன்றாகக் காணப்படுகின்றன.

புரட்சித்தலைவர் புரட்சிக் காலங்களில் பொதுமக்கள் கருத் தினை உருவாக்குவதில் குறிப்பாகப் பங்கு பெறுகிறார். அரசியல் தலைவர், செய்தித்தாள் போன்ற கருத்துப் பரப்பும் ஊடகங்களைக் கட்டுப்படுத்தித் தான் விரும்பும் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கு மாறு செய்யப் பெரிதும் முயல்கிறார். மாறுபட்ட கருத்துகள் நிலவும் சிக்கல்களில் தாம் விரும்பும் முடிவுகளையே நிறைவேற்ற விழையும் தனித்தக் குழுக்களின் தலைவர்கள் விளம்பரம், கொள்கை பரப்பல் (Propaganda) போன்ற எல்லா வழிகளையும் பயன்படுத்தித் தமக்கு ஆதரவு தேட முற்படுகின்றனர்.

பொதுவாகப் பொது மக்கள் கருத்து உருவாகும் நிலைகள் பெரிதும் தெளிவற்றதாகவே இருக்கின்றது என்றும், இத்தகைய தெளிவற்ற நிலைகளை வரையறுத்துத் தெளிவு படுத்தல் தலைவர் களின் கடமை என்றும் கூறலாம். தெளிவற்றுக் காணப்படும் சிக்கல்களுக்கு வடிவம் கொடுத்து வரையறுக்கும் பணித் தலைவர் களைச் சார்ந்ததாயமைகிறது. நிபுணர்கள் பிரச்சினையைச் சார்ந்த விவரங்கள் அனைத்தையும் மக்களுக்கு அறிவிக்கின்றனர். இவை அறிவியல்பான வகையில் மக்களைத் தூண்டுகின்றன. ஆனால் இத்தகைய அறிவியல்பான வகையில் மக்களைத் தூண்டு தல் மிகவும் அரிதே. பெரும்பாலான வேளைகளில் மிகவும் எளி தாகக் காணக்கூடிய உடனடியான தீர்வுகளைப் புரட்சித் தலைவரே அளிக்கின்றார். விறுவிறுப்பற்ற, எச்சரிக்கைமிக்க நிபுணரின் தீர்ப்பைக் காட்டிலும், விறுவிறுப்புமிக்க எளிதாகக் காணப் படும் புரட்சித் தலைவரின் பொதுத் தீர்ப்புகளே பொதுமக்களை எளிதில் கவர்வனவாய் உள்ளன. பொதுமக்கள் கருத்திற்கு அடிப்படையாக மதிப்பீடுகள், நோக்குகள் (attitudes) ஆகியவை

இருக்கின்றன. எனவே புதிதாக உருவாக்கப்படும் எந்த ஒரு பொதுமக்கள் கருத்தும் இத்தகைய மதிப்பீடுகள், நோக்குகள் ஆகியவற்றிற்கு இயைந்தவையாக இருத்தல் வேண்டும். சர்வாதிகாரத் தலைவர்கூட மதிப்பீடுகள், நோக்குகள், ஆகியவற்றிற்கு முற்றிலும் முரணான பொதுமக்கள் கருத்தினை உருவாக்க இயலாது. பள்ளிகள், பத்திரிகைகள், இன்னபிற பொதுமக்கள் தொடர்பு ஊடகங்கள் (Mass Media) அனைத்தையும் தன் வசமாக்கக் கட்டுப்படுத்தவல்ல சர்வாதிகாரத் தலைவரேயாயினும், ஏற்கனவே நிலைபெற்று வழங்கிவரும் மதிப்பீடுகளும் வலிவு இழந்துகொண்டு இருக்கும் வேளைகளிலேயே முற்றும் புதியதான பொதுமக்கள் கருத்தினை உருவாக்க இயலும். சமூகத்தில் காணப்படும் வைத்துக்கோடல்கள், நியதிகள் ஆகியவை மக்களால் முற்றிலும் ஏற்றுக்கொண்ட வேளைகளில் அந் நியதிகளுக்கு மாறுபட்ட பொதுமக்கள் கருத்து உருவாதற்கான வாய்ப்பு ஏற்படுவது எளிதன்று. சிந்தனை, உணர்ச்சியமைப்புகள் பற்றிய புதிய பிரச்சினைகள் பிறக்கும்போதே பொதுமக்கள் கருத்து உருவாகத் தலைப்படுகிறது. எனவேதான் புரட்சித் தலைவர்கள் மக்களிடையே தாம் விரும்பும் கருத்துகளை உருவாக்குவது கடினமாயமைகிறது. கட்டுப்பாடற்ற சமூகச் சூழ்நிலைகளில் நிபுணர்கள் பொதுமக்கள் கருத்து உருவாக்கத்தில் அதிக முக்கியத்துவம் கொண்டு காணப்படுகின்றனர். இன்றைய கல்விமுறை பல்வேறு துறைகளிலும் நிபுணர்களை உருவாக்கியிருப்பதுடன் அந் நிபுணர்களுக்குப் பெருமதிப்பினையும் உருவாக்கியிருக்கிறது. இன்றைய சமூகத்தில் பொதுமக்கள் கருத்தினை நிர்ணயிப்பதில் நிபுணர்கள் பெரும் பங்கு வகிக்கின்றனர். நிபுணர்களுக்கும் புரட்சித் தலைவர், சீர்த்திருத்தத் தலைவர், அரசியல் தலைவர், போன்றவர்களுக்கும் ஏற்ற உறவு முறையை ஏற்படுத்தல் பொதுமக்கள் கருத்துச் சிறந்த முறையில் அமையப் பெரிதும் துணை செய்யும் என்பதில் ஐயமில்லை. இதே போன்றே நிபுணருக்கும், நிர்வாகிக்கும் நடைமுறைக்கேற்ற தொடர்புகள் இருப்பது இன்றியமையாதது.

**பொதுமக்கள் கருத்தை வளர்க்கும் ஊடகங்கள்**

பொதுமக்களின் கருத்தினை உருவாக்குவதில் எண்ணற்ற காரணிகளின் செல்வாக்குகளை இதுவரை கண்டோம். அக காரணிகளின்வழி எங்ஙனம் பொதுமக்கள் கருத்து உருவாகின்றது அல்லது பாதிக்கப்படுகிறது என ஆய்ந்தோம். அக் காரணிகள் யாவும் பொதுமக்களின் கருத்தினைப் பாதிக்கும் துணைச் செயல்களே. இங்கே நாம் பொதுமக்களின் கருத்தினை வளர்க்கும் இடைப்பட்ட பொருள்களைக் காண்போம்.

**செய்தித்தாள்கள்**

உலகத்தின் ஏதோ ஒரு புள்ளியில் இருந்துகொண்டு உலகின் மூலை முடுக்குகளில் நடக்கும் செய்திகள் அனைத்தையும், ஒரு மனிதன் செய்தித்தாள்களின் வாயிலாக இப்போது பெறுகின்றான். ஒருவன் எண்ணற்ற நாட்கள் உலகைச் சுற்றிப் பயணம் செய்து அறிந்து கொள்ளுகின்ற செய்திகள் அனைத்தையும், ஒரு மனிதன் ஒருசில நிமிடங்களில் தன் இருப்பிடத்திலிருந்து கொண்டே செய்தித்தாள்களின் மூலம் அறிந்து கொள்ளுகின்றான். நாட்டின் நடப்பையும், பொருளாதார நிலைமையையும், வணிகநிலவரங்களையும், தொழிற்சாலைகள், அலுவலகங்கள் போன்றவற்றில் நிகழுகின்ற செய்திகளையும், ஒருவன் உடனுக்குடன் அறிந்து கொண்டு அவற்றின் மூலம் தன் அறிவை வளர்த்துக் கொள்கின்றான். இதனால் அவன் அப் பல்வேறு துறைகளின் செயல்கள், தன்மைகள் பற்றிய தனது நோக்கையும், கருத்தையும் வளர்த்துக் கொள்கிறான். இத் தனியவன் சிறிது திறமையும், அறிவு வளர்சியும் பெற்றிருப்பின் தான் அச் செய்திகளின் வழியாக உருவாக்கிக் கொண்ட தன் நோக்கையும், கருந்தையும் அச் செய்தித்தாளின் ஆசிரியருக்கே, ஆசிரியருக்குக் கடிதங்கள் என்ற தலைப்பில் எழுதி அச் செய்தித்தாளின் மூலமே தனது கருத்தைப் பரப்புகின்றான்.

ஆசிரியருக்குக் கடிதங்கள் என வரும் செய்தித்தாள்களின் பகுதி, பொதுமக்களின் கருத்தினை உருவாக்குவதில் பெரும்பங்கு ஏற்கின்றது. பொதுமக்களின் கருத்தினைப் பரப்புவதற்குச் செய்தித்தாள்கள் இடைப்பட்ட பொருள்களாய்ச் செயல்படுவது எங்ஙனம் என நாம் வினவின், அது இத்தகைய ‘ஆசிரியருக்குக் கடிதங்கள்’ பகுதியின் மூலமாகத்தான். இப் பகுதியில் செய்தித்தாளைப்படிப்போர் அனைவரும், குறிப்பாகத் தாங்கள் கருதும் ஒரு நடப்புப் பற்றிய கருத்தினைக் கடிதங்களாக எழுதி அச் செய்தித்தாள்களின் மூலம் வெளி உலகிற்கு எடுத்துக் காட்டுகின்றனர். இப்பகுதியின் மூலமாக அத்தகைய ஒரு சிக்கல் நாட்டில் நடப்பதை அறியாதவர்களும்கூட, அல்லது அறிந்தும் அதனைப் பொருட்படுத்தாதவரும்கூடக் கவரப்பட்டு, அக் கருத்திற்குச் செவிமடுத்து அதற்குத் துலங்கலைச் செய்கின்றார்கள்.

இங்ஙனமன்றியும், பத்திரிகைகளில் வெளிவரும் தலையங்கக் கட்டுரைகள், திறனாய்வுகள், அரசியற்கேலிச் சித்திரங்கள், பெரிய மனிதர்களைச் சந்தித்து வெளிவரும் பேட்டிகள், கதைகள், கட்டுரைகள் போன்றவை பொதுமக்களின்கருத்தினை வளர்ப்பதற்குச் சிறந்த இடைப்பட்ட சாதனங்களாகச் செயல்படுகின்றன.

**வானொலி**

வானொலி பொதுமக்களின்கருத்து வளர்ச்சிக்கு ஆற்றுகின்ற தொண்டு ஏறக்குறையச் செய்தித்தாள்கள் ஆற்றும் தொண்டினைப் போன்றதே. பத்திரிகையைப் போன்றே வானொலி வழியாகவும், செய்திகளையும், கருத்துகளையும், பல்லாயிரக்கணக்கான மக்களினிடையே மிகவும் குறுகிய நேரத்தில் தோற்றுவிக்க முடிகின்றது. வானொலிகளில் ஒலி பரப்பப்படும் எண்ணற்ற நிகழ்ச்சிகள், குறிப்பாகச் செய்திகள், அரசியல் செய்திகள், நடைமுறைகள், கருத்தரங்குகள், சொற்பொழிவுகள் போன்றவை பொதுமக்களின் கருத்து வளர்வதற்கு மிகவும் உதவுகின்றன.

வானொலியில் ஒலி பரப்பப்படும் கருத்தினை அதனைக் கேட்கும் பிறர் எவ்விதச் சந்தேகமின்றி நம்பிக்கையோடு ஏற்றுக் கொள்ளுவதும், நேருக்கு நேர் நின்று உரையாடுதலைப் போன்று அவ்வொலி பரப்புகள் மக்களுக்குக் கருத்தினை விளக்குவதும், செய்தித்தாளைவிட வானொலி பொதுமக்கள் கருத்தின் வளர்ச்சிக்கு ஒருபடி அதிகமாகத் தொண்டாற்றுவதை நமக்கு எளிதில் விளக்குகிறது.

**திரைப்படம்**

பொதுமக்களின் கருத்தினை உருவாக்குவதில் உதவும் ஏனைய செய்தித்தாள், வானொலி போன்ற இடைச் சாதனங்களை விடத் திரைப்படம், தொலைக்காட்சி போன்றவை பொதுமக்களின் கருத்தினை வளர்க்க இன்னும் ஒருபடி அதிகமாக உதவுகின்றன. செய்தித் தாள்களைவிட, வானொலியில் நாம் நேருக்கு நேர் நின்று உரையாடுதலைப் போன்று நாட்டு நடப்பினையும், செய்திக் கருத்துகளையும் பெறுகின்றோம். ஆனால் திரைப்படங்கள், தொலைக் காட்சிகள்—வழி இச் சூழ்நிலைகள் இன்னும் ஒருபடி உயர்ந்து நம்மைச் சுற்றி நிகழும் எண்ணற்ற நிகழ்ச்சிகளை நேரிலிருந்து நாமே கண்டு அதனால் கிட்டும் அறிவினை, கருத்தினை அனுபவங்களைக் கணிப்பது போல உணர்வடைகிறோம்.

படத்தின் கதையும், கருத்தும், நாட்டின் நடப்பைப் பற்றியும், சமூகத்தில் நிலவும் பிரச்சினைகள் பற்றியும், தேவையான சீர்த் திருத்தம், மாற்றும் முறை, அவை செயல்பட வேண்டிய வழி வகைகள் போன்றவற்றையும் நமக்கு எடுத்து விளக்குகின்றன. இதன் மூலம் திரைப்படக்கதை ஆசிரியரோ அல்லது இயக்குநரோ, தான் விரும்புகின்ற கருத்தினைச் சமூகத்தில் புகுத்துகின்றனர். இங்ஙனம் திரைப்படம் பொதுமக்கள் கருத்தின் வளர்ச்சிக்கு உதவுகின்றது.

**மேடைப் பேச்சு**

மேற் கூறியவை மறைமுக ஊடகங்களாக உள்ளன. ஆனால் மேடைப்பேச்சு நேர்முகமாக குழுவிலுள்ள ஒவ்வொருவனை யும் உணர்வூட்டித் தன் வயமாக்கும் வலிமை உடையது. சிறந்த முறையில் ஒருவன் பேசுவானுனல் கூட்டமே அவனைப் பின்பற்றி அவன் சொல்லை அப்படியே ஏற்றுப் பின்பற்றத் தொடங்குகின்ற தன்றோ ? ஷேக்ஸ்பியர் எழுதிய சூலியச்சீசர் என்னும் நாடகத்தில் அந்தோனி என்பவன் தன் பேச்சு வன்மையால் கூட்டத்தின் கருத்தை மாற்றித் தன் வயப்படுத்தியதை அழகாக எடுத்துக் காட்டுவது எல்லோரும் அறிந்த செய்தி. இதுபோன்று உலகமே நல்ல பேச்சாளனின் வயப்படும் என்பதைத் திருவள்ளுவர் எடுத் துக் கூறுவது இக் கலைத்திறத்திற்குப் பொருந்தி வருகிற தல்லவா ?

'விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்'

என்பது வள்ளுவர் வாக்கு.

விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளுக்கு முன்னுல் கதா காலட்சே பங்களாலும், நாடகங்களாலும், கூத்துகளாலும், பேச்சுகளாலும் செய்திகள் பரப்பப்பட்டன.

**பொதுமக்கள் கருத்தினை மதிப்பிடுதலும் அளவிடுதலும்**

பொதுமக்களிடையே ஏற்படும் கருத்தின் தன்மை அமைப்புப் போன்றவற்றைப் பற்றிய அறிவு, சமூகத்தில் தாங்கள் விரும்பு கின்ற மாற்றங்களைச் செயல்படுத்த விரும்புகின்ற சமூகச் சீர்த் திருத்தக்காரர்கள் சமூக சேவையாளர்கள், அரசியல் தலைவர்கள் போன்றவர்களுக்கும் இன்றியமையாததாகும். எந்த ஒரு செய லைப் பற்றியும் முழு அறிவையும் பெற்றாலன்றி அச்செயலை ஒருவர் மேற்கொண்டால் வெற்றியடைவது உறுதியில்லை. சமூகத்தில் தாங்கள் விரும்புகின்ற மாற்றத்தை ஏற்படுத்த விழைகின்ற தலை வர்கள், தாங்கள் பரப்பவிடுகின்ற கருத்தினைப் பற்றியும், அக் கருத்துப் பொதுமக்களால் எங்ஙனம் ஏற்றுக்கொள்ளப்பட்டுப் பின்பற்றப்படும் என்பதைப் பற்றியும் நன்கு தெரிந்து இருக்க வேண்டும். இங்ஙனம் அவர்கள், பொதுமக்களின் கருத்துச் செயல்பாட்டுத் தன்மையை மதிப்பிட்டு, அளவு செய்து கணிக்கத் தவறினுல், அவர்கள் தங்களின் சமுதாயத்தை மாற்றுகின்ற முயற்சியில் தோல்வி அடைவர்.

பொதுமக்களின் கருத்தினை அளவிடுவது என்பது அவ்வளவு பெரிய செயலன்று. ஏனெனில் பொதுமக்கள் மனப்போக்கு,

நம்பிக்கை, சமூகச் சூழ்நிலை, கையாளுகின்ற பிரச்சினை, எதிர் நோக்கியுள்ளன. மாற்றம் போன்ற பல்வேறு காரணிகளைப் பொருத்துப் பொதுமக்களின் கருத்து அமைகின்றது இங்கே ஏதாவது ஒரு காரணியை மட்டும் ஆய்வுக்கு எடுத்துக்கொண்டோ அல்லது ஒருசில கூட்டுக் காரணிகளை ஆய்வுக்கு எடுத்துக் கொண்டோ சமூகக் கருத்தினை அளவிட முயற்சிப்பது ஏனையக் காரணிகளும், பொதுமக்களின் கருத்தினைப் பாதிக்கின்றன எனும் உண்மையை மறந்து, மறுத்து, ஒதுக்கி விடுதலுக்குச் சமமாகும். மேலும், பொதுமக்களின் கருத்து நீண்டநாள் மாருது நிலவு வதன்று. ஒரு பிரச்சினையைப் பற்றிய பொதுமக்களின் கருத்தினை அளவிட ஆய்வாளர் முயற்சிக்கும்போதே, அப் பிரச்சினை மாறு படத் தொடங்கலாம். இதன் விளைவாக ஏதோ ஒரு பிரச்சினைப பற்றியப் பொதுமக்கள் கருத்தினை அளவிடத் தொடங்கிய ஆய் வாளர் இறுதியில் வேருெரு பிரச்சினையில் கருத்தினை விடையாகப் பெறுகிருர்.

இவையன்றிப் பொதுமக்களின் மனநிலை, எண்ணங்கள் போன்றவை ஒருசில நிமிடங்களில் மாறி மறையும் தன்மையை உடையன. இவற்றைவிட உளவியல் முறைப்படி ஒருவர் ஏன் ஒரு கருத்தினை ஏற்கின்ருர், அல்லது எதிர்க்கின்ருர் என்பதற் கான காரணங்களை அவை அவரது அடிமனத்தில் பதிந்து அவருக்கே ஏன், எங்ஙனம் ஏற்பட்டதென்பதறியாதபோது, அக் கருத்தைப் பற்றியக் காரணங்களை அறிவது என்பது எளிதான செயலன்று.

பொதுமக்கள் கருத்தினை மதிப்பிடுதலிலும், அளவிட்டு அறித லும் பல இடர்கள் இருப்பினும், சமூக உளவியலாளர்கள் ஓரளவு தேர்ந்த முறைகளைக் கையாண்டு பொதுமக்கள் கருத்தினை ஆராய்ந்து அறிவதில் வெற்றிகண்டுள்ளனர்.

நாம் சமூக உளவியலில் கையாளும் ஒருசில அளவீட்டு முறை களைப் பற்றி ஆரம்பத்தில் பார்த்தோம். இங்கே பொதுமக்கள் கருத்தினை மதிப்பிட, அளவிடப் பெரும்பாலும் அம் முறைகள் யாவும் ஓரளவுக்குப் பயன் படுகின்றன. காட்டாக, பேட்டிக் காணும் முறை, மாதிரி முறை (sampling), வினு நிரல் (Question- naires) போன்ற முறைகள் பயன்படுத்தப்படுகின்றன. இவையே அன்றிப், பொது நிகழ்ச்சிகளை உற்றுநோக்குவது, வாக்கெடுப்பு முறை (Poll) போன்ற முறைகளைப் பொதுமக்களின் கருத்தை அளவீடு செய்யப் சிறப்பாகச் பயன்படுத்தப்படுகின்றன

### பொது நிகழ்ச்சிகளை உற்றுநோக்கு முறை

ஆய்வாளர்கள் நேரில் சென்று பொதுமக்களைக் கண்டு பேசி, வேண்டிய குறிப்புகளைச் சேகரிக்கின்றனர். இங்கு முன்னரே என்னென்ன கேள்விகள் கேட்கப்படவேண்டும் என்றும், ஒருசில விவரங்களைப் பெற எம்மாதிரியான கேள்விகள் கேட்கப்பட வேண்டும் என்றும், ஒருசில விவரங்களை எம்முறையில் பேட்டி யாளரை அணுகி எங்ஙனம் பேட்டி தருபவர், தான் பேட்டி தரு கின்றோம் என்ற உணர்வு இன்றியே செய்திகளைத் தரும்படி செய் தல் போன்றவற்றை முன்னதாகவே திட்டமிட்டுக் கொள்ளுகின் றனர். இங்ஙனம் திட்டமிட்டபடி பொதுமக்களைச் சந்தித்து வேண்டிய விவரங்களைப் பெறுகின்றனர். இம்முறை எல்லா வகையிலும் சிறந்தது என்றாலும், இதன் வழியாக ஒரு சிக்கலை ஆராய நீண்ட நாட்களாகும் என்பதும், இதற்கென ஒருசில காரணிகளைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பதும், மேலும் இம் முறையைப் பயன்படுத்துகின்ற ஆய்வாளர்கள் நன்கு தேர்ச்சி பெற்றவர்களாக, முடிந்த அளவில் பெற விரும்புகின்ற செய்தி களைப் பெறுவதற்குப் புதிய நுண்முறைகளை அறிந்தவராக இருக்க வேண்டும் என்பதும், இம்முறை பின்பற்றப் படுவதில் உள்ள இடையூறுகளை எடுத்துக் காட்டுகின்றன

### வாக்கெடுப்பு

இம்முறையில் பொதுமக்களின் கருத்தைப் பற்றி அறியப பல கேள்விகள் மூலமும், வினா நிரல்கள் மூலமும், அல்லது தனித்த வினாக்கள் மூலமாகவும் முயலப்படுகின்றது. சுருக்கமாக, 'ஆம், இல்லை' என விடையளிக்கக்கூடியனதாகக் கேள்விகளைப் பெரும் பாலும் இம்முறையில் ஆய்வாளர்கள் பயன்படுத்துகின்றனர். ஆனால் விடைதரும் தனியவன் தன் விருப்பத்திற்கேற்பக் குறுகிய பதிலையோ, அல்லது நீண்ட விளக்கத்தையோ பதிலாக அளிக் கிறார். கேள்விகள் நாம் எதிர்ப்பார்க்கின்ற ஒரு முக்கியப் பிரச் சினையின் நிலையினை மறைமுகமாக அறிந்து கொள்ளக்கூடியக் கேள்விகளாக இருக்கலாம். அல்லது பொதுமக்களின் மன நிலையை அளந்து அறிய அவர்கள் எவ்வகையிலும் பதிலளிக்க ஏற்றதாகவும், கேள்விகளாகவும் இருக்கலாம். இவ்விரு முறை களில் எதைக் கையாண்டாலும் பிரச்சினைகளை எடுத்த எடுப் பிலேயே கேட்டுவிடத் தொடங்காமல் சிறிய சிறிய பிரச்சினை களுக்கு விடைகண்டு, பின்னர் ஓரளவிற்குப் பேட்டியாளரின் நோக்கத்தைப் பேட்டி தருபவர் புரிந்துகொள்ளுகின்ற நிலையில், முக்கியமான சிக்கல் மிகுந்த ஆய்வின் அடிப்படையாய் அமைந்த கேள்விகளைக் கேட்கப்படவேண்டும்.

இம் முறையிலும் ஓரளவு குறைகள் உள்ளன எனினும் அக் குறைகளைக் களைவதற்கான முயற்சியில் செயல்பட்டு இம்முறை யைப் பயன்படுத்தினால் இம்முறை சிறந்த பயனை நல்கும் என்பது திண்ணம்

**கருத்துப் பரப்பல் (Propaganda)**

சமூகத்தில் தான் விரும்புகின்ற பொதுமக்கள் கருத்தினை உருவாக்க விரும்புகின்ற அரசியல்வாதியோ, சமூகவாதியோ, அல்லது மதம் சார்ந்த சங்கங்கள், அமைப்புகள், சீர்த்திருத்த இயக்கங்கள் போன்றவற்றையோ, அங்ஙனம் விளைவித்த பொது மக்கள் கருத்தினைச் செயல்படுத்த வேண்டியது மிகவும் இன்றி யமையாததாகும். பொதுமக்கள் கருத்தினைச் செயல்படுத்த வேண்டிப் பரப்பும் எம் முயற்சியும் கருத்துப்பரப்பல் ஆகும். அங்கே பொதுமக்களின் கருத்தினை வளர்ப்பதற்கு உதவிய பத்திரிகை, வானொலி, திரைப்படம் போன்றவை (media) இங்கும் பொது மக்கள் கருத்தினைப் பரப்புவதற்குப் பயன்படுத்தப் படுகின்றது.

பொதுமக்கள் கருத்தை உருவாக்குகின்ற அரசியல் வாதியும்' சமய, சமூக, சீர்த்திருத்தவாதி போன்றவர்களும், தங்களின் கருத் தினை, எண்ணங்களைப் பிறர்பால் எடுத்துச் சொல்ல முற்படுகின் றனர். அவர்கள் தங்கள் கருத்துகளின் வலிமையால் பிறரைத் தூண்டி அவர்களின் எண்ணங்களை மாற்றி அதன்வழி பிறரின் நடத்தையை மாற்றுவதே கருத்துப் பரப்பல் ஆகும். இக் கருத் துப் பரப்பல் தனியவர்களால் மட்டுமின்றிச் சமய, வணிக, அரசியல் குழுக்கள் போன்றவற்றால் கருத்தேற்றத்தின் வழி யில் தங்களின் கொள்கைகளை, எண்ணங்களை, மனப்போக்கு களைப் பிறருக்குப் பரப்பும் வகையில் செயல் படுத்தலாம். கொள்கை பரப்பலைக் குறுகியப் பொருளில் பலர் கருதுகின்றனர். பொதுவாகக் கொள்கை பரப்பல் அபாயகரமானது, தீயது என்று பொதுவாகக் கருதப்படுகின்றது. இது ஓரளவு உண்மையே. இருப்பினும் முற்றிலும் உண்மையெனக் கூறல் இயலாது. பரந்த பொருளில் நோக்கும்போது, ஏதாவதொரு நல்ல காரணத்தினை முன்னிட்டு நல்ல நோக்கத்திற்காகச் செயல்படும் பரப்புதலையே கருத்துப் பரப்பல் என்கிறோம். எனவே, கல்வி அல்லது அரசியல் துறைகளின் நோக்கம் கருதி மேற்கொள்ளும் கருத்துப் பரப்பல் களும், பொதுவாகவே கருத்துப்பரப்பல் எனச் சுட்டப்படு கின்றன. சிலர் விளம்பரம் செய்தல், விற்பனை செய்தல் போன்ற எந்த ஒரு பரப்புதலையும் கருத்துப் பரப்பல் என்று குறிப்பிடுகின் றனர். ஆனால் இவ்வாறு பயன்படுத்துதல் கருத்துப் பரப்பல்

என்ற சொல்லின் பொருளை மிகவும் பாதிக்கக்கூடும். ஒரு கருத்துப் பரப்பல் நல்லதா? கெட்டதா? என அறிய அதற்கு வழி கோலுபவர்கள் அடிப்படையான நோக்கம் என்னவெனக் கண்டறிதல் மிக இன்றியமையாததாகும். அந் நோக்கத்தினைக் கொண்டே அக் கருத்துப் பரப்பல் நல்லதா தீயதா என முடிவு செய்ய இயலும். எனவே கருத்துப் பரப்பல் யாவும் தீயவை எனக் கருதுதல் தவறானதாகும்.

கருத்துப் பரப்பல் என்னும் தத்துவம் இந்நாளில் பலதுறையினராலும் பயன்படுத்தப்படுகின்றது. குறிப்பாகக் கல்வித் துறையில் இம்முறை நன்கு செயல்படுத்தப்படுகின்றது. கல்வித் துறையில் கல்வியைக் கற்கின்ற மாணவரும் பிறரும் ஒருசில மனமாற்றங்களைப் புதிய போக்குகளை, சிந்தனை வளர்ச்சியைப் பெற்று அவர்களது நடத்தையில் மாறுதல் அடையவேண்டுமென விரும்பும் ஆசிரியர்களும், பெற்றோர்களும், இன்னும் கல்வித் துறையைச் சேர்ந்தவர்களும் அவ் வகையில் தங்களின் கருத்துகளைக் கற்கின்ற மாணவர்களிடையே பரப்புகின்றனர். வானொலி, செய்தித்தாள்கள், இதழ்கள், திரைப்படம் போன்றவற்றின் மூலம் இம் முயற்சி செயல்படுத்தப்பட்டு வெற்றியை விளைவித்துள்ளது.

### கருத்துப் பரப்பலின் நோக்கங்கள் (The purpose of Propaganda)

கருத்துப் பரப்பல் பொதுவாக ஒரு கருத்துக் கோட்பாட்டினைப் பொதுமக்களின் மத்தியில் பரப்புவதில் எந்த வகையான நோக்கத்தின்பாலும் அமையலாம். ஒரு கருத்துக் கோட்பாட்டினை ஒரு நோக்கத்தில் பரப்புகின்ற எதுவும் அந்நோக்கத்தின்பால் பரப்பப்பட்டதாகும். இருப்பினும் மூன்று வகையான நோக்கங்களின் பாலே கருத்துப் பரப்பல் நடைபெறுகின்றது எனச் சமூக உளவியலாளர்கள் கருதுகின்றனர். அவை (1) மாற்றம் வேண்டி நிகழும் கருத்துப் பரப்பல் (Conversionary Propaganda) (2) பிளவு வேண்டி நிகழுகின்ற கருத்துப் பரப்பல் (divisive propaganda) (3) உறுதி வேண்டி நிகழ்த்தும் கருத்துப் பரப்பல்(Propaganda for consolidation) என்பனவையாகும்.

மாற்றம் வேண்டி நிகழ்த்துகின்ற கருத்துப் பரப்பலில் அக் கருத்தினைப் பரப்புகின்றவர், அப் பரப்பலின் வழி தான் எதிர்ப்பார்க்கின்ற ஒரு மாற்றத்தினைச் சமூகத்திடமிருந்து பெற விழைகின்றார். பழைய மூட நம்பிக்கைகள், உபயோகப்படாத, அறிவு-அனுபவங்களுக்கு அப்பாற்பட்ட பழக்க வழக்கங்கள் போன்றவற்றை மாற்ற, அம் மாற்றத்தின் வழி ஒரு புதிய சமுதாயத்தை ஏற்படுத்த இவர் விழைகின்றார் சமூக, சீர்த்திருத்தவாதியும்,

அரசியல் சமூகவாதிகளும், இங்ஙனமே பொது மக்களின் மனப் பான்மையையும், எண்ணங்களையும் அல்லது ஒருசில செய்தி களின்பாற்பட்ட மனப்போக்குகளையும் தங்களின் நோக்கத்திற் காக அல்லது இலட்சியத்தின்பால் மாற்ற விழைகின்றனர்.

பிளவு வேண்டி நிகழ்த்துகின்ற கருத்துப் பரப்பல் முன்ன தைப்போன்று ஆக்கத்திற்கன்றிப் பெரும்பாலும் அழிவுக்காகவே பயன்படுத்தப்படுகின்றது. ஓர் அரசியல் கட்சி மற்றொரு அர சியல் கட்சியின் கொள்கைகளைப் பற்றித் தவறாகப் பேசுவதும், ஒரு மதத்தைப் பரப்பும் இயக்கம் மற்றொரு மதத்தைத் தரக்குறை வாகப் பேசுவதும், அவ்வரசியல் கட்சியின்பால் அல்லது மதத்தின் பால் பொதுமக்கள் கொண்டுள்ள நன்னம்பிக்கையைக் குலைப்ப தாக அமைகிறது. இம் முறையைப் பயன்படுத்தியே மற்றவர் களைக் குறைகூறியே இன்றைய அரசியல் கட்சிகள் நம் நாட்டில் நிலை பெற்றுவருகின்றன. இவ்வகைக் கருத்துப் பரப்பல்கள் அழி வின்பாற்பட்டது எனினும், ஒருசில நேரங்களில் இது ஆக்கத்தின் பாலும் செயல்படுத்தப்படுகின்றது. உதாரணமாக ஒரு நாடு தன் அண்டை நாட்டுடன் கொண்டிருந்த நட்பை முறித்துக் கொண்டு அதனுடன் போர் தொடுக்கின்ற வேளையில், அல்லது அந் நாட்டின்மீது போரிடும் வேளையில், இந் நாட்டின் தனது அண்டை நாட்டினரதுபால் தம் நாட்டு மக்கள் கொண்டிருக்கும் நல்லெண்ணத்தை அழிக்க வேண்டியவர்களாய் இருக்கின்றனர். இங்கே இக் கருத்துப் பரப்பல் நாட்டின் ஒற்றுமையையும், சத்தி யையும காப்பாற்றுவதாகும். நாட்டின் தற்காப்பு நிகழ்ச்சிக் காகவும் பயன்படுத்தப்படுவதால் இம்முறை நன்மை பயப்பதாகக் கருதப்படுகின்றது.

உறுதி வேண்டி நிகழ்த்தும் கருத்துப் பரப்பல் பெரும்பாலும் ஏற்கனவே பரப்பப்பட்ட ஒரு கருத்தின் நீடிப்பையும், அதனைப் பின்பற்றுகின்ற மக்களின் மனோதிடத்தையும் காக்கும் வகையில் செயல்படுத்தப்படுகின்றது. எந்த ஒன்றுமே திரும்பத் திரும்பச் செய்யப்படாவிட்டால் அதன் வலிமை குன்றி விரைவில் வழக்கத் தினின்று மறைந்துவிட ஏதுவாகும். கருத்துப் பரப்பலும் பொது மக்கள் கருத்தும் இங்ஙனமே. ஒருமுறை தான் பரப்பிய ஒரு கருத்து பொதுமக்களிடையே நின்று, நிலைத்து, வேரூன்றிச் செயல்படவேண்டுமெனில் அக் கருத்தினைப் பரப்பியவர் அக் கருத் தினையே திரும்பத்திரும்பப் பரப்பவேண்டும். இங்கே அடுத்தடுத் துப் பரப்பப்படும் கருத்துப் பரப்பல்கள் ஏற்கனவே பரப்பப் பட்டக் கருத்துப் பரப்பினை வலிமை பெறச் செய்வதாகவும் உறுதிபெறச் செய்வதாகவும் அமைகின்றது.

**கருத்துப் பரப்பலில் பயன்படுத்தப்படும் உத்திகள்** (Techniques of Propaganda)

கருத்துப் பரப்பல் தன் சிறந்த பயனை நல்க அதற்கு ஏற்ற உத்திகளின் பால் பரப்பப்படவேண்டும். பொதுமக்களின் தேவைகளுக்கு அப்பாற்பட்டதாக அமையும் எந்தக் கருத்துப் பரப்பலும் மதிப்பற்றதாகும். உதாரணமாக மக்கள் தொகை குறைந்தும் செல்வ வசதி மிகுந்தும் காணப்படுகின்ற ஒரு சமூகத்தினிடைச் சென்று குடும்பக் கட்டுப்பாடுப் பற்றிய கருத்தினைப் பரப்ப முயற்சித்தல் அறிவுடைய செயலாகாது. எனவே, நல்ல பயனைப் பெற விழையும் கருத்துப் பரப்பாளர் தான் பரப்ப விரும்புகின்ற கருத்தின் தன்மை, செயல்பாடு, அதனை ஏற்கும் சமூகத்தின் நிலைமை, கலாசாரம், பண்பாடு போன்ற பலவற்றை நினைவிலிருத்தி அதற்கேற்ற உத்திகளைக் கையாள வேண்டியவராய் இருக்கின்றார்

கீழ்க்கண்ட உத்திகளைக் கருத்துப்பரப்பாளர் கையாண்டால் தன் முயற்சியில் வெற்றி பெறுவர் எனச் சமூக உளவியலாளர்கள் கருதுகின்றனர்.

(1) கருத்துப்பரப்பல் ஒருகலை. எனவே, அக் கருத்துப் பரப்பல் ஒருகலைச் சிறப்படைவதற்கு வேண்டிய எல்லாத் தன்மைகளையும் பெற்றிருக்கவேண்டும். தான் பரப்ப விரும்புகின்ற ஒரு கருத்தினைப் பற்றி பல்வேறு வகையில் சிறப்பித்து ஏற்றிக்கூறி, சொற்பொழிவாற்றுதல், அல்லது அக்கருத்தின் சிறப்புப் பற்றிக் கவி பாடுதல், பொதுக்கூட்டம், கருத்தரங்கு போன்றவற்றை நிகழ்த்துதல் போன்ற யாவும் அக் கருத்தினைக கலைசார்ந்த துறைகளின் வழி பரப்பும் உத்திகளாகும். இங்கே திரைப்படம், நாடகம், நடனம், கலை நிகழ்ச்சி, பாடல், தெருக்கூத்து, கதா காலட்சேபம் போன்ற எல்லாக் கலைத்துறையின் வழியும் ஒரு கருத்தானது நன்கு பரப்பப்படுகின்றது. இம் முறைகள் அனைத்தும் சிறந்த கருத்துப் பரப்பும் உத்திகளாகப் பயன்படுத்தப்படுகின்றன

(2) அடிக்கடி பரப்புதல், எடுத்த எடுப்பில் எந்தக் கருத்துப் பரப்பாளரும் வெற்றி பெற்று விடுவதில்லை. அவர் தன் முயற்சியில் தளராது திரும்பத் திரும்ப ஈடுபடும்போதே வெற்றி காண்கின்றார். விளம்பரத் துறையினர் நீண்டகாலம் ஒரே இடத்தில் தங்களின் விளம்பரப் பலகைகளை நிறுத்திவைப்பது இந்த யுத்திகளின் பாலானதே. அடிக்கடி ஒரு கருத்தினைப் பற்றிப் பொது மக்கள் கேட்கவும், பேசவும், விவாதிக்கவும் வாய்ப்பு ஏற்பட்டால் அக் கருத்தினைப்பற்றி அறிவு வளர்ச்சி பெறும். எனவே அவ்வறிவாற்றலின் விளைவில் அக்கருத்தின்பால் ஒரு பிடிப்பும், பற்றுதலும் தோற்றுவதற்கு ஏதுவாகின்றது. ஆரம்பத்தில் ஒரு

கருத்தினை ஏற்காதத தனியவனும் கூடப் பின்னர் அக்கருத்து அடிக்கடி பரப்பப்படுவதால் அதன்பால் ஒரு பற்றுதலை, பிடித் தத்தை ஏற்படுத்திக் கொண்டவராகின்றான். இம்முறை அடிக் கடி கருத்துப் பரப்புதல் சிறந்த யுத்தியாகக் கையாளப்படு கின்றது.

(3) சுருக்கத்தன்மை (Simplification) நாகரிக வளர்ச்சி பெற்ற இக்காலத்தில் பொதுமக்கள் எவரும் சிறுபொழுதேனும் செயல்படாது இருப்பதில்லை. நாகரிகத்தின் வளர்ச்சியில் மனிதன் இயந்திரங்களாய் மாறித் தொடர்ந்து பணியாற்றிக் கொண் டிருக்கும்போது அவனுக்கு நிற்பதற்கோ, பிறரின் கருத்தினைக் கேட்பதற்கோ, பின்னர்ச் சிந்தித்துப் பார்ப்பதற்கோ அவ்வளவு நேரம் கிட்டுவதில்லை. எனவே அவனுக்குக் கிடைக்கின்ற அந்தச் சிறிய நேரத்தில் தான் விரும்புகின்ற கருத்தினைக் கருத்துப் பரப் பாளர் அவன்பால் பரப்ப வேண்டியவராய் இருக்கின்றார். இங்கே பரப்பப்படுகின்ற கருத்துகள் குறைந்த காலத்தவைகளாகவும், எளிமையானவைகளாகவும், எளிதில் புரிந்துகொள்ளக்கூடியவை களாகவும் இருத்தல் மிக மிக அவசியம். சுருக்கமான கருத்துப் பரப்பலே சிறப்பான பயனை நல்குகின்றது.

(4) தணிக்கைப்படுத்துதல் (Censorship) கருத்துப் பரப்பலில் கையாளப்படுகின்ற ஏனைய உத்திகளைவிட இம்முறையே கருத் துப் பரப்பலில் ஒரு விறுவிறுப்பினை, வேகத்தினைத் தருகின்றது. அரசாங்கத்தாரால் தடைப்படுத்தப்பட்ட புத்தகங்களும் அல்லது பேச்சுகளும் மிக விரைவில் பொதுமக்களின் மத்தியில் பரவி, நல்ல செல்வாக்கினை அக் கருத்துக்குத் தேடித்தருகின்றன. தடைப்படுத்தப்பட்ட புத்தகங்களும், நூல்களும், பத்திரிகை களும் ஏனைய ஒருசில கட்சிகளின் அறிக்கைகளும், கொள்கை களும், மிக விரைவில் பொதுமக்களின்பால் பரப்பப்படுகின்றன. இங்கே ஏன் எதற்குத் தணிக்கை செய்யப்பட்டது? அப்படி என்ன தான் அக் கருத்தில் இருக்கின்றது என்பதை அறியத் துடிக்கும் பொது மக்களின் உந்துதல்கள் அக் கருத்துப் பொதுமக்களின் பால், மிக விரைவில் பரப்பப்படுவதற்கு வழி செய்கின்றது. இதனை நன் குணர்ந்த அரசியல், சமூக, சமயவாதிகள் இவ் வுத்தி யைப் பயன்படுத்தித் தங்களின் கருத்துகள் பிறரால் எதிர்க்கப் படும்போது அல்லது தடை செய்யப்படும்போது, பொது மக் களிடை ஏற்படுகின்ற ஆவலைப் பயன்படுத்திக்கொண்டு தங்க ளின் கருத்துகளை இரகசியமான வழிகளில் பரப்பித் தங்களின் கருத்தினைச் செயல்படுத்தி வெற்றி காண்கின்றனர்.

**அதிகாரச் சுருக்கம்**

பொதுமக்கள் குழு நன்கு நிறுவப்பட்ட ஒன்று அன்று. பிரச்சினைகள் மாற மாற அதன் அடிப்படையில் எழும் பொது மக்கள் குழுவும் மாறியபடி இருக்கின்றது. பொது மக்கள் குழு வின் விசேஷமான பண்பு அதனிடையே காணப்படும் கருத்து வேறுபாடு ஆகும். இவையே கூட்ட நடத்தையினின்று பொது மக்கள் குழு நடத்தையைப் பெரிதும் வேறுபடுத்திக் காட்டு கின்றது.

பொது மக்கள் கருத்து ஒரு கூட்டு விளைவாகும். எனினும் பொதுமக்கள் கருத்து ஒவ்வொருவரும் ஏற்றுக் கொள்ளும் ஒரு முகமான கருத்து அன்று. கருத்து என்பது ஒரு நம்பிக்கையைக் குறிக்கின்றது. எண்ணற்ற வகைகளில் நாம் ஒன்றின் மீது நம்பிக்கை வைக்கின்றோம். இந் நம்பிக்கை உண்மையாக இருந் தால் நாம் அதன் வழி அறிவு வளர்ச்சி பெறுகின்றோம். பொய்யாக இருந்தால் அதைக் கற்பனை, கனவு என ஒதுக்குகின்றோம். ஆனால் ஒருசில நேரங்களில் இந் நம்பிக்கை பொய்யாகவோ அல்லது மெய்யாகவோ இருந்தாலும் அவற்றிற்கு மதிப்பளிக்கின் றோம். இவ்வகையான நம்பிக்கையே பொது மக்கள் கருத்தும் ஆகும்.

பொது மக்கள் கருத்து என்பது தன்னுணர்வு மிக்க ஒரு சமூகம். பொது முக்கியத்துவம் கொண்டதோர் பிரச்சினைப்பற்றி விவாதித்ததற்குப் பிறகு மேற்கொள்ளும் கருத்தே ஆகும் என ஜேம்ஸ் யங் வரையறுக்கிறார்.

பொதுமக்கள் கருத்து உருவாவதில் நான்கு நிலைகள் காணப் படுகின்றன. பொதுமக்கள் கருத்தினை எண்ணற்ற காரணிகள் உருவாக்குகின்றன. சமூக வகுப்பின் செல்வாக்குத் தனியவர் களது கருத்துகளையும், நோக்குகளையும் பெருமளவு பாதிக்கின் றது. தலைமைத் தன்மையும் பொதுமக்கள் கருத்தினைப் பாதிக் கின்றது.

பொதுமக்கள் கருத்தை வளர்க்கும் ஊடகங்களான செய்தித் தாள்கள், வானொலி, திரைப்படம் போன்றவை காணப்படு கின்றன.

பொது மக்களின் கருத்தினை அளவிடுவது அவ்வளவு எளிய செயலன்று. பொதுமக்களின் மனப்போக்கு, நம்பிக்கை, சமூகச் சூழ்நிலை, கையாளுகின்ற பிரச்சினை, எதிர் நோக்கியுள்ள மாற்றம் போன்ற பல்வேறு காரணிகளைப் பொறுத்துப் பொது மக்களின் கருத்து அமைகின்றது. இங்கே ஏதாவது ஒரு காரணியை

மட்டும் எடுத்து அல்லது ஒருசில கூட்டுக் காரணிகளை மட்டும் எடுத்துப் பொதுமக்களின் கருத்தினை அளவிடுதல் இயலாது. சமூக உளவியலில் கையாளும் அளவீட்டு முறைகள் இங்கே பொதுமக்கள் கருத்தினை மதிப்பிடவும் பயன்படுத்தப்படுகின்றது. உதாரணமாகப் பேட்டி காணும் முறை, மாதிரி முறை, கேள்வி நிரல், பொதுமககள் நிகழ்ச்சிகளை உற்று நோக்குவது, வாக்கெடுப்பு முறை போன்றவை பொதுமககள் கருத்தினை அளவிடப் பயன்படுத்தப்படுகின்றன.

பொதுமக்கள் கருத்தினைச் செயல்படுத்த வேண்டி பரப்பும் எம் முயற்சியும் கருத்துப் பரப்பல் ஆகும். அங்கே பொது மக்கள் கருத்தினை வளர்ப்பதற்கு உதவிய செய்தித்தாள், வானொலி, திரைப்படம், மேடைப்பேச்சுப் போன்றவையே இங்கும் பொது மக்கள் கருத்தினைப் பரப்புவதற்குப் பயன்படுத்தப்படுகின்றது. மூன்று வகையான நோக்கங்களின்பால் கருத்துப் பரப்பல் நடைபெறுவதாகச் சமூக உளவியலாளர் கருதுகின்றனர். அவை மாற்றவேண்டி நிகழும் கருத்துப் பரப்பல் பிளவு வேண்டி நிகழுகின்ற கருத்துப் பரப்பல்கள், உறுதிவேண்டி நிகழ்த்தும் கருத்துப் பரப்பல்கள் என்பனவாகும். கருத்துப் பரப்பல் தன் சிறந்த பயனை நல்க அதற்கு ஏற்ற உத்திகளின்பால் பரப்பப் படுகின்றது.

# 10. சமூகப்படுத்துதல்
## (Socialization)

'உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லா ரறிவிலா தார்'—திருவள்ளுவர்

குழந்தைகளை அவர்கள் சேர்ந்துள்ள சமூகத்தில் நிறைவு பெற்ற முதிய உறுப்பினர்களாக ஆகும் வண்ணம் எவ்வாறு வளர்ப்பது என்பது மனிதச் சமுதாயத்தில் தொன்றுதொட்டு நிலவிவரும் முக்கியப் பிரச்சினையாகும். அஞ்சா வீரர்களாகத் தங்கள் குழந்தைகளை வளர்க்கக் கிரேக்க நாட்டினர் மேற்கொண்ட முறைகள் பற்றி நமக்கு வரலாறு எடுத்துக் காட்டுகின்றது. அன்றியும் எல்லாச் சமூகங்களிலும் இவ்வாறான குழந்தை வளர்ப்புப் பற்றிப் பெரிதும் ஆர்வமும், அக்கறையும் காட்டுவதனை நாம் மனித இயல் அறிஞர்கள் கூற்றுகள் மூலம் அறிகின்றோம். எனவே, சமூகப்படுத்துதல் ஒரு நடைமுறைப் பிரச்சினையாக அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

'சமூகப் படுத்துதல்' என்ற கருத்துச் சொல்லின் பொருள் விளக்கம் பற்றி அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு காணப் படுகிறது. இச் சொல்லைப் பயன்படுத்துவது பற்றி இன்னமும் எல்லோரும் ஏற்றுக்கொள்ளும் விளக்கம் ஒன்று உருவாகவில்லை. இங்கு நாம் இச் சொல்லை மிகவும் பரந்த பொருளில் பயன்படுத்தி யுள்ளோம். பிறக்கும் குழந்தை, அது வளரும் குழுவின் தரங் களுக்கு ஏற்ற நடத்தையினை வளர்த்துக்கொள்ளும் நிலையில் ஏற் படும் செயல் முறைகளையே 'சமூகப் படுத்துதல்' என்று குறிப் பிடுகின்றோம். எனவே, இச் சொல் இவ்வதிகாரத்தில் மிகப் பரந்த பொருளில் பயன்படுத்தப்படுகிறது.

தனி மனிதன், எங்ஙனம் சமூகப் படுத்தப்படுகின்றான் என்னும் ஆராய்ச்சி சமூக உளவியலில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும். தனியன் தான் சார்ந்த குழுவுடன்

எங்ஙனம் இணைகின்றான் அல்லது ஒன்றுபடுகின்றான் என்பதை ஆராய்ந்து விளக்கிக் கூறி, அதன்மூலம் சமூகப்படுத்துதலைப் பற்றி விளக்க உள்ளோம். எடுத்துக்காட்டாக, தோழர்களுடன் சேர்ந்து விளையாடுவதையும், புதிய பள்ளி ஒன்றில் பயிலப் புகும் சிறுவன் ஆங்கே பயிலும் பிற மாணவர்களுடன் சேர்ந்து பழகுவதையும் விளக்கிக் கூறி, அதன்மூலம் சமூகப்படுத்துதலை நாம் விளக்கலாம். இருப்பினும் சமூகப்படுத்துதல் என்பது இளைஞன் ஒருவன், தன் இளம் பருவத்தில் எங்ஙனம் தான் வாழும் சமூகத்தில் ஒன்றி இணைந்து பிரச்சினைகளால் சூழப்பட்டு அதில் தேர்ந்து எங்ஙனம் தான் வாழும் சமூகத்தில் தானும் ஓர் உறுப்பினனாக மாறிச் சமூகமயமாகிறான் என்னும் ஆராய்ச்சியே சிக்கல்கள் பல கொண்ட ஒரு செயலாகும்.

மனித வாழ்க்கையில் மிகவும் முக்கியமாக நிகழும் ஒரு நிகழ்ச்சி என்னவென்றால், ஏதுமறியாது சமூகத் தொடர்பற்றுப் பிறந்த குழந்தையை அறிவுடைய முழு மனிதனாக மாற்றியமைப்பதேயாகும். மனித இனத்தைத் தவிர உயிர்களிடத்தில் இத்தகைய மாற்றம் பிறந்த குழந்தைக்கும் முதியோனுக்கும் இடையே உள்ள வேறுபாடு அவ்வளவு பெரியதாகக் காணப்படுவதில்லை. பிறந்த குழந்தை சமூகப்படுத்தல் கொள்கைப்படி வளர்ந்து கொண்டிருக்கும் போதே, தனக்கென ஒரு மொழியையும் அம்மொழிவழித் தன் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்தும் திறனையும், தன் சுற்றத்தாருடன் அன்புப் பிணைப்பையும், அச் சமுதாயத்தின் கட்டுக் கோப்புகள், பழக்கவழக்கங்கள், கொள்கைகள் போன்றவற்றையும் அறிந்து கொள்ளுகின்றது. அதே நேரத்தில் தான் வாழும் வாழ்க்கையின் நோக்கம், மனிதச் சமுதாயத்தின் விருப்பு, நன்மை தீமை போன்ற அறநெறிப் பயன் மதிப்புகள், ஒழுக்கச் சிந்தனைகள், மனப்போக்குகள் ஆகியவற்றை அடைவதில் ஒருசில முறைகளை அறிந்து கொள்கின்றது. இத்தகைய ஒன்றுமறியாக் குழவியாய்த் தோன்றிப் பின் எல்லாமறிந்த முதிர்ந்த பழமாக அக் குழந்தை மாறுகிறது. இதற்கிடையே உள்ள நீண்ட கடினமான மாற்றங்களைச் செய்விக்கின்ற செயலே சமூகப்படுத்துதல் ஆகும். சமூகம் என்றால் என்னவென்றே அறியாது தனித்துத் தோன்றுகின்ற குழந்தையை ஒரு சமுதாயத்திற்கு அறிமுகப்படுத்தி, அச் சமூகத்தின் கட்டுக் கோப்புகள், பழக்க வழக்கங்கள் போன்றவற்றை அவனுக்கு விளக்கிக் காட்டி, அவற்றை அவன் ஏற்று, அதன்வழி அச் சமூகத்தின் ஒரு அங்கத்தினனாக மாற்றுவதே சமூகப்படுத்துதல் எனப்படும். அதாவது தனி மனிதனைச் சமூக மனிதனாக மாற்றுவதே சமூகப்படுத்துதலாகும்.

ஓர் உயிரியின் நடத்தை மிகப் பெரும் அளவில் சூழ்நிலைகளால் கட்டுப்படுத்தப்படுகின்றது. தனித்து வாழ்ந்த தனியன் சமூகச் சூழ்நிலைகளால் தூண்டப்பட்டுத் தன் நடத்தையில் கட்டுப்படுத்தப்படுவதே சமூகப்படுத்துதல் என்று கூறலாம். பொதுவாகக் கூறினுல் சமூக உளவியல் என்பது, எங்ஙனம் நாம் ஒவ்வொருவரும் மற்றவர்களின் போக்குகளுக்கேற்ப நடக்கிறோம், சூழ்நிலைக்கேற்பச் செயல்படுகின்றோம். அல்லது எங்ஙனம் ஒரு சமூகத்தில் இணையப் பெறுகின்றோம் என்பதைப் பற்றியதாகும். இவ்வகையில், குழந்தையிலிருந்து தொடங்கி எழுதப் படிக்கக் கற்று, நண்பர்களுடன் பழகி, சமூக நிறுவனங்களோடு தொடர்பு கொண்டு, அதன்வழி தனக்கும் குடும்பத்திற்கும், தன் சமூகத்திற்கும் பயன் அடையத்தக்க முறையில் பணியாற்றி மிக விரைவில் சமூகத்தின் ஒருசில நடவடிக்கைகளைத் தானே கட்டுப்படுத்துகின்ற அளவிற்கு மனிதன் சமூகமயமாக்கப்படுகின்றான்.

சிக்கலறையின் (Maze) அமைப்பு, அதில் ஓடுகின்ற எலியின் நடத்தையினை வெகுவாகப்பாதிக்கின்றது. ஓரிரு பரிசோதனைகளுக்குப்பின் எலி தன் நடத்தையை அப் பெட்டியின் அமைப்புக்கு ஏற்ப மாற்றிக்கொள்கிறது. மனிதன் தான் வாழும் சமூகத்தின் அமைப்பிற்கும், கட்டுத் திட்டங்களுக்கும், பண்பாடுகளுக்கும் ஏற்ப மிக விரைவில் தன் நடத்தையை மாற்றிக் கொள்கின்றான். சமூகம் மனிதனுக்கு ஒரு சிக்கலறை. எனவே சமூகம் மனிதனுக்கு ஒரு சிக்கலறையாகும். சமூகம் தனியனை எண்ணற்ற சட்டதிட்டங்களாலும், கட்டுப்பாடுகளாலும் இயக்கி, அவனைத் தண்டித்தும் அவனுக்கு வெகுமதி அளித்தும் சமூக அமைப்பிற்கு ஏற்ப அவன் நடத்தையைப் பண்படுத்துகின்றது.

சமூகப்படுத்துதலுக்கு இன்றியமையாதவர்களாக விளங்குபவர்கள் அக் குழந்தையின் பெற்றோர்கள், ஆசிரியர்கள், உடன் பிறந்தவர்கள், விளையாட்டுத் தோழர்கள், உறவினர்கள், நண்பர்கள் போன்றவர்களே ஆவர். இத்தகைய சமூகப்படுத்தல் காலப்போக்கில் சூழ்நிலையால் நடைபெறுகின்றது. நண்பர்களும், ஆசிரியர்களும், பெற்றோர்களும் சமூகப்படுத்துதலையே தான் செய்கின்றார்கள்

தொடக்கத்தில் சமூகபபடுத்தல் என்பது குழந்தையை வளர்ப்பது என்று கருதப்பட்டது. அண்மைக் காலத்தில்தான் சமூகப்படுத்துதல் என்பது ஒருவனது நடத்தையை அவன் பழகும் சமுதாயத்திலுள்ள பெரியவர்களது எதிர்ப்பார்ப்புக்குத் தககபடி மாற்றி அமைத்துப் பயன்படுத்தும் செயல் எனக் கருதப்படுகிறது. இவ்வழியில் சமூகப்படுத்துதல் என்பது ஒரு பருவத்

தில், வயதில் வளர்ந்து நின்றுவிடுவது அன்றி, வாழ்நாள் முழுவதும் தொடர்ந்து செயல்பட்டுவரும் ஒரு மாற்றமாகும்.

சமூகப்படுத்தும் முறைக்கும், மற்ற வகையில் ஏற்படும் மாறுதல்களைக் குறிக்கும் மாற்றங்களுக்குமிடையே இரு வேறுபாடுகள் காணப்படுகின்றன. முதலாவதாக, சமூகப்படுத்தும்போது மனப் போக்கும், நடத்தையும் மாற்றம் அடைகின்றன ஆனால் உடல் வளர்ச்சியில் உடலின் பகுதிகள் வளருமே தவிர, அம் மாற்றம் அறிவு வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைவதில்லை. இரண்டாவதாக, மக்களிடையே ஒருவருக்கொருவர் தொடர்பு கொள்வதால் ஏற்படும் உளப்போக்கு மாற்றமும், நடத்தையுமே சமூகப்படுத்துதலாகக் கருதப்படும். மற்றவர்களின் துணையின்றி, குறுக்கீடின்றி ஓடுதல், குதித்தல், தாண்டுதல் போன்றவற்றைக் கற்றுக் கொள்ளும் மனிதன் சமூகப்படுத்தப்பட்டுத்தான் இவ்வாறு செய்கிறான் என்பதாகக் கருத முடியாது. ஆனால் ஒருவன் தான் வாழும் சமூகத்தினிடை வழங்கும் மொழி ஒன்றைக் கற்றுக்கொள்வது சமூகப்படுத்துதலாகக் கருதப்படுகின்றது. இங்கே மொழியினைப் பயிலும் மனிதன் ஏதாவது ஒரு வகையில் பிற மனிதர்களுடன் தொடர்பு கொண்டிருக்கின்றான்.

சமூகப்படுத்துதல் எனும் செயல் வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் எல்லாத் துறைகளிலும் நிகழ்கின்றது. எனினும் சமூக உளவியலாளர்கள் சமூகப் படுத்தப்படுதலைப் பற்றிப் பயிலும் போது கீழ்கண்ட நான்கு தன்மைகளின் கீழ் அதனை ஆராய்கின்றனர்.

(1) பாவனை நடத்தை (imitation) வாயிலாகத் தன்னை மற்றவர்களின்பால் ஒப்பிட்டு அடையாளப்படுத்திக் கொள்ளுதல், சமூகத்தின் கட்டுத் திட்டங்களைக் கற்றல் போன்றவற்றால் உண்டாகும் சமூகப்படுத்துதலை ஆராய்தல்.

(2) சமூகத்தின் கட்டுப்பாடுகள், கோட்பாடுகள், அதன் இயக்கம் போன்றவற்றின் அடிப்படைக் காரணங்களை நிர்ணயித்து அதன்வழி நிகழும் சமூகமயமாதலை ஆராய்தல்.

(3) சார்ந்திருத்தல் (Dependency), ஆக்கிரமித்தல் (Aggression), அன்பு செலுத்துதல் போன்ற பல்வேறு நடத்தைகளால் உண்டாகும் சமூகப்படுத்துதலை ஆராய்தல்.

(4) இத்தகையச் சமூகப்படுத்துதலுக்குச் சமூகத்தின் அமைபபும், சூழ்நிலையும் எங்ஙனம் உதவுகின்றன என்று நோக்கி, எவ்வாறு சமூகமயமாதல் ஏற்படுகின்றது என ஆராய்தல்.

### சமூகப் படுத்துதலும்–சமூகப் படிப்பினையும் (Socialization and Social learning)

சமூகப்படுத்தும் முறைக்கு மிகவும் இன்றியமையாதது சமூகப் படிப்பினையே ஆகும். உளவியலில் கற்றல் என்பது, சூழ்நிலை களில் உண்டாகும் அனுபவத்திற்குத் தக்கபடி தண்டனை அல்லது வெகுமதி இவற்றைக் கொண்டு ஒருவன் பெருக்குகின்ற பயனைக் குறிக்கிறது. மனிதர்களின் வாழ்வில், சமூகப் படிப்பினையும், சமூகப்படுத்துதலும் ஆதிக்கம் செலுத்தாத ஒரு பகுதியே இல்லை எனக் கூறலாம். தனிப்பட்ட முறையில் தனியன் சமூகத்தில் படிப்பினைப் பெற்றுச் சமூகத்திற்கு ஏற்ப நடந்துகொள்கின்றான் என்பது மட்டுமின்றித் தனியன் தன் சொந்த அனுபவங்களால் உலகைப்பற்றி அறிந்துகொண்டுள்ள அறிவையும் எங்ஙனம் தனக்குத்தானே ஒருங்கிணைத்து ஏற்ற அறிவினைப் பெறுகிறான் என்பதும் சமூகப்படுத்துதலால் விளைவதாகும். சமூகப் படிப் பினையால் ஒருவன் தனது சமூகமும் பண்பாடும் ஏற்றுக் கொள்ளாத பல்வேறு நடத்தைகளைக் கைவிட்டு அவற்றுக்குப் பதிலாகச் சமூகம் ஏற்றுக்கொள்ளுகின்ற பழக்க வழக்கங்களை மேற்கொண்டு நடக்கிறான். மேலும், அங்ஙனமே தன் வழியில் வாழ்க்கைச் சுவையையும், தான் விரும்புகின்ற வாழ்க்கை முறை யினையும் ஏற்படுத்திக்கொள்ளுகின்றான். ஒரு காலத்தில் ஒதுக் கப்பட்டதும், பொருளற்றவை என நினைத்துப் பின்பற்றப்படா ததுமான சில கோட்பாடுகள், பின்னால் சமூகப்படுத்துதலால் தனியனால் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. சமூகப்படுத்துதலால் அக் கோட்பாடுகளின் மதிப்பினையும், பயனையும் அறிந்துகொள் ளும் தனியன், அவற்றின்மீது தனக்கென ஒரு பற்றினை ஏற் படுத்திக்கொண்டு, அவற்றுக்காக உழைக்கவும் செய்கின்றான். இவ்வாறாகச் சமூகப்படுத்துதலின்போது ஒருவனது நடத்தை அவன் வாழும் சமூகத்தால் கட்டுப்படுத்தப்படுகின்றது.

### சமூகப்படுத்துதலும் ஆளுமை வளர்ச்சியும்

சமூகப்படுத்துதலை மனிதனின் ஆளுமை வளர்ச்சியினின் றும், அவன் கற்கும் கல்வியினின்றும் அவ்வளவு எளிதாகப் பிரித்துக் கூறுதல் இயலாது. சமூகப்படுத்துதலும், ஆளுமை வளர்ச்சியும் ஒரு தனியனின் பொது நடத்தையைப் பண்படுத்து கின்றன. இவை இரண்டும் ஒரே நேரத்தில் தொடங்கி ஒரே வழி யில்தான் செயல்படுகின்றன. மேலும் அவை சிறப்பாகச் செயல் படக் கல்வியைத்தான் நம்பி இருக்கின்றன. சமூகப்படுத்துதலும், ஆளுமை வளர்ச்சியும், தனியன் சூழ்நிலைக்கு ஏற்பச் செயல்படக் கற்றுக் கொள்ளுவன் வாயிலாகவோ, அல்லது சூழ்நிலையின் அமைப்பையும் அதற்கேற்பச் செயல்படும் முறையினையும் கல்வி

யின் வாயிலாகக் கற்றுக்கொள்வன் வாயிலாகவோ தமது இலக்கினை எய்துகின்றன.

**சமூகப்படுத்துதலும் இலக்கு நோக்கிய நடத்தையும்**

சமூகப்படுத்துதலில் மிகவும் முக்கியமானது தனியனை ஒரு குறிக்கோளினை நோக்கி முன்னேறவைப்பதாகும். சமூகத்தில் சமூகப்படும்போது ஒரு தனியன் கற்றுக்கொள்வது இந்தக் குறிக்கோளை நோக்கி நடக்கும் நடத்தையே ஆகும்.

குறிக்கோள் நடத்தையை ஆராய்கின்றபோது தனியன் அடைய எண்ணும் குறிக்கோள்களை மட்டுமின்றி அக் குறிக்கோள்களை அடைய அவன் கையாளும், வழிமுறைகளையும், நடத்தைகளையும் நாம் அறிய வேண்டியவர்களாக இருக்கின்றோம். சமூகப்படுதல் தனியனின் குறிக்கோள் நடத்தையை எங்ஙனம் பாதிக்கின்றது அல்லது அதற்கு உதவுகின்றது என ஆராயும்போது, அவனது குறிக்கோள்களையும், அவற்றை அடையும் வழி முறைகளையும் ஆராயவேண்டும். எடுத்துக்காட்டாகத் தனது வருவாயில் ஒரு பங்கினைச் சேமிக்கவிரும்பும் ஒருவன் தன் குடும்பச் செலவுகளை, அல்லது தனிப்பட்ட செலவுகளைக் குறைத்துக்கொண்டோ, அல்லது தான் பணியாற்றுகின்ற அலுவலகத்தில் அதிகமான நேரம் வேலை செய்தோ; அல்லது அலுவல் முடிந்த உடன் தனிப்பட்ட முறையில் ஒரு தொழிலினை ஏற்றுச் சம்பாதித்தோ செலவுகளைச் சரிக்கட்டலாம். இங்கே அவன் தன் குறிக்கோளை அடைய தேடுகின்ற வழிமுறைகள் ஒவ்வொரு தனியனுக்கும் இடையே மாறுபடுகின்றது என்று விளங்குகின்றது. அவ்வழி முறைகளின் தன்மையிலிருந்தும் அத் தனியன் கருதியுள்ள குறிக்கோளின் தன்மையிலிருந்தும், அவன் எங்ஙனம் சமூகப்படுத்தப்பட்டிருக்கின்றான் என்பதை அறிந்து கொள்ளலாம். அவற்றின் மூலமே ஒருவன் சமூகப்பட என்னென்ன அல்லது எத்தகைய குறிக்கோள்களையும் அவற்றை அடையும் வழிமுறைகளையும் பின்பற்றுகிறான் என்பதை நிர்ணயிக்கலாம்.

**சமூக மாற்றம் (Social Change)**

சமூக மாற்றம் என்பது நேர்மறையாகவும், எதிர்மறையாகவும் விளைவதாக அமையலாம். சமூகத்தின் அமைப்புகளைக் குலைப்பதாகவும், அல்லது சமூகக் கட்டுப்பாட்டு விதிகளைத் தகர்ப்பதாகவும் அமையலாம். சமூக மாற்றம் எதிர்மறையாக விளங்குகின்றது. ஆனால் சமூக மாற்றம் சமூகத் தகுதிகளை, நிலைகளை உயர்த்துவதன் மூலம், அல்லது சமூகத்தைக் கட்டுப்படுத்தப் பல விதிகளை உருவாக்குவதன் மூலம் ஏற்பட்டால் அதற்கு நேர்

மறையான சமூக மாற்றம் என்று பெயர். மாற்றம் என்பதே முன்பிருந்த அமைப்பைக் குலைப்பதாக அமைவதால் சமூகக் குலைப்பு இன்றி மாற்றமோ, முன்னேற்றமோ ஏற்படுவதில்லை எனவே சமூகக் குலைப்பு எதிர்மறையாக விளைகிறது என நாம் கருதும்போது, முன்பிருந்த தரத்தைவிடப் புதியமாற்றம் தரக் குறைவாக மாறிவிடுவதையே குறிக்கின்றோம். எனவே நேர் முறை மாற்றத்தில் சமூகத்தின் தராதரம் உயர்கின்றது என்றும், எதிர்மறை மாற்றத்தில் சமூகம்தான் முன்பிருந்த தராதரத் திலிருந்து குறைகின்றது என்றும் நாம் கருதவேண்டும்.

சமூகம் என்பது எப்போதும் மாறிக்கொண்டே இருக்கின்றது. அது மிக அரிதாக ஒரே நிலையில் நீடித்து நிற்கின்றது. சமூகங்கள், சமூகத் தொத்து வியாதிகளான பரத்தைத்தன்மை, குற்றங்கள், குடித்தல்தன்மை, போன்றவற்றிற்கு உள்ளாகும் போது, சமூக மாற்றம் கீழான தரத்தின் பால் நிகழுகின்றது. மற்ற நேரங்களிலெல்லாம் சமூக மாற்றம் முன்னேற்றகரமாய் விளங்குகின்றது. ஆமை வேகத்தில் முன்னேற்றம் இருந்தாலும் சரி, அல்லது புரட்சிகரமான வேகத்தில் முன்னேற்றங்கள் நிகழ்ந் தாலும் சரி ஒரு சமூகத்தின் மாற்றங்கள், கலாசாரத் தன்மைகள் போன்றவற்றின் சரித்திரத்தைத் தொடர்ந்து நாம் ஆராய்ந் தோமேயானால் அத்தகைய எல்லா மாற்றங்களினூடே தொடர்ந்து நிலையான ஒருசில பண்புகள் நீடித்திருப்பதை நாம் காணு கின்றோம். அச் சமூகத்தின் புதியன நோக்கி முன்னேறும் வேக மும், பழைய கலாசார மரபுகளைச் சார்ந்தவற்றைப் பின்பற்றி இருக்கும் தன்மையையும், அச் சமூகத்தின் ஒருசில குறிப்பிட்ட பண்புகளைப் பாதிப்பதில்லை. என்னதான் புதியன நோக்கி முன் னேற்றம் நிகழ்ந்துகொண்டிருந்தாலும், எவ்வகையில் தான் ஒரு சமூகம் தனது பண்டைய கொள்கைகளில் தொடர்ந்து பீடிக்கப் பட்டிருந்தாலும் சமூகத்திற்கான உரிய ஒருசில தன்மைகள் மாறுவதில்லை.

பிறகு சமூக மாற்றம் என்று எதை நாம் எதிர்பாாகின்றோம். நிச்சயமாக ஒரு சமூகம் தன் தற்போதைய நிலையினின்று கீழி றங்கிச் செல்வதையன்று. அல்லது மிகவும் விரைவாக முற போக்குக் கொள்கையின்பால் மாறிக்கொண்டு செல்வதையும் அன்று. இவ்விரு எல்லைகளுக்கும் இடையின்பாற்பட்டதான மாற்றங்களையே நாம் சமூகமாற்றம் என்று இங்குக் குறிப்பிடு கின்றோம். புதியன புகுதலும், பழையன கழிதலும் ஆகிய சமூ கத்தின் போராட்டத்தில் எஞ்சிய விளைவாகக் கிட்டுகின்ற விளை பொருள்களையே இங்கு நாம் சமூக மாற்றமெனக் காணுகின்றோம்.

தற்போது சமூகமாற்றம் நிகழ்வதற்கு உதவும் சக்திகளாக ஐந்து காரணிகளை நாம் காணலாம்.

(i) பண்பாட்டுத் துரித வளர்ச்சி.
(ii) விரிவான மக்கள் தொகை இடப்பெயர்ச்சி.
(iii) நகர்ப்புறப்படுத்துதல்
(iv) இயந்திரப்படுத்தலும், தொழிற்படுத்தலும்
(v) மதச்சார்பு நீக்கம் அல்லது மதக்கட்டுப் பாடுகளில் தளாத்தல்.

(i) பண்பாட்டின் துரித வளர்ச்சி (Rapid Cultural Growth)

நவீன சமூகத்தில் ஏற்படும் மாற்றங்கள் உயிர்த்துடிப்பான, பரந்து காணப்படுகின்ற சக்தியாகும். ஒருசில சமூகங்கள் பழமையான பழக்க வழக்கங்களின் சட்டதிட்டங்களை நூற்றுண்டுகளாகத் தொடர்ந்து பின்பற்றி வந்த நிலை இப்போது மாறிவிட்டது. மரபுசார்ந்த சமூகங்கள் புதிய இயக்கம் மிக்க சமூகத்தின் முன்னுல் அவ்வளவு மதிப்புப் பெறுவதில்லை. புதிய இயக்கம் மிக்க சமூகங்களில் கலாசார வளர்ச்சி மிகவும் துரிதமாக ஏற்படுகின்றது. பழைய பழக்கவழக்கங்களும், நம்பிக்கைகளும் இப்போது புறக்கணிக்கப்படுகின்றன. சமூகத்தின் அடித்தளமாக விளங்குகின்ற சட்டதிட்டங்களும், கட்டுப்பாடுகளும், புதிய சூழ்நிலைகள் எழுவதின் காரணத்தினுல் மாற்றி அமைக்கப் படவேண்டியவையாகின்றன. பழைய சட்டதிட்டங்கள் இப் போது பயன்படுவதில்லை. இதுவரை நம்பிவந்த மதக்கோட்பாடுகளும், சமூகக் கோட்பாடுகளும், இப்போது வெளிவருகின்ற விஞ்ஞானக் கருத்துக் கோட்பாடுகளின் முன்னுல் அவ்வளவாக வலிமை பெற்று விளங்கவில்லை. கலாசாரம் போகின்ற போக்கில் அதனைப் பின்பற்றி மனிதன் ஓடிக்கொண்டிருப்பதால் சமூகமும் அம் மனிதனின் சிந்தனை, செயல்பாட்டுத்தன்மை, இவற்றிற் கேற்ப மாறுதல் அடைகின்றது.

(ii) விரிவான மக்கள் தொகை இடப்பெயர்ச்சி (Extensive Population Movement)

ஒரு மனிதனை அவனது முதல் நிலைக் குழுவினின்று, குடும்பத்தினின்று பெயர்த்து முன்பின் தெரியாத புதிய நாடு ஒன்றில் குடியேற்றிவிட்டால், அவன் தன் பழைய மரபுவழி வந்த பழக்க வழக்கங்களையும், சமூகப் பண்பாடுகளையும் விரைவில் மறந்து புதிய சமூகத்தோடு கலந்துவிடுகின்றுன். உலகின் நாகரிகம் மிக்க நாடுகள், சமூக மாற்றங்கள் மிக்க நாடுகள், முன்னேற்றமான நாடுகள் எனக் கருதப்படுபவை அனைத்துமே இங்ஙனம் விரிவான ஜனத்தொகை இடப்பெயர்ச்சி செய்ததனுலேயே-புதிய

நாட்டில் குடியேற்றங்கள் நிகழ்ந்ததினாலேயே—அங்ஙனம் முன்னேற்றம் கண்டுள்ளன. அமெரிக்காவைப் பொறுத்தவரை அங்கே குடியேறினவர்கள் இங்ஙனம் புதிய சமூக கலாசாரப் பண்பாடுகளைத் தங்களின் சொந்த சமூகக் கட்டுப்பாடுகளைத் தவிர்த்துவிட்டு ஏற்றுக்கொண்டதினாலேயே நிகழ்ந்துள்ளன. கீழை நாட்டிலும் கூட இங்ஙனம் பிற நாடுகளினின்று குடிபெயர்ந்து வந்து இந் நாடுகளைத் தங்களின் குடியிருப்புகளாக, மேலை நாட்டவர்கள் பயன்படுத்தியதாலேயே அவர்களின் உறவின் தொடர்பில் கீழை நாட்டுச் சமூகங்கள் மாற்றம் கண்டன. எனவே ஜனத்தொகை இடப்பெயர்ச்சி விளைவில் சமூக மாற்றங்கள் மிக எளிதாக ஏற்படஏதுவாகின்றன.

(iii) நகர்ப்புறப்படுத்துதல் (Urbanisation)

மனிதச் சமூகம் கிராமப்புறத்தில் இன்றும் தடுமாறித் தவழ்ந்து கொண்டிருக்கிறது. ஒரு நூற்றாண்டிற்குப் பின்னரும் கிராமப் புறத்தில் நாம் அவ்வளவு விரிவான சமூக மாற்றத்தைக் காண முடியவில்லை. ஆனால் நகர்ப்புறத்துச் சமூக மாற்றங்கள் மிகவிரைவாக நிகழ்ந்துகொண்டே இருக்கின்றன. இதற்குக் காரணம் நகர்ப்புறத்தில் சமூக வளர்ச்சிக்குத் தேவையான வசதிகளும், வாழ்க்கை வசதிகளும் குழு வாழ்விற்குத் தேவையான நிலைகளும் நிறைந்திருப்பதினாலும் ஆம். எனவே நகர்ப்புறப் படுத்துதல் சமூக மாற்றத்திற்கு மிகவும் வேகமாக உதவுகின்றது.

(iv) இயந்திரப்படுத்துதலும், தொழிற்படுத்துதலும் (Mechanisation and Industrialisation)

மனித வாழ்க்கை இப்போது இயந்திரமயமாய் மாறிக் கொண்டு இருக்கின்றது. இயந்திரங்களின் அதிகரிப்பில் தொழில் வளமும், வேலை வாய்ப்பு வசதியும் பெருகின்றன. நாட்டின் உற்பத்தி பன்மடங்காக அதிகரிக்கும்போது கூடவே நாட்டின் பொருளாதார நிலைமையும் சீர்பெறுகின்றது விளைவாக மனிதன் புதிய கருத்துகளை நோக்கி நகரத் தொடங்குகின்றான். அவனது தேவைகள் பூர்த்தி செய்யப்பட, வாழ்க்கை வசதிகள் பெருக, அவன் சிறிய இலட்சியத்தினின்று பெரும் இலட்சியத்தினை நோக்கி நகரும்போது சமுதாய மாற்றமும் தானாகவே நிகழ்கின்றது.

இயந்திரங்களின் அதிகரிப்பில் தொழிற்சாலைகள் பெருகுகின்றன. தொழிற்சாலைகளில் வேலைசெய்யவேண்டிக் கிராமப் புறங்களினின்று மக்கள் குடிபெயர்ந்து தொழிற்சாலைகளை ஒட்டி ஒரு புதிய நகரத்தை நிர்மாணிக்கின்றனர். ஆங்கே ஒரு புதிய

சமூகமே ஜனத்தொகை இடப்பெயர்ச்சியின் அடிப்படையில் உருவாகின்றது.

இயந்திரப்படுத்தலின் தன்மையில் நாம் இங்கு ஒரு விஞ்ஞான வளர்ச்சி யுகத்தைக் காண்கின்றோம். வாழ்க்கைத் தேவைகளனைத்தும் உடல் உழைப்பினால் அன்றி இயந்திர உழைப்பில் பெரிதும் நிறைவேற்றப்படுகின்றன. ஒருவாரக் காலத்தில் செய்ய இயலும் ஒரு வேலை இப்போது ஒருமணி நேரத்தில் செய்யக்கூடியதாக அமைகின்றது. இதன் விளைவாக வாழ்க்கை நோக்குகளும், இலட்சியங்களும் புதிய நோக்கத்தின்பால் தோன்றுகின்றன, சமூகம் தன் பழைய நிலையினின்று பெயர்ந்து புதிய இலட்சிய நோக்குகளை அடைய முன்னேறுகின்றது. ஊர்திகள், இரயில், விமானம், கப்பல் போன்ற போக்குவரத்து வசதிகளையும், தந்தி, தொலைபேசி, டெலிவிஷன் போன்ற செய்தித் தொடர்பு வசதிகளையும், ரேடியோ, மின்சார வசதி போன்ற கண்டுபிடிப்புகளையும் பயன்படுத்தி இன்றைய மனித சமூகம் கடந்துபோன சமூகங்களை விட எத்தனையோ படி மேலாக மாறுதல்கள் அடைந்திருப்பதை நாம் காணுகின்றோம். இவ் வியந்திர வசதிகளும், தொழிற்சாலைகளும் மனிதனின் தேவைகளை மட்டும் நிறைவேற்றுவதாய் அமைவதோடன்றி, அவனை அவனது பழைய கலாசார, மதச் சம்பந்தமான மூட நம்பிக்கைகளினின்று அகற்றிப் புதிய விஞ்ஞான உலகத்தை அறிமுகம் செய்துவைத்து அவ்வகையில் அவனது மனப்போக்கை மாற்றிப் புதியதோர் சமூகத்தை விளைவிக்க உதவுகின்றன.

### (v) மதச்சார்பு நீக்கம் அல்லது மதக் கட்டுப்பாடுகளும் தளர்த்தல் (Secularisation or decline of religious controls)

சமூக மாற்றத்தை விளக்கும் சரித்திர வளர்ச்சியில் மதச்சார்பு நீக்கம் பெற்றிருக்கின்ற இடத்தை வேறு எந்தக் காரணிகளும் இதுவரை பெறவில்லை. மதச்சார்பு நீக்கம் என்பதில் நாம்:

(1) பழைய நம்பிக்கைகளைப் புதிய பகுத்தறிவு விஞ்ஞான சிந்தனைகளால் மாற்றியமைப்பது.

(2) குடிமக்களின் பொது நியதிகளினாலும், இடப பெயர்ச்சியினாலும் நாம் மதச்சார்பு நீக்கத்தை எதிர்பார்க்கிறோம். டார்வினின் உயிர்த்தோற்றக் கொள்கை பழைய மதச் சம்பந்தமான நம்பிக்கைகளையும், எண்ணங்களையும் வெகுவாக அழித்துள்ளன. பிராய்டின் மனித நடத்தைப் பற்றிய கோட்பாடுகள் மனிதக் குற்ற உணர்வுகளின் காரணங்களை, மனிதர் படும் துன்பங்களை மதச் சம்பந்தமான மூடநம்பிக்கைகளின் பிடிப்புகளினின்று விலக்கி

யுள்ளன. வில்லியம் கிரஹாம் சம்னர் (William Graham Sumner) என்பாரின் அறம் பற்றிய கோட்பாடுகள், சமூகத்தின் தன்மையைப் பொறுத்தும் கலாசாரப் பண்பாட்டு வளர்ச்சியைப் பொறுத்தும் அமைகின்றன என்று கூறிப் பாவ புண்ணியங்களில் மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையை முழுவதும் ஒழித்துள்ளன. இவற்றைப் போன்று எண்ணற்ற உதாரணங்களை நாம் அடுக்கிக் கொண்டே செல்லலாம். இங்ஙனம் மதச் சார்பு நீக்கம் சமூக மாறுதலுக்குப் பெரிதும் உதவியாய் இருந்து வருகின்றது. பழைய காலத்தினைப் போன்று இப்போது மனிதச் சமூகத்தை மத நிறுவனங்களும், மதக் கட்டுத் திட்டங்களும் ஆள்வதில்லை. அக் கட்டுத் திட்டங்கள் வெகுவாகத் தளர்த்தப்பட்டிருக்கின்றன. மனிதச் சமூகம் தற்போது அதனது நம்பிக்கையையும், புதிய எதிர்ப்புகளையும், விஞ்ஞானத்தின்மேல் வைத்து மதக் கட்டுப்பாடுகளுக்குக் கொள்கைகளுக்குக் கொடுத்துவந்த முக்கியத்துவத்தை அகற்றிக்கொண்டே வருகின்றது. இங்ஙனம் மதச் சார்பு நீக்கமும், மதக்கட்டுப்பாடுகளைத் தளர்த்தலும் சமூக மாறுதல்களை விளைவிப்பனவாய் அமைகின்றன.

சமூக மாற்றத்திற்கான காரணங்கள் என்ன என்ற கேள்விக்குப் பலர் பல்வேறுபட்ட விடைகளைத் தருகின்றனர். இங்கே ஒரு சமூக உளவியலாளர், (i) அயல்நாட்டுத் தொடர்பு, (ii) செயல் திறம் மிக்க சமூகத் தலைவர்களின் சிந்தனையும், தொண்டும், (iii) கீழ்த்தரப்படுத்தும் சமூகக் கட்டுப்பாடுகளைக் காலப் போக்கில் எதிர்த்தல் என்ற மூன்று காரணங்களைச் சமூக மாற்றத்திற்கான காரணங்கள் என்று கூறுகின்றார்.

### (i) அயல்நாட்டுத் தொடர்பு (Foreign contacs)

அயல்நாட்டினர் நம் நாட்டைக் காணவருகின்றனர். நாம் அந் நாடுகளைச் சுற்றிப்பார்க்கச் செல்லுகின்றோம். கல்வியறிவின் மூலம், அரசியல் தொடர்பின் மூலம், விஞ்ஞான வளர்ச்சியின் செய்தித் தொடர்புகளின் மூலம், உலக நாடுகள் அனைத்தும் ஒரே தெருவில் இருப்பதான உணர்வு நமக்குக் கிட்டுகின்றது. இங்கே ஒரு நாட்டினரின் பண்பாடு, கலாசாரத் தன்மைகளை மற்ற நாட்டினர் எளிதில் புரிந்துகொள்ளவும், அதன் வழித் தங்கள் சமூகத்தின் தராதரத்தை உயர்த்திக் கொள்ளவும் இயல்கின்றது.

ஒரு நாட்டிற்குச் சென்று சுற்றிப் பார்த்துவரும் நபர்கள், பிராணிகள் அந்த நாட்டில் தாங்கள் கண்டவற்றையும் அந் நாட்டு மக்களின் வாழ்க்கை முறை, சமூக அமைப்பு, மத, கலாசாரப் பண்பாடுகளின் தன்மை போன்றவற்றையும், தத்தம் நாடுகளில் எடுத்துக் கூறுகின்றனர். அதனைக் கேட்கும் அந் நாட்

டினர் தங்களின் பழமைக் கொள்கைகளின் பிடிப்பினின்று ஒதுங்கி முற்போக்குக் கருத்துகளை வரவேற்கின்றனர். இதற்கு அவர்களின் கல்வியும், அயல்நாட்டு அறிவும், விஞ்ஞான வளர்ச்சியும், தொடர்ந்து உதவுவதால் ஆங்கே சமூகமாற்றம் ஏற்பட ஏதுவாகின்றது.

(ii) செயல்திறம் மிக்க சமூகத் தலைவர்களின் சிந்தனையும் தொண்டும் (Thoughts and Services of efficient social leaders)

ஒவ்வொரு சமூகத்திலும், ஒவ்வொரு காலத்திலும் தொடர்ந்து தலைவர்கள் தோன்றிக்கொண்டே இருக்கின்றனர். அவர்களது கடந்த காலத்தை ஆராய்ந்து நிகழ்காலச் சமூகத்தன்மைகளைச் சிந்தித்துப் பார்த்து எதிர்கால மாற்றங்களைப் 'பற்றிச் சிந்திக்கின்றனர், பிறகு எடுத்துப் பேசுகின்றனர். பின்னர் அவற்றை நிறைவேற்றுவதையே தங்களின் வாழ்க்கை இலட்சியங்களாகக் கொண்டு அதற்காகப் பாடுபடுகின்றனர். இத்தகைய சமூகத் தலைவர்களின் சிந்தனையால், தொண்டினால் மட்டுமே எண்ணற்ற சமூகங்களில் சமூக மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன என்று கடந்த காலச் சரித்திரங்கள் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. எனவே, சமூகத் தலைவர்கள் சமூக மாற்றங்களை விளைவிக்கின்றனர் என்று நாம் கருதுகின்றோம்.

(iii) கீழ்த்தரப்படுத்தும் சமூகக் கட்டுப்பாடுகளைக் காலப்போக்கில் எதிர்த்தல் (Revolt against the deteriorate Principles due to passage of time)

சமூகத்தை ஒரே நிலையில் தொடர்ந்து வைப்பதற்காகப் பாடுபட்ட நிறுவனங்களும், தலைவர்களும் ஒருசில விதிகளை, சமூகக் கட்டுப்பாடுகளைத் தங்களுக்குப் பின்னால் சமூகத்தில் நிலவ விட்டுச் சென்றனர். அவர்களுக்குப் பின் அக் கட்டுப்பாடுகளும், நிறுவனங்களும், தங்களின் வலிமையில் குன்ற ஆரம்பிக்க– முன்னேற்றக் கருத்துகளை வரவேற்ற சமூகத்தினர் நாளடைவில் அப் பழையக் கட்டுப்பாடுகளுக்கு எதிராகக் கிளர்ந்து எழுந்து போராடத் தொடங்கினர். அதன் விளைவால் சமூக மாற்றம் நிகழ ஏதுவாகின்றது.

இந்தியாவில் சமூக மாற்றம்

இந்திய நாட்டின் சரித்திரத்தை மனக்கண்முன் கொண்டு வரும்போது நினைவு தெரியாக் காலத்திற்கு முன்பே இந்த நாட்டில் நிலவிவந்த சமூகத்தையும், சமூக வாழ்க்கையையும் பற்றி வடஇந்தியாவில் ஹரப்பா, மொஹஞ்சாதாரோ, புதையுண்ட நகரங்களிலிருந்தும், தென்னிந்தியாவில் குமரி முனைக்கு அடுத்து

இருந்த இலமூரியாக் கண்டத்தைப் பற்றிய நூல் வழிச் செய்தி களிலிருந்தும் நாம் அறிகின்றோம். வடஇந்தியாவில் வாழ்ந்த வர்கள் திராவிடர்கள் என்றும், அவாகள் நகர வாழ்விலும், கைத் தொழில், பயிர்த் தொழில், நெசவுத் தொழில் போன்ற தொழில் களிலும் சிறந்து விளங்கினர் என்றும், அவர்கள் சிவன், பார்வதி, லிங்கம் போன்ற தெய்வங்களை வணங்கினர் என்றும், இன்னும் இவைபோன்ற குறிப்புகளையும், மொஹஞ்சோதாரோ, ஹரப்பாப் புதையுண்ட நகரங்கள் நமக்கு எடுத்து விளக்குகின்றன. தென் னிந்தியாவில் வாழ்ந்த இலமூரியாக் கண்டத்துத் தமிழர்களைப் பற்றியும், மூவகைத் தமிழ்ச் சங்கங்களையும், அவற்றை ஆதரித்துவந்த மூவேந்தர்களையும், அவர்களது சிறப்புகளைப் பற்றிச் சங்ககால இலக்கியங்கள் விரிவாக நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. முதல் நிலையில் இந்தியாவில் நிலவிய சமூகத் தின் தன்மையைப் பற்றி நாம் நன்கு அறிகின்றோம்.

அதற்கடுத்தக் கட்டத்தில் ஆரியர்கள் இந்தியாவிற்குள் பிரவேசித்துத் திராவிடச் சமூகங்களினூடே கலந்து அவர்களை விரைவில் சமூகத்தின் பிற்பட்ட நிலைக்குத் தள்ளினர். பின்னர்த் தங்கள் உயர்ந்த நிலைகளில் வாழ்ந்தனர். இதன்பின் கஜினி முகம்மது, கோரி முகம்மது படையெடுப்புகளையும் அப்போது இங்கு வாழ்ந்த இந்து சமூகங்களின் நிலையையும், அதற்கடுத்து இந்தியாவில் தோன்றிவிட்ட முகலாய மன்னர்களின் ஆட்சி யையும் காணுகின்றோம்.

பதினாறும் நூற்றாண்டில் போர்த்துக்கீசியர்களும், ஆங்கிலே யர்களும் வியாபாரம் செய்ய இந்தியாவிற்குள் வந்ததையும், பிறகு படிப்படியாக இந்தியாவை ஆளும் அதிகாரத்தை அடைந்ததை யும், அவர்களின் ஆட்சியின் கீழ் இந்திய சமூகங்கள் பெற்றிருந்த இடத்தினையும் காணுகின்றோம். பின்னர் நமக்குச் சுதந்திரம் அளிக்கப்பட்டது. அதே நேரத்தில் பிரெஞ்சு, ஆங்கிலேயர் களின்பால் நம் தொடர்பு மாறியது. இதன் பின்பே தொழில், விஞ்ஞான வளர்ச்சி, அறிவு வளர்ச்சியையும் ஏற்பட்டன. இந் நிலையில் இந்தியாவில் நிலவும் சமூகத்தின் தரத்தை ஏனைய நிலை களோடு வைத்து ஒப்பிட்டுப் பார்க்கும்போது பல மாற்றங்களை நாம் அறிகின்றோம். இந்தப் பகுப்பின் மூலம் இந்தியாவில் நிலவி விட்ட சமூக மாற்றத்தை நாம் எளிதில் புரிந்து கொள்கின்றோம்.

### மாற்றத்திற்குத் தடை (Resistance to Change)

சமூகத்தில் எப்போதுமே ஒருசில பண்புகள் மாறுதனவாய் மாற்றத்தை எதிர்ப்பனவாய் இருக்கின்றன. பழைய மத நம்

பிக்கைகள், பாரம்பரிய வழிவந்த பழக்க வழக்கங்கள், புராதன காலந்தொட்டே நிலவி வருகின்ற சடங்கு முறைகள் போன்றவை சமூகத்தில் மாற்றம் நிலவுவதற்குத் தடைகளாக விளங்கு கின்றன. இத்தகைய பழக்கவழக்கங்களையும், நம்பிக்கைகளையும், சடங்குகளையும் மிகவும் புனிதமாகக் கருதிப் போற்றிப் பின்பற்றி வருகின்றவர்களை அவை மாற்றம் அடைவதை ஆவேசத் தோடு எதிர்க்கின்றனர். 'எங்களின் முன்னோர்களின் காலந் தொட்டே நிலவி வருகின்ற, இந்தப் பழக்கவழக்கங்களை, சடங்கு களைப் பின்பற்றுவதிலேயே நாங்கள் பெருமையடைகின்றோம். இதையே எங்களின் சந்ததியினருக்கும் தந்துவிட்டுப்போக நாங்கள் விரும்புகின்றோம். எங்களின் முன்னோர்களுக்கு நன்மைப் பயந்தவை, எங்களுக்கும்,' எங்கள் சந்ததியினருக்கும் நன்மைப் பயக்கும். எனவே இவற்றை நாங்கள் மாற்றிக்கொள்ள வேண் டியதில்லை' என அவர்கள் வாதிடுகின்றார்கள். இந்த மன நிலையிலேயே கற்பனைக்கு எட்டாத அம் முன்னோர்களின் காலத் தைப் பொற்காலமாகக் கருதி அந்தக்கால சமூக நிலையை மீண்டும் பெறுவதே தங்களின் இலட்சியம் எனக்கூறி, அதை அடைவதற் காகவே பாடுபடுகின்றனர். இங்ஙனம் அவர்கள் சமூக மாற்றத் திற்குத் தடையாக இருப்பதோடன்றி, மாற்றங்கண்ட சமூகத் தைப் பழைய நிலைக்கே பின்னோக்கி நகரவைப்பதற்காகவும் பாடு படுகின்றனர்.

இதுவன்றியும் அயல்நாட்டுக் கலாசாரத் தொடர்பில் அறிவு வளர்ச்சியில், விஞ்ஞான வளர்ச்சியில், தங்கள் சமூகத்தில் நிலவு கின்ற மாற்றங்களையும் இவர்கள் நமது சமூகத்திற்கு அப்பாற் பட்டது. சமூகத்தின் தன்மைக்கு ஏற்றதன்று,-பாரம்பரிய வழி வரும் இச் சமூகத்தில் அத்தகைய பண்புகள் நிலவுவது சமூகத்தை அடியோடு அழிப்பதற்கு ஒப்பாகும் என்று கூறி, அம் மாற்றகங் களை வலிமையோடு எதிர்க்கின்றனர். இத்தகைய தடைகள் சமூக மாற்றத்திற்கு எதிராகக் காணப்படினும், சமூகம் மாறிக் கொண்டுதான் இருக்கிறது. ஆரம்பத்தில் சமூக மாற்றங்களை எதிர்த்தவர்கள் பின்னர்க் காலப்போக்கில் தங்களின் எதிர்ப்பின் வன்மைக் குறைவதால் எதிர்ப்புகளைப் பிறர் அசட்டை செய்து விடுவதால் அத்தகைய மாற்றங்களைக் கண்டு மௌனமாகிவிடத் தொடங்குகின்றனர். பின்னர் அம்மாற்றங்களையே 'உலகத் தோடு ஒட்ட ஒழுகல்' என்று கூறித் தாங்களும் ஏற்றுக் கொள்ளுகின்றனர். ஒருசில நேரங்களில் இவர்களே மிக விரைவில் முன்னேறிக் கொண்டிருக்கும் சமூகத்தை ஒரு கட்டுப் பாட்டிற்குக் கொண்டுவரும் சமூகச் சீர்த்திருத்தவாதிகளாகவும் அமைகின்றனர்.

அதிகாரச் சுருக்கம்

பிறந்த குழந்தையைச் சமூகபபடுத்துதல் ஒரு பிரச்சினையே யாகும். மனித வாழ்வில் மிகவும் முக்கியமாக நிகழும் ஒரு நிகழ்ச்சி என்னவெனில் சமூகத் தொடர்பற்று ஏதும் அறியாது பிறந்த குழந்தையை எல்லாம் அறிந்த முழு மனிதனாகச் சமூகப் படுத்துதலாகும். சமூகம் தனியவனை எண்ணற்ற சட்டதிட்டங் களாலும், கட்டுப்பாடுகளாலும் இயக்கி அவனைத் தண்டித்து அவனுக்கு வெகுமதியளித்தும் சமூக அமைப்பிற்கு ஏற்ப அவன் நடத்தையைப் பண்படுத்துகின்றது.

சமூகப்படுத்துதல் வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் நிகழ் கின்றதெனினும், பாவனை நடத்தை மூலம் சமூகமயமாக்கல் சமூகத் தின் கட்டுப்பாடுகள், கோட்பாடுகள் மூலம் சமூகப்படுத்துதல், சார்ந்திருத்தல், ஆக்ரமித்தல், அன்பு செலுத்துதலால் சமூகப் படுத்துதல் சமூகத்தின் அமைப்பு, சூழ்நிலை போன்றவற்றால் சமூகப்படுததுதல் என்ற நான்கு நிலைகளிலே சமூகப்படுத்து தலைப் பற்றிச் சமூக உளவியலாளர்கள் கற்கின்றனர்.

சமூகப்படுத்தும் நிலைக்கு மிகவும் இன்றியமையாதது சமூகப் படிப்பினையேயாகும். சமூகப்படுத்துதலை மனிதனின் ஆளுமை வளர்ச்சியினின்றும், அவன் கற்கும் கல்வியினின்றும் பிரித்துக் கூறுதல் இயலாது. சமூகப்படுத்துதல் இலக்கு நோக்கிய நடத் தையை, குறிக்கோளை நோக்கித் தனியவன் முன்னேறும் முயற்சி யைக் குறிப்பதாகும்.

சமூக மாற்றம் என்பது சமூகத்தில் நேர்மறையாகவோ, எதிர் மறையாகவோ ஏற்பட்டுவிடும் மாற்றத்தினைப் பற்றிப் பயில்வ தாகும். சமூகம் என்பது எப்போதும் மாறிக்கொண்டே இருக் கின்றது. அது ஒரே நிலையில் நீடித்து நிற்பதில்லை. சமூக மாற்றம் நிகழ்வதற்கு உதவும் சக்திகளாக ஐந்து காரணிகளைச் சமூக உளவியலாளர்கள் கற்பித்துள்ளனர்.

பண்பாட்டின் துரித வளர்ச்சியினால் சமூகம் மாறிக் கொண்டே இருக்கின்றது. பழமையான பழக்க வழக்கங்கள், சட்ட திட்டங்கள் ஒரு சமூகத்தில் மாறத் தொடங்கப் புதிய சூழ் நிலைகளுக்கு ஏற்ப மாற்றி அமைக்கப்பட, கலாசார வளர்ச்சி மிகவும் துரிதமாக ஏற்படுகின்றது. விரிவான மக்கள் தொகை இடப்பெயர்சியினாலும், புதிய நாட்டில் குடியேற்றங்கள் நிகழ்வதி னாலும், ஒரு சமூகம் தன் பழைய மரபு வழி வந்த பழக்க வழக்கங் களையும், சமூகப் பண்பாடுகளையும் கைவிட்டுப் புதிய மாற்றங் களை ஏற்கின்றது.

நகர்ப்புறப்படுத்துதலின் விளைவாகவும்; இயந்திரப் படுத்துதல், தொழிற்படுத்துதல், வேலை வாய்ப்பு வசதிப் பெருகுதல் போன்றவற்றின் விளைவாகவும் சமூக மாற்றம் ஏற்படுகின்றது. மதச்சார்பு நீக்கமும், மதக் கட்டுப்பாட்டுக்களைத் தளர்த்துவதும் சமூக மாற்றத்திற்கு வழி வகுக்கின்றன.

சமூக மாற்றத்திற்கான காரணங்கள் என்னவென்ற கேள்விக்கு பலர் பல்வேறுபட்ட விடைகளைத் தருகின்றனர். ஒரு சமூக உளவியலாளர், (i) அயல் நாட்டுத் தொடர்பு, (ii) செயல் திறம் மிக்க சமூகத் தலைவர்களின் சிந்தனையும் தொண்டும், (iii) கீழ்த் தரப்படுத்தும் சமூகக் கட்டுப்பாடுகளைக் காலப்போக்கில் எதிர்த்தல், என்ற 3 காரணங்களைச் சமூக மாறறத்திற்கான காரணங்களாய்க் கூறுகின்றார். இந்திய நாட்டின் சரித்திரத்தை ஆராயும்போது 5 நிலைகளில் சமூக மாற்றம் நிகழ்ந்துள்ளதை அறிகிறோம். சமூக மாற்றத்திற்குத் தடைகள் இருந்த போதிலும் சமூகம் மாறிக்கொண்டுதான் இருக்கிறது.

# 11. சமூகப் புலன் காட்சி

புலன் காட்சி என்பது புலன் காட்சியின் அனுபவத்திற்கும் (Perceptual experience) வெளி உலகில் புலன் காட்சியின் மூலம் தெரிந்துகொள்ளுகின்ற ஒரு பொருளுக்கும் இடையே இருக்கும ஒற்றுமைகளை, சார்புத் தன்மைகளை விளக்குவதாம். நாம் புலன் காட்சியைப் பற்றிப் பயிலும்போது எப்படி ஒரு பொருளை நாம் பார்த்துத் தெரிந்துகொள்ளுகின்றோம் என்றே ஆராய்கின்றோம். ஆனால் நம்முடைய புலன் காட்சி இங்ஙனம் வெளி உலகில் உள்ள உயிரற்ற அசையாப் பொருள்களை மட்டும் பார்த்துத் தெரிந்துகொள்வதோடு நின்றுவிடுவதில்லை; மாறாக மிருகங்களையும் ஏனைய பறவை மனிதர் போன்றவற்றையும் நாம் புலன் காட்சி மூலமே பார்த்துத் தெரிந்துகொள்ளுகின்றோம். ஓர் உயிரற்ற அசையாப் பொருளைப் பார்த்துத் தெரிந்துகொள்வதற்கும், ஒரு மனிதனை அங்ஙனம் நாம் பார்த்துப் புரிந்துகொள்வதற்கும் இடையே எண்ணற்ற வேறுபாடுகள் இருக்கின்றன.

உதாரணமாக நாம் ஒரு திரைக் காட்சியை எடுத்துக்கொள்வோம். வெள்ளித் திரையில் நாம் உயிரற்ற அசையாப் பொருள்களையும், நடிகர் நடிகைகளையும் ஒருங்கே வைத்துத்தான் பார்க்கின்றோம். மேலும் அவை அனைத்தும் ஒளி அலைகள், படச் சுருளில் இருக்கின்ற பிம்பங்களின் நிழல்கள் என்பதையும் நாம் நன்கு அறிவோம். இருப்பினும் கதாநாயகன், கதாநாயகி, வில்லன், வில்லி போன்ற பாத்திரங்களுக்கு ஏற்ப, நாம் ஒருசிலவற்றைத் தனித்துப் பகுத்துப் புரிந்துகொள்ளுகின்றோம். கதாநாயகனைக் காணும்போது நம்மில் ஏற்படும் மன உணர்வுகள் வில்லனைக் காணும்போது முற்றிலும் மாறுபட்டுவிடுகின்றன மிகவும் அபாயகரமான துக்கம் நிறைந்த சூழ்நிலையில் கதாநாயகியைக் கண்ட நாம்-வருந்தித் துக்கித்தவர்கள்-மறு நிமிடமே அங்கே ஒரு நகைச்சுவை நடிகன் தோன்ற நம்மை மறந்து சிரிக்கின்றோம். ஆக உயிரற்ற பொருள்களைப் புலன் காட்சி வழி

பார்த்துத் தெரிந்துகொள்வதற்கும், உயிருள்ள மனிதர்கள் விலங்குகளைப் பார்த்துத் தெரிந்துகொள்வதற்கும் இடையே எண்ணற்ற வேறுபாடுகள் இருப்பதை நாம் உணருகின்றோம்.

சமூக உளவியலாளர்கள் இதனால்தான் சமூகப் புலன் காட்சி என்னும் பகுதியின் கீழ் ஒரு மனிதன் தன்னைச் சார்ந்த சமூகத்தின் மனிதர்களை எங்ஙனம் பார்த்துப் புரிந்துகொள்கின்றான் என்று பயிலுகின்றனர். இங்கேயும் புலன் காட்சியின் விளைவு களாய் நிகழும் செயல்களையும், எங்ஙனம் ஏன் எதனால் ஒருவன் ஒரு சமூகப் பொருளை ஒரு குறிப்பிட்ட வழியில் பார்த்துத் தெரிந்துகொள்ளுகின்றான் என்பதனையும், சமூகப் புலன் காட்சியின் காரணத் தோற்றம் அதன் பின் விளைவுகள் என்றும் பகுத்து ஆராய்கின்றனர். சுருக்கமாகக் கூறவேண்டுமே யானால் ஏன் ஒருசில தனித்த சமூகக் குழுவினர் பிறரை ஒரு வகைத்தான மனப்போக்கினையே புரிந்துகொள்கின்றனர், அதற் கேற்ப எப்போதும் அவர்களிடமிருந்து பிரிந்து ஒதுங்கியோ அல்லது நெருங்கியோ பழகுகின்றனர் என்றும், எத்தகைய காரணிகள் அங்ஙனம் அவர்கள் பிறரை விரும்பவும் வெறுக்கவும் செய்கின்றன என்பது பற்றியும், சமூக உளவியலாளர்கள் இப் பகுப்பின் கீழ் ஆராய்கின்றனர்.

அவ்விதமான ஆராய்ச்சிகளை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதலாவதாகத் தன்னைப் பற்றியும் தான் பிறருடன் இடைவினை புரியும் புலன் காட்சியைக் குறிப்பிடலாம். இத் துறையில் ஆய்வு நடத்திய இந்தியர்களில் ராத் (1961), சட்டர்ஜி நாயர் (1963), நடராஜ் (1966) ஆகியோர் முக்கியமானவர்கள். இரண்டாவதாகத் தலைமைத் தன்மை பற்றியப் புலன் காட்சியை ஆராய்ந்த இந்தியர்களில் சின்ஹா என்பவரும் குமார் (1965), கனுங்கோ (1965) என்பவர்களும் குறிப்பிடத் தக்கவர்கள். கடைசியாகப் பிற சமூகச் செயல் போக்குகள் பற்றியப் புலன் காட்சியைப்பற்றி ஆய்வு நடத்திய இந்தியர்கள் ஆஸ்தனு (1959), நடராஜ் (1966), சஹானி (1967), சிங், சிங் (1967), சென், கெயிக்வாட், வர்மா (1967) ஆகியோராவர்.

நமது புலன் காட்சிப் பெரும்பாலும் நமது மன நிலையையும், சூழ் நிலைச் சந்தர்ப்பத்தையும் பொறுத்து அமைகிறது. 'மிரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்று நம்மவர்கள் கூறுவர். 'வெளிப் பேயை விட மனப் பேய்க்கே கிலி அதிகம்', என்பதும் ஒரு பழமொழி. இங்ஙனம் ஒருவன் தன்னுள் தானே பயந்துகொண்டிருக்கும்போது, தனக்கு எதிரே தான் நினைத்துக் கொண்டிருப்பதையே காணுகிறான். இரவில் 'படுக்கப்போகும்

போது துப்பறியும் மர்மக் கதையைப் படித்துவிட்டுத் தூங்கக் கண்ணை மூடும் நமது நண்பர், இருட்டில் தனது அறையில் தொங்குகின்ற தனது ஆடையையே சட்டென ஓர் உருவமாகக் கண்டு, அலறி அடித்துக்கொண்டு எழுந்து விளக்கைப் போடு வதையும், பிறகு விடிய விடிய விளக்கெறிந்துகொண்டிருக்கத் தூங்குவதையும்,–ஒருசில வேலைகளில் தூங்காமலேயே படுத்திருப் பதையும் நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். மனிதன் மட்டுமின்றி விலங்குகளும்கூடப் பட்டினியால் வாடும்போது கண்ணில் படு வதையெல்லாம் உணவுப் பொருள்களாகக் கருதி அதை அடைய முயற்சிப்பதையும் நாம் கண்டுள்ளோம். இங்ஙனமே நாம் காணு கின்ற ஒவ்வொரு புலன் காட்சியும் நம் நினைவில், செயலில், உந்துதல்களால் கட்டுப்படுத்தப்படுகின்றன.

இதனைப் போன்றேதான் நமது சமூக உறவும், பழக்க வழக் கங்களும், தொடர்பும் ஒருசில உந்துதல்களால் அல்லது பழக்க வழக்கங்களால் கட்டுப்படுத்தப்படுகின்றன. நாம் சூழ்நிலைக்குத் தக்கபடி மாறுவதோடன்றி, நம் புலன் காட்சியும் மாறுபடு கின்றது. நம் வீட்டில் தந்தையார் மகிழ்ச்சியான மனோநிலையில் இருக்கும்பொழுது பிள்ளைகள் செய்கின்ற குறும்புகளை விளை யாட்டாகக் கருதி அதை ஏற்றுச் சிரிப்பார், அல்லது தன்னை இன்னும் அவர்களின் கேலிக்கு உரியப் பொருளாக மாற்றி அவர் களைச் சிரிக்கவைப்பார். ஆனால் சலிப்படைந்த மனோநிலையில் வீற்றிருக்கும்போதோ, அல்லது அன்றாட நடவடிக்கையில் ஏற் பட்ட ஏமாற்றம் அல்லது மனவேதனைக் காரணமாகத் துக்கத்தில் இருக்கும்போதோ–சிறு பிள்ளைகள் சாதாரணமாக விளையாட் டிற்கு என ஏதாவது செய்தாலும் கூடச்–சீறி விழுவார். ‘சனியன் பிடித்த பிள்ளைகள் இவைகளால்தான் நான் இத்தனைத் தொல்லைப் படுகிறேன்’–என்று கத்துவார். ஆக ஒருவரின் புலன் நோக்குச் சந்தர்ப்ப சூழ்நிலை மனப்போக்கைப் பொறுத்து மாறுபடுகின்றது

உளவியலாளர் ஒருவர் இவ் வுண்மையை நிலைநாட்ட ஒரு பரிசோதனையை நிகழ்த்தினார். பதினெட்டு வயது மிக்க மூன்று தனித்தனிக் குழுக்களை முறையே 16 மணி நேரம் 20 மணி நேரம் 24 மணி நேரம் பட்டினிக் கிடக்கவைத்தார். பிறகு அவர்களை ஒரு வெள்ளித்திரைக்கு முன்னால் அமரவைத்து, தாம் பின்னால் உள்ள ஒளிக்காட்சிக் கருவி மூலம் 12 படங்களை திரையில் காட்டப்போவ தாகக் கூறி வேண்டுமென்றே வெற்றுப் ‘பிலிம்’களை ஓட்டிக் காட்டினார். ஆனால் அக் குழுவினர்கள் உணவு சம்பந்தமான பொருள்களையும், உணவு சாப்பிடப் பயன்படும் பாத்திரங்கள், கரண்டி, தட்டுகள் போன்றவற்றையும் தாங்கள் பார்த்ததாகக் கூறினர். 16 மணி நேரங்கள் பட்டினிக்கிடந்த குழுவினர் மிகக்

குறைந்த அளவு இங்ஙனம் உணவுப் பொருள்களைக் கண்டதாகக குறிப்பிட்டபோது, 24 மணி நேரங்கள் பட்டினிக் கிடந்தவர்கள் தாம் அதிகமான எண்ணிக்கையில் இவற்றைக் கண்ணுற்ற தாகத் தங்களின் குறிப்புச் சீட்டில் குறித்துவைத்திருந்தனர்.

நமது புலன் காட்சி இருவகைப்பட்டதாக அமைகிறதென்று இரு காரணிகளைச் சமூக உளவியலாளர்கள் பிரித்துக் காட்டி யுள்ளனர். அவை (1) அமைப்புக் காரணி (Structural Factors) (2) செயல்பாட்டுக் காரணி (Functional Factors) என்பனவாகும். அமைப்புக் காரணி என்பது வெளி உலகில் பொருள்களின் வழி நமக்குக் கிட்டுகின்ற தூண்டுதல்களை உணர்த்துவதாகும். இங்கே நாம் ஒரு கயிற்றைத்தான் பாம்பாகத் தவறுகக கணித்து நோக்கமுடியுமே ஒழிய, ஓர் ஆட்டையோ, மாட்டையோ அங் ஙனம் கருதி, தவறுகப் பார்க்க இயலாது. இதனைப் போன்றே 'கானல் நீர்' தோற்றத்தைப் பளபளப்பாக இருக்கின்ற தரைப் பரப்பின்மீதே அல்லது மணற் பரப்பின்மீதோதான் பார்க்க முடியும். இங்ஙனம் நாம் தவறுக நோக்குகின்ற மாயத் தோற றங்கள் அப் பொருள்களின் அமைப்புத் தோற்றத்தைச் சார்ந்ததே நிகழுகின்றன. அந்தப் பொர்ருள்களின், அமைப்புத் தோற்றங் களே நமது புலன் காட்சியினைக் கட்டுப்படுத்துகின்றன.

இதற்கு எதிர்மாறுகச், செயல்பாட்டுக் காரணியில் நாம் காணு கின்ற தோற்றம், நமது தேவைகள் மன உந்துதல்கள், கடந்த கால அனுபவங்கள், நினைவுகள் போன்ற உள் உலகக் காரணி களைப் பொறுத்து அமைகின்றன. சாதாரண ஒரு மனிதன் சென்னை ஆயுள் பாதுகாப்புக் கட்டடத்தைக் கவனிப்பதற்கும், வேலைப்பாடு தெரிந்த கட்டட நிபுணர் ஒருவர் அதனைக் கண்டு களித்து வியப்பதற்கும் இடையே நிறைய வேறுபாடுகள் இருக் கின்றன. இங்கே செயல்பாட்டுக் காரணிகளை ஒருவரின் புலன் காட்சிகளைக் கட்டுப்படுத்துகின்றன.

சமூகக்காரணிகள் நமது புலன் காட்சியினைப் பாதிக்கின்றன. சமூகம் எங்தெந்தச் செயல்களை அங்கீகரிக்கின்றதோ, அவற் றையே நாம் காண; கண்டாலும் தெரிந்து கொள்ள-முயற்சிக் கின்றேம். சமூகத்தின் கண்களுக்குப் புறம்பான செயல்களை நாம் பார்க்க விரும்புவதில்லை என்பதோடு, பார்க்க நேரிட்டாலும் பார்க்காதவர்கள் போல் நடந்து கொள்ளவும் கட்டுப் படுத்தப் படுகின்றேம். செரீப் (Sherif), என்பார் தனது சோதனையின் வழி ஒரு மனிதன் தனித்து இருப்பதைக் காட்டிலும் பிறரோடு சார்ந்து ஒரு குழுவில் இருக்கின்றபோதே, பொது மக்களின் கருத்தினுல் பாதிக்கப்படுகின்ருன் என்றும், அத்தகைய பாதிப்பு,– சமயத்தில்

அவனுக்கு நன்மை பயப்பதாகவும், மற்ருெரு சூழ்நிலையில் அதுவே ஆபத்தாக முடிவதாகவும் கண்டறிந்தார். ஓர் இருட்டறையில் ஒரு குழுவினரை உள்ளே புகவிட்டு அவர்களின் எதிரே தோன்று கின்ற ஒளிக்கதிர்கள் ஓடுகின்ற வேகத்தைக் கணிக்குமாறு அவர் களைக் கேட்டுக் கொண்டார். ஒளிக்கதிர் வீச்சில் உண்மையில் எந்தவித மாற்றமும் இல்லாதபோது பிறர் அங்ஙனம் ஒளி மாற் றத்தைக் கண்டதாகக் குறிப்பிடத் தொடங்க, பிறரும் தாமும் அங்ஙனமே கண்டதாகக் குறிப்பிட்டனர். இங்ஙனம் சமூகக் குழுவும் ஒருசில வேளைகளில் தவருன நோக்கிற்கு ஒரு தனியவனை ஆட்படுத்த வல்லனவாக அமைகின்றன. இதனைப் போன்றே ஒருவர் மேடையில் ஏறிப் பேசுகின்ற பேச்சு ஒருசிலருக்குக் கேலி யாகப் படும்போது, வேறு சிலருக்கு அதுவே கருத்துச் செறிவு மிக்கதாகவும், உயர்ந்த பேச்சாகவும் தோன்றுகின்றது.

புலன் காட்சியின் விதிகள்

கெஸ்டால்ட் (Gestalt) உளவியலாளர்கள் புலன் காட்சியின் அமைப்புத்தன்மைகளைப் பல்வேறு சோதனைகளின் வழியாக ஆராய்ந்து கண்டுள்ளனர். இவ் வகையில் கீழ்க்கண்ட விதிகளை நாம் புலன் நோக்கின் விதிகள் எனக் கொள்ளலாம்.

(1) புலன் நோக்கின் மாற்றம்

புலன் காட்சிக் கூர்ந்த கவனிப்பில் நிகழுகின்றது. நாம் ஒரு பொருளைக் காணும்போது அதன் ஒரு பகுதியைக் கண்ணுற்றுப் பிறகே மற்ருெரு பகுதியைக் கவனிக்கத் தொடங்குகிறேம். இங்கே ஒரு புள்ளியிலிருந்த நமது புலன் காட்சிப் பார்வை மறு புள்ளிக்கு மாறுகிறது.

(2) புலன் காட்சி, பிரதி உணர்வுகளை ஒருங்கே இணைக்கின்ற அல்லது குழுமம் படுத்துகின்ற தன்மையது

நாம் எண்ணற்ற தூண்டுதல்களை ஒருங்கே கவனித்து அவற் றிற்கு மொத்தமாக ஒரு பிரதிவினையை ஏற்படுத்துகின்றேம். நாம் ஒரு நண்பனின் முகத்தைக் கண்ணுறும்போது அம் முகத்தில் உள்ள கண், காது, மூக்கு போன்ற பல்வேறு உறுப்புகளைத் தனித்தனியே கவனித்துப் பிறகே மொத்தமாக அவற்றை இணைப்பதின் மூலம் அந்த நண்பனின் முக அடையாளத்தைப் பெறுகின்றேம

(3) புலன் காட்சி என்பது ஒரு தனித்த பிரதிவினை

நாம் எண்ணற்ற புலன் தூண்டுதல்களால் தூண்டப் படினும், அவற்றில் தேவையானவற்றைத் தனிமைப் படுத் தியே அவற்றிற்கு உரிய பொருளைப் புலன் காட்சியின் வழி

அறிகின்றோம். தேவையற்ற புலன் தூண்டுதல்கள் நம்மால் புறக்கணிக்கப்பட்டு ஒதுக்கிவிடப்படுகின்றன. எண்ணற்ற பொருள்கள் நிறைந்த ஒரு மளிகைக் கடைக்குள் நாம் பிரவேசிக்கின்றபோது நம் பார்வை நம்மையும் அறியாமல் மற்ற எண்ணற்ற பொருள்களினின்று விலகிக் குறிப்பிட்ட நமக்குத் தேவையான ஒரு பொருளின்மேல் நிலைத்து நிற்பதை நாம் கண்ணுறுகின்றோம். ஆகப் புலன் காட்சி என்பது தேர்ந்தெடுத்த பிரதிவினைகளால் நிகழ்வது என்பது புலப்படும்.

சமூக இடைவினை புலன் காட்சியாலே தொடங்குகிறது என்றும், புலன் காட்சி விதிகள் சமூக இடைவினையைப் பாதிக்கிறது என்றும், எல்லாப் புலன் காட்சிகளுமே கீழ்க்கண்ட மூன்று காரணிகளிடையே நிகழும் இடைவினையைப் பொறுத்ததாகும் என்றும் குப்புசாமி (1940) கூறுகிறார். மூன்று காரணிகளாவன: (1) உள் தூண்டுதல், (2) தூண்டுதல் அடங்கிய வெளியின் (Field) விசைகள் (forces), (3) உடல் வயவிசைகள். எடுத்துக்காட்டாக, உள் தூண்டுதல் தலைப்பின் சமூக ஊக்கி சார்ந்த சிக்கல்களை (Social motivational Problems) மிகவும் முக்கியமானவை எனக் கூறலாம். இது சம்பந்தமாக ஆய்வு நடத்தியவர்களில் டி. சின்ஹாவைக் (1969) குறிப்பிடலாம்.

**(4) தகுதியான் பின்னணியுடன் இருக்கின்ற பொருள்கள் நம்மை எளிதில் கவர்கின்றன**

அவை, பின்னணியில்லாப் பொருள்களைக் காட்டிலும் மிக விரைவில் நம்மால் கவனிக்கப்படுகின்றன. வெள்ளை நிறப் பின்னணியில் கருப்பு நிறப் பொருள்களும், அல்லது சிவப்பு நிறப் பின்னணியில் கருப்பு நிறப் பொருள்களும் இன்னும் இவை போன்ற எதிர் எதிரான நிற வரிசையில் அமைகின்ற பொருள்களும் நம்மால் மிக எளிதில் கவனிக்கப்படுகின்றன. ஆகப் புலன் காட்சி என்பது ஒரு பொருள் அமைந்திருக்கும் பின்னணிச் சூழ்நிலையின் சிறப்புத் தன்மையில் அமைவதாகும்.

**(5) புலன் காட்சியின் போது இடைவெளிகள் பூர்த்தி செய்யப்படு படுகின்றன**

நாம் நம் பார்வையின்போது நம் கண்ணில் படுகின்ற ஒருசில புலன் தூண்டுதல்களைக் (Stimuli) கவனித்து அதனைக்கொண்டே நாம் கவனிக்கத் தவறிய இடைவெளிகளையும் பூர்த்தி செய்கின்றோம். தூரத்தில் உள்ள ஒரு பொருளைக் கண்ணுறும்போது அதன் ஒருசில வெளித் தோற்றத்தைக் கவனித்தே அப் பொருள் என்ன பொருள் என்று கூறிவிடுகின்றோம். நம் நண்பன் ஒரு கூட்டத்தின் இடையில் நின்றிருந்தாலும் அவனை ஒருசில சாயல்

களை மட்டுமே கவனித்து அவனை இனம் கண்டுகொள்கிறோம். நாம் ஒரு புத்தகத்தையோ, அல்லது பத்திரிகையையோ வாசிக்கும் போதும், இங்ஙனமே முதல் எழுத்தையும் கடைசி எழுத்தையும் பார்த்துவிட்டு மீதியை நம் நினைவிலேயே பூர்த்தி செய்துகொண்டு வேகமாக அடுத்த வரிக்குத் தாண்டிப் படிக்கின்றோம். சிறு பிள்ளைகள் முதல் வகுப்பில் படிப்பதுபோன்று நாம் ஒரு வார்த்தையின் எல்லா எழுத்துக்களையும் தனித்து நிறுத்தி வாசித்துப் பிறகு அவ் வார்த்தையைத் தெரிந்துகொள்வதில்லை. மாறாக, மிக வேகமாக அவ் வார்த்தைகளைத் தொட்டுவிட்டுச் சென்று அதன் அர்த்தத்தை உணர்ந்து கொள்கின்றோம்.

(6) குறையும் அடையாள விதி (Laws of reduced cues)

இவ் விதியின்படி நாம் ஒரு பொருளை எண்ணற்ற அடையாளக் குறியீடுகளைக் கொண்டே கணிக்கின்றோம். ஆனால் ஒரு பார்வைக்கும் அடுத்த பார்வைக்கும் இடையே இக் குறியீடுகளின் எண்ணிக்கை குறைகின்றது. ஏழெட்டு அடையாளங்களைக் கொண்டு ஒரு பொருளை முதல் பார்வையில் கவனித்த நாம் இரண்டாவது பார்வையில் அதன் முக்கியமான ஐந்தாறு அடையாளங்களை மட்டுமே கவனித்து அப் பொருளை அடையாளம் கண்டுகொள்கின்றோம். இறுதியில் அதன் ஓரிரு அடையாளங்களைக் கொண்டே நாம் அப் பொருளைக் கண்டுகொள்கின்றோம். இவ் விதியை நாம் அன்றாட வாழ்க்கையில் ஒவ்வொரு நிமிடமும் பரிட்சை செய்து பார்க்கின்றோம். நமக்கு முன்பின் தெரியாத ஒருவர் முதன் முதலாக நண்பராக அறிமுகப்படுத்திக்கொள்ளும் போது, அவரின் எண்ணற்ற அங்க அசைவுகளை, உடல் அமைப்புகளை அடையாளங்களை நாம் கவனிக்கிறோம். இரண்டாவது முறை நாம் அவரைப் பார்க்கும்போது, முதல் தடவை அவரைக் கண்டுகொள்ள தேவைப்பட்ட அவ்வளவு அத்தனை அடையாளங்களும் நமக்குத் தேவைப்படுவதில்லை. மூன்றாவது முறையோ இவை இன்னும் குறைவடைகின்றன. அதற்கடுத்த முறைகளில் அவர் குரல் ஒன்றினை மட்டும் வைத்தோ, காலடிஓசை, நடை, போன்றவற்றில் ஏதேனும் ஓர் அடையாளத்தைக்கொண்டோ நாம் அவரை அறிந்துகொள்வது இயலுகின்றது.

**புலன் காட்சிப் பிரதிவினைகளைப் பாதிக்கும் அடிப்படைத் தோற்ற முறைகள்**

சமூக உளவியல் வல்லுநர்களான சீகார்டும், பேக்மேனும் (Secord and Backman), கீழ்க்கண்ட ஐந்து அடிப்படைத் தோற்ற முறைகளைப் புலன் காட்சியின் பிரதி வினைகளைப் பாதிப்பனவாக எடுத்துக் கூறுகின்றனர்.

(1) ஒரு குறிப்பிட்ட கால நிலையில் ஒருவர் தனக்குக் கிட்டு கின்ற எண்ணற்ற புலன் தூண்டுதல்களின் ஒரு சிலவற்றை மட்டுமே தனித்துத் தேர்ந்தெடுத்து அவற்றிற்கே பிரதிவினை புரிகின்றார்.

(2) முதல் புலன் காட்சியின் அநுபவங்கள் இரண்டாவதாக நிகழும் அப் பொருளைப் பற்றிப் புலன் காட்சிக்குப் பெரிதும் உதவுகின்றன. இங்கே முன்னதைவிடக் குறைவான நேரமும் திறனும் செலவிடப்படுகின்றன.

(3) பின்னால் நிகழும் புலன் காட்சிகள் அதற்குமுன் நிகழ்ந்த அப்பொருளின் புலன் காட்சியால் விளைந்த விருப்பு வெறுப்பு களால் பாதிக்கப்படுகின்றன. நாம் முதல் புலன் காட்சியின் விளைவு மகிழ்ச்சிகரமாக இருப்பின் இரண்டாவது முறை அதே பொருளை நோக்கும்போது விரும்பி ஏற்றுப் பார்க்கின்றோம். மாறாக அது வெறுப்பூட்டும் தன்மை உடையதாக இருப்பின் அப் பொருளின் சாயல் தென்பட்ட மறுவினாடியே அதனைப் பார்க்க மறுத்து ஒதுங்குகின்றோம்.

(4) ஒருபொருளின் புலன் காட்சியானது அந்தச் சூழ்நிலையில் அப்போது நம்மிடம் ஏற்பட்டுள்ள மன உந்துதல்கள், ஊக்கிகள் போன்றவற்றால் பாதிக்கப்படுகின்றன. பசி, களைப்பு, சோர்வு, ஆவல், எதிர்ச் சார்புகள் போன்ற எண்ணற்ற காரணிகள் நாம் ஒரு பொருளைப்பார்த்துத் தெரிந்து கொள்வதில் வினையாற்று கின்றன.

(5) ஒரு தனி மனிதனின் புலன் காட்சியினை விஞ்ஞானிகள் நேரடியாகக் கண்டு பகுத்தறிய இயலாது. ஆக அவர் மறை முகமாகவே அவற்றை யூகித்து அவறைப்பற்றி முடிவெடுக் கின்றனர்.

### சமூக இடை வினைகள்

சமூக இடை வினைகள் பிற தனியவர்களின் அல்லது குழு வினரின் நடவடிக்கைகளை, அவற்றின் அடையாளங்களை அவை உணர்த்தும் பொருள்களை ஒருவன் புலன் காட்சியின் வழி கூர்ந்து கவனித்துத் தெரிந்து கொள்ளும்போதுதான் நிகழுகின் றன. ஆகவே புலன் காட்சியில் பிரச்சினைகள் அவை பற்றிய அறிவு சமூக இடைவினைகளுக்கு அடிப்படைகளாய் அமை கின்றன. ரோர்சாக் என்பவரும், முர்ரே என்பவரும் (Rorschach and Murry) சமூகப் புலன் காட்சிதான் ஒரு மனிதனின் ஆளு மைத் தன்மையை (Personality) நிர்ணயிக்கின்றது என்றும் புலன் காட்சி அறிவால், முதிர்ச்சியும், தேர்ச்சியும் பெற்றுள்ளவன்

சிறந்த ஆளுமைத் தன்மையைப் பெற்றிருப்பான் என்றும் கூறு கின்றனர்.

நம்மைச் சார்ந்துள்ள சமூகம் எண்ணற்ற மனிதர்களையும், பழக்க வழக்கங்களையும், பண்பாட்டுக் கலாசாரக் கோலங்கள் நாகரிக வளர்ச்சி போன்றவற்றில் மாற்றங்கள் நிரம்பிய குழு வினரைக் கொண்டதாய் இருக்கின்றது. இத்தகைய ஒரு குழப்ப மான கலப்படச் சமூகத்தில் நாம் ஒரு மனிதரை மற்றவரிடமிருந்து, ஒரு குழுவினரை மற்றொரு குழுவினிடமிருந்தும் பிரித்து பகுத்துத் தெரிந்துகொள்ள நாம் நம்மை அறியாமலே ஒருசில வகுப்புவாதப் பகுப்புகளையும், அடையாளப் பண்புகளையும் கையாளுகின்றோம். ஒரு மனிதரைப் பார்க்கின்றபொழுது, பார்த்த மாத்திரத்தில் அவரில் எண்ணற்ற பண்புகளை கண்டு இவர் இந்த இனத்தவர், இந்தமதத்தவர், குறிப்பிட்ட இந்தவகுப்பினைச் சேர்ந்தவர், இத்தகைய தொழிலைச்செய்பவர், இந்த இந்தக் குணாதிசயங்களை, நடைமுறைப் பண்புகளைக் கொண்டவர் என்றெல்லாம் நாம் எளிதில் கண்டு உணர்ந்து கொள்ளுகின்றோம். நாம் இத்தகைய நம்முடன் பழகும் ஒரு நண்பரைக் கூட இங்ஙனமே ஒரு குழுவாழ் மக்களின் பிரதிநிதியாக ஒரு குறிப்பிட்ட கலாசார இனத்தின் உறுப்பினராக இனம் கண்டு தெரிந்துகொள்ளு கின்றோம்.

மெக்லியடு (Maclead) என்பார் இத்தகைய சமூகப் புலன் காட்சிகளை இரண்டு பிரிவாகப் பிரிக்கின்றார். சமூகப் புலன் காட்சி (Perception of the Social) எனும் முதல் பகுப்பில் எங்ஙனம் மக்கள் பிற மக்களைப் பார்த்துத் தெரிந்துகொள்ளுகின்றனர் என்றும், புலன் காட்சியின் சமூகக் காரணிகள் (Social Factors in Perception) எனும் இரண்டாவது பகுப்பில் சமூகக் காரணிகள் எத்தகைய அளவிற்கு ஒரு புலன் காட்சியில் பின் விளைவுகளை ஏற்படுத்துகின்றன என்பது பற்றியும் விளக்குகின்றார்.

புலன் காட்சியில் சமூகக் காரணிகள் (Social Factors in Perception

புலன் காட்சியில் சமூகக் காரணிகளின் பங்கினை நிர்ணயிக்க நடத்தப்பட்ட பரிசோதனைகள் சிலவற்றைக் காண்போம்.

நமது மனோநிலையும் பொருளைப் பற்றிய மதிப்பீடும், ஒரு பொருளின் புலன் காட்சியை எங்ஙனம் பாதிக்கின்றன என்றும் ஒரு பொருளைப் பற்றி நாம் முன்னதாகவே அறிந்துள்ளும் செய் திகள் அதன் புலன் காட்சியினை எவ்விதம் பாதிக்கின்றன என் றும், ஆக இவ்விருவகைக் கேள்விகளுக்குப் பதில் அளிப்பனவாய் அமைந்து உள்ளன நாம் ஒரு பொருளைப் பற்றி என்ன தெரிந்து

கொண்டிருக்கிறோம் என்பது நாம் அதைப் பார்த்த விதத்தி லிருந்தும், கேட்ட விதத்திலிருந்தும் முற்றிலும் மாறுபட்டதாகும். எல்லோரும் அப் பொருளை ஒரு வகையாகத்தான் பார்க்கிறோம், கேட்கிறோம். எனினும், அப்பொருளைப்பற்றிய அறிவு ஒவ்வொரு வரிடமும் மாறுபட்டிருக்கலாம். ஆக ஒருவர் ஒரு பொருளைப் பற்றி அறிந்துகொள்வது அவரது மரபுமுறை, பழக்க வழக்கக் கலாசாரப் பகுப்புகள், இனம், மொழி, நாகரிகம் போன்றவற்றைப் பொறுத்தே அமைகின்றன எனலாம்.

## இந்திய சமூகத்தில் மக்கள் பகுப்பு

பிளேட்டோ என்பார் தமது குடியரசு எனும் நூலில் நாட்டு மக்களை மூன்று வகையினராய்ப் பிரிக்கின்றார். நாட்டை ஆளும் தத்துவ அறிஞர்கள், போர்வீரர்கள், பிறமக்கள் என மூன்று பிரி வினரையும், அவர்களின் கல்வித்தரத்தை அடிப்படையாகக் கொண்டு அவர்களின் வேலையைப் பாகுபாடு செய்தார். இந்தியா விலும் பண்டைக்காலத்தில் வேலைப்பகுப்பின் அடிப்படையில் தான் அந்தணர் க்ஷத்திரியர், (போர்வீரர்கள்) வைசியர் (வியாபா ரத் தொழில் வல்லுநர்கள்) சூத்திரர் (பணிவிடை செய்யும் ஏவ லாட்கள்) என்று நான்குவிதச் சாதிப் பகுப்புகள் தோன்றினர்கள் என்று வேதங்களும், இதிகாசப் புராணங்களும் கூறுகின்றன. அந்தணர்கள் சமூகத்தின் கல்வித்துறை சம்பந்தமான பொறுப்பு களை ஏற்றுக் கவனித்தபோது, க்ஷத்திரியர் நாட்டைக் காக்கின்ற பொறுப்பினை ஏற்றிருந்தனர். வியாபாரத் தொழில் வல்லுனர்கள் அச் சமூகத்தின் பொருளாதார வளர்ச்சியைப் பெருக்குவதிலும், விளைப் பொருள்களைச் சமூக மக்களுக்குப் பகிர்ந்து அளித்து வறுமையை ஓட்டுவதிலும் ஈடுபட்டிருந்தனர். நான்காவது பிரிவினரோ முதல் மூன்று பிரிவினர்க்கும் குற்றவேல் பணி விடை செய்து வாழ்ந்து வந்தனர். இப் பகுப்பின் மூலம் சமூகத் தின் பல்வேறு தொழில்களும், தேவைகளும் தடையின்றி நிறை வேற்றப்பட்டு வந்தன. இத் தொழில் முறை பிற்காலத்தில் சாதிப் பகுப்பாக மாறுகின்றபோது ஒருசிலர் மற்றவர்களைத் தாழ்ந்தோர் எனக் கருதிப் புறக்கணிக்கத் தலைப்பட்டனர்.

இப்பொழுது நாம் சமூகப் புலன் காட்சிக்கு வருவோம். நம் கண்ணில் எதிர்ப்படுகின்ற மக்கள், எத்தகையவராகத் தங்களை மாற்றிக்கொண்டிருந்தாலும், அவர்களைப் பார்த்த மாத்திரத்தில் அவர்களின் மதத்தை, இனத்தை, சாதிப் பகுப்பை, அவற்றுள் அடங்கியுள்ள எண்ணற்ற சிறு சாதிப் பிரிவுகளை, அற்றிற்கே உரித்தான பேச்சு வழக்குகள், நடைமுறைகள், பழக்க வழக் கங்கள், உடை, உணவு, கலாசார மாறுபாடுகள் போன்ற

அனைத்தையும் நாம் ஒருசில நிமிடங்களில் அறிந்துகொள்கின்றோம். இவ்வறிவு நமக்கு இன மத வெறுப்பு உணர்ச்சிகளை உணர்த்தாமல், அவர்களின் இயல்பான அடிப்படைக் குணங்களை உணர்த்துமேயானால் நம்மால் பிறரோடு சிறந்த முறையில் தொடர்புகொண்டு சிறந்த சமூகத் தொடர்பினை வளர்த்துக் கொள்ள இயலும்.

சமூகப்படுத்தல் என்பது சமூகப்படுத்துகின்ற தனிமனிதனின் முழு அறிவினையும் அச் சமூகத்தின் பல்வேறு வகையான அடிப்படைக் குணங்களையும், அறிந்துகொண்டாலன்றி நடக்காது. எனவே, ஒரு மனிதன் பிறரை எங்ஙனம் பார்த்துப் புரிந்து, பகுத்துத் தெரிந்து, பின்னர் அவற்றிற்கேற்பத் தன்னைச் சரிசெய்து பழகுகிறான் என்னும் அறிவு நமக்கு மிகவும் வேண்டற்பாலதாகும். இதனைப்பற்றித்தான் சமூக உளவியலாளர்கள் சமூகப் புலன் காட்சி என்னும் அதிகாரத்தில் விளக்குகின்றனர்.

சமூக உளவியல் புலன் காட்சியைப் பற்றிப் படிப்பது நமக்கு மிகவும் இன்றியமையாததாகின்றது. புலன் காட்சி எண்ணற்ற பின்னணிக் காரணிகளைக் கொண்டு அமைகின்றது என்பதோடு எண்ணற்ற பின்னணிக் காரணிகளுக்கு ஏற்ப அவை மாறுபடுகின்றது என்பதும் நாம் அறிந்துகொள்ளவேண்டிய முக்கியமான உண்மையாகும். ஒரு மனிதனின் நடவடிக்கைகளை அடிக்கடி மாறுகின்ற அவனின் செயல்களை, மனப்போக்குகளை அறிந்து கொள்ள, அவன் போக்கு ஏன், எதனால் எப்படி மாறுபாடு அடைகின்றது என்பதை அறிந்துகொள்ளுதல் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். நாம் சமூக உளவியலில் சமூக மக்களின் மனப் போக்குகளை எங்ஙனம் மாற்ற இயலும் எனச் சோதிக்க முயலுகின்றோம். மனப் போக்குகளை மாற்றுதல் என்பது புலன் காட்சிகளை மாற்றுவதாகும். ஒருவன் ஒரு சூழ்நிலையில் ஒரு பொருளை எவ்வாறு பார்க்கிறான் என்பதைக் கொண்டுதான் அவனது மனப் போக்கையும் நாம் கணித்து அதனை மாற்ற முடியும். இருளில் தன் அறையில் தொங்குகின்ற ஆடையினை ஏன் ஒருவன் கண்டு மிரளுகிறான் என்பதை அறிந்த பின்னரே, அவனது மிரண்ட மனப் போக்கினை மாற்றுதல் இயலும். இதுபோன்றே ஒருவன் ஒருசில செய்திகளில் ஏன் அப்படிக் கண்டிப்பாக நடந்து கொள்கிறான் என்பதை உணர்ந்தால்தான் அவனின் அத்தகைய மனப் போக்கினை மாற்றலாம்.

சமூகத்தில் ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு சூழ்நிலை சந்தர்ப்பங்களுக்கேற்ப நடத்தையை மனப் போக்கை மாற்றிக் கொள்ள நமக்குச் சமூகப் புலன் காட்சி (**Social perception**) அறிவு

மிகவும் இன்றியமையாததாகும். இந்த அறிவைப் பெற்றிராத மனிதன் எப்போது, எதை, எங்கே, எந்தச் சூழ்நிலையில் செய்வதென்று தெரியாது திணறுவான். அவன் துக்கப்பட்டுக்கொண்டிருப்பவனிடம் போய்க் கேளிக்கை அல்லது கேலி பேசுவான். நகைச்சுவை மனப் போக்கு இருப்பவனிடம் போய் உலகே மாயம் என்று பற்றற்றவன்போல் பேசுவான். அதைக் கேட்பவனும் அவன்மீது சீறி விழுவான். இங்ஙனம் அவன் பிறருக்கேற்பத் தன்னை, தன் நடவடிக்கைகளை மாற்றிக்கொண்டு தெரியாது தவிப்பான். தனியவர்களிடமே இப்படி ஒன்றி வாழமுடியாத அவனால், இத்தகைய தனியவர்கள் பலரைக் கொண்ட ஒரு சமூகத்தினிடையே ஒன்றி வாழ்தல் என்பது முடியாத செயலாகும்.

## சமூகக் கற்றல் (Social Learning)

கற்றல் என்பது ஒரு மனிதனின் அநுபவத்தில் நிலையாக ஏற்பட்டு விடுகின்ற நடத்தை மாற்றங்களைக் குறிப்பதாகச் சமூக உளவியலாளர்கள் கருதுகின்றனர். கற்றல் என்பது இங்ஙனம் ஏற்படும் விளைவை மட்டுமின்றி அவ்விளைவினை ஏற்படுத்துகின்ற முறையினையும் குறிக்கின்றது. உடல் அவயங்களின் சிதைவில் நோயினால் அல்லது வியாதியினால் ஏற்பட்டுவிடுகின்ற உடல் மாறுதல்களோடு கூடிய நடத்தை மாறுதல்கள் அல்லது பருவ வளர்ச்சி பெற்றதும் ஏற்பட்டுவிடுகின்ற மன மாறுதல்கள் சமூகக் கற்றல் என்ற தலைப்பின் கீழ் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. எந்த ஒரு நடத்தை மாற்றம் தேவை என்று சமூகம் தீர்மாணித்து அதை விளைவிக்கும் வகையில் ஒரு தனியவனை அல்லது சமூகத்தினை ஒருசில பயிற்சிகளுக்கு உட்படுத்தும் முறையும் அல்லது அதன் விளைவுமே கற்றல் கல்வி எனப் பெயர் பெறுகின்றன.

கற்றல் என்பது மனிதன் தன் கவனத்தை ஒரு முகப்படுத்துவதில் விளைவது. தனியவன் எதைக் கற்றாலும் அதில் அவன் தன் கவனத்தை ஊன்றிக் கவனிக்கும்போதே சிறக்கின்றான். தனிமனிதனின் தனிப்பட்ட கல்வியும் சரி, சமூகக் கல்வியும் சரி, அவன் அதில் மனம் லயித்துக் கவனிக்கும்போதே தேறுகின்றான். இதனை விளக்க பேஜ் (Page) என்பார் ஒரு சோதனையைக் கையாண்டார். தேர்ந்தெடுத்த மாணவர்களை மூன்று குழுவினராகப் பிரித்து ஒரே வகைத்தான ஒரு கற்றல் சோதனையில் ஈடுபடுத்தினார். முதல் குழுவினர்கள் கல்வி கற்பதைக் கண்காணித்த மேற்பார்வையாளர் அவர்களின் தவறுகளுக்குக் கடுமையாகத் தண்டிக்கும்படியும், சிறு தவறுகளையும் பெரிதாக மதிக்கும்படியும் கேட்டுக் கொள்ளப்பட்டனர். இரண்டாவது குழுவின் கண்

காணிப்பாளர் தேவையான யோசனைகளையும், அறிவுரைகளையும் மட்டுமே விளக்க வேண்டுமென நிபந்தனை விதிக்கப்பட்டனர் மூன்றாவது குழுவின் கண்காணிப்பாளர்கள் எந்தவித விளக்கமும் விரிவுரையும் தராது மேற்பார்வை இடும்படி கோரப்பட்டனர். மூன்று குழுவினரின் கற்ற தகுதிகளைப் பின்னர் ஆராய்ந்தபோது மிகவும் வன்மையாகக் கண்டிக்கப் பெற்ற, சிறு தவறையும் பெரிதாக மதித்த கண்காணிப்பாளர் இருந்த முதல் குழுவினர் சிறப்பாக அந்தச் சோதனைக் கல்வியைக் கற்றுத் தேர்ந்திருந்தனர் என்பதையும், இரண்டாவது குழுவினர் கண்காணிப்பாளர்களால் ஓரளவு நன்மை எய்தியிருந்தனர் என்பதையும், மூன்றாவது குழுவினர் அங்ஙனம் சிறப்புறத் தேறவில்லை என்பதையும் கண்டார். மூன்று குழுக்களிலுமே மேற்பார்வையாளரின் கருத்துக்குச் செவி சாய்த்து அவை தேவையென எடுத்துக்கொண்ட மாணவர்கள் மற்றவர்களைவிடச் சிறப்பான தேர்ச்சி எண்களைப் பெற்றிருந்தனர்.

இதிலிருந்து தனியவனின் கவனத்தை ஒரு முகப்படுத்துகின்ற முயற்சிகளின் மூலமே ஒருவன் சிறப்பாகக் கற்றுத் தேறுகின்றான் என்று உணரலாம். இந்நிலை கல்விக் கழகங்களில் அதுவும் ஆசிரியர்களின் மேற்பார்வையில்தான் நிகழும் என்று நாம் எடுத்துக்கொள்ளலாம். இருப்பினும் மற்றத் துறைகளிலும் கற்றல் கவனத்தை ஒருவழிப்படுத்துதல் மூலமே நிகழ்கிறது என்பதை விளக்க ஆலன்-டி-கால்வின் (Allen-D-Calvin) என்பார் ஒருசில சோதனைகளைக் கையாண்டார். தனது உளவியல் வகுப்பு மாணவர்கள் சிலரை ஒரு பெண்கள் கல்லூரிக்கு அனுப்பி மதிய வேளையில் உணவு அறையில் கூடுகின்ற நீலநிற உடையணிந்த பெண்களைப் பற்றிப் புகழ்ந்து பேசும்படி கேட்டுக்கொண்டார். சோதனைக்கு முன்னர் 25% மாணவிகளே நீல நிற உடையுடன் காணப்பட்டனர். சோதனை நிகழ்ந்து ஐந்து நாட்கள் முடிவில் அவர்களின் எண்ணிக்கை 37% ஆக உயர்ந்தது. அந்தத் தனிக் கவனிப்பும் போற்றுதல்களும் திடீரென நிறுத்தப்பட்டதும் நீலநிற உடையை உடுத்துவோர் எண்ணிக்கை 27% ஆக குறைந்தது. இதனைப்போன்றே சிவப்புநிற உடை உடுத்துகின்ற பெண்களைப் போற்றுவதிலும் சோதனை நிகழ்த்தினர். சோதனைக்கு முன் 12% ஆக இருந்த எண்ணிக்கை சோதனை முடிவில் 22% ஆக உயர்ந்தது. சோதனை கைவிடப்பட்டதும் 18% ஆகக் குறைந்ததை அவர் கண்டார். இதனைப் போன்றே ஸ்காட் (W.A. Scott) என்பார் பேச்சுப் போட்டி சோதனை ஒன்றை நிகழ்த்திக் குழுமியுள்ள பார்வையாளர்களின் கருத்தை அறிந்து தங்களின் பேச்சு முறையையும், பாணியையும் மாற்றிக்கொண்ட பேச்சாளர்கள்

வெற்றி பெற்றதையும் அங்ஙனம் பார்வையாளர்களின் கருத்தை உணர்ந்து தங்களை மாற்றிக் கொள்ளாதவர்கள் தோல்வி அடைந்ததையும் கண்டார். இச் சோதனைகளின் வழி மேற் பார்வையாளர்களின் சுட்டிக்காட்டுதலில் கவனத்தைச் செலுத்திய குழுவினர் சிறப்புறத் தேர்ச்சி பெற்றதையும் அவர்களின் கருத்தினைக் கவனிக்காதவர்கள் சிறப்புறத் தேராததையும் பெண்களில் போற்றப்படும் பரிசோதனைகள் நின்றவுடன் நீலநிற, சிவப்புநிற உடை உடுத்துவோரின் எண்ணிக்கைக் குறைந்ததையும்–பார்வையாளர்களின் கருத்தை உணர்ந்து தங்களை மாற்றிக் கொள்ளாத பேச்சாளர்கள் தோற்றதையும் அறிகின்றோம். எனவே, கற்றலுக்குக் கவனம் தேவை என்றும், கவனத்தை ஒருமுகப்படுத்துதலின் மூலமே கற்றல் இயலும்; எளிதாகும் என்பதையும் உணரலாம்.

### போலிப் பாவனையின் வழி சமூகக் கற்றல்

கற்றல் என்பது எண்ணற்ற வழி முறைகளில் நிகழலாம். சிறப்பாக ஒன்றினைக் கற்றுத்தர அதற்கேற்றக் கல்வி முறையினைப் பின்பற்றவேண்டியது அவசியமாகும். சிறு பிள்ளைகளை நாம் கண்டித்து, தூண்டிவிட்டு எதையும் கற்க செய்யலாம். இம்முறை முற்றிலும் பயனளிக்கக் கூடியதாக இல்லை எனினும் ஓரளவிற்கு வெற்றி தருவதாக அமைகின்றது. ஆனால் இம்முறையை முதிர்ந்த மன வளர்ச்சி அடைந்த மாணவர்களுக்கும் உபயோகித்தால் சிறந்த பயனை நல்காது.

மிருகங்களையும், பறவைகளையும், மற்றும் சில பிராணிகளையும் சோதனைச்சாலையில் ஊக்குவித்து கண்டித்து ஒருசில நடத்தைகளைத் தொடர்ந்து ஏற்கும்படி வலியுறுத்தி நாம் விரும்புகின்ற ஒன்றினைக் கற்க செய்யலாம். எனவே, மனிதனில்லாத பிற பிராணிகள் வலியுறுத்துதலின் (Reinforcement) மூலம் கற்கின்றன; கற்பது இயலுகின்றது எனக் கொள்ளலாம். ஆனால் உயர்ந்த வகை மிருகங்களும், மனிதர்களும் பின்பற்றுதலின் மூலமே எதையும் ஏற்கின்றனர். ஒருவரின் நடத்தையைக் கண்ணுற்று அவரின் நடை, உடை, பாவனைகள், பேச்சு முறைகளைப் பின்பற்றியே மற்றவர்கள் சமூக நடத்தையினைக் கற்கின்றனர். எனவே, சமூகக் கற்றலுக்குப் போலிப்பாவனையே (Imitation) ஏற்றக் கல்விமுறையாகவும், இன்றியமையாத முறையாகவும் கருதப்படுகின்றது. இருப்பினும் வலியுறுத்தல் சமூகக் கற்றலில் தனக்கென ஒரு சமூகத்தினை, பண்பாடுகளை, கலாசாரங்களை எல்லோருமே தாங்களாகவே கற்றுணர்ந்து அவற்றின் சிறப்பினை உணர்ந்து மதிக்கின்ற பிறரிடமிருந்து அவற்றைக் கண்டு

போலிப் பாவனையின் வழி பின்பற்றத் தொடங்கி விடுவதில்லை. இன்ன இன்ன மாற்றங்கள் நிகழவேண்டும் இவற்றையெல்லாம் ஒரு தனியவன் கற்கவேண்டும் எனப் பெரியோர்களும், சமூகத் தலைவர்களும் வலியுறுத்தும்போதே அவற்றின் நன்மைகளை எடுத்து விளக்கும்போதே கற்றல் நிகழ ஏதுவாகின்றது. தனி மனிதனிடம்கூடத் தானகவே சமயத்தில் தன்னை ஊக்குவித்து ஒருசில பயிற்சிகளை வலியுறுத்தி மேற்கொள்ளும்போதே கற்கின்ருன் என்பதும் சமூகக் கற்றலில் வலியுறுத்தும் முறையின் பங்கினை எடுத்து விளக்கும்.

தேசியக் குணங்கள் என்பவை இங்ஙனம் ஒரு நாட்டினர் இளமையில் தங்களின் குழந்தைகளை, வலியுறுத்தி ஒரு சிலவற்றைக் கற்க செய்வதனுலேயே நிகழ்கின்றன. தனியவன் தன்னைச் சார்ந்துள்ள பெரியவர்கள், சமூகத்தினர் போன்றவர்கள் தன்னிடமிருந்து எதிர்ப்பார்க்கின்ற நடத்தையினை உணர்ந்து அவற்றைத் தானே வலியுறுத்திக் கற்க முன்வந்து, பிறரில் அந் நடத்தைகள் சிறப்புறத் துலங்குவதினைக் கண்டு அதனைப் பின்பற்றியே ஒரு சமூகத்தின் கலாசாரப் பண்பாட்டு நாகரிகக் கோலங்களைக் கற்றுத் தேறுகின்றனர்.

### சமூகக் கற்றலின் பலன்கள்

வாழ்க்கை மதிப்புகள், சமூகம் ஏற்றுக்கொள்ளுகின்ற போற்றுகின்ற சமூக மதிப்புகள் போன்றவையே ஒருவர் கற்கின்ற கல்வியின் தரத்தையும், பொருளடக்கத்தையும் நிர்ணயிக்கின்றன. இந்த வகையில் ஒரு சமூகம் தான் எதிர்ப்பார்க்கின்ற மாற்றங்களையும், விளைவுகளையும் ஏற்படுத்தவே ஒருசில கல்வி முறைகளைப் பின்பற்றுகின்றன. ரஸ்ஸல் (Russel) என்பார் தான் எழுதிய கல்வி என்னும் புத்தகத்தில் சமூகக் கல்வியின் முக்கியத்துவத்தைப்பற்றி விளக்கி ஆராய்கின்ருர். அவரது சமூகத்தின் மதிப்புகளே தனி மனிதனின் கல்வியை நிர்ணயிக்கின்றன என்றும், தனியவன் சமூகத்தின் அத்தகைய சமூக மதிப்புகளை, வாழ்க்கை மதிப்புகளைப் பெறவே கற்கின்ருன் என்றும் கூறுகின்ருர். ஜப்பானியக் கல்வி முறையானது அரசிற்கு உண்மையுள்ள மக்களை உருவாக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளது என்றும், ஐரோப்பியக் கல்வி முறை கத்தோலிக்க மத ஆலயத்தைப் போற்றிப் பின்பற்றச்செய்யும் வகையில் உள்ளது என்றும், அமெரிக்க முறை பிரபுக்களை உருவாக்குவதில் முனைந்துள்ளது என்றும் அவர் விளக்கி இத்தகைய ஒவ்வொரு சமூகமும் தான் மதிக்கின்ற மதிப்புகளுக்கு ஏற்பவே அவற்றைப் பெறும் வகையில் கல்விமுறைகளைப் பகுத்துள்ளன என்றும் அவர் எடுத்துக் காட்டுகின்ருர்.

கற்றல் என்பதே—சமூகத்தின் மதிப்புகளை ஒரு தனியவன் அறிந்து, அவற்றைக் கற்றுணர்ந்து அதன் மூலம் தன்னைச் சமூகப்படுத்திக் கொள்ளும் முறை—என்பது பல அறிஞர்களின் கருத்தாகும். தனி மனிதனைச் சமூகப்படுத்த ஏற்றதொரு கல்வி முறை வேண்டுமென்று எல்லா அறிஞர்களும் வலியுறுத்திக் கூறியுள்ளனர். பிளேட்டோ (Plato) என்பார் தனி மனிதனுள் புதைந்துள்ள உள்ளார்ந்த திறமைகளைக் கண்டுணர்ந்து அவற்றைச் சமூகத்தின் நலனுக்கெனப் பயிற்சியளித்துத் திசை திருப்பி விடுவதே கல்வியெனக் கூறுகின்றார். டாக்டர் நன் (Dr. (Nunn) என்பார் தனி மனிதனைச் சமூக மனிதனாக உருவாக்கப் பயிற்சியளிப்பதே கல்வியென்று கருதுகின்றார். இங்ஙனம் பலரும் கல்வி என்பதே சமூகத்தினைக் கற்றல் என்ற அடிப்படையில் உருவானது எனக் கூறியுள்ளனர்.

இங்கு நாம் சமூகக் கல்வியினையும், தொழிற் கல்வியினையும் வேறுபடுத்திக்காண இயலும். பொறியியல், மருத்துவம் போன்ற தொழிற் கல்வியினையும் ஏனைய கலைக் கல்விகளையும் சமூகக் கல்விகளாகக் கருதமுடியாதெனினும், அவை சமூகம் மதிக்கின்ற வேண்டுகின்ற கட்டடக்கலை, மருத்துவக்கலை இன்னும் பல கலைகளில் அறிவினைப்பெருக்குவதால் அமைவதால் இக் கல்விகளும் சமூகத்தின் மதிப்புகளைக் கருதியே இலங்குகின்றன என நாம் கருதுதல் இயலும்.

அதிகாரச் சுருக்கம்

புலன் நோக்கு என்பது புலன் நோக்கின் அநுபவத்திற்கும் வெளி உலகில் புலன் நோக்கின் மூலம் தெரிந்து கொள்ளுகின்ற ஒரு பொருளுக்கும் இடையே இருக்கும் ஒற்றுமைகளைச் சார்புத் தன்மைகளை விளக்குவது ஆகும். ஓர் உயிரற்ற ஜடப் பொருளைப் பார்த்துத் தெரிந்துகொள்வதற்கும் ஒரு மனிதனை அங்ஙனம் நாம் பார்த்துப் புரிந்து கொள்வதற்கும் இடையே எண்ணற்ற வேறுபாடுகள் இருக்கின்றன. சமூக உளவியலாளர்கள் இதனையே சமூகப் புலன் நோக்கு என்னும் பகுதியின் கீழ் ஒரு மனிதன் தன்னைச் சார்ந்த சமூகத்தின் மனிதர்களை எங்ஙனம் பார்த்துப் புரிந்து கொள்ளுகின்றான் என்று பயிலுகின்றனர்.

நமது புலன் நோக்குப் பெரும்பாலும் நமது மன நிலையையும், சூழ்நிலைச் சந்தர்ப்பத்தையும் பொறுத்து அமைகின்றது. சமூகப புலன்நோக்கு அமைப்புக் காரணி, செயல்பாட்டுக் காரணி என்னும் இருவகைப்பட்டதாக அமைகின்றது என்று சமூக உளவியலாளர்கள் விளக்குகின்றனர். சமூகக் காரணிகள் நமது புலன் நோக்கினைப் பாதிக்கும் விதத்தினைப் புலன் நோக்கின்

விதிகள் மூலமும், புலன் நோக்கின் பிரதிவினைகளைப் பாதிக்கின்ற அடிப்படைத் தோற்ற முறைகள் மூலமும் இவர்கள் எடுத்து விளககுகின்றனர்.

நாம்சார்ந்துள்ள இந்தச் சமூகத்தில் நாம் ஒருசிலரை மற்றவர் களிடமிருந்து பிரித்து அறிந்துகொள்ள நம்மை அறியாமலேயே ஒருசில வகுப்புவாதப் பகுப்புகளை, அடையாளப் பண்புகளைக் கையாளுகின்றோம். பிளேட்டோ என்பார் தமது 'குடியரசு' நூலில் கல்வி, தொழில் அடிப்படையில் நாட்டுமக்களை மூன்று வகையாகப் பிரித்தார்.

எத்தகைய நடத்தை மாற்றம் தேவை என்று ஒரு சமூகம் கருதி அதை விளைவிக்கும் வகையில் ஒரு தனியவனை அல்லது சமூகத்தினை ஒருசில பயிற்சிகளுக்கு உட்படுத்தும் முறையையும் அல்லது அதன் விளைவுமே கற்றல்; கல்வி எனப் பெயர் பெறு கின்றன. தனி மனிதனின் தனிப்பட்ட கல்வியும் சரி, சமூகக் கல்வியும் சரி, அவன் மனம் அதில் லயித்துக் கவனிக்கும்போதே ஏற்படுகின்றது. கற்றல் என்பது போலிப் பாவனையின் மூலமும் இன்னும் பிற முறைகள் மூலமும் ஏற்படலாம்.

ஒரு சமூகம் தான் பெரிதாகப் போற்றி மதிக்கின்றவற்றையே கற்கின்றது. ரஸ்ஸல் என்பார் தனது 'கல்வி' எனும் புத்தகத் தில் சமூகக் கல்வியின் முக்கியத்துவத்தைப் பற்றி விளக்கி ஆராய்கின்றார். அவர் சமூகத்தின் மதிப்புகளே தனி மனித னின் கல்வியை நிர்ணயிக்கின்றன என்றும், தனியவன் சமூகத் தின் அத்தகைய சமூக மதிப்புகளை, வாழ்க்கை மதிப்புகளைப் பெறவே கற்கின்றான் என்றும் கூறுகின்றார்

# 12. சமூக நோக்குகளும் உந்துதல்களும்

நாம் சமூகத்தில் உள்ள பிறரோடு உடன் வாழும்போது அவர்களுக்கேற்ப நம்மை நாம் மாற்றிக்கொண்டோ அல்லது அவர்களின் வழிமுறைகளை நடத்தைகளைப் பின்பற்றிக் கற்றுக் கொண்டோ, ஒன்றுபட்டு வாழ்கின்றோம். இவ்வகைச் சமூக நடத்தைகள் எண்ணற்ற காரணிகளால் தூண்டப்படுவனவாய் எண்ணற்ற நோக்கங்களின்பால் பட்டதாய் அமைகின்றன. எனவே தனியவனைச் சமூகப்படுத்தத் தேவையான காரணிகளை யும், வழிமுறைகளையும் ஆராய்கின்ற நாம் தனியவன் எத்தகைய உந்தல்களால் (Motives) தூண்டப்பெற்று அல்லது எத்தகைய மனநோக்கில் உந்தப்பெற்றுப் பிறரோடு இணைந்து வாழ்கின்றான் என்பதையும் கண்டறிய வேண்டியவர்களாக இருக்கின்றோம்.

மனித நடத்தைகள் மரபுரிமைக் காரணிகளால் (Hereditory Factors) மன முதிர்ச்சி, அறிவு வளர்ச்சி போன்றவற்றின் விளைவு களால் அல்லது தன் அநுபவத்தின் மூலம்-பிறர் அநுபவங் களைக் கேட்டுத் தெரிந்து கொள்வதின் மூலம் பெறுகின்ற விளை பயனால் கண்டிக்கப்படுவதாய் அமைகின்றன. இம் மூன்று காரணிகளின் இயல்பினைக் கொண்டே ஒரு தனி மனிதனின் நடத்தையையும் அவன் சமூகத்தோடு இணைந்து ஏன் எதற்காக வாழ்கின்றான் என்பதனையும் நாம் தெள்ளத் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடியும்.

இவையல்லாமல் அம் மனிதனின், பிறரைப்பற்றிய மன நோக்குகள் உந்துதல்கள் இவற்றைக்கொண்டு நாம் அவனின் சமூக வாழ்க்கை இயல்பினைப்பற்றிக் கவனித்துக் கூற முடியும்!

அமெரிக்க உளவியல் வல்லுநரான ஆல்போர்ட் (Allport F.H.) என்பார் மன நோக்குகளைப் பற்றிக் கூறும்போது அவை அநுபவத்தின் மூலம் கட்டுப்படுத்தப்பட்டுத் தயார் நிலையிலிருக்கின்ற ஒரு வழித்தான தனியவனின் சமூகப் பிரதி

வினையைப் பாதிக்கின்ற அல்லது கட்டுப்படுத்துகின்ற கொள்கைகள் என்று கூறுகின்றார். தனியவன் தான் உறையும் சமூகத்தில் பிறரோடு கலந்து பழகும்போது தன் அநுபவத்தில் எண்ணற்ற விதமான மனிதர்களைக் கண்டு அவர்களின் மனோ நிலையை உணர்ந்து நடக்கக் கற்றுக்கொள்கிறான். நாளடைவில் இவ்வகைப்பட்ட மனிதரை இத்தகைய சூழ்நிலைகளில் சந்தித்தால், அவர்கள் இப்படி நடந்துகொண்டால் நலம், இப்படித்தான் நடந்து கொள்ள வேண்டுமென்று ஒருசில நடத்தைகளைத் தனக்குள்ளாகவே திட்டமிட்டுத் தயார் நிலையில் வைத்துக் கொள்ளுகின்றான். எனவேதான், அவனால் தனக்குக் கற்றுக்கொடுத்த ஆசிரியரைக் கண்ணுறும்போது பணிவாக அடக்கத்துடன் நடந்து கொள்ளவும், தனது விரோதிகளை எதிர்ப்பட்டபோது வெறுத்துப் புறக்கணித்து நடந்து கொள்ளவும், நண்பர்களைக் கண்டவுடன் மகிழ்ந்து அரவணைத்து அன்பு செலுத்தவும் முடிகின்றது. இங்கே எதிர்ப்பட்டவர்களை இனம் கண்டுகொள்ளுகின்ற மறு நிமிடத்திலேயே இப்படித்தான் நடந்துகொள்ள வேண்டும் என்று அவன் தயார் நிலையில் வைத்துள்ள மனநோக்குகள் அவனைப் பற்றிக் கொள்ளுகின்றான்.

சமூகக் கற்றல் சமூகப்படுத்துதல் இவற்றின் விளைவாகவே மன நோக்குகள் உருவாகின்றன. இம் மனநோக்குகள் ஒருவர் பேசுகின்ற முறையிலும் பிறர்பால் தொடர்புகொள்கின்ற நடத்தை முறைகளாலும் தெரிந்துகொள்ளப்படுகின்றன. நாம் நம்மிடையே தொடர்புகொள்ளும் மக்களைப் பொது உடமைவாதி (Communist) முதலாளித்துவவாதி, அரசியல் வாதி, தொழிலதிபர் என்றெல்லாம் பகுத்தே அறிந்துகொள்ளுகிறோம். இவை நமது மன நோக்குகளை உருவாக்குகின்றன. தனி மனிதனின் வாழ்க்கையும் சரி, ஒரு சமூகத்தின் வாழ்க்கையும் சரி பிறர்பால் கொள்ளுகின்ற நல்ல மன நோக்குகளின் செயல்களால்தான் முன்னேற்றம் காண்கின்றன. பள்ளியில் சேருகின்ற சிறுவன் பிறரைப்பற்றி அவன் கொண்டுள்ள நல்ல மனநோக்கின் விளைவினாலேயே பிறரோடு கலந்து பழகி நட்பினை வளர்த்துக் கொள்கின்றான். பின்னர் அவன் தொழில் துறையில் ஈடுபடும்போது அவன் அத் தொழிலைப் பற்றியுள்ள நல்ல மனப்போக்கே அதில் அவனுக்கு வெற்றியைத் தேடித் தருகிறது. அவன் தன் தொழில் சிறக்க வேண்டி அதற்கான அக்கறையையும், ஈடுபாட்டையும் வளர்த்துக் கொள்ளுகின்றான். அலுவலகத்துடன் தொடர்புடைய பிறரோடு அவன் பழகுவதிலும் சரி, வீட்டில் தன் மனைவி மக்களுடன் உறவினர்களுடன் பழகுவதிலும் சரி, அவன் அவர்களைப் பற்றி—ஏற்படுத்திக்கொண்டுள்ள மனப்போக்கே அவனது

உறவை வலிமைப் படுத்துகின்றது. ஒவ்வொரு சமூகமும் இங்ஙனமே பிற சமூகத்தைப் பற்றி ஏற்படுத்திக் கொள்ளுகின்ற நல்ல மனப்போக்கே அச் சமூகத்துடன் நல்லுறவு கொண்டு, ஒன்று பட்டு வாழ வழி செய்கின்றது. எனவேதான் உலகம் ஒன்றுபட்டு வாழச் செய்ய முயன்ற அரசியல், மதத் தலைவர்கள் மக்களின் மனப்போக்குகளை மாற்றுவதில் முதலில் ஈடுபட்டனர். எனவே நல்ல சமூகத்தையும் அஃது இயங்குகின்ற நல்ல தன்மைகளையும் பற்றி எடுத்துப் பயிலுகின்ற சமூக உளவியலாளர்கள் மனப்போக்குகளைப் பற்றியும், அவற்றின் மாற்றத்தில் விளைகின்ற பலன்களைப் பற்றியும் ஆராய்கின்றனர். மனப்போக்குகளை அளத்தலும், மனப்போக்குகளை மாற்றுதலும் அவர்கள் கையாளுகின்ற இரு முக்கியப் பிரச்சினைகள் ஆகும்

மனப்போக்குகள் என்பது ஒரு தனியவன் ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட சூழ்நிலைக் கேற்ப அல்லது தனது நடத்தைக்கேற்பத் தன்னைச் சரி செய்து கொள்வதாகும். எனவே மனப்போக்குகள், நடத்தைக்கு முன் எழுகின்ற மன உணர்வுகள், தூண்டுதல்கள், உணர்ச்சி வெளிபாடுகள் ஆகும். இந்த மனப் போக்குகள் இயற்கையிலேயே எல்லா மனிதர்க்கும் ஒரே தன்மையினதாக அமைந்து விடுவதில்லை; அல்லது இவற்றைப் பிறப்பால் நிர்ணயிக்கப்படுவதில்லை. ஒவ்வொருவரும் தத்தம் வாழ்க்கைப் போக்கில், அநுபவத்தில் பிறரின் தொடர்பில் கற்றுத் தேறுகின்ற படிப்பினைகளின் மூலம் தாங்களாகவே இவற்றைக் கற்று உருவாக்கிக் கொள்ளுகின்றனர். சில மனப்போக்குகளைத் தாய் தந்தையர், சமூகத்தில் மதிக்கப்படுகின்ற பிறர் கேள்வி வாயிலாக ஒருவருக்கு உண்டாகி இருக்கலாம். ஒரு சிலவற்றை மற்றவர்களைப் பற்றிய நூல்களைப் படிப்பதன் மூலம் ஒருவர் தானாகவே விளைவித்துக் கொண்டிருக்கலாம். தன் சொந்த அநுபவத்திலும் சிலவற்றை மனப் போக்குகளாகத் தனியவர் ஒருவர் பெற்றிருக்கலாம். ஆக இவற்றைக் கற்றுக்கொள்வதேயன்றி இயற்கையாகவே எழுந்து விடுவதில்லை.

மனப் போக்குகள் ஓரளவிற்கு இறுதி வரை மாறுதவை. இருப்பினும் அநுபவத்தின் போக்கில் அவை மாற்றப்படலாம். இவை எப்பொழுதுமே எதிர்மறையாகவோ (Negative) அல்லது நேர் மறையாகவோ (Positive) ஒரு முடிவான இலக்கு நோக்கியே இயங்குபவை. இம் மனப்போக்குகளை நாம் இதனை வெளியிடுகின்ற ஒருவரின் செய்கைகள், பாவனைகள், நடத்தைகள், பேசும் பேச்சுகள், பேச்சுமுறை போன்றவற்றின் மூலம் மறைமுகமாகவே தெரிந்து கொள்ள முடியுமே ஒழிய அவற்றை நேரடியாகத் தெரிந்து கொள்ளுதல் இயலாது.

**மனப் போக்குகளும், உந்துதல்களும்**

மனப்போக்குகள் என்பவை மன உந்துதல்களிலிருந்து மாறு பட்டவை. இரண்டும் ஒரே நேரத்தில் தனித்து இயங்கக் கூடியவை. எண்ணற்ற உந்துதல்களின் விளைவினால் ஒருவகை மனப்போக்கு ஏற்படுத்தப்படலாம். பின்னர் அம் மன உந்துதல் களின் செயலை அந்த ஒரு மனப்போக்கே செய்ய வல்லதாய் அமை கின்றது. நாம் ஒருவரை எண்ணற்ற காரணங்களுக்காக எண் ணற்ற மன உந்துதல்களின் விளைவில் வெறுக்கத் தொடங்கலாம். இந்த மன உந்துதல்கள் நம்மில் அவர்பால் ஒரு வெறுப்பான மனப் போக்கினை உருவாக்கிவிட்டு விடுகின்றன. பின்னர் அவர் நம்மெதிர்ப்படும் மறு விநாடி நமது வெறுப்பான மனப் போக்கே அவர்பால் எழுகின்ற நடத்தையினை நிர்ணயிக்கின்றது. அவரைக் கண்டவுடன் நம் மன உந்துதல்கள் அனைத்தும் செய்ய வேண்டிய அந்த வேலையை நமது வெறுப்பான மனப்போக்கே செய்கின்றதை உணருகின்றோம். ஆக மனப் போக்குகள் என்பவை ஒரு கூட்டுத் தொகுதியான மன உந்துதல்கள், தனித் தனி உணர்வுகளாய் வகைப் படுத்தப்பட்டு விருப்பு, வெறுப்பு, அன்பு போன்ற எண்ணற்ற மன வெளியீடுகளாய் உருப் பெறுவனவாகும்.

மனப் போக்குகள் மன உணர்வு சம்பந்தமானவைகளாய் ஒரு மனிதனின் நடத்தையே உணர்வுகளின் மூலம் கட்டுப்படுத்த வல்லனவாய் இருக்கையில் மன உந்துதல்கள் அந் நடத்தைக்குத் தேவையான சத்தியை, உணர்வுகளை அளிப்பனவாக அமை கின்றன. மன உந்துதல்கள் உடலைச் சார்ந்தவைகளாக (Physiological) இருககையில் மனப் போக்குகள் உளம் சார்ந்தவை களாகவே (Psychological) பெரும்பாலும் அமைகின்றன. உந்து தல்கள் பசி, தாகம், பாலுணர்வு (sex) போன்ற உடல் தேவை களின் விளைவில் அல்லது அவற்றைச் சரி செய்ய ஏற்பட்ட அவசியத்தில் தோன்றும்போது, மனப் போக்குகள் கோபம், வெறுப்பு, அன்பு, பாசம், நட்பு, போன்ற உள வாழ்க்கையின் தேவைகளின் விளைவில் அல்லது அவற்றைச் சரி செய்ய ஏற்பட்ட அவசியமானவையாய்த் தோன்றுவன. மனிதனின் உடல் தேவைகளை நிறைவேற்றுவதைப் போன்றே உளத் தேவை களையும் திருப்திப்படுத்தவேண்டும். இவ்விரு தேவைகளும் நிறைவேற்றப்படாத வரை மனிதன் தன் முழுமையை உணருவ தில்லை.

உந்துதல்கள் அடிக்கடி தோன்றி மறையககூடிய இயல்பினை உடையன, ஆனால் மனப் போக்குகள் ஒருமுறை ஏற்படுத்தப்

பட்டுவிட்டால் பெரும்பாலும் இறுதிவரை மாருது நிலைத்து இருப்பவை. தண்ணீர்க் குழாயைத் திறந்துவிட்டதும் கடகட வென்று கொட்டுகின்ற தண்ணீர்க்கு உந்துதல்களை ஒப்பிட்டுக் கூறலாம். கொட்டிய அத் தண்ணீர் அவை ஓடும்பொது ஏற் படுத்திக்கொள்ளும் வாய்க்கால்களாக மனப் போக்குகளைக் கூறலாம். நீரோட்டத்தில் நீரின் இயங்கும் சத்தியினுலேயே தோன்றிய அக் கால்வாய், பெருகி வருகின்ற மன உந்துதல் களைத் தன்னூடே ஓடச் செய்கின்றது. ஆனுல் தான் எவ்வகை மாற்றமும் அடைவதில்லை. உந்துதல்கள் தனி மனிதனின் உடல் தேவைகளையும், மரபுவழி பாரம்பரியத்தில் அவனேடு ஊறிய உணர்வுகளையும், மிருக உணர்ச்சிகளையும் எடுத்துக் காட்டும்போதும் மனப் போக்குகள் அவனது நாகரிகத் தேவை யைச் சமூகத் தேவையை அவனுக்கு உணர்த்துவனவாக அமை கின்றன.

**மனப் போக்கினை அளவிடுதல்**

மனப் போக்கினை அளக்க எண்ணற்ற யுக்திகளையும் அள வீட்டு முறைகளையும் கையாண்டு வெற்றி கண்டுள்ளனர். மனப் போக்குகள் எண்ணற்ற பண்புகளை அமைப்புகளைப் பெற்றிருக் கின்றன. இங்ஙனம் நாம் அளவிடுவதற்கு எடுத்துக்கொண்ட மனப் போக்குகள் ஒவ்வொன்றும் நேர்மறையானது, அல்லது எதிர்மறையானது என்ற வகையிலும் எத்தகைய அளவிற்கு எத்தகைய திறனில் அஃது இயங்குகின்றது என்ற முறையிலும் அது நிலைத்திருப்பதா சமூகத்தின் எல்லா நிலைகளிலும் காணப் படுகின்றனவா என்ற வகைகளிலும் தன்னுள் எண்ணற்ற பண்புருபுகளைப் பெற்றிருக்கின்றன. எனவே, மனப் போக்கிலே அளக்கின்ற முறைகளும் இத்தகைய என்னற்ற பண்புருபுகளை அளக்கும் அடிப்படையில் தோன்றியவையாக இருக்கவேண்டும்.

**தர்ஸ்டனின் சமமாகத் தோன்றும் இடைவெளி அளவுகோல் முறை**

தர்ஸ்டன் என்பவரும் சேவ் என்பவரும் (L. L. Thurstone and E. J. Chave) கண்டுபிடித்த அளவுமுறை இன்றுவரை பெரும் பான்மையினரால் பயன்படுந்தப்படுகிறது. இவ் அளவுகோல் முறைப்படி, முதன் முதலில் எண்ணற்ற மக்களிடமிருந்து ஒரு விஷயத்தைப் பற்றிய பொதுமக்கள் கருத்தினை வாக்குமூலமாகப் பெற்று அவற்றில் உதிரிகளாக இயங்கும் அங்கும் தோன்று கின்ற ஒருவர் இருவரால் மட்டுமே சொல்லப்பட்ட விஷயங்களைக் களைதல் வேண்டும். பின்னர் அவற்றில் சமமாகத் தோன்று கின்ற கருத்துகளை (eual appearing) எல்லோராலுமே எடுந்துக் கொள்ளப்பட்ட விஷயங்களைச் சாதகமானது சாதகமற்றது

என்ற பகுப்பில் தேர்ந்தெடுத்த நீதிபதிகளைக்கொண்டு பிரிக்கப்பட வேண்டும். சாதகமானது என்ற பகுப்பிலிருந்து சாதகமற்றது என்ற கடைசிப் பகுப்பிற்குள் இடையே ஒன்று முதல் பதினொரு பிரிவுகளாக்கப்பட்டு, அவை சாதகமானது, மிகவும் சாதகமானது, ஓரளவிற்குச் சாதாரணமாகச் சாதகமானது, ஓரளவிற்குச் சாதாரணமாகச் சாதகமற்றது, ஓரளவிற்குச் சாதகமற்றது, மிகவும் சாதகமற்றது, சாதகமற்றது, என்று அவை பிரிக்கப்பட வேண்டும்.

நம் நாட்டில் ஆங்கிலத்தைப் பாட மொழியாக வைத்துள்ளதைப் பற்றி மனப் போக்கினை அளவிடவேண்டுமென வைத்துக் கொள்வோம். ஆங்கிலம் பாட மொழி பற்றிய பொதுமக்கள் கருத்தினை நேரடிப் பேட்டி, கடிதங்கள், பத்திரிகைகள், செய்தித் தாள்கள், நூல்கள் போன்றவற்றில் வந்துள்ள செய்திகளைக் கொண்டும் சேகரிக்கலாம். இங்ஙனம் சேகரித்து எண்ணற்ற கருத்துகளை ஒத்துக்கொள்ளக் கூடியது உண்மையானது—ஒத்துக் கொள்ள முடியாதது உண்மையற்றது என்ற இரு பெரும் இறுதித் தீர்ப்புக்குள் எண்ணற்ற நிலைகளில் அடுக்கி ஆராய்ந்து அறியலாம். இங்கே நீதிபதிகளாய் நியமிக்கப்படுபவர்கள் தங்களின் கருத்திற்கு ஏற்ப ஒரு செய்தியினை ஒத்துக்கொள்ளக் கூடியதாகவும், ஒன்றினை ஒத்துக்கொள்ளக் கூடாதவையாகவும் வகுக்கலாம். எனவே, நீதிபதிகளின் உள நிலைப்படி இந்தப் பாகுபாடு அமைவதால் இவற்றின் முடிவும் பாரபட்சம் உள்ளதாய், நீதிபதியின் உள நிலைக்கு ஏற்பவே உண்மையற்றதாய் இருக்கும் என்று ஒருவர் கூறலாம். இந்தக் குறையை நீக்கவே தர்ஸ்டன் என்பார் நீதிபதிகளிடம் முற்றிலும் வேறுபட்ட இரு கூற்றுகளையும் எதிர்மாறான கருத்தினையும் கொடுத்தே அவற்றில் எதை அவர் ஒத்துக்கொள்ளுகின்றார் எதை அவர் மறுக்கிறார் என்று ஆராய்கின்றார். மூன்றாவதாக நீதிபதி கொடுக்கும் சீட்டு இவ்விரு கூற்றுகளுக்கு நடுமையாக அமைந்துள்ளது. இங்கே நீதிபதிக்குக் கொடுக்கப்பட்ட மூன்று கூற்றுகளை மட்டுமே வைத்துத் தன் தீர்ப்பைக் கூறுவதால் அதில் அவருடைய சொந்தக் கருத்துப் புக இடமில்லை என்று கூறலாம். இதனைப் போன்றே எண்ணற்ற நீதிபதிகளின் பகுப்பினை ஆராய்ந்தே முடிவெடுக்கப் படுகின்றது.

**லிக்கர்ட்டின் கூட்டு விகிதப் பாங்கு அளவுகோல் முறை**

லிக்கர்ட்டின் முறை தர்ஸ்டனின் முறையைவிட எளிதானது; ஓரளவிற்குச் சிறந்தது. இங்கே தீர்ப்பினை முடிவெடுக்க நீதிபதிகளை நியமிக்கவேண்டிய அவசியமில்லை. இங்குச் சேகரித்த

பொது மக்கள் கருத்தினை மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்ட பொது மக்களிடையே திரும்பக் கொடுத்து அவற்றைக் கண்டிப்பாக ஏற்றுக்கொள்ளப்படவேண்டியது – எற்றுக்கொள்ளப்படாதது – கண்டிப்பாக ஏற்றுக்கொள்ளப்படாதது என்ற தலைப்பின் கீழ் பிரிக்கச் செய்யப்படுகின்றது.

லிக்கர்ட்டின் முறை இங்ஙனம் தர்ஸ்டனின் முறையை விட எளிதானது. ஆனால் இம் முறையில் கூட்டு விகிதப் பாங்கின் அடிப்படையில் ஒரு பிரச்சினை பற்றிய முடிவெடுக்க அதிக நேரமும், காலமும் செலவிடப்படுகின்றது. இருப்பினும் கருத்துகளை ஐந்து வகைப்பட்ட தலைப்பின் கீழ்ப் பிரிப்பது மிகவும் நன்மைப் பயப்பதாக அமைகின்றது.

பொக்கார்டஸின் சமூகத் தொலைவு அளவுகோல் முறை

இவர் குழுக்களுக்கிடையே உள்ள சமூகங்கள், தேசங்கள் போன்றவற்றிற்கு இடையே உள்ள உள் உறவைத் தீர்மானிக்க இந்த அளவீட்டு முறையைக் கண்டுபிடித்தார். ஒரு குழுவின் தனியவரிடம் ஏழு வகைப்பட்ட தரப்பில் பிரிக்கப்பட்ட உறவு முறையை விளக்குகின்ற வரிகள் கொடுக்கப்படுகின்றன. அவன் அதில் பரிசோதனையாளர் கூறுகின்ற அந்தக் குழுவினுடன், சமூகத்துடன், நாட்டுடன் எந்த அளவிற்கு உறவு கொள்ள முடியும் என்று பிரித்து அவ் வரிகளுக்கு நேராகத் தன் குறியீட்டை இடுகின்றான்.

(1) திருமணம் செய்துகொள்ளுகின்ற அளவுக்கு உறவு.
(2) தன்னளவில் தனிப்பட்டமுறையில் நண்பனாகப் பழகுகின்ற அளவிற்கு உறவு.
(3) தன் தெருவில் பக்கத்து வீட்டுக்காரராக வசிக்க அனுமதிக்கின்றவரையான உறவு.
(4) தொழில் நிறுவனத்தில் உடன் பணியாற்றச் சம்மதிக்கின்ற வரையான உறவு.
(5) தன் நாட்டில் குடிமகனாக ஏற்றுக்கொள்ளுகின்ற அளவிற்கான உறவு.
(6) தன் நாட்டில் பார்வையாளராக வந்துபோக அனுமதிக்கின்ற வரையான உறவு.
(7) நாட்டின் எந்தவிதத் தொடர்பிலிருந்தும் தனித்துவிடுகின்ற உறவு.

மேற்கண்ட பகுப்பு முறை மிகவும் நெருக்கமான உறவிலிருந்து முற்றிலும் விலக்கிவைக்கின்ற உறவுவரை மெதுவாக உயருகின்றது. ஓர் இனத்தார் மற்ற இனத்தாரை அல்லது ஒரு

நாட்டினர் மற்ற நாட்டினரை எந்த அளவுக்கு ஏற்றுக்கொள்கின் றனர் என்பதை அறிய இம்முறை பயன்படுகிறது. சீன பாகிஸ் தான் நாடுகளைப்பற்றி நம் மக்களைக் கேட்டால் ஓரளவிற்குப் பகைமை உணர்ச்சி மறைந்து வருவதால், பார்வையாளராக நம் நாட்டில் வந்துபோக அனுமதிக்கின்ற வரையான உறவில் குறி விடலாம். ஜப்பானியரைப் பற்றிக் கேட்டால், அவர்களில் ஒரு வரைத் தன் நாட்டின் குடிமகனாக அனுமதிக்கின்ற வரையான உறவில் குறிப்பிடலாம். இங்ஙனமே உடன் பணியாற்ற அமெரிக்கரையும், வங்காள தேசத்தினரையும் தன்னளவில் நண்பராக ஏற்றுப் பழக ரஷ்யரையும் அவன் தேர்ந்தெடுக்கலாம். திருமணத்தில் முடிகின்ற உறவிற்கு ஒருவன் தன் மதத்தினரைக் குறிக்கலாம். இந்த முறையில் ஒரு குறிப்பிட்ட ஒன்றைப்பற்றிய மனப்போக்கினை நாம் அளந்து அறியலாம்.

### கட்மனின் அளவுகோல் வரைபட (தொழில்நுணுக்க) முறை

கிம்பால் யங் (R. Young) என்பார் மேற்கண்ட அளவுகோல் முறைகளில் தனியவன் தன் மனப்போக்கிற்கு ஏற்ப இரு வேறு பட்ட கருத்துகளைக் கூறலாம் என்றும் அவனது முடிவு இங் ஙனம் தொடர்ச்சியற்றதாக இருக்கலாம் என்றும் கூறுகின்றார். மேற்கண்ட அளவு முறைகளில் இரண்டு விஷயங்களை ஏற்றுக் கொண்டும் இரண்டினை அறவே ஒதுக்கியும் ஒருவன் எடுக்கின்ற அதே மதிப்பெண்களை மற்றவன் நான்கையும் சமமாக மதிப்ப தாகக் கூறியே பெறமுடியும். இங்கே இரு தனியவர்களின் மதிப் பெண்களும் சமமாக இருக்கின்றன. ஆனால் அவர்களின் மனப் போக்கோ முற்றிலும் மாறுபட்டு இருக்கின்றன. எனவே இம் முறைகள் மனப்போக்கினைத் தெளிவாக அளவிடப் பயன்படாது.

இக் குறையை நீக்க கட்மன் என்பார் ஒரு யுக்தியைக் கண்டு பிடித்தார். இதன்படி பெரும்பான்மையினரால் எல்லாவகை யிலும் ஒத்துக்கொள்ளப்படுகின்ற பொது மக்கள் கருத்தினையே பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளவேண்டும். அதாவது பொது வாக ஒன்றினை ஏற்பவர் அதற்கு எதிர்மாறான மற்றொன்றினை ஒதுக்கியே தன் கருத்தினை வழங்கவேண்டும். இங்ஙனம் முரண் படாத நிலையான கருத்துகளையே பரிசோதனைக்கு எடுத்துக கொள்ள வேண்டுமே ஒழிய, ஒருவர் விரும்புகின்ற ஒன்றை வெறுத்தோ, வெறுக்கின்ற ஒன்றினை விரும்பியோ பதிலளித்தா லும், அல்லது இரண்டிற்கும் ஒரே பதிலை அளித்தாலும் அவர்கள் கூற்றுகள் மனப்போககுகள் சாதாரண எதிர்ப்பார்ப்புகளினின்று மாறுபடுவதால் அவற்றைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளக் கூடாது. இங்ஙனம் முரண்படாத வாக்குகளை அதுவும் பெரும்

பான்மையினரால் ஓரளவிற்கு ஒரே பாணியில் பதிலளிக்கப்பட்ட கூற்றுகளையே எடுத்துப் பரிசீலனை செய்வதன் மூலம் மேற் கண்ட அளவீடுகளில் உள்ள குறைபாடுகளைப் போக்க இயலும். கட்மனின் இம்முறை பெரும்பாலும் நன்மை பயப்பதாகவும் எல்லோராலும் பயன்படுத்தப்படுவதாகவும் காணப்படுகின்றது.

### மனப் போக்கை அளவிடுவதில் பயன்கள்

மனப் போக்குகளின் அளவீடுகள் சமூகத்தில் நிலவுகின்ற பிரச்சினைகளை ஆராய்வதற்கும் ஆராய்ந்த பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணவும் பெரிதும் பயன்படுகின்றன. கல்வித் துறையின ருக்குக் கல்வியில் ஏற்படுத்தவேண்டிய மாறுபாடுகள், போதனு முறைகள், பாடத் திட்டங்கள் போன்றவற்றை அறிய இம்முறை பெரிதும் பயன்படுகிறது. வியாபாரிகள் பொதுமக்கள் விரும்பு கின்ற, ஏற்கின்ற பொருள்களைப் பற்றிய கணிப்பினை இம் முறையின் வழிபெற்று அத்தகைய பொருள்களைத் தயாரிக் கின்றனர். அல்லது தயாரித்த தங்களின் பொருள்களில் உள்ள குறைபாடுகளை நீக்குகின்றனர். தொழில் துறையில் ஈடுபட்டுள்ள வர்கள் தொழிலாளர்களின் மனப் போக்கினை அறியவும், சூழ் நிலைகள் பிரச்சினைகளுக்குத் தக்கபடி மக்களின் மனப் போக்கிற் கேற்பத் தங்களின் தொழிலைச் சீர்ப்படுத்திக்கொள்ளவும் இம் முறையை நாடுகின்றனர். அரசியல் துறையினர் மக்களின் மனப் போக்கினை அறிந்து தங்களின் செயல் திட்டங்களை மாற் றிக்கொள்ளவும், நிறைவேற்றவும் இம்முறை பயன்படுகிறது. இன்னும் இவை போன்ற பொருளாதாரப் பிரச்சினைகள், தொழில் வளர்ச்சி, சமூகப் பிரச்சினைகள், அரசியல் நெருக்கடிகள் போன்ற வற்றை ஆராய்ந்து தீர்வுகாண இம்முறை நன்கு பயன் படுகின்றது.

### மனப்போக்கு மாற்றம்

இதுவரை மனப்போக்கை அளவிடும் முறைகள், அதை அளவிடுவதின் பயன்களைப் பற்றிப் படித்த நாம் அம் மனப் போக்குகளை மாற்றவும், மாற்றவேண்டிய அவசியத்தையும், அவ் வாறுன மாற்றங்களை அளவிடும் முறைகளையும் பற்றிப் பயில் வது அவசியம். மனப்போக்கினை உருவாக்கினுல் மட்டும் போதாது; அதை அவசியமேற்படின் ஓரளவுக்கு மாற்றவும் வேண்டும். மக்கள் மனப்போக்கை மாற்ற அதனைப் பாதிக்கும், அல்லது உருவாக்கும் அக, புறக் காரணிகளைத் தெரிந்துகொள்ள வேண்டும். உந்தல்கள், ஒருவனின் கோட்பாடுகள், அவன் அநுபவங்கள், சூழ்நிலை வழிவரும் செய்திகள் போன்றவை மனப் போக்கு மாற்றத்தைப் பாதிக்கின்றன.

ஒருவன் மற்றொரு சாதியினரிடமோ, குழுவினருடனோ கொண்டுள்ள விரும்பத்தகாத, பகுத்தறிவுக்கொவ்வாத மனப் போக்கை மாற்றிக்கொள்வது மிகவும் அவசியம். சான்றாக, நம் சமூகத்தில் தாழ்த்தப்பட்ட அல்லது அரிசன மக்களிடம் சிலர் கொண்டுள்ள தவறான மனப்போக்குகளை மாற்றினால் அன்றி, நம் சமூகம் ஒன்றிணைந்து முன்னேறுதல் இயலாது.

மனப்போக்கு மாற்றம், வளர்ந்துவிட்ட பெரியவர்களுக்கு மட்டுமின்றி எதிர்காலத்தை உருவாக்குகின்ற இளம் தலைமுறை யினருக்கும் பயன் அளிப்பதாக அமைகின்றது. எதிர்காலத்தின் மாற்றங்களையும், பிரச்சினைகளையும் அவர்கள் சிந்திக்க வேண்டிய வர்களாக இருக்கின்றார்கள். வருங்காலமே அவர்களது கையில் தான் எனும்போது, அவர்களைச் சிறந்த தலைவர்களாக, செயல் வல்லுநர்களாக, நாட்டின் மக்களாக--மாற்ற வேண்டியதா கின்றது. இங்கே ‘ஆக்கத் திறனின் மனப்போக்கின்’ (creative attitude) உதவியால் அவர்களிடம் புதைந்துகிடக்கின்ற ஆற்றல் களை, உருவாக்கும் திறமைகளை நாம் வெளிக்கொணர முடியும். எனவே அவர்களின் மனப்போக்கை நம் இலக்குகளின்பால் மாற்றுவது அவசியம்.

மேலும் அண்மையில் நமது அரசு கொண்டுவந்துள்ள குடும்பக் கட்டுப்பாடு திட்டங்கள், சுகாதார வாழ்க்கை முறை களுக்கான வேண்டுகோள்கள் போன்றவற்றை வெற்றிகரமாகச் செயல்படுத்த, நம் மக்களின் மனப் போக்குகளை முதலில் மாற்ற வேண்டும். இதுவுமன்றி, விவசாயத்தில் புது முறைகளைப் புகுத்தவோ, தொழிற்சாலைகளில் உற்பத்தியைப் பெருக்கவோ உருவாக்கப்பட்ட திட்டங்களை மக்கள் ஏற்றுக்கொண்டால்தான் அவற்றைச் சீரிய முறையில் செயல்படுத்த முடியும்.

சுருங்கக் கூறின், சமுதாயத்தில் எந்த வகையான மாறுதல் களையும்--சமூகம், அரசியல், பொருளாதார முன்னேற்றங்களையும் கொண்டுவருவதற்கு மக்களின் மனப்போக்கில் மாற்றம் மிகவும் அவசியமாகிறது. எனவேதான், மனப்போக்கை மாற்றுவது ஒரு பெரும் ஆராய்ச்சித் துறையாகச் சமூக உளவியலில் இடம் பெற்றுள்ளது.

நம் நாட்டில், கொத்தூர்கர் என்பார் ஓர் ஆராய்ச்சி நடத்தி யதை மர்பி (1953) என்பார் குறிப்பிடுகிறார். அவர் பூனாவில் உயர்நிலைப்பள்ளி மாணவர்களின் சாதிப் பற்றிய மனப் போக்குகளை மாற்ற இயலுமா என ஆராய்ந்தார். மனப்போக்கை

மாற்றுவதில் மனவெழுச்சி (emotional) முறை, பகுத்தறிவு நோக்கு (rational) முறை, இவற்றைவிடக் குழு விவாதமுறை மிகவும் பயன்தரும் எனக்கருதி அதை ஆராய்ந்தார். இம் முறையினுல் மாறுதல்கள் ஏற்படினும், அவை திட்டவட்டமானவைகளாகக் காணப்படவில்லை. எனவே, மன வெழுச்சிமுறை, மற்ற முறைகளைவிடச் சிறந்தது என அவர் கருதுகிருர்.

மனப்போக்கை மாற்றுவதற்கான முறைகளில் இரண்டினை முக்கியமாகக் குறிப்பிடலாம். ஒன்று, மக்களின் மனப்போக்கை முதலில் அளந்துகொண்டு, பின்னர் அவற்றைக் கல்வி, பிரசாரம் போன்றவற்றிற்கு உள்ளாக்கி, பின் மனப்போக்கை அளவிடுதல். இதன் மூலம், பிரசாரம், அல்லது மாற்றமுண்டாக்கக் கூடிய காரணிகள்—இவற்றை அளிப்பதற்கு முன்பும், பின்பும் காணப்படும் மனப்போக்கினைக்கொண்டு எந்த அளவிற்கு மாற்றம் ஏற்பட்டுள்ளது என அளவிடலாம். மற்ெருரு முறை, தனியவனை ஒரு குறிப்பிட்ட சமூகச் சூழ்நிலையில் வைத்து, மற்றவர்களுடன் நெருங்கித் தொடர்ந்து பழகவைத்தால், அவன் மனப்போக்கை மாற்றலாம். இம் முறை மிகவும் சிறந்ததாகவும் காணப்படுகிறது.

அதிகாரச் சுருக்கம்

சமூக நடத்தைகள் எண்ணற்ற உந்துதல்களால் மன நோக்குகளால் தூண்டப் பெறுகின்றன. இவற்றின் அறிவினைக் கொண்டு ஒரு தனி மனிதனின் நடத்தையும் அவன் சமூகத்தோடு இணைந்து, ஏன், எதற்காக வாழ்கின்றுன் என்பதனையும் நாம் தெரிந்துகொள்ள முடியும்.

சமூகக் கற்றல், சமூகப் படுத்துதல், இவற்றின் விளைவாகவே மன நோக்குகள் உருவாகின்றன. இம் மன நோக்குகள் ஒருவர் பேசுகின்ற முறையிலும், பிறர்பால் தொடர்பு கொள்ளுகின்ற நடத்தைக் குறைகளாலும் தெரிந்து கொள்ளப்படுகின்றன. தனி மனிதனின் வாழ்க்கையும் சரி பிறர்பால் கொள்ளுகின்ற நல்ல மனநோக்குகளின் செயல்களால்தான் முன்னேற்றம் காண்கின்றன. மனப்போக்குகள் என்பது ஒரு தனியவன் ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட சூழ்நிலைக்கேற்ப, அல்லது தனது நடத்தைக் கேற்பத் தன்னைச் சரிசெய்து கொள்வதாகும். இவை கற்றுக் கொள்வதேயன்றி இயற்கையாகவே எழுந்து விடுவதில்லை. இவை ஓரளவிற்கு இறுதிவரை மாருதவை. இருப்பினும் அநுபவத்தின் போக்கில் அவை மாற்றப்படலாம்.

மனப்போக்குகள் மன உந்துதல்களிலிருந்து மாறுபட்டவை. எண்ணற்ற உந்துதல்களின் விளைவினுல் ஒருவகை மனப்போக்கு

ஏற்படுத்தப்படலாம். ஆக மனப்போககுகள் என்பவை ஒரு கூட்டுத்தொகுதியான மன உந்துதல்கள், தனித்தனி உணர்வு களாய் வகைப்படுத்தப்பட்டு விருப்பு, வெறுப்பு, அன்பு போன்ற எண்ணற்ற மன வெளியீடுகளாய் உருப்பெறுவனவாகும்.

மனப்போக்கினை அளக்க தர்ஸ்டோனின் அளவுகோல் முறை, லிகர்ட்டின் கூட்டு விகிதப் பாங்கு அளவுகோல் முறை, பொகார்டஸின் சமூகத் தொலைவு அளவுகோல் முறை, கட்மனின் அளவுகோல் வரைப்பட (தொழில் நுணுக்க) முறை போன்றவை பயன்படுகின்றன. இவ்வளவீட்டு முறைகள் சமூகத்தில் நிலவு கின்ற பிரச்சினைகளை ஆராய்ந்து தீர்வு காணவும், மனப் போக்குகளை மாற்றவும் பயன்படுகின்றன.

# 13. பண்பாடும் ஆளுமையும்

## (Culture and Personality)

பண்பாடு எனின் பண்பட்டு வந்த பழக்க வழக்கங்கள் என்பது பொருளாகும். எனவே பண்பாடு என்னும் சொல்லின் வழி ஒரு சந்ததியினர் தனது முன்னோர்களிடமிருந்து அவர்கள்—தம் பழக்க வழக்கங்கள், அது சார்ந்த செயல்கள், மரபு வழி கிட்டும் ஒருசில குணங்கள் போன்றவற்றைப் பெற்று தொடர்ந்து தம் வாழ்விலும் அவற்றைப் பின்பற்றி ஒரு குறிப்பிட்ட பண்பாட்டினர் என்ற பெயரினைத் தொடர்ந்து ஏற்று வருவது என அறிகிறோம்.

தலைமுறைத் தலைமுறையாக வரும் பழக்க வழக்கங்கள். நம்பிக்கைகள், மனப்போக்குகள் மட்டும்தான் பண்பாடு என அழைக்கப்பட வேண்டுமென்பதில்லை. ஒரு சமூகத்தினர் அவர்கள் தாம் வாழும் காலத்திலேலேயே ஒரு சிலவற்றைப் பின்பற்றத்தொடங்கி, அச் செயல்களின் அல்லது குணங்களின் வழியே பிற சமூகத்தினருக்குத் தங்களை அறிமுகம் செய்து கொள்வார்களேயானால் அந்தப் பழக்க வழக்கங்களும், செயல்களும்கூடப் பண்பாடு என்ற சொல்லால் குறிக்கப்பெறுகின்றன. இந்த விளக்கத்தினை நாம் மறுப்போமெனில் ஆதிகால மக்கள் பின்பற்றி வந்த பழக்க வழக்கங்களையும், மனப்பான்மை, மூட நம்பிக்கை போன்றவற்றையும் தொடர்ந்து பின்பற்றி வருகின்ற, அதாவது இக் காலத்திலும் ஆதிவாசிகளாய் வாழுகின்ற ஒருசில சமூகத்தினரை மட்டுமே நாம் பண்பாட்டினர் எனக் குறிப்பதாக அமைந்துவிடும்.

இக் காலத்தில் பண்பாடு என்ற சொல் நாகரிக வளர்ச்சி பெற்ற முற்போக்குத் தன்மையான செயல்களைக் குறிப்பதாகவும் பொருள்படுகின்றது. கிராமத்துவாசி ஒருவன் பட்டணத்திற்கு வந்து போய் முழுக்கால் சட்டை, கோட்டு ஆகியவற்றை அணிந்துகொண்டானெனில் அவ்வூரினர் அவனைப் பார்த்துப்

பட்டிணத்து நாகரிகத்தவன் என்று அழைக்கின்றனர். இங்கே இவர்கள் பண்பாடு என்று கருதுவது முற்போக்குச் செயலான நடை, உடை, பாவனை மாற்றங்களான நாகரிகத்தைக் குறிக்கும். இருப்பினும், நாம் சமூக உளவியலில் இதனைப்பற்றிக் கற்கும் போது பண்பாடு என்ற செயல் ஒருசில சமூகத்தினிடையே காணப்படுகின்ற—அச் சமூகத்தினரைப் பிற சமூகத்தினிடமிருந்து பிரித்துக் காட்டுகின்ற,—அச் சமூக வாழ்விற்கு மிகவும் இன்றியமையாத—அடிப்படையான முக்கியத்துவம் மிக்க—தொடர்ந்து தலைமுறைத் தலைமுறையாக வருகின்ற—ஒருசில அடிப்படைப் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், மனப்போக்குகள், செயல் தன்மைகள் போன்றவற்றைக் குறிப்பிடுவதாகக் கருதுகின்றோம்.

**பண்பாடும் ஆளுமையின் வளர்ச்சியும்**

பண்பாடு என்பது திடீரெனத் தனியவன் ஒருவன் தானாகக் கற்றுக் கொள்ளும் தன்மையது இல்லை எனவும், அது அவன் பிறப்பினால் அவனை வளர்க்கும் பெற்றோர்களால், அவன் வாழ்கின்ற சமூகத்தினரால்—சூழ்நிலை, சந்தர்ப்பங்கள், வாழ்க்கை முறைகள் போன்றவற்றால் அவனுக்கு அளிக்கப்படுகின்றது எனவும் கண்டோம். இதே நிலையே ஆளுமை வளர்ச்சியிலும் காணப்படுகின்றது. ஒரு தனியவனின் ஆளுமைத்தன்மைத் தானாகவே தனித்துத் தோன்றி வளர்ச்சி பெற்றுவிடுவதில்லை. எங்ஙனம் அவன் தானாக அன்றிப் பிறரால் பண்படுத்தப் படுகின்றானோ, அதனைப்போன்றே அவன் ஆளுமை வளர்ச்சியும் அடையப்பெறுகின்றான். இங்கே அவனது பண்பாட்டு வளர்ச்சி தான் ஆளுமை வளர்ச்சி என்றும், அவ்வாளுமை வளர்ச்சியின் முதிர்ந்த செயல்கள்தாம் அவனது பண்பாட்டுத் துலங்கல்கள் என்றும் நாம் அறிகின்றோம்.

இதனை நாம் ஆராயும்போது ஆளுமை வளர்ச்சிக்கு அவன் சார்ந்துள்ள பண்பாட்டு வளர்ச்சியும் மிகவும் இன்றியமையாதது என உணர்கிறோம்.

இங்கு நாம் பண்பாட்டைப் பற்றிப் பயிலுவதின் நோக்கம் அப் பண்பாட்டின் வழி ஒருசில சமூகத்தினருக்கு எங்ஙனம் ஒரு சில தனிப்பட்ட ஆளுமைப் பண்பு வளருகின்றது என்பதனை ஆராய்வதற்கேயாகும். இதனையே சிறிது மாற்றிச் சொல்ல வேண்டுமெனில் மனிதன் எங்ஙனம் சமூகப்படுத்தப்படுகின்றான்? அவன் அங்ஙனம் சிறந்த சமூகப்படுத்தலுக்கு ஆட்பட, சிறந்த ஆளுமைப் பண்பின் வளர்ச்சியைப் பெற எத்தகைய, அல்லது எந்தெந்தப் பண்பாடுகள் அவனுக்கு உதவுகின்றன என ஆராய்வதற்கேயாகும். இவ்வகையில் எண்ணற்ற சமூக

உளவியலாளர்கள் பழங்குடி மக்கள் தம் சமூகத்தினையும், தற்போதைய நாகரிகம் மிக்க சமூகங்கள் சிலவற்றையும் ஆராய்ந்து அவ்வாராய்ச்சிகளின் வழி ஒருசில சமூக நடத்தைகளுக்கான காரணிகள் எந்தப் பண்பாட்டின் அல்லது எத்தகைய பண்பாட்டுக் கோலத்தில் கிடைக்கப் பெறுகின்றன என்று கண்டறிந்துள்ளனர். ரூத் பெனிடிக்ட் (Ruth Benedich), மியட் (Mead) போன்ற அறிஞர்கள், இவ்வகையில் எண்ணற்ற ஆராய்வுகளை மேற்கொண்டு சமூக உளவியலார்களுக்குப் பெரிதும் உதவியுள்ளனர்.

மேலும் பண்பாடுகளிடையேயுள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஒப்பிட்டுப்பார்த்த (Cross-Cnltural) ஆராய்ச்சிகளில், ஆளுமையை ஒட்டியவையும் சில காணப்படுகின்றன. இவை பெரும்பாலும் மனப்போக்கு, மதிப்பீடுகள் (Values) வடிவுருவாக்கிகள் (Stereotypes), ஆகியவற்றைச் சார்ந்ததாகும். இது சார்ந்த ஆய்வுகள் பற்றிப் பரீக் (1958), ராய் சௌத்ரி (1958, 1959), சிங், ரெட்டிங் (1962), முகர்ஜி (1967), அனந்த் (1970) ஆகியோரைக் குறிப்பாகக் கூறலாம். அமெரிக்கா, இந்தியா போன்ற நாடுகளிடையேயுள்ள சமூகப் புலன்காட்சி பற்றிய ஆய்வு நடத்தியவர்களில் பரமேஷ் (1968), பாக், பரமேஷ் (1969), ஆகியவர்களைச் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

### ஆளுமை உருவாக்கத்தில் பண்பாட்டின் பங்கு (Culture in Personality formation)

**மனித இயலின் கண்டு பிடிப்புகள் :** மனித இயலாளர்கள், குறிப்பாக, பண்பாட்டு மனிதவியலாளர்கள் எப்போதுமே வழக்கங்கள் நிறுவனங்கள், பண்டைய மக்களது நடத்தை ஆகியவற்றில் அக்கறை காட்டி வந்துள்ளனர். மிக அண்மையில்தான் அவர்கள் ஆளுமையைப்பற்றிச் சிந்தித்துள்ளனர். இவ்வகையில் மியட் (Mead), சமோவா (Somoa), நியூ கெனியா (New Guinea) ஆகியவற்றில் நிகழ்த்திய ஆய்வுகள் புகழ்பெற்றவையாகும். சமோவாவில் இளையோரின் பருவம் தாக்குதல்களும், குமுறல்களும் நிறைந்திருப்பதில்லை. சமோவா இளைஞர்கள் நல்ல பொருத்தப்பாடுகள் கொண்டவர்களாய் உள்ளனர். இதற்கு முக்கியமாக அங்குள்ள பெரும் குடும்பக் குழுக்கள், பால் இனத் தொடர்பு பற்றிய சுதந்திர நோக்கு, இளமைப் பருவத்தின்மேல் ஏற்படும் அழுத்தங்களில் இருந்து பெற்ற சுதந்திரம் ஆகியவையே காரணமாக அமைகின்றன. இதற்கு மாறாக நியூ கெனியாவைச் சேர்ந்த சமரியக் குறவர்களது ஆளுமை, மிகவலிய ஆணவம் (Egodrive), தன் வலியுறுத்தல், உழைப்பு, உடலியல் செயல்

முறைகள், அதிகாரத்திற்கான பெரு மதிப்பு ஆகியவற்றையே, முதல்நிலை இலக்குகளாகக் கொண்டிருக்கிறது. பாலுணர்வு ஒடுக்கப்பட்டு இளையோர் பருவம் சமோவா (Somoa) விலிருந்ததைக் காட்டிலும் சிக்கல்கள் மிக்கதாக அமைந்திருக்கிறது. இவ்வாய்வில் மியட் பால்வேறுபாடுகள் குறித்து ஆராய்ந்துள்ளார். இரு பாலாருக்கும் இடையே காணப்படும் குணநிலை (temperamental) வேறு பாடுகள் எத்துணையளவு உடன் பிறந்தவையாக உள்ளன, எத்துணை அளவு பண்பாட்டால் தீர்மானிக்கப்பட்டவையாயுள்ளன, எந்தவகைப் பயிற்சிகள் இதில் பங்கு பெறுகின்றன என்பனவற்றை அறிந்துகொள்ள மியட் முயன்றுள்ளார். இதற்காக அவர் நியூ கெனியாவைச் சேர்ந்த மூன்று பண்டைக் குழுக்களை அரபீஷ், மண்டுகுமர், சாம்புலி (Arapsh, Mundugumor, Chambuli) ஆகியவற்றைத் தேர்ந்தெடுத்தார். இம் மூன்று வகையினரும் அத் தீவின் ஒரே பரப்பில் வாழ்ந்து வந்த பரம்பரை இன வழிவந்த ஒரே மாதிரியான குழுக்களாகும்.

அராபீஷியர்கள் ஒரு கூட்டுறவு சமூகமாக அமைந்திருந்தனர். பெருந்தன்மை, பொறுப்பு உணர்ச்சி, ஒருவருக்கொருவர் உதவிகொள்ளுதல் ஆகியவை இச் சமூகத்தின் பண்புகளாக அமைகின்றன. மனித இயல்பின் நல்லனவற்றை ஏற்கின்றனர். பால், வயது, வேற்றுமைகள் மிகவும் குறைக்கப்பட்டுள்ளன. வன்முறையில் செயல்படுபவர்களையும், ஆதிக்கம் மிக்க ஆண்களையும், பெண்களையும் சமூகத் தகுதிகளினின்று விலகினவர்களாகக் கொள்கின்றனர். தாய்மை வழிகூடிய பெருந்தன்மையும், பொறுப்பும் வாய்ந்த ஆதிக்கமற்ற ஆணும் பெண்ணுமே அரபீஷியர்களது இலட்சியமாகும்.

மண்டுகுமர் இனத்தினர் துவக்கத்தில் மனித மாமிசம் தின்னும் இனக் கூட்டமாக இருந்தவர்களாவர். இவர்கள் சச்சரவும் பகைமையும் மிக்கவர்கள். வன்மைச் செயல்கள், தைரியம் ஆகியவற்றை இவர்கள் வலியுறுத்துகின்றனர். இவர்களின் குழந்தைகள் முரட்டுத்தனமாக நடத்தப்படுகின்றனர். இருபாலாரும் ஒரே இலட்சியம் கொண்டவர்கள். பெண்களும் ஆண்களும் வன்முறையாக, போட்டி மனப்பாங்கினராக, ஆதிக்க உணர்வு கொண்டவராக, பொருமை கொண்டு, எளிதில் புண்படுத்தலைக் காணவும், பழிக்குப்பழி வாங்கவும் தயாராக இருப்பவர்களாகவும், பகட்டுச் செயல்களிலும் சண்டைகளிலும் பெருமகிழ்வு அடைபவர்களாகவும் இருக்கவேண்டும் என்று இவர்கள் எதிர்ப்பார்க்கின்றனர்.

இதற்கடுத்த மூன்ருவது குழுவான சாம்புலியினர் விழாக்கள் முக்கியத்துவம் பெருகின்ற ஒரு விரிவான கலை நோக்குடைய பண்பாட்டினை உடையவர்களாக அமைந்துள்ளனர். ஒவ்வொரு வரும் பல கலைகளில் தேர்ந்தவராக இருந்தனர். அரபீஷியர்கள், மண்டுகுமர் ஆகியவற்றிலிருந்து மாறுபட்ட வகையில் சாம்புலி யினர், ஆண்களுக்கும் பெண்களுக்கும் நன்கு வரையறுக்கப் பட்ட சமூகத் தகுதிகளைக் கொண்டிருந்தனர். பெயரளவில் ஆண்கள் அனைத்தையும் செயல்படுத்துவதுபோல் இருந்து உரிய மதிப்பினைப் பெற்று வந்தனர். ஆனல் உண்மையில் ஆட்சி அதிகாரம் பெண்களிடமே இருந்தது. மீன் பிடித்தல், உற்பத்தி செய்தல், வணிகத்தைக் கட்டுப்படுத்தல் ஆகியவற்றில் பெண் களே ஆற்றல் மிக்கவர்களாயிருந்தனர். காதலில் பெண்களே முதலில் செயல்பட்டனர். மேலும் ஆண்களின் பெரு விளை யாட்டுகள், பொருள்கள் ஆகியவற்றைப் பாராட்டும் பண்பின ராகவும் பொருமையுடையவர்களாயும் பெண்கள் காணப்பட் டனர். ஆண்கள் தங்களுக்கேயான மன்றங்களைக் கொண்டிருந் தனர். ஆண்கள் சச்சரவிடுபவர்களாயும், இழிந்த நிலையின ராயும், தந்திர மிக்கவராயும், ஐயுறுபவர்களாயும் இருந்தனர்.

இம் மூன்று பண்டைச் சமூகங்கள் ஒவ்வொன்றிலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒவ்வொரு பாலினருக்கும் ஆன ஆளுமைகளை மியட் சுருக்கமாகத் தந்துள்ளார்.

அரபீஷியர்களுடைய இலட்சியம், பெண்மைக் குணங்கள் நிரம்பியதாகும். இச் சமூகத்தில் கூட்டுறவு, ஆதிக்கமின்மை, பொறுப்புணர்ச்சி, அமைதியான பொறுப்பு மிக்க செயல்பாடுகள் கொண்ட ஆண், அமைதியான பொறுப்பு மிக்க பெண்ணை மணந்துகொண்டான்.

மண்டுகுமர்கள் ஆண், பெண் இருவருமே இரக்கமற்றவர் களாக, அதிக பால் இனக் கவர்ச்சியுடையவர்களாகக் காணப் பட்டனர்.

சாம்புலியினரிடமோ நாம் இந்திய அல்லது அமெரிக்கப் பண் பாட்டின் நேர் எதிரான ஆதிக்க மிக்கதன் (dominant) விருப் பற்றப் (impersonal) பெண்ணையும், குறைந்த பொறுப்புணர்ச்சி யுடைய எளிதில் உணர்ச்சியடையும் ஆணையும் காண்கிறோம்.

இதிலிருந்து ஆண்–பெண் பண்புக் கூறுகள் உடன் பிறந் தவை என்று நாம் கொண்டுள்ள நம்பிக்கைகள் அனைத்தும் பிழையானவையே என்று மியட் முடிவு கட்டுகிருர். மனித இயற்கையானது, இந் நிலையிலும் ஏனைய நிலைகளைப் போன்றே மிக அதிக அளவு வளைந்து கொடுக்கக்கூடியதாக அமைகிறது.

மனித இயற்கை முதல் நிலையில் இளம் குழந்தைப் பருவத்தில் பண்பாட்டின் வார்ப்பில் பெரிதும் பாதிக்கப்படுகிறது. மேலும் மியட் பண்டைய சமூகப் பண்பாடுகளின் கூட்டுறவு, போட்டி ஆகியவை பற்றியும் ஆராய்ந்துள்ளார். முடிவாக எந்த ஒரு பண்பாடுமே எளிய பகுப்பாய்விற்கு உட்படுவதன்று. அதே போல் எந்த ஒரு பண்பாடும் முழுவதும் கூட்டுறவு கொண்டதாக அல்லது போட்டி கொண்டதாக இருப்பதில்லை என்று கண்டார். இவ்வாய்வுகள் தெளிவான வேறுபாடுகளை எடுத்துக் காட்டியுள்ளன. குவாகிவில் (Kuakiwil) மக்கள் 'முழுமையாகக் கூட்டுறவு'த் தன்மை கொண்டவர்கள், ஒஜிப்பா (Ojibwa) மக்கள் முழுமையாகத் தனித்தன்மை கொண்டவர்கள். அதாவது தனியவன் தனது இலக்குகளுக்கு ஏனைய மக்களினைப் பற்றி அதிகம் பாராட்டாது வலிது முயலுவதனை இப் பண்பாடு இயல்பாகப் பெற்றுள்ளது. இவ் வேறுபாடுகள் பூகோளம், சீதோஷ்ணம், பொதுவான பண்பாட்டுப் பகுதிகளை மட்டுமே காரணமாகக் கொண்டு ஏற்படுபவையல்ல. மாறாகக் கூட்டுறவு, போட்டி அல்லது தனித்தன்மை போன்றவை சமூக வகையமைப்பின் எல்லாச் செயல் தன்மைகளையும் கொண்டே எழுகின்றன.

ரூத் பெனிடிக்ட் (Ruth Benedict) என்பவர் பண்பாட்டின் கோலங்கள் என்னும் நூல் எழுதியுள்ளார். அந்நூல் மியட்டின் நூலைப் போன்றே மனித நடத்தையை வடிவாக்குவதில் பண்பாடு பெற்றுள்ள வலிமையினை வலியுறுத்துகின்றது. இந் நூலின் கருத்துப்படி தனியவனது வாழ்க்கை வரலாறு அவனது ஆரம்பம் முதலே அவனது சுற்றத்தில் வழிவழியாக அளிக்கப்பட்டு வந்த சமூகத் தர நிலைகளின் (Standards), பழக்கங்கள் சமூக வகையமைப்புகள் ஆகியவற்றின் விளைபொருளாகும். அவனது பிறப்பிலிருந்து அவன் எந்த வழக்கங்களிடையே பிறந்தானோ அந்த வழக்கங்கள், அவனது அநுபவத்தையும், நடத்தையையும் வடிவாக்குகின்றன. அவன் பேச முற்படும் இளவயதின்போதே அவனது சொந்தப் பண்பாட்டின் சிறு பிராணியாக ஆகி விடுகிறான். வளர்ந்து பண்பாட்டின் செயல் முறைகளில் தானும் பங்குபெற இயலுகின்ற நிலையில் பண்பாட்டின் பழக்கங்கள் அவனுடைய பழக்கங்களாகிவிடுகின்றன; அதனது நம்பிக்கைகளாகி விடுகின்றன; அதன் இயலாமைகள் அனைத்தும் இயலாதவைகளாகிவிடுகின்றன. அவனது குழுவில் பிறந்த ஒவ்வொரு குழந்தையும் அவனைப் போன்ற பண்பாட்டு வளர்ச்சியினைப் பெறுகின்றது.

பண்பாடுகள் வியக்கத்தகு முறையில் வேறுபட்டவையாயிருப்பினும் ஒவ்வொரு பண்பாடும் குறிப்பிட்ட கோலத்தினை

அல்லது ஒருமைப்பாட்டினைக் கொண்டுள்ளது. ரூத் பெனிடிக் (Ruth Benedict) கீழ்க்கண்ட மூன்று பண்பாடுகள் குறித்தும் நுணுகி ஆராய்ந்துள்ளார்.

(1) நியூ மெக்ஸிகோவின் சுயூனியர்கள் (Zuni Indians).

(2) நியூ கெனியாவின் டியூபுவான்கள்.

(3) பஸிபிக் கரையின்மேல் உள்ள வன்கோலர் தீவின் க்வாக்யூட்டல்கள் (Kwakiutl Indians)

தனியனது சொந்த முயற்சியினையும் ஊக்கத்தினையும் ஒடுக்கி விடும் அளவிற்கு மரபுச் சடங்குகள் நிறைந்த விழாக்களை வலி யுறுத்தும் பியூப்ளோ இந்தியன் (Pueblo Indian) குழுவினராக இருப்பவர்கள் மரபு வழி மகனுகச் (conventional person), சராசரி நிலையினின்று விலகாதவனுக, அல்லது தலைமைத் தன்மையினைக் கூடப் பெருதவனுக அமையும் நிலையே சுயூனியர்களது இலட்சியம். பெரும்போக்கு, மென்மைத் தன்மை (mildncss), சோகம் (Sobertly) ஆகியவையே காலத்திற்கேற்ற நல்ல குணங்களாகக் கருதப்பட்டன. இந்நிலையில் மனப் போராட்டம் அல்லது குற்ற உணர்ச்சி ஏற்படுவதில்லை. பேச்சின்போதுகூட வழக்கங்கள் (Formality), சோகம், 'எதிலும் மிகையின்மை' ஆகியவையே சுயூனியர்களிடம் காணப்படும். இவையே சுயூனியர் சமூகத்தின் தலையாய இயல்புகளாகும்.

இதற்கு மாருக வன்மை, போட்டி, ஐயம், நயவஞ்சகம் ஆகியவை கொண்டவர்களாக நியூ கெனியாவின் டியூபுவான்கள் இருக்கின்றனர். ஏமாறறுபவர்களாகவும் மந்திர நம்பிக்கையின ராயும் இவர்கள் இருக்கின்றனர். ஒவ்வொரு மனிதனும், ஒவ் வொரு கிராமமும் மற்றதுடன் பகைமை கொண்டதாகவே இருக் கிறது. பொருளாதார நடைமுறைகள் மிகவும் போட்டியிடுபவை யாக அமைகின்றன. இருப்பதற்கான ஒவ்வொரு நிலையும் போட்டியினடிப்படையிலேயே அமைகிறது. பெறப்படும் ஒவ் வொரு நன்மையும் எதிரியின் தோல்வியின் அடிப்படையிலேயே கிடைக்கிறது. இரகசியமும் நயவஞ்சகமும் நிறைந்த வாழ்வு அது. 'வேறெருவனை அவனது இடத்திலிருந்து ஏமாற்றியவனே வெற்றி பெற்ற மனிதன், நல்லவன்' என்று மதிக்கப்படுகிருன். மந்திர வழிபாடு, பில்லி, சூனியங்கள் ஆகியவற்றில் பரவிய நம்பிக்கை வாய்ந்தவர்கள், சமூக உறவுகளனைத்துமே நடைமுறை யில் ஐயத்திற்கு இடமானவையாகக் கருதப்பட்டன. கணவன்-மனைவி உறவுகூட இதற்கு விதிவிலக்கன்று.

எனவே டியூபுவான்கள் வலுவான, இழிவான, உணர்ச்சி யியல்பானவர்களாவர்; பொருமை, ஐயம், ஏமாற்றம் ஆகியவற்

ருல் பீடிக்கப்பட்டவர்களாயுள்ளனர். அதிக அளவு மனப் போராட்டங்களை உடையவனே திறமையான மனிதன். அப்படிப் பட்ட திறமையானவன் திருடனாக, குழந்தைகளையும் தன் நெருங்கிய உறவினர்களையும் கொலை செய்கின்றவனாக, இயன்ற போதெல்லாம் ஏமாற்றுகின்றவனாக இருத்தல் வேண்டும் என்று கருதப்பட்டு வந்தது. இவர்களது மதிப்பு வாய்ந்த செயல்களாகத் திருட்டும், ஏமாற்றமும் விளங்கின. சூனியச் செயல்கள் எவ்வகையிலும் குற்றமெனக் கொள்ளப்படா. அது இல்லாமல் ஒருவன் மதிப்புள்ளவனாக வாழ இயலாது. தம் வெற்றிகளை அடையப் பெரும் போராட்டங்களில் தோல்வியுறுபவன் கெட்டவன் என்று கருதப்படுகிறான்.

ஏனைய சமூகங்கள் தங்கள் நிறுவனங்கள் வழி குறைத்துக் கொண்டுள்ள விலங்குச் செயல்கள், சூதுகள் (malignity) ஆகியவற்றின் மிகையான வகைகளை டியூபு வாழ்க்கை பெரிதும் வளர்கிறது. தான் மனித சமூகத்தில் ஏற்றி உரைக்கும் சூது வாதுகளை யாரிடமாவது வெளிக்காட்ட ஏற்ற இரையாகத் தேர்ந்தெடுப்பதிலேயே இவர்களின் பெருமை அமைகிறது. எல்லாவகையான உலக நடவடிக்கைகளுமே கீழ்த்தரமான பயங்கரமான போராட்டங்களாக டியூபுவினத்துக்குத் தோன்றுகிறது

க்வாக்யூட்டல் இந்தியர்கள், மென்மை, வலிமை, பெரிதும் தன்னம்பிக்கை கொண்ட குழுவினராவர். வேளாண்மை, மீன் பிடித்தல் ஆகியவற்றில் தேர்ந்த இவர்கள் மிக உயர்ந்த வாழ்க்கைத்தர நிலையினை நிலையாகக் கைக்கொள்பவர்களாவர். மிக உயர்ந்த தனித்தன்மையும், போட்டியுணர்வும் கொண்டிருப்பதால் இவர்கள் தனிச் சொத்துரிமையை (private ownership) நிலத்தினைப் பங்கிடுவதன் மூலம் மட்டுமின்றிக் கடற்கரை, ஆழ்கடல் பரப்புகள், பாடல்கள், புனைக்கதைகள் (Myth), பட்டங்கள் (Titles) ஆகியவற்றையும் பங்கிட்டுக் கொள்வதன் மூலமும் மன நிறைவு பெறுகின்றனர். இவர்களிடையே வாழ்வின் மிக முக்கிய நோக்கமாக அமைவது, பொருட் செல்வத்தினை அடிப்படையாகக் கொண்ட கௌரவத்திற்கான நீடித்த போராட்டமே.

ஒவ்வொரு தலைமையாளனது கௌரவத்தினையும் பிறர் கண்டு மதித்தல் வேண்டும். இதற்காகத் தலைமையாளன் எண்ணிறந்த கம்பளங்கள், தாமிரக் கெட்டில்கள், பீரங்கிகள், விலையுயர்ந்த எண்ணெய் மற்றும் இது போன்ற பொருட் செல்வத்தைப் பெறக்கூடிய பொருள்களைத் திரட்டுகிறான். பின் வேறொரு தலைமையாளனை மாபெரும் 'பாட்டாஷ்' (Pottatch) என்ற விருந்துடன் கூடிய விழாவிற்கு அழைத்துத் தன் கம்பளங்களையும்,

கெட்டில்களையும், பெரும் அளவிற்குப் பொருள்களையும் தீயி லிட்டு அழித்துக் கொண்டாடுகிருன். இவ்வாறு முதல்வனை மிஞ்சுபவனுக இதே போன்ற தனது சொத்துகளை அழித்துக் காட்ட மற்ெருருவன் அறை கூவுகிருன். இதே அளவுக்கோ, அதைக் காட்டிலும் அதிகமாகவோ அவனும் செய்ய இயலா விடில், அவமானத்திற்கு ஆளாகின்ருன். சில வேளைகளில் இப் பொருள்களை அழிப்பதற்குப் பதிலாகப் பகிர்ந்தளிக்கப்படுவதும் உண்டு. இந் நிலையில் தங்களுக்குத் தாங்காத அளவிற்கு அதிக மான வட்டியுடன் அப் பொருள்களைத் திருப்பித்தரவேண்டும் என்பது தெளிவு. விருந்தளிப்பவனின் கௌரவம் பொருள்களை அழித்தல் அல்லது பகிர்ந்தளித்தல் மிகவும் உயர்த்துகிறது. இவை 'தான்' (ego) உணர்வைத் தட்டிக் கொடுப்பதற்கு ஆன தாகவே அமைகிறது.

மியட்டும், பெனிடிக்கும் ஆளுமை முழுவதும் பண்பாட் டினைப் பொறுத்தே வகையமைக்கப்படுகிறது என்று நிறுவ முயல்வதில்லை. ஒவ்வொருவரும் மரபுநிலை, உடலியல் அடிப் படைகளாலமையும் கொண்ட குணநிலையில் (temperament) காணப்படும் தனியவன் வேறுபாடுகளை ஏற்றுக்கொள்கின்றனர். எந்தப் பண்பாடும் இவ் வேறுபாடுகளைக் களைவதில்லை. பண் பாடு குறிப்பிட்ட பண்புக் கூறுகளைத் தேர்ந்தெடுத்து வலி யுறுத்துகிறது என்று அவர்கள் கண்டிருக்கின்றனர். ஆண்க ளுக்குரியது, பெண்களுக்குரியது என்பன போன்ற பாகுபாடுகள் காணப்பட்டன. மேலும் இவர்கள் வழக்கங்களையும், பண் பாட்டின் வகையமைப்புகளையும் முழுவதும் உளவியல் அடிப் படையில் புரிந்துகொள்வது என்பது இயலாது. அவற்றை வரலாற்றுப் போக்கிலும் காணுதல் வேண்டும். ஆராய்ச்சி யாளர்கள் இவ்விரு அறிஞர்கள் கூறுவதனைத்தையும் அப்படியே ஏற்பதில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

எளிய சமூகங்களில் ஆளுமை அமைப்பு (Personality Structure in Simple Societies)

ஹோபி ஆளுமை (The Hopi Personality): அமெரிக்க இந்தியப் பண்பாடுகளிலேயே ஹோபிகளும் (Hopi), நவாஹோ (Navaho) வினருமே பெருமளவு ஆளுமை ஆய்வுகளுக்கு உட்பட் டுள்ளனர். வேளாண்மை, மேய்த்தல் ஆகியவற்றில் ஈடுபடும் இவர்கள் 'ஹோபி வழி' (Hopi Way) எனப்படும் ஒரு கட்டுப் பாடான வாழ்க்கை நியதியை மேற்கொண்டிருக்கின்றனர். ஆக்கிரமிப்பின்மை, கௌரவத்தினை நாடாமை ஆகியவையே ஹோபி நடத்தையின் தலைசிறந்த பண்புகளாக அமைவதாகக்

கண்டுள்ளனர். இவ்வகை நடத்தை மண்டுகுமர் நடத்தைக்கு எதிரானது. ஹோபி சிறுவர்களைக் கொண்டு நடத்திய சோதனை முடிவுகள் இச் சிறுவர்கள் வெள்ளைச் சிறுவர்களைக் காட்டிலும் பெருமளவு சமூக எதிர்நோக்குகட்கு ஏற்ப நடந்துகொள்வதில் பெரு மகிழ்வு கொள்கின்றனர். அதேபோல் வெள்ளைச் சிறுவர்களைக் காட்டிலும் தனியவன் வெற்றியடைவுகளில் (individual achievement) குறைந்த அளவே இன்பம் காண்கின்றனர். இது ஒஜிவாவின் (Ojibwa) பண்பாட்டிற்கு முற்றிலும் எதிர்மறையானது. ஹோபிச் சிறுவர்கள், வெள்ளைச் சிறுவர்களைக் காட்டிலும் ஆக்கிரமிப்பு அல்லது உளக் குறுகுறுப்பு நிலைக்கு ஆளாகி வெட்கமடைகின்றனர்; கெட்ட நடத்தைகளுக்காக அத்துணையளவு வெட்கமடைவதில்லை.

ஹோபியினரது அச்சங்கள் மூட நம்பிக்கையின்பாலானதாகவே அன்றி வெளி உலகப் பொருள்களைப் பற்றியவையாக இல்லை. ஹோபிக் குழந்தை நுண்ணறிவு மிக்கதாகவும், உழைப்பு மிக்கதாயும், பெரும் போக்கினதாயும் (considerate) இருக்கிறது. ஆக்கிரமிப்பினைக் காணும் ஹோபிச் சிறுவன் வருத்தமும் சினமும் கொள்கிறான். பொய்யுரைத்தல் அல்லது சண்டையிடுதல் மூலம் குழுவினைவிட மேலாகத் தோன்றுவதற்காக மேற்கொள்ளும் எந்த ஒரு தனியவன் முயற்சிகளையும் ஹோபிச் சிறுவன் இருக்கிறான். ஆனால் அவன் தன் குழுவினின்று தன்னை வேறுபடுத்தக்கூடிய தலையாய தனிப்பட்ட வெற்றியினை அடைவதற்காக விழைவதில்லை. இக் குழுவின் நோக்கங்களையே அவன் சிறிது சிறிதாக இப் பயிற்சியின் மூலம் கற்றுக்கொள்கிறான். இவ்வாறே ஹோபி வழியில் சிறுவர்கள் வழிபடுத்தப் படுகின்றனர்.

**நவாஹோ ஆளுமை (The Navaho Personality):** இலிங்டனும், குளுக்கூனும் (Lighton and Kluckhohn) நவாஹோ ஆளுமை பற்றி ஆய்ந்து வெளியிட்டுள்ளனர். போதிய அளவு கண்டு பேசுதல், சோதனை, தனியாள் வரலாற்று ஆய்வு ஆகியவற்றின் அடிப்படையில் இவ் வாசிரியர்கள் நவாகோவின் இயல்புகளைப் பின்வருமாறு கூறுகின்றனர்.

(1) இவர்கள் பெருமளவிற்கு நடைமுறைக் கருத்துகளையுடைய கும்பல்களாவர்.

(2) மற்றொரு குறிப்பிடத்தக்க பண்பாக அமைவது அவர்களது தனித் தன்மைக்கு அளிக்கப்படும் பெரும் மதிப்பாகும். இதனால் ஒவ்வொருவனும் சமூகத்தால் வரையறுக்கப்பட்ட எல்லைகட்குள் தன் விருப்பம்போல் செயல்களில் ஈடுபடுவதற்கான

சுதந்திரம் நிலவுகிறது. பெருமளவு, ஆண்களுக்கும் பெண்களுக்கும், சமமான இடம் அளிக்கப்படுகிறது.

(3) அவர்களின் செயல்களுக்கு அளிக்கப்பட்டுள்ள இச்சைச் செயல்களை அவர்கள் செயல் முறைகளின் மூன்றாவது தன்மையாகக் கூறலாம். தன்னைச் சுற்றியுள்ள உலகில் அக்கறை மிக்கவர்களாகவும், சுறுசுறுப்புடையவர்களாகவும் இருப்பது அவர்களது பண்பாடும், புதிய வழக்கமற்ற ஒரு சூழ்நிலையில் தங்களின் நடத்தையைக் கட்டுப்படுத்திக் கொள்ளும் திறமை அவர்களுக்குண்டு. அவர்களை அறிந்தவர்களது மனதில் நவாஹோவினரது விழைவு, உயிர்த் துடிப்பு, அறிவார்வம் ஆகியவை நிச்சயமாகப் பதிந்திருக்கும் பெரும்பாலான சுற்றுச் சூழ்நிலைகளில் வெளித்தோற்றத்தில் மிகவும் நாகரிகமும், கட்டுப்பாடும் கொண்டதுபோல் காணப்பட்டாலும் அந்நிலையில் உள்ளத்தில் குறிக்கோள் கொண்டவர்களாகவே இவர்கள் இருக்கிறார்கள். பிறர் பழிப்புகளுக்கும் கிண்டல்களுக்கும் உணர்ச்சிமிக்க இவர்கள் பிறரால் கண்டுபிடிக்கப்படாத தனது தவறான செய்கைகளுக்குக் குற்ற உணர்வு கொள்வதில்லை. சிலவேளைகளில் இவர்கள் மனத்தளர்சி பெற்றிருந்தாலும் (moody) பொதுவாக வாழ்வைச் சுவைத்து அநுபவிக்கின்றனர்; மனித இயற்கையின் சிறுமைகளை எண்ணி நகையாடுவதில் பெருமகிழ்வு கொள்கின்றனர்.

இந்த ஆளுமையமைப்புக் குழந்தையினை ஒருசில பயிற்சிகளின் வழியாக வளர்ப்பதினால் ஏற்படுகின்றது என்று கருதப்படுகிறது. கூடவே நவாஹோவினர் பிற குழுக்களினின்று வேறுபடுகின்ற மனநிலை பெற்றவர்களாகப் பிறந்திருத்தல் கூடும் என்றும் கருதப்படுகிறது. இருப்பினும் இக்கூற்றை நிறுவுவது கடினமே.

ஒஜிவா ஆளுமை (The Ojibwa Personality): ஹால்லோவெல் இந்த ஒஜிவா அமெரிக்க இந்தியர்களை ஆராய்ந்திருக்கிறார். மென்மையான, துன்பமெதனையும் தாங்கவல்லதாக அமைந்த இவ்வாளுமையின் அடியில் தனியவர்களின் இடை உறவுகளில் பகைமையும் எதிர்மறைப்போக்கும் பொதித்திருக்க வேண்டும் என ஹால்லோவெலின் கருதுகின்றார். ஏனைய பண்பாடுகளைப் போன்றே ஆக்கிரமிப்பின் வெளிப்படை வெளியீடுகள் வம்பளப்பு, மாயச்செயல் ஆகிய பிற வெளியீட்டு வழிகளுக்குச் சமூகத்தில் தடையுள்ளது. நோய், இழப்பு ஆகிய பல தனியனின் மேல் பிறர் ஏவிய மந்திரங்களால் ஏற்பட்டதென விளக்கப்படுகிறது. கனவுகள், மக்கட் கதைகள் ஏனைய கற்பனை வாழ்வின் பண்புகளில் இவர்கள் நம்பிக்கை கொண்டிருக்கின்றனர். இவர்

குழந்தைகளைக்கொண்டு நடத்திய வேறொரு ஆய்வு குழுவின் எந்த ஓர் உறுப்பினருடனும் இரக்கவுணர்ச்சி இல்லாமையை எடுத்துக்காட்டியிருக்கிறது. ஒவ்வொரு தனியவனும் முற்றிலும் தன்னிறைவு பெற்றவனாகவும் அன்பு அல்லது பகைமை போன்ற எந்தத் தனிப் பிணைப்புகளிலும் அக்கறை காட்டாதவனாகவும் காணப்படுகிறான். வணிகத்துறையிலும் தனியன்கள் அடிக்கடி பின் விலகுபவர்களாகவும் தனித்து ஒதுங்கியவர்களாகவும் காணப்படுகின்றனர். ஒஜிவா ஆண்மகனது முக்கியத் தொழில் வேட்டையாடுதல் ஆகும். இந்நிலையில் அவன் ஏனைய வேட்டைக் காரர்களின் மேலும், போர் வீரர்களின் மேலும் செல்வாக்கினைச் செலுத்துகிறான் என்று எதிர்ப்பார்க்கப்படுவதால் அவன் தனித்து ஒதுங்கியிருக்க முற்படுகிறான். ஓரளவு தனித்திருத்தல், தன் நிறைவு ஆகியவற்றின் காரணமாக ஒஜிவாவினரிடையே எக்ஸ்ஸிமோவினரைக் காட்டிலும் குறைந்த அளவு முரட்டுச் சூழ் நிலை நிலவியிருக்கிறது.

## ஜப்பானிய பண்பாடும் ஆளுமையும் (Japanese culture and Personality)

மனித இன இயல்வல்லுநர்களும், மற்றவர்களும் ஜப்பானிய ஆய்வில் பெரிதும் முயற்சி செய்து ஜப்பானிய நடத்தை நிலை யானதாகவும், மன்னர் மன்னனுக்கான பயபத்தி, நன்றி, பணிவு, கட்டுப்பாடு, கடமையுணர்வு ஆகியவை கொண்டதாகவும் அமைகிறது என்று கண்டுள்ளனர். தன் ஒழுக்கம் மிகவும் முக்கியமானதாகக் கருதப்படுகிறது. 'தன் பெயரைக் காப்பாற் றிக்கொள்ளல்' என்ற கருத்து வலிமை மிக்கதாக இம் மக்க ளிடையே யிருக்கிறது. எனவே அவமானம், நகைப்பு, ஆகிய எண்ணங்கள் மிக்க-வன்மை பொருந்தியவனவாக இவர் கட்குத் தோன்றுகின்றன. பாதியளவு அரசாங்கத்தினதா யுள்ள ஷிந்தோ (Shinto) மதத்தின் காரணமாக இவர்களும் வலிமையான தேசிய நோக்குகளும் அயலார் எதிர்ப்பு நோக்குகளும் இவர்களிடம் காணப்பட்டுள்ளன. குடும்பத்திற்கான பத்தி, நாட்டுப்பற்று, தன் ஒழுக்கங்கள் ஆகியவை தொடர்ந்து இவர் களிடம் காணப்படுகின்றன. மேலும் பேராசை, பொருமை, புகழ், ஆர்வம் ஆகியவை பற்றியும் ஜப்பான் பண்பாட்டு ஆய் வாளர்கள் குறித்துள்ளனர்.

ஜப்பான் குழந்தைகள் செல்லமாகவே வளர்க்கப்படுகின்றன. இருப்பினும் துவக்கத்திலேயே தூய்மை, வீண் அதிகாரத்திற்குப் பயபத்தி ஆகியவையும் வலியுறுத்தப்படுகின்றன. ஆண்-பெண் ஆகியவர்களுக்கான செயல்கள் ஆரம்பத்திலேயே பிரிக்கப்பட்டு

விடுகின்றன. சிறுமியர்கள் அன்பும், உடன்பாட்டுப்போக்கும் கொண்டவர்களாக இருக்கக்கற்பிக்கப்படுகிறது. சிறுவர்களோ ஆக்கிரமிப்பு மிக்கவர்களாக இருக்குமாறு கற்பிக்கப்படுகின்றனர். சமூகத் தகுதிகள் பெரிதும் வலியுறுத்தப்பட்டு, நகைப்பு, கேலி ஆகியவை பற்றிய அச்சத்தால் சூழப்பட்டதாக அமைகிறது.

1945ஆம் ஆண்டு ஜப்பானியர் தோல்வியுற்ற காலத்திலிருந்து அவர்களிடம் அதிகரித்து வரும் பணிவுத்தன்மை (acquiscent) நடத்தையினை விளக்க பெனிடிக்ட் முயன்றிருக்கிறார். குறிப்பாக மன்னனுக்குக் காட்டி வந்த பணிவின் அடிப்படையிலேயே இந்த நோக்குப் பிறந்திருக்கிறது என்று பெனிடிக்ட் கண்டுள்ளார். தோல்வியின் பின்விளைவுகளை இயற்கை என்று ஏற்கும் ஜப்பானியர்கால் கேலியினையும், ஏமாற்றுக்களையும் பொறுத்துக்கொள்ள இயலுவதில்லை.

1951–52–ம் ஆண்டுகளில் ஐக்கிய நாடுகளின் கல்வி, சமூக, கலாசார நிறுவனத்தினர் கேள்வி நிரல்கள் போன்றவற்றின் மூலம் ஜப்பானியர் பண்பாட்டினை ஆராய முயன்றிருக்கின்றனர். இவ்வாய்வில் கண்ட முடிவுகள் பெனிடிக்டின் முடிவுகளினின்று வேறுபட்டிருக்கின்றன. இம் முடிவுகள் முன்னேற்றமடைந்த ஆய்வு முறைகளினால் கிடைத்தவையா அல்லது ஜப்பானியரிடம் போருக்குப் பின் ஏற்பட்ட மாறுதல்களால் ஏற்பட்டவையா என்று கூறுவது கடினமே. இவ்வாய்வின் முடிவுகள் முந்திய ஆய்வுகளில் கண்டதனைவிட பொதுவாக இளைஞர்களும், ஐம்பது ஆண்டுகட்குட்பட்டவர்களும் பெருமளவு வளைந்து கொடுக்கக் கூடியவர்களாக இருப்பதனை எடுத்துக்காட்டுகின்றன. இருபாலாருக்கும் இடையே சம உரிமை ஏற்படுவது தெளிவான உண்மையாக ஒருசில இடங்களில் காணப்பட்டிருக்கிறது. வாழ்க்கைத்துணைவியைத் தேர்ந்தெடுத்தல் அன்றைய நாட்களில் ஏற்பட்டதுபோன்று பெற்றோர்களது மனமுறிவிற்குக் காரணமானவையாயிருப்பதல்லை. உடன்பாட்டுப்போக்கு, தாழ்வு மனப்பான்மை, காப்பு உணர்வு இன்மை, நழுவும் தன்மை ஆகிய பண்புகள் பெரும்பாலான ஜப்பானியரிடம் காணப்படுகின்றது. முதலில் நிலவிய நிலைமை இன்றைய ஜப்பானியரிடம் காணப்படுவதில்லை என்பதைக் காட்டுகிறது.

### நாட்டுப் பண்பு (National character)

நாட்டுப் பண்பு என்ற கருத்து, சமூக அறிவியல் நூல்களில் முக்கியத்துவம் வாய்ந்ததாகவும், சிக்கல்கள் மிக்கதாகவும், காணப்படுகின்றது. ஆரம்பகாலத்தில் ஒரு நாட்டினரின்

குணங்கள் பற்றிய ஆராய்ச்சி முற்றிலும் ஒதுக்கப்பட்டிருந்தது. ஆனால் இக்காலத்தில் ஆய்வுகள் அடுத்தடுத்து, இக்கருத்துப் பற்றிய முழு அறிவினைப் பெற நடைபெற்று வருகின்றன. எந்த அளவிற்கு ஒரு தனித்த சமூகத்தின் தனிப்பட்ட பண்புகள் அச் சமூக உறுப்பினர்களின் ஆளுமைத்தன்மை வளர்ச்சிக்கு உதவுகின்றது என்றும், எத்தகைய அடிப்படை ஆளுமைத் தன்மைகள் சமூக குணங்கள் போன்றவை, ஒரு நாட்டின் பண்பைப் பாதிக்கின்றன என்றும் அதன் அடிப்படையில் நாம் ஆராய்கின்றோம்.

நாட்டுப்பண்பு எனும் கருத்தின் மூலம் இங்கு நாம் ஆளுமைத் தன்மையைப் பற்றி ஆராயாது ஒரு நாட்டினரின் பொதுவான நடத்தையினை அவர்கள் தம் பண்பாட்டுக் கோலங்களினூடே ஆராய்ந்து அறிய முயலுகின்றோம். பெனிடிக்ட் (Benedict) என்பார் ஒரு நாட்டின் பண்பு என்பது, கற்ற பண்பாடு மிக்க நடத்தையினைப் பற்றிப் படிப்பது என்று கருதுகின்றார். மியட் என்பார் நாட்டுப்பண்பை விளக்கும்போது கீழ்க்கண்டவாறு கூறுகின்றார்.

(1) ஒரு சமூகத்தின் பண்பாடுகளின் குறிப்பிட்ட தோற்றங்களை மற்ற சமூகத்தின் பண்பாட்டு அமைப்புக்களோடு ஒப்பிட்டு விளக்குவது என்றும்,

(2) குழந்தையின் அடிப்படைக் கல்விக்கும், ஏனைய பண்பாட்டுத் தன்மைகளுக்கும் இடையே உள்ள தொடர்புகளை ஆராய்வது என்றும்,

(3) ஒரு குறிப்பிட்ட பண்பாட்டில்—பெற்றோர், குழந்தை, சுற்றத்தார், குடும்பத்தினர் போன்ற உள்ளிடை மனிதர்களின் தொடர்புகள் எங்ஙனம் மிளிருகின்றன என ஆராய்வது—என்றும் மூன்றுவகையான பகுப்பின்வழி நாட்டுப்பண்பை விளக்க முற்படுகின்றார். எனினும் பொதுவாக நாட்டுப்பண்பு என்ற கருத்துருவத்தின்வழி ஒருசில பண்பாடுகளுக்கு ஒப்ப மனிதன் எங்ஙனம் சமூக நடத்தையில் துலங்குகின்றான் எனப் பயில்வதேயாகும். பொதுவாகக் கொடுக்கப்பட்ட ஒரு சமூகத்தின் எல்லா நடத்தைகளிலும் மேல் ததும்பிக் காணப்படும் ஒருசில மாறாத குணங்களையே நாம் ஒரு நாட்டுப் பண்பு என்கிறோம்.

ஒரு சமூகத்தின் உறுப்பினர் அனைவரிடமும் காணப்படுகின்ற பொது நடத்தைகள் பாரம்பரிய குணங்கள், துலங்குதல்கள் போன்றவை ஒன்றாக எடுத்துக் காட்டப்படும்போது அங்கே மக்களின் மனம் என ஒன்று நமக்குக் கிட்டுகின்றது. இதுவே நாட்டினரின் நடத்தையாகும். நாம் ஒரு நாட்டின்பாலான பிரச்சினைகளில் ஈடுபட்டுத் தீர்வுகாண நமக்கு அந் நாட்டி

னரின் பொதுமைக் குணங்களும், அவர்கள் மற்றைய நாட்டினரிடமிருந்து எங்ஙனம், எவ்வாறு ஏன் மாறுபாடு அடைந்துள்ளனர் என்ற அறிவும் பெற்றிருக்கவேண்டும். சமூக உளவியலார்கள் இந் நோக்கத்தோடு இன்னும் ஒருசில நாடுகளின் சமூக நடத்தைகள் எங்ஙனம் துலங்குகின்றன என ஆராயவும் இதனைப் பற்றிப் பயில்கின்றனர்.

மனித இன இயல்வல்லுநர்கள் (Anthropolozists) பொதுவாக ஒரு நாட்டின் பண்பைக் குறிப்பிடும்போது அவர்கள்தம் உடல் அமைப்புகள், தோற்றம், நிறம் போன்றவற்றையே குறிப்பிடுகின்றனர். இதன்வழி உடலமைப்பைக் கொண்டே ஒருசில நாட்டினரின் உளவியல் தன்மைகளையும் நிர்ணயிக்க அவர்கள் முயன்றுள்ளனர். இம்முறை சரியானதன்று. ஏனெனில் ஒரு நாட்டினரின் பண்பை நிர்ணயிப்பதில் உடலமைப்பு அன்றி உளவியல் பண்புகளே பெரிதும் செயல்படுகின்றன. ஒரு நாட்டினர், மற்றொரு நாட்டினரிடமிருந்து வேறுபடுவது அவர்களிடையே காணப்படுகின்ற குறுப்பிடத்தக்க உளவியற் பண்பினால்தான். எனவே, மனித இனவியலாளர்களின் கூற்றை மறுத்து, சமூக உளவியலாளர்கள் ஒரு நாட்டினர் பண்பை உளவியல் வழிகளில் நிர்ணயிக்க முற்படுகின்றனர்.

இந்த இருபதாம் நூற்றாண்டில் ஒரு நாட்டினரின் பண்புகளை அறிய அடிப்படை ஆளுமை அமைப்பு (Basic-Personality Structure), சமூக இயல்பு-போன்ற கருத்துக் கோட்பாடுகள் சமூக அறிவியலில் அதிகமாகப் பயன்படுத்தப் படுகின்றன. சமூக இயல்பு பற்றிய ஆய்வில் பெரிதும் கலந்து கொண்டவர்களில் மனித இனவியலாளர்கள் குறிப்பிடத்தகுந்தவர்கள். அவர்களைப் போன்று அத்துணையளவு உளவியலாளர்கள் இதில் ஆர்வம் காட்டுவதில்லை. மிகச்சில உளவியலாளர்களே இத்துறையில் ஆர்வம் காட்டியிருக்கின்றனர். மனிதன் ஒரு சமூக விளை பொருளாகக் கருதும் மனித இனவியலாளர்கள் பெரும்பாலான தங்கள் ஆற்றல்களைக் 'குழுக்கள் உளவிய'லின் பொதுமைகளைத் தாக்குதலிலேயே செலவிட்டுள்ளனர்.

**வரையறை**

நாட்டுப்பண்பு என்ற சொற்றொடரின் பொருள் அதனை ஆளுமையுடன் பிணைத்துக் கூறுவதில்லை. ஆனால் பெரிதும் பண்பாடு, பண்பாட்டின்வழி-யமைக்கப்பட்ட தனியவர்களது நடத்தை ஆகியவற்றைப் பற்றிய ஒரு கண்ணோட்டமாகவே 'நாட்டுப் பண்பு' என்னும் தொடர் குறிக்கிறது. சான்றாக ரூத் பெனிடிக்ட் (Ruth Benedict) என்பார் 'நாட்டின் பண்புபற்றிய

ஆய்வானது அந்நாட்டினர் கற்ற பண்பாடுகளின் நடத்தையினை விளக்குவதாக அமைகின்றது என்று குறிப்பிட்டுள்ளார்.

ஒரே நாட்டில் பல்வேறுபட்ட பண்புகள் இருக்கலாம். அதே போல் பல நாடுகள் ஒரே பொதுவான பண்பைக் கொண்டிருக்கலாம். எனவே நாம் 'பண்பு' என்ற தொடரை 'நாடு' என்பதற்குப் பதிலாகப் பயன்படுத்தலும் இயலும். இந்த நாடு எனக் கூறும்போது—இந்தப் பண்பு என்பதையும் நாம் நினைவு கூறுகின்றோம். ஒருவன் எந்த நாட்டைச் சேர்ந்தவன் என்பதை அவனது நடத்தை, ஆளுமை இயல்பு போன்றவற்றைக் கூர்ந்து கவனித்தாலும் கூறிவிடலாம்.

மேலும் நாட்டினர் குணங்கள் பற்றிப் பேசினாலும் அல்லது பண்பு பற்றிப் பேசினாலும், நாம் இரு நிலைகளிலும் ஒருவனது வாழ்நாளில் அடைந்த ஒன்றைப் பற்றியே குறிப்பிடுகிறோம். இது பிறருடன் கொள்ளும் இடைவினையிலேயே பெறப்படுகிறது. வரம்புகள், மதிப்பீடுகள், மத நம்பிக்கைகள் போன்றவற்றின் மூலமே பண்பாட்டினை ஒருவன் பெறுகிறான். இவ்வழியிலேயே ஒவ்வொருவனும் தன் 'நாட்டினர்' குணங்களையும் பெறுகின்றான். எனவே ஒரு நாட்டினர் பண்பு அதன் இயல்புகளாகவே காணப்படுகின்றது என்பது தெளிவாக விளங்குகின்றது.

மெக்டுகல் என்பார் ஒரு நாட்டினரின் பண்பை விளக்கும்போது சூழ்நிலைக் காரணிகளையும் பரம்பரை இனக் காரணிகளையும் வலியுறுத்துகிறார். முதலாவதாக அவர் இனங்களிடையே உடன்பிறந்த மனவேறுபாடுகள் இருக்கின்றன என்று கொள்கிறார். இரண்டாவதாக இத்தகைய உடன்பிறந்த மனவேறுபாடுகள் பெருமளவு நிலைத்து நீடிப்பதாக இருக்கின்றன என்று கூறுகிறார். மூன்றாவதாக இவை நாட்டினர் குணங்களைத் தீர்மானிப்பவையாக அமைகின்றன என்று வலியுறுத்துகின்றார்.

சான்றாக நீக்கிரோக்கள் வந்தது வரட்டும், எப்பொழுதும் மகிழ்ச்சியாக இருப்போம் என்ற மனநிலை (disposition) கொண்டு இருக்கின்றனர். எந்தவிதக் கட்டுப்பாடுமின்றித் தங்களது கொடூரமான உணர்ச்சிகளை இவர்கள் வெளியிடுகின்றனர். ஐரீஷியர்கள் கவிதை விற்பன்னர்களாகவும் உற்சாகம் நிரம்பியவர்களாகவும் உள்ளனர். பிரஞ்சு மக்கள் துப்பறியும் திறத்தினராய்க் காணப்படுகின்றனர். இவ் வேறுபாடுகள் உடன்பிறந்த உயிரியற் காரணிகளில் வேர் பிடித்து வளர்வன எனக் கருதுகின்றார்.

ஒரு நாட்டிற்குத் தனிச்சிறப்பான பண்புக் கூறுகள் உள்ளனவா, நாடுகளுக்கிடையே வேறுபாடுகள் உள்ளனவா, என்ற கேள்விகளுக்குச் சமூக உளவியல் ஆராய்ச்சிகள் திட்டவட்டமான ஒரு முடிவைத் தரவில்லை.

ஐக்கிய நாடுகள், பிரான்ஸ், சுவிட்ஸர்லாந்து போன்ற இன்றைய நாடுகளில் 'நாட்டினர் இயல்பு' போன்ற எதுவும் இருப்பதாக ஏற்றுக்கொள்ள இயலாது என்று சில அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். கோல்ட்ச்மெட் (Goldschmidt) என்பவர் அமெரிக்க தொழிலாளர்கள், நடுத்தர மக்கள், ஆகிய சமூக வகுப்புகளின் வெவ்வேறான பயன் மதிப்புகளை விளக்கிக் கூறியுள்ளனர். பால் சார்ந்த செயல்கள் (Sexual Practices), நோக்குகள், குழந்தை வளர்ப்புப் பயிற்சிகள் ஆகியவற்றில் பெருத்த வேறுபாடுகள் உள்ளன. ஹங்கேரியிலும் இதுபோன்ற வேற்றுமைகள் காணப்படுகின்றன. குழந்தை வளர்ப்பு பால் பழக்கங்கள், உளநிலைகள், பல்வேறு வழக்கங்கள், ஆகியவற்றில் மிக்க வேறுபாடுகள் உள்ளன என்பதை ஹங்கேரியில் கண்டுள்ளனர். ஆளுமை அமைப்பிலும் சொந்தமாகக் கொண்டுள்ள பயன்–மதிப்புகளிலும் அமெரிக்க வெள்ளையர் கீழ்த்தர வகுப்புக்கும், நடுத்தர வகுப்பிற்கும் வேறுபாடுகள் இருப்பதனைக் கேன்டில் (Candill) கண்டுள்ளார். உழவர்கள் அல்லது கற்றவர்கள் அல்லது ஒரே இடத்தவர் (unmigrants) ஆகியவர்கள் எங்கு வாழ்ந்தாலும் அங்கு ஒரே நாட்டினுள் இக் குழுக்கள் இணைந்து வாழ்வதைக் காட்டிலும் அதிக ஒற்றுமைகள் இருப்பதாகப் பாஸ்டைட் (Bastide) கருதுகிறார். வாழ்பகுதி (regional) வேற்றுமைகளும் சில வேளைகளில் பெரிதாயும் முக்கியமானவையாகவும் விளங்குவதுண்டு.

ஒரு பொதுவான நாட்டினர் இயல்பு பற்றிய முன் கூறிய கருத்தின் ஏற்புடைமையை ஐயுறுவதற்கு வேறுசில காரணங்களும் உள்ளன. ஏனைய ஆசிரியர்கள் இந்தகைய உண்மைகளை இன்றைய நாடுகள் பலவற்றில் உள்ள பல மக்களும் ஒரு பொதுவான மதிப்பீடுகளைப் பகிர்ந்து கொண்டவர்களாக இருப்பதாகக் குறிப்பிடுகின்றனர். இவற்றில் வேறுபாடுகள் காணப்பட்டாலும்கூட அவை ஒரே பொதுவான அடிப்படைக் கருத்தினின்று பிறந்தவையாகவே உள்ளன. சான்றாகக் கிரேக்க உழவர்களும், கிரேக்க அரசக் குடும்பத்தவரும் பிறப்பாலும், தங்கள் தனிச் சிறப்பான நோக்குகளாலும் வேறுபட்டாலும், அதிகாரத்தினைத் திட்டவட்டமாக எதிர்ப்பவர்களாகவே இருக்கின்றனர்.

**நாட்டுப் பண்பு ஆய்வு முறைகள்** (Methods in National character Study)

தனியாள் முறையும், குழு முறையும் இதில் பயன்படுத்தப் படுகின்றன.

தனியாள் முறை தனியன்களை ஆராய்கிறது.

குழு முறை, தனியவர்கள், கூட்டங்கள் (Collectives) ஆகிய வற்றின் குணங்களைக் கண்டறிய முற்படுகிறது.

**தனியாள் முறைகள்**

(1) உற்று நோக்கல் (Observation) வெவ்வேறு உற்று நோக்குபவர்களது உற்று நோக்கியவற்றை இணைத்து அறிதல்.

(2) உண்மையியல்பான—கண்டுபேசல்

(3) கேள்வி நிரல் முறைகள்

(4) (கட்டுப்பாடற்ற) கண்டு பேசல்

(5) தனிச்சிறப்பான ஆளுமைக் கூறுகளின் சோதனைகள்

(6) மக்கட் தொகுதிப் புள்ளியியல்கள்

(7) புறத்தெறி நுண்முறைகள் (Proljective techniques)

**ஜெர்மானிய நாட்டினர் இயல்பு:** (German characher Structure)

ஜெர்மனி மிகச் சிக்கலான அமைப்புடைய ஒரு நாடு என் பதால் இங்கு நாட்டினர் இயல்பினை ஆராய்தல் கடினம். இரண்டு உலகப் போர்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் ஏற் பட்ட பலமான அரசியல், சமூக மாறுதல்களின் பயனாக ஜெர் மானிய நாட்டினர் இயல்பு ஜப்பானியர் இயல்பிற்கும் அமெரிக்கர் இயல்பிற்கும் இடைப்பட்ட ஒன்றாக அமைகிறது. இவ்வியல்பு பற்றிய பல முடிவுகளை உளவியலாளர்களும் பிறரும் பெரும் பாலும் ஏற்றுக்கொயண்டுள்ளனர். மிகுந்த பணிவு, அடக்கம், அதிகாரத்திற்கான மதிப்புச் செறிவு மிக்க நாட்டுப்பற்று நோக்குக்ள், தாய் நாட்டிற்காக எதனையும் தியாகம் செய்வதற் கான விருப்பம், ஆழ்ந்து வேரூன்றியுள்ள தாழ்வு மனப்பான்மை எண்ணங்கள், காப்பின்மை உணர்வுகள், இவற்றை ஈடு செய் வதற்கான ஆற்றல், தகுதி (Prestige) ஆகிய பலவும் ஜெர்மானிய நாட்டினர் இயல்புகளின் பண்புகளாக உள்ளதெனப் பலரும் ஏற்றுக் கொள்கின்றனர்.

இரண்டாம் உலகப் போருக்கு முன்பு தந்தையர் மிகவும் திட்டவட்டமான நன்னடத்தை வழிகளை வலியுறுத்தினர். சிறு வர்கள் தங்கள் தந்தையிடம் ஒன்றுதல் கொண்டிருந்தனர்.

பிறகு தங்கள் ஒன்றுதலைத் தந்தையிடமிருந்து மாற்றிப் பரந்த அதிகாரமுள்ள பதவியில் உள்ளவர்களிடம் ஒன்றுதல் கொள்ள முற்பட்டனர். குழு, நாட்டின் ஒருமைப்பாடு (National Salidarity) முதலிய இளைஞர்களிடம் ஊக்குவிக்கப்பட்டது. அதே நேரத்தில் வெளியாரிடம் பகைமை பாராட்டுவதற்கில்லாவிட்டாலும் இரக்கமின்றி இருப்பதற்கு ஊக்க மூட்டப்பட்டது.

ஜெர்மானிய நாட்டினர் இயல்பு உருவமைப்பு அதிகாரத் தன்மை (authoritarian) குடும்பவகையமைப்பில் வேரூன்றியிருப்பதாக ஓர் அமெரிக்க உளமருத்துவர் காண்கிறார். அதிகார நிலையைக் கண்டு அஞ்சவும், மதிக்கவும் ஜெர்மானியக் குழந்தைகள் பயிற்றப்படுகின்றனர். கடமை, நன்னடத்தை, ஒழுங்குத் தன்மை (orderliness), தூய்மை, ஆண்மை ஆகியவற்றை ஜெர்மானியச் சிறுவன் கற்றுக் கொள்கிறான். ஜெர்மானியர்கள் அமெரிக்கர்களைவிடப் பணிவு (Obedience), கண்ணியம் (honour), அரசிற்கான பற்றுறுதி (loyalty to the state) ஆகியவற்றைப் பெரிதாக மதிப்பதாகவும், நாட்டின் உயர்வில் (National Superiority) மிகவும் ஆழ்ந்த நம்பிக்கையும் அதே நேரத்தில் 'சராசரி மனித'னுக்கான பெரும் வெறுப்பும் கொண்டிருப்பதாகவும் ஓர் ஆய்வு காட்டுகிறது. மியட் என்பார் பின்வருமாறு கூறுகின்றார்.

ஜெர்மானிய நாட்டினர் இயல்பு நம்புவதற்கரிய வகையில் வளைந்து உருவாகக்கூடியதாக எதிர் எதிராக உள்ளன. பண்பாடு நிலைகளுக்கு ஏற்ப மிகக் குறிப்பிட்ட வகையிலும்; எதிர் எதிர்வகையிலும் துலங்கக்கூடியதாகவும் அமைகிறது என்று நாம் முடிவு கட்ட வேண்டியிருக்கிறது. வெவ்வேறு பண்பாடுகளும், ஒரே பண்பாட்டில் காணப்படும் தனியவர்களுக்கிடையே உள்ள வேற்றுமைகளைப் போன்றே, பெரும்பாலும் குறிப்பாகக் குழந்தைப் பருவத்தின்போது ஏற்படும் ஆக்கநிலையிருத்தம் காரணமாக ஏற்படுகின்றன. இவ்வகை ஆக்க நிலையிருத்தம் பண்பாட்டுவழி தீர்மானிக்கப்படுகிறது.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் உள்ள உடல்வாகின் (Constitution) வேறுபாடுகளினால் அன்றி அவர்களது நடத்தை, முதல் நிலையில் அவர்களது பண்பாட்டினால் தீர்மானிக்கப்படுகிறது என்று கூற, பால்கள் (Sexes) பற்றிய மியட்டின் ஆய்வு முடிவுகள் ஆதாரமாயுள்ளன. பால்நடத்தை அகனமர்ந்த வகையில் (innately) பெண்மையாகவோ ஆண்மையாகவோ அமைவதில்லை. ஒரு குறிப்பிட்ட சமூகக் குழுவின் கட்டுத்திட்டங்களுக்கு ஏற்ப அந்நடத்தை அமைப்பு பெறுகிறது என்று அவர் கண்டுள்ளார்.

**அமெரிக்க நாட்டினர் பண்பு (The American National Character)**

மியட் கூறுவதுபோன்று அமெரிக்க நாட்டின்ரின் பண்பு இடைஞ்சல்களால் குன்றாத வெற்றிக்கும், செயலியக்கங்களுக்கும் ஊக்கத்தை அளிக்கும் தன்மையினதாகக் காணப்படுகின்றன. எனினும், இறுதிக்கட்ட தோல்வியால் குற்ற உணர்வு, சோகம் (desparity) ஆகியவற்றில் ஆழ்ந்துவிடக்கூடியது. வெற்றியினை உளத்தூய்மையின் (Virtue) பரிசாகவும், தோல்வியினைப் போதிய அளவு நல்ல ஒழுக்கம் இல்லாததால் விளையும் இழுக்கு (Stigma) என்றும் காணும் தன்மை அமெரிக்க இயல்பினைச் சாரும். கடந்த காலத்தைப்பற்றி அக்கறையற்ற இவர்கள் தெரியாத எதிர்காலத்தினைப் பற்றிச் சிந்திப்பதாகக் காணப்படுகின்றது. அமெரிக்கக் குழந்தைகள் நண்பர்களைப் பெறுவதிலும் பிறரைக் கவர்வதிலும் அதிக அக்கறை கொண்டுள்ளனர். அமெரிக்கர்கள் பொறிகளில் (machines) இன்பம் காண்பவர்களாகவும், பொருள்களுக்காகப் போட்டிபோடுவதனை விரும்பாதவர்களாகவும் இருக்கின்றார்கள். தனது சுற்றுப்புறத்தினரது தரநிலையைவிட ஓரளவு உயர்நிலையைப் பெறுவதே அவனது குறிக்கோளாக அமைகிறது. ராபின் வில்லியம்ஸ் என்பார் கீழ்க்கண்ட பண்புகளை அமெரிக்க நாட்டினரின் பண்பாகச் சுருக்கிக் கூறுகிறார்.

(1) தனித்த சொந்த சாதனைகளின் விருப்பம் தலைமை நிலை (Mastry) உயர்ந்த வாழ்க்கைத்தரம் இவற்றை அடைய விரும்பும் துடிப்புகள்.

(2) எப்பொழுதும் செயல்பட விரும்புதல்: சோம்பல் தீயது எனக் கருதுதல்.

(3) ஒழுக்கம் சார்ந்த செயல்கள்: ஒவ்வொரு செயலையும் இறையியல் தன்மையில் காணுதல்.

(4) மனிதத்துவம்: உணர்ச்சியும் தாராள மனப்பான்மையும், வெளி நாடுகளில் தங்கள் சமூகத்தரத்தினை உயர்த்திக் காட்டும் ஆர்வம்.

(5) திறமையும் நடைமுறைத் திறனும்: தொழில் நுட்பம், (Efficiency and Practicability) அதனைச் செயல்படுத்தும் தன்மை, அளவீடுகள், தரமிடுதல்கள் ஆகியவற்றில் பிடிப்பு–பெருமதிப்பு.

(6) முன்னேற்றம்: சமூக மாறுதலும் முன்னேக்கிய இயக்கமும் தேவை எனக் கருதல்.

(7) சம உணர்வு.

(8) சுதந்திரத்தன்மை ஆகிய அமெரிக்க நாட்டினர் குணங்களாகக் காணப்படுகின்றன என்று ராபின் வில்லியம்ஸ் கருதுகின்றார்.

அதிகாரச் சுருக்கம்

பண்பாடு என்பது ஒருசில சமூகத்தினிடையே காணப்படுகின்ற—அச்சமூகத்தினரைப் பிறசமூகத்தினரிடமிருந்து பிரித்துக் காட்டுகின்ற—அச் சமூக வாழ்விற்கு மிகவும் இன்றியமையாத—அடிப்படையான முக்கியத்துவம் மிக்க—தொடர்ந்து தலைமுறை, தலைமுறையாக வருகின்ற—ஒருசில அடிப்படைப் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், மனப் போக்குகள், செயல் தன்மைகள் போன்றவற்றைக் குறிப்பது ஆகும்.

தனியவனின் பண்பாட்டு வளர்ச்சியே அவனது ஆளுமை வளர்ச்சியை நிர்ணயிக்கின்றது. இவ்வகையில் நியூ மெக்ஸிகோவின் சுயூனியர்கள், நியூ கெனியாவின் டுபூவான்கள், பஸிபிக் கரையின் மேல் உள்ள வன்கோலர் தீவின் க்வாக்யூட்டில்கள் போன்றவர்களின் சமூக அமைப்பையும் ஆளுமைத் தன்மையையும் எடுத்துப் பயிலுகின்றோம்.

நாட்டுப் பண்பாட்டின் மூலம் ஒரு நாட்டினரின் பொதுவான நடத்தையினை அவர்தம் பண்பாட்டுக் கோலங்களினூடே நாம் ஆராய்ந்து அறிகின்றோம். மெக்டுகல் ஒரு நாட்டினர் பண்பாட்டினை விளக்கும்போது சூழ்நிலைக் காரணிகளையும் பரம்பரை இனக் காரணிகளையும் வலியுறுத்துகின்றார். நாட்டுப் பண்பாட்டின் இயல்பை ஆராய எண்ணற்ற முறைகள் பயன்படுத்தப்படுகின்றன.

# 14. தாக்குதலும் சமாளித்தலும்

சமூகத்தில் நாம் மூன்றுவிதமான அடிப்படை வழிகளில் பிறருடன் தொடர்பு கொள்ளுகிறோம். நாம் ஒருவரோடு ஒட்டி உறவாடி, நெருங்கிப்பழகி அவர்களின்பால் ஒன்றிய சமூகத் தொடர்பினை ஏற்படுத்திக் கொள்ளலாம். அல்லது அவர் நம் கருத்துகளுக்கும் அடிப்படை மனப்போக்கிற்கும் மாறுபட்டவராகக் காணப்பட்டால் அவரிடமிருந்து முடிந்த அளவு தனித்து இருப்பதற்கும், விடுபட்டுக் கொள்வதற்கும் முயற்சிக்கலாம். இங்கே நாம் பிறரிடமிருந்து விலகுவதில் அல்லது அவர் தம் தொடர்பினைத் துண்டித்துக் கொள்வதில் நாட்டம் உள்ளவராகச் செயல்படுகிறோம். அவரிடம் நேரிடையாக அன்றி எதிர்மறையாகத் தொடர்பு கொள்ளுகின்றோம். மூன்றாவது வகையில் நாம் நமக்குப் பிடிக்காத ஒருவரின்பால் எதிர்த்தே செயல்பட்டு அவருக்கு எதிர்ப்பாகவே இயங்கத் தொடங்குகின்றோம். இங்ஙனம் நாம் ஒருவரின் பால் ஒட்டி உறவாடுதலின் வழி, அவரிடமிருந்து தனித்து, விலகிக்கொள்ள முயற்சித்தலின் வழி, அல்லது அவரோடு எதிர்ப்புகொண்டு அவருக்கு எதிராகவே எதையும் செய்வதின் வழி—ஆக இம்மூன்று வழிகளின் மூலம் நாம் நம்மைச் சார்ந்துள்ள சமூகத்தில் வாழ்கின்ற பிறரோடு தொடர்பு கொள்ளுகின்றோம்.

நாம் இதுவரை கடந்த அத்தியாயங்களில் சமூகத்தோடு நாம் ஏன் ஒன்றிவாழ வேண்டும் என்பது பற்றியும், அதன் நன்மைகள் அவசியங்கள், பலன்களை என்னென்ன என்பதுபற்றியும் அங்ஙனம் நாம் சமூகத்தில் ஒன்றிவாழ, நம்மைச் சமூகப்படுத்திக் கொள்ள எவ்வழிகளில் இயலும் அல்லது எந்தெந்த வழி முறைகள் இந்நோக்கிற்கு உதவும் என்றும் கண்டோம். தனி மனிதன் சமூகமாய் ஏன் ஒன்றிணைந்து வாழ்கிறான் எனக் கற்றறிந்த நாம் தற்போது சமூக மனிதன் ஏன் ஒருசில வேளைகளில்

தனித்து வாழ விரும்புகின்றான்? அதன் அவசியம் என்ன? என்பது பற்றியும் கற்க வேண்டியவர்களாக இருக்கின்றோம்.

ஒருசில செய்திகளில் ஒருசில நேரங்களில் தனி மனிதன் தன் நடவடிக்கைகளை மறைத்து இரகசியமாக வைத்துக்கொள்ள வேண்டி வருகிறது? இந்நிலை ஒருசில வேளைகளில் தவிர்க்க முடியாததாகவும் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகவும் தோன்றுகிறது. அந் நிலைகளில் ஏன் ஒருவன் தனித்து விலகுகிறான் அல்லது தன் நடவடிக்கைகளைப் பிறரிடமிருந்து மறைத்து இரகசியப்படுத்திக் கொள்கிறான் என்பதையும் நாம் உணர்ந்தாலன்றிப் பிறரைச் சரிவர எல்லாச் சூழ்நிலைகளின் பாலும் தெளிவாகத் தெரிந்து கொண்டவர்களாகக் காணப்படமாட்டோம். ஒருவரை முற்றும் புரிந்து கொள்வது என்பது அவரை ஒரு சூழ்நிலையில் அல்லது ஒரு நேரத்தில் அல்லது ஒருசில வழிகளில் புரிந்து கொள்ளுதல் என்பதன்றி அவரை எல்லா நேரத்திலும் எந்நிலைகளிலும் புரிந்துகொள்ளுதல் என்பது ஆகும். எனவேதான் சமூக உளவியல் இதனைப் பற்றியும் ஆராய்கின்றது.

சமூக உறவுகள், விரும்பி நெருங்குதல், வெறுத்து ஒதுக்குதல், எதிர்த்துச் செயல்படுதல் எனும் இம் மூன்று வகைத்தான உறவு முறைகளாலேயே நிர்ணயிக்கப்படுகின்றன. போட்டி மனப்பான்மையும் வெறுத்து ஒதுக்கும் செயலும் குழுவின் அல்லது சமூகத்தின் ஒற்றுமையைப் பாதிக்க வல்லவை என்பது நாம் அறிந்ததே. இருப்பினும் ஒருசில நகரங்களில் போட்டி மனப்பான்மை நல்ல பயனை நல்குவதையும், எதிர்த்துச் செயல் புரிதல் ஒரு குழுவின் அல்லது சமூகத்தின் வெற்றியை நிர்ணயிப்பதாக அமைவதையும் நாம் மறுப்பதற்கில்லை. ஒரு குழு அல்லது சமூகம் தனக்குள்ளாகவே போட்டி போட்டுக்கொள்வதைவிடப் பிற குழுவோடு அல்லது சமூகத்தோடு போட்டி போட்டுக்கொண்டு எதிர்த்துச் செயல்படும்போதே நல்ல பின் விளைவுகளும் முன்னேற்றமும் வளர்ச்சியும் ஏற்படுகின்றன. இன்றைய உலகில் ஒரு நாட்டின் சமூகப் பொருளாதார வளர்ச்சி இத்தகைய போட்டி மனப்பான்மைகளின் மூலமேதான் முன்னேற்றம் பெறுகின்றது. எனவே போட்டி மனப்பான்மையும், வெறுத்து ஒதுக்குதலும் ஒருசில வேலைகளில் தேவை என்பது புலப்படுகின்றது.

### வெறுப்பும் விரோதத் தாக்குதலும்

எதிர்த்துச் செயல் புரிதல் ஒரு நோக்கத்தின் பால் அல்லது ஒரு குறிப்பிட்ட பயனைக் கருதி நடைபெறு விட்டால் அதனை சமூகம் ஏற்பதில்லை. வெறுப்புணர்ச்சி என்பது ஒருவர் மற்ற

வரின் உறவினின்று பின்னடைவதையும், விரோதத் தாக்குதல் அவரின்பால் எதிர்த்து முன் சென்று செயல்படுவதையும் குறிக்கின்றன. இவ்விரு மனப்போக்கும் எதிரிடையானதே.

தனி நபர் ஒருவரிடம் வெறுப்பும் விரோதத் தாக்குதலும் இயற்கையான உடல்வாகு அமைப்பின் மூலம் விளைகின்றனவா அல்லது அவற்றை அவன் பிறரிடமிருந்து கற்றுக்கொள்வதின் மூலம் தோன்றுகின்றனவா என்பதைப்பற்றிச் சமூக உளவியலாளர்கள் ஆராய்ந்துள்ளனர். மனித இன இயல் வல்லுநர்கள் (Anthropologists) மனிதனின் அடிப்படை உந்துதல்களும் கீழ்ப்பட்ட விலங்கின் அடிப்படை உந்துதல்களும் இயற்கையில் நேர் மறையாகவும், ஒத்துழைத்து, அன்பு செலுத்தி, ஒன்றோடொன்று நெருங்கி வாழ்வதாகவுமே இருக்கின்றன என்று வலியுறுத்துகின்றனர். சிக்மன், பிராய்டு (Sigmund, Freud) மனிதன் தோற்றத்தின் மூலமே இவ் வுணர்ச்சிகளைப் பெற்றிருக்கிறான் என்றும், இவ் வுணர்ச்சி அவன் வாழ்விற்கு நல்ல பலன் அளிக்கிறதென்றும் கூறுகின்றார். ஒருசிலர் பிராய்டின் கருத்தையும் இவ் வகையில் ஏற்று விவாதிக்கின்றனர்.

மனிதனின் பெரும்பாலான நடத்தைகள் அவன் அவற்றைக் கற்றுத் தெளிந்து கொள்ளுவதின் மூலமே ஏற்படுகின்றன என்பது சமூக உளவியலாளர்களின் முடிவு. ஒருசில அடிப்படை மனோபாவங்களைப் பெற்றிருக்கின்றான் என்பதை அவர்கள் மறுப்பதற்கில்லை. பெண்களைவிட ஆண்களே இத்தகைய கசப் புணர்ச்சி, விரோதத் தாக்குதல், எதிர்த்தல், போட்டி மனப்பான்மை, குரோதம் போன்ற மனோபாவங்களைப் பெற்றிருக்கின்றனர் என்பதும், பெண்கள் பெரும்பாலும் பிறப்பினாலேயே சாந்தமும், அமைதியும், ஒத்துப்போகும் மனப்போக்கும், கூடி வாழும் உள்ளமும் கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர் என்ற உண்மையும், இதை நமக்குத் தெளிவாக எடுத்து விளக்க வல்லன. இருப்பினும் கசப்புணர்ச்சியும் விரோதத் தாக்குதலும் ஒருவன் கற்றுக் கொள்வதனாலேயே ஏற்படுகின்றன.

எதிர்த் தாக்குதலில் ஒரு விருப்பமும், பயிற்சியும், பிறந்த குழந்தை பேசத் தொடங்கும்போதே ஏற்படுகின்றன. பாலர் பள்ளி (நர்சரி) ஒன்றில் இரண்டு முதல் ஐந்து வயது வரை உள்ள குழந்தைகளைப் பரிசோதனைக்குட்படுத்தியபோது இவ்வுண்மைப் புலனாயிற்று. இக் குழந்தைகள் உயர்ந்த குடும்பத்திலிருந்து வந்தவர்கள் என்பதால் இம் மனப்பான்மைகள் அவற்றிற்குப் பிறப்பினாலேயே ஏற்பட்டு இருக்கும் என்று கூறமுடியாது. எனினும் ஆசிரியை தேர்ந்தெடுத்த ஒரு கதையைச் சொல்லி வரும்

போது இக் குழந்தைகள் மாறி மாறி உணர்ச்சிவயப்பட்டனர். ஒருசில குழந்தைகளைத் தங்களுக்குத் தெரிந்த கதைகளைக் கூறும் படி கேட்டுக்கொண்டபோது பெண் பிள்ளைகளை விடச் சிறுவர்கள் தங்களின் கதைக் கருவின் ஊடே அதிகமான வன்மையான பயம் கலந்த நிகழ்ச்சிகளையும் வார்த்தைகளையும் பயன்படுத்தினர்.

மனிதன் இயல்பாகவே பயத்தையும், தாக்குதலையும், வன்மைத் தன்மைகளையும் விரும்பி ஏற்கின்றான். அவன் எப் போதுமே தனித்துச் சாந்தமாக இருப்பதை விரும்புவதில்லை; மாறாக, இத்தகைய உணர்ச்சிகள், மனோபாவங்கள் கொண்ட ஒரு சூழ்நிலையில் பிறரோடு தன்னையும் ஈடுபடுத்திக்கொள்ளவும் பின் னர் அதிலேயே தொடர்ந்து ஈடுபடவும், அதில் ஒருவித இன்பத் தைக் காணவும் அவன் விரும்புகின்றான். இதை நாம் எண்ணற்ற அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கொண்டு விளக்க இயலும். கொதித்துக் கொந்தளிக்கும் ஆரவாரமுடைய ஓசை மிகுந்த கடல் அலைகள்தாம், ஏனைய சாந்தமான மெதுவான அலைகளைவிட நமக்கு அதிகமான உணர்ச்சியையும், மனக் கிளர்ச்சியையும் கொடுக்கின்றன. திடீரென்று நிகழ்ந்துவிட்ட ஒரு விபத்தைச் சுற்றி விரைவில் கூடுகின்ற மக்கள் கூட்டமும் இத்தகைய மனோ பாவத்தினால்தான் தூண்டப்படுகின்றனர். பத்திரிகைகளில் 'சதக் சதக்' என்று குத்தினான், 'குபுக் குபுக்' என்று இரத்தம் கொட்டிற்று-பயங்கரப் படுகொலை, காணச் சகிக்காத காட்சி, மயிர்க்கூச்செறியும் கொடூரம், உடலே புல்லரிக்கும் பயங்கரம் போன்ற தலைப்புகளின் கீழ் ஒன்றுமே இல்லாத சாதாரணச் செய்தியைக்கூடப் பெரிதுபடுத்திப் போடுவதை நாம் தினமும் காணுகின்றோம். இதிலிருந்து இத்தகைய செய்திகளே வாசகர் களை அதிகம் கவருகின்றன என்பதை அறியலாம். புத்தக உல கில் கூட நல்ல தரம் வாய்ந்த சமூக நாவலைப் பத்துச் சதவிகிதம் முதல் இருபது சதவிகிதம் வரை உள்ள மக்களே விரும்பிப் படிப் பதையும், ஏனையோர் கொலை, மர்ம நாவல், துப்புத் துலக்குதல், ஆவி சம்பந்தமான கதைகள் போன்றவற்றை விரும்பிப் படிப் பதையும் கண்ணுறுகின்றோம். இதிலிருந்து மனிதன் இயற்கை யாகவே இவ்வித மனப்போக்குகளுக்கு ஆளாகின்றான் என்று சொல்லலாம்.

மனிதன் இங்ஙனம் பிறப்பினாலேயே இத்தகைய மனோ பாவங்களைப் பெற்றிருக்கிறான் என்று எடுத்துக் கொண்டாலும், அவை முழுக்க முழுக்க பிறப்பினாலேயே நிர்ணயிக்கப்பட்டு விடுகின்றன என்று நாம் கூறிவிட இயலாது. சாந்தமும், அமைதியும், சுமுகமான மனப்போக்கும் கற்றறிவதினாலேயே சிலர் பெற்றுச் சிறக்கின்றனர் என்பதைப் போன்றே இவ்

வுணர்ச்சிகளையும் மனிதன் தன் உடன் உறையும் நண்பர், குழுவினர், வகுப்பினர், நாட்டினர், கலாசாரப் பண்பினர் போன்றவர்களிடமிருந்தே கற்றுக்கொள்கின்றான்.

**கலாசாரத்தின் விளைபயன்**

வெறுப்புணர்ச்சி, விரோதத் தாக்குதல் போன்ற மனோபாவங்களை நடுத்தர, உயர்ந்த வகுப்பினைச் சேர்ந்த குடும்பங்களைவிடக் கீழ்த்தரக் குடும்பத்து மக்களே அதிகமாக வெளியிடுகின்றனர். நடுத்தரக் குடும்பத்து மக்கள் இத்தகைய உணர்ச்சிகட்கு ஆட்பட்டிருந்தாலும், அவற்றை மிகவும் முறையான சமூகம் ஏற்றுக்கொள்கின்ற வழிகளில்தான் வெளியிடுகின்றனர். மேலும் பொருளாதாரம், கல்வி வசதி போன்ற காரணிகள் நடுத்தர மக்களின் இத்தகைய மனோபாவங்களைப் பிரித்து நல்ல பயனளிக்கும் வழியில் திசை திருப்பிவிடுவதாக அமைகின்றன.

குற்றம் புரிந்தவர்களின் வாழ்க்கைச் சரித்திரங்களைப் புரட்டிப் பார்க்கும்போது, இளமையில் கட்டுப்பாடின்றித் தவறான முறையில் வளர்க்கப்பட்ட குழந்தைகளே பின்னால் சமூகக் குற்றவாளிகளாகக் கருதித் தண்டிக்கப்படுகின்றனர் என்பது புலனாகின்றது. சமூகத்தில் குற்றவாளிகளே இல்லை எனக் கூற இயலாது. அதன் கீழ்த்தரத்திலும் மேல் தரத்திலும் குற்றவாளிகள் நிரம்பி இருக்கின்றனர். இருப்பினும் கீழ்த்தரச் சமூகத்தில் மிகவும் கீழான செயல்களில் குற்றங்கள் நிகழும்போது சிறிது உயர்ந்த சமூகத்தில் அவை மாறுபட்ட வகையில் நிகழ்கின்றன. கீழ்த்தரக் கலாசார மனிதன், உணவிற்கும் பொருளிற்கும் வேண்டிப் பிறரின் பணத்தையும் பொருளையும் திருடும்போது, சிறிது உயர்வான சமூகத்தின் கலாசாரத்தின் பாற்பட்ட மனிதன் தன் கௌரவத்திற்கும் தொழிலுக்கும் சமூகத்தில் தனக்குக் கிட்டியுள்ள தகுதிகளை, இடத்தை நிலைநாட்டிக்கொள்ளவும், தம் தொழிலின் மூலம் வரி ஏய்ப்பு, கள்ளக் கடத்தல், பண நோட்டுகளை அச்சடித்தல் போன்றவற்றின் மூலமும் சமூகத்தில் ஒருவன் கடமை தவறுகின்றான்.

நாகரிகம் வாய்ந்த கலாசாரத்தின் நிலை இங்ஙனம் இருக்கும் போது நாகரிகமற்ற ஆதிகால மக்கள் சமூகத்தின் குற்றங்கள் இன்னும் மாறுபட்ட வகையில் நிகழுகின்றன. அவர்கள் பிற இனத்தினரை, பிற சமூகத்தினரைக் கொள்ளையடித்தும், கொலை செய்தும் பொருள் சேர்ப்பது போலவே, முடிந்தால் தங்கள் சமூகத்தினரை அதே வழியில் சந்தித்துத் தங்களின் பலத்தை நிலைநாட்ட முயற்சிக்கின்றனர்.

ஒவ்வொரு கலாசாரத்திலும் ஒவ்வொரு குழந்தையும் வளர்க்கப் பெறும் ஜனநாயக அதிகார வர்க்கக் குடும்பக் குழந்தை வளர்ப்பு முறைகளாலும், இவ்வகை மனோ வேறுபாடுகள் வளர ஏதுவாகின்றது. ஜனநாயகக் குழந்தை வளர்ப்பு முறையில் இத்தகைய வெறுப்புணர்ச்சி, விரோதத் தாக்குதல், எதிர்ப்புணர்ச்சி போன்றவை சமாளித்துக்கொள்ளவும்,–முடிந்தால் அறவே தலைஎடுக்க விடாது செய்யவும் போதனையும் பயிற்சியும் குழந்தைகளுக்குத் தரப்படுகின்றன. அதிகார வர்க்கக் குழந்தைகள் வளர்ப்பு முறையில் இவ்வித உணர்ச்சிகளை நேரடியாகச் சந்திக்க முடியாதபடி வைக்கப்பட்டு வளர்க்கப்படுகின்றனர்.

**நிறுவனமய–தனித்துவமய–எதிர்த்தாக்குதல் அமைப்புகள்**

குழுவின் உள்ளிடை எதிர்த்தாக்குதல்களை நாம் நிறுவனமய எதிர்த்தாக்குதல், தனித்துவமய எதிர்த்தாக்குதல் என இரு வகையாகப் பிரிக்கலாம். நிறுவனமய எதிர்த்தாக்குதல்களில் ஒரு குழு அல்லது சமூகம் முற்றிலும் ஈடுபடுகின்ற எதிர்த்தாக்குதல்களைப் பற்றிக் கூறலாம். இதில் சமூகத்தின் சட்டதிட்டங்களை மீறுபவர்களைத் தண்டிக்கிற எல்லாவகைச் செயல்களும் அடங்கும். ஒருசில நேரங்களில் இவ்வகை மனோபாவ உணர்வுகளிலும், ஒருசில நேரங்களில் மட்டுமே காட்டப்பட வேண்டியவை எனச் சிலவற்றை நாம் பிரித்துக் கூறலாம். உதாரணமாக உள்நாட்டுக் கலவரங்களின்போதும், மற்ற நிகழ்ச்சிகளின்போதும் அடக்குமுறையை ஓர் அரசு கையாண்டு அதற்காகப் பாதுகாவலர் படை, இராணுவம் போன்றவற்றின் உதவியை நாடலாம். ஆனால் இம்முறையை எல்லாக்காலத்திலும் ஓர் அரசு கடைப்பிடிப்பதை எந்த நாடும், அல்லது சமூகமும் ஏற்றுக்கொள்ளாது. இதே போலத்தான் ஓர் இராணுவத்தினர் சண்டையில் ஈடுபட்டுள்ளபோது எதிர் நாட்டினரைக் கொலை செய்யப்படுகின்றனர். அவர்களின் பொருள்கள் சூறையாடப்படுகின்றன. இச் செயல்கள் அனுமதிக்கப்படுகின்றன. ஆனால் அத்தகைய செயல்களை மற்ற நேரங்களில் சமூகம் அங்கீகரிப்பதில்லை.

இரண்டாவது முறையான தனித்துவமய எதிர்த்தாக்குதல்களில் ஒரு சமூகம் தனிப்பட்ட மனிதன் வரையில் ஒருசிலவற்றை அங்கீகரிக்கிறது–மற்றவற்றை எதிர்த்து அதற்காக அவனைத் தண்டிக்கிறது! வன்மைச் செயல், கொலை, கொள்ளை போன்ற தனித்துவமய எதிர்த்தாக்குதல்களைச் சமூகம் கண்டிக்கின்ற அதே நேரத்தில் குத்துச்சண்டை, மல்யுத்தம் போன்ற தனித்துவமயத் தாக்குதல் அமைப்புகளை அங்கீகரிப்பதோடு அதைப் பெருமையாகக் கருதி வளர்க்கவும் செய்கின்றது.

தனித்துவமய–நிறுவனமய–எதிர்த்தாக்குதல்களுக் கிடையே உள்ள வேறுபாடு மிகவும் நுட்பமானது. ஒரு சமூகமே எதிர்த் தாக்குதல்களில் ஈடுபட்டிருந்தாலும், சமூகத்தின் நலங்கருதிச் செய்யப்படுகிறது என்னும் போது அவை ஏற்றுக்கொள்ளப்படு கின்றன. தனித்துவமய எதிர்த்தாக்குதல்கள் ஒரு தனி மனி தனின் நன்மைக்கு என ஏற்பட்டபோதிலும் சமூகம் அதை ஏற் றுக் கொள்வதில்லை. ஆகச் சமூகத்தின் கண்ணில் நிறுவனமய எதிர்த்தாக்குதலும் சரி, தனித்துவமய எதிர்த்தாக்குதலும் சரி, அது சமூகத்தின் நன்மைக்கு என ஏற்பட்டால் அவை ஏற்கப் படுகின்றன, வரவேற்கப்படுகின்றன. மாறாக அவை தனி மனிதனின் நன்மைக்கு என ஏற்பட்டால் அவை நிராகரிக்கவும் கண்டிக்கவும் படுகின்றன.

## ஒரு சார்பெண்ணமும் உள்ளிடைக் குழுவின் வெறுப்புணர்ச்சியும்

சமூகத்தின் சட்ட திட்டங்கள், எத்தகைய ஒரு சார்பெண்ண உணர்ச்சிகள் தாம் சமூகத்தில் வெளியிடப்பட வேண்டும் என்பது பற்றியும், அவற்றை எங்தெந்த முறையில் வெளிக்காட்ட வேண்டும் என்பது பற்றியும் நிர்ணயிக்கின்றன. சமூக அமைப்பு வளர வளர இத்தகைய உணர்வுகள் நேரடியாகவன்றி மறைமுக மாகத்தான் அதுவும் அடையாளங்கள், குறியீடுகள், சைகைகள் மூலமாகத்தான் வெளியிடப்படவேண்டும் என்பது பற்றிய பண் பாடும் வளருகின்றது. நல்ல சமூகத்தில் இவ்வுணர்ச்சிகள் ஆக் கப் பூர்வமான வேலைகளின்பால் பயனுள்ள வழிகளில் திசை திருப்பவிடப்படுகின்றன. விளையாட்டுப் போட்டி, கடின உடல் உழைப்பு, தொழில் நிறுவனங்களில் போட்டி, வகுப்பில், அலு வலகத்தில், இன்னும் பிற இடங்களில் ஒருவரோடு ஒருவர் போட்டி போட்டுக்கொண்டு முன்னேறுதல் போன்ற செயல்களில் மனித உள்ளத்தில் புதைந்து கிடக்கும் இவ்வகை உணர்ச்சிகள், திசை திருப்பி விடப்படுகின்றன என்று பிராய்டு கருது கின்றார். ஒரு மனிதனிடைப் புதைந்து கிடக்கும் இவ் வெறுப் புணர்ச்சிகள் அவனை ஒத்த ஒரு தனியவனின்பால் காட்டப்படும் போது அது வெறுப்புணர்ச்சியாக (Hostility) மாறுகின்றது. அதே வெறுப்புணர்ச்சி தனியவனால் ஒரு குறிப்பிட்ட குழுவின் பால் காட்டப்படும்போது, அல்லது ஒரு குழு மற்றொரு குழுவின் பால் காட்டும்பொழுது ஒரு சார்பெண்ண (Prejudice) உணர்ச்சி யாக மாறுகின்றது.

ஆக ஒரு சார்பெண்ணம் என்பது ஒரு தனியவன் ஒரு குழு வின்பால் அல்லது ஒரு குழு மற்றொரு குழுவின்பால் நேரடி யாகவோ, மறைமுகமாகவோ காட்டுகின்ற வெறுப்புணர்ச்சி

யாகும். ஒரு குழு அல்லது சமூகம் மற்றொரு குழுவை அல்லது ஒரு சமூகத்தை அதனுடைய ஏழ்மைத்தன்மை, மாறுபட்ட இனம், உடல் நிறம், கீழான வாழ்க்கைத் தன்மைகள், நாகரிகப் பழக்க வழக்கங்கள்,-ஒழுக்கமின்மை, கட்டுப்பாடற்ற செயல்கள், மத உணர்வு, உணவு, உடை மாறுபாடு போன்ற எண்ணற்ற காரணங்களுக்காக வெறுத்து அதன்பால் பகைமை உணர்வு களைக் காட்டலாம்.

ஒரு சார்பெண்ணம் என்பது நாம் ஆராயாது முன்னதாகவே முடிவு செய்து விடுகின்ற ஒருசில கொள்கைகள், மனப்போக்குகள் ஆகும். நியூகாம் (Newcomb) என்பவர் ஒரு சார்பெண்ணம் என் பது ஒரு சாதகமற்ற மனப்போக்கு என்றும், ஒரு தனியவனுக்கு எதிர்ப்பாக அல்லது ஒரு குழுவினுக்கு எதிர்ப்பாக ஏற்கனவே தீர்மானித்து ஒருவர் வைத்திருக்கின்ற மனோநிலைப்படி நடத்தல், உணர்வு கொள்ளுதல், புரிந்து ஏற்றுத் தொடர்பு கொள்ளுதல் ஆகும் என்றும் ஒரு சார்பெண்ண உணர்வைப்பற்றி வரையறை செய்து விளக்குகின்றார்.

தனி மனிதன் ஒருசில குறிப்பிட்ட வெறுப்புணர்வுகளை அது வும் நேரடியாகவின்றி மறைமுகமாகவே வெளியிடச் சமூகம் அனு மதிப்பது போன்றே ஒரு சமூகத்தின் வெறுப்புணர்ச்சியும் பிற சமூகத்தின்பால் மறைமுகமாகவே, அதுவும் அங்கீகரிக்கப்பட்ட வழியில்தான் வெளியிடப்பட, அச் சமூகத்தைக் கட்டுப்படுத்து கின்ற, அல்லது அச் சமூகத்தின் நடவடிக்கைகளை ஒழுங்கு படுத்துகின்ற அரசு, நீதிமன்றம் போன்ற நிறுவனங்கள் அனு மதிக்கின்றன. தற்போது இந்தச் சூழ்நிலையும் மாறி ஒரு குழு மற்றொரு குழுவின்பால் அல்லது சமூகத்தின்பால் எவ்வகையிலும் ஒரு சார்பெண்ண உணர்வுகளைக் காட்டக்கூடாது என்ற நிலை நீடித்து வருகின்றது. சமூகத்தின் முன் அனைவரும் சமமே; அனைவருக்கும் ஒரு சமூகத்தின் எல்லாவகையான உதவிகளும்; உழைப்புகளும், நன்மைகளும் அளிக்கப்படவேண்டும் என்ப தையே ஒரு நல்ல சமூகம் எதிர்ப்பார்க்கின்றது. ஒரு சிலருக்கு இயற்கையில், பிறப்பில் அல்லது சூழ்நிலைச் சந்தர்ப்பங்களைப் பயன்படுத்துகின்ற வாய்ப்பில்-ஏற்பட்டுவிடுகின்ற ஏற்றத் தாழ்வுகள், பொருளாதார நிலைமைகள், இனம், உடல்வாகு அமைப்பு, உடல் நிறம், வாழும் வாழ்க்கைமுறை போன்றவற் றால்-ஒரு சமூகம் மற்ற சமூகத்தினின்று உயர்ந்து விடு வதையோ, அல்லது மற்றதைத் தாழ்வாகக் கருதுவதையோ ஒரு நல்ல சமூகம் வரவேற்பதில்லை. எனவேதான் அமெரிக்காவின் இன, உடல் நிற ஒரு சார்பெண்ணம், உலகின் எல்லாச் சமூகத் தினராலும் கண்டிக்கப்படுகின்றது. இந்தியாவிலும் பிராமணர்,

பிராமணர் அல்லாதார், உயர்ந்த சாதியினர், தாழ்ந்த சாதியினர், தீண்டப்படாதார் போன்ற சாதி சம்பந்தமான ஒரு சார்பெண்ணம், தொழில் வகை ஒரு சார்பெண்ணம், போன்றவை எல்லோரா லும் கண்டிக்கப்பட்டு அங்ஙனம் ஒரு சார்பெண்ண உணர்ச்சி களைக் காட்டுவோர் சட்டங்களின் முன்னுல் கொண்டுவரப்பட்டு தண்டிக்கப்படுகின்றனர்.

### குழு ஒரு சார்பெண்ணம்

ஒரு நிரந்தர அல்லது தற்காலிகமான குழுவின் உறுப் பினர்கள் மற்ற குழுவினர்களின்பால் ஒரு திட்டவட்டமான மனப்போக்கினையும் உணர்வுகளையும் கொண்டே தொடர்பு கொள்ளுகின்றனர். இந்த மனப்போக்குகள் உணர்வுகளின் மூலமாகத்தான் ஒரு குழுவினர் எங்ஙனம் பிற குழுவினரைப் புலன் நோக்கின் வழி அறிந்து தெரிந்து கொள்ளுகின்றனர். மதிப்பீடு செய்து நடத்துகின்றனர் என்பதை நாம் அறிய முடி கிறது. பள்ளியில் ஒரு வகுப்பினர் பிற வகுப்பினரைத் தங்களை விட உயர்வாகவோ அல்லது தாழ்வாகவோ மதிப்பீடு செய்து பழகுகின்றனர். இம் மதிப்பீடும் நம்பிக்கையுமே மாணவர்கள் தாங்கள் பயிலுகின்ற அந்த வகுப்பைத் தங்களுடையதாகக் கருதி, பிற வகுப்புகளை மாறுபட்ட கோணத்தில் பார்த்துப் பழக அடிப்படைக் காரணங்களாய் அமைகின்றன. இவற்றின் மூல மாகவே குழு ஒரு சார்பெண்ணம் தோன்றுகின்றது.

ஒரு சார்பெண்ணத்தைப் பற்றி நாம் ஒரு குழுவில் அது எங் ஙனம் நிகழுகின்றது என்ற தோற்ற முறையிலும், ஒரு குழுவின் உறுப்பினர்கள் எங்ஙனம் அதனுல் பாதிக்கப்படுகின்றனர் அல்லது பாதிக்காமல் இருக்கின்றனர் என்ற அதன் பின் விளைவுகளை ஆராயும் முறையிலும் நாம் எடுத்துப் பயிலலாம். பெரும்பாலான ஒரு சார்பெண்ணங்களில் அடிப்படைக் கார ணங்கள் பெரும்பாலும் பய உணர்வில் தோன்றுவதாகக் காணப் படுகின்றன. ஒரு குழுவினர் மற்றொரு குழுவின் முன்னிலையில் அல்லது மற்றொரு குழுவினர் இவர்களை எதிர்த்துச் செயல்படுவ தில் தங்களின் பொருளாதார, அரசியல் சமூகக் கருத்துகள், தகுதிகள், சிறப்புகள் ஆகியவற்றை இழந்து விடுவதாக அச்சப் படுகின்றனர். பொருளாதாரத்தில் அல்லது தொழில் நிறுவனங் களில் ஒரு குழுவினர் தங்களோடு மற்றொரு குழுவினர் போட்டி போட்டு வியாபாரம் செய்வதால் தங்களுக்கு ஏற்படப்போகும் இழப்பை, நட்டத்தைக் கருதித் தங்களின் நல்வாழ்விற்குத் தடை களாய் வந்து முளைத்தவர்கள் எனப் பிற குழுவினரைக் கருதி, விலக்குகின்றனர். இந்த விலக்கி ஒதுக்கும் மனப்போக்கு பின்னர்

வெறுப்புணர்ச்சியாகவும் நாளடைவில் ஒரு சார்பெண்ண உணர்ச்சியாகவும் மாறிவிடுகின்றது.

அரசியல் வாழ்விலும் ஒரு குழுவினர் மற்றொரு குழுவினரின் வாய்ப்பும், புகழும் அதிகரிப்பதைக் கண்டும், தங்களின் கட்சியினரின் வாய்ப்புகள் பாதிக்கப்படுவதைக் கண்டும் பொறுமைப்படுகின்றனர். இப்பொறுமையே பின்னர் ஒரு சார்பெண்ணமாக மாறுகின்றது. சமூக வாழ்விலும், சமயத் துறையிலும் கூட இங்ஙனமே ஒரு குழுவினர் மற்றொரு குழுவினரை வெறுக்கத் தொடங்குகின்றனர்.

ஒரு குழுவினர் மற்றொரு குழுவினரை வேறு படுத்திக் காணாத வரை ஒரு சார்பெண்ணங்கள் தோன்றுவதில்லை. வேறு படுத்திக் கொண்டபின்னரே ஒரு குழுவினர் தங்களுடையது என்ற ஒருசில கொள்கைகளை ஏற்றுக்கொண்டு பிற குழுவினரின் செய்கைகள், உணர்வுகள் இவை, இவை எனத் தீர்மானம் செய்து கொண்டு, தொடர்ந்து அவற்றை வெறுக்கத் தலைப்படுகின்றனர். இங்ஙனம் ஏற்பட்டுவிட்ட ஒருசார்பெண்ணங்கள் இறுதி வரை மறைவதில்லை. டூப் (Doob) என்பார் இது பற்றிக் கூறும் போது ஒருசில பழக்க வழக்கங்கள் மரபு வழி ஒரு குழுவில் அங்கீகாரம் பெற்றவுடனேயே ஒருசார்பெண்ண உணர்வுகள் மற்ற குழுவின்பால் தோன்றிவிடுகின்றன என்றும் இவை சட்டையில் உள்ள பொத்தான்களை ஒத்திருக்கின்றன என்றும் கூறுகின்றார். சட்டையில் உள்ள பொத்தான்கள் ஆடை தைப்பவனால் வைத்துத் தைக்கப்பட்டு விடுகின்றன. அவற்றை அப்படியே ஏற்றுச் சட்டையை மாட்டிக்கொள்ளத்தான் ஒரு மனிதனுக்குத் தெரியும். அதை ஆராய அவன் முயற்சிப்பது அவனைப் பொறுத்தவரை ஒரு தேவையற்ற செயலாகும். குழு ஒரு சார்பெண்ணங்களும் இங்ஙனமே நமக்கு முந்திய நம் குழுவின் சந்ததியினரால், பிற குழுவினரை வெறுத்து ஒதுக்கிப் பழக்கப் படுத்திவிட்டதில் ஏற்பட்டு விடுகின்றன. நாம் அந்தக் கலாசாரத்தை அப்படியே பின்பற்றி அந்த ஒரு சார்பெண்ணங்களை ஏற்றுக் கொள்ளுகின்றோம். நம் தாய் தந்தையர் நாம் குழந்தைகளாய் இருக்கும்போது வேண்டுமென்றே தவிர்க்க இயலாத வகையில் இவற்றைக் கற்றுக் கொடுத்து விடுகின்றனர்.

தனியனைப் பொறுத்தவரைதான் இங்ஙனம் தன் குழுவினரின் ஒரு சார்பெண்ண உணர்வுகளில் பாதிக்கப்பட்டிருக்கிறான் என்பதை அதிக நாட்கள் வரைத் தெரிந்து கொள்ளுவதில்லை. அக் குழுவினர் அவனைச் சமூகப்படுத்துகின்றோம் என்ற நினைவில் அவனுக்கு ஒரு சார்பெண்ணங்களைக் கற்றுத் தரும்போது

அவனும் அச் சமூகத்தில் தன்னை ஐக்கியப்படுத்திக்கொண்டு அவ்வெண்ணங்களைப் பொதுவான நடத்தைகள் எனக் கருதி ஏற்றுக் கொள்ளுகின்றான்.

### ஒரு சார்பெண்ண உணர்வின் வளர்ச்சி

ஒரு சார்பெண்ண உணர்வுகள் உண்மையான அடிப்படைக் காரணங்கள் ஏதும் இன்றியே ஏற்படுகின்றன. பெரும்பாலான ஒரு சார்பெண்ணங்கள் இளமையில் நாம் அவற்றை அறியாத போது நம்முள் விளைவிக்கப்பட்டு விடுகின்றன. எனவே எந்தத் தனி மனிதனும் இவற்றைத் தன் சொந்த அநுபவத்தில் கற்றுக் கொள்வதில்லை. நாம் இளமையிலேயே ஒருசில சாதிகளைச் சேர்ந்தவர்களின்பால் ஒரு சார்பெண்ண உணர்வுகளை வளர்த்துக்கொள்ளும்படி நம் பெற்றோர்களால் கற்பிக்கப்பட்டு விடுகிறோம். அவர்களுடன் விளையாடுவதோ நட்புக் கொள்வதோ நம் பெற்றோர்களுக்குப் பிடிப்பதில்லை. அந்நேரங்களிலும், அச் சாதியினைச் சேர்ந்தவர்களை நம் வீட்டிற்கு அழைத்து வரும்போதும் நாம் தண்டிக்கப்படவும் கூடும். இங்ஙனமே நாம் அவர்களின் தொடர்பில் நீண்ட இடைவெளியை (Social distance) ஏற்படுத்திக் கொள்ளுகின்றோம்.

இவையேயன்றியும், நம் பெற்றோர்கள் அவர்களைப் பற்றிய குணாதிசயங்களையும், பண்புகளையும், நடைமுறை வாழ்க்கை, பழக்க வழக்கங்களையும் பற்றிக் குறைவாக நம்மிடம் பேசும்போது நாம் நம்மை அறியாமலேயே அவர்களை வெறுக்கின்றோம். நாம் சரித்திரங்களின் வாயிலாக மற்ற சாதியினரை, மதத்தினரைப் பற்றிப் படிக்கும்போதும் ஒரு மதத்தவர் நம் இந்து மதத்தினரைத் துன்புறுத்தினர், அடக்கி ஆண்டனர் என்று அறியும்போதும் நம்மை அறியாமலேயே அவர்களை வெறுக்கின்றோம்.

ஒரு சார்பெண்ண உணர்வுகள் இயற்கையிலேயே ஒரு தனியவனிடம் இயல்பாகத் தோன்றிவிடுவதில்லை. சிறு குழந்தையின் முன் வேற்றுமொழி பேசுபவர்களும் வேறு இனத்தைச் சேர்ந்தவர்களும் ஒன்றே. அக் குழந்தை சாதிமதப்பேதமின்றி எல்லோருடனும் சேர்ந்தே விளையாடுகின்றது. வளர்ந்து போதிய அறிவினைப் பெறும்போதுதான் தன்னைப் பிறரிடம் இருந்து பிரித்து அறிந்து கொள்ளுகின்றது. பின்னரே, மற்றவருக்கும் தனக்கும் உடல் அமைப்பில், நிறத்தில், உடை உடுத்தும் முறையில், சாப்பிடுகின்ற உணவில், கலாசாரங்களைப் பின்பற்றுகின்ற வழியில், நிறைய வேறுபாடுகள் இருப்பதை நன்கு அறிந்து கொள்ளுகின்றது. இந்தியாவில் ஒரே சமயத்தினர் தங்கள் கடவுளை வழிபடுவதிலும் சமயத்தொடர்பான விழாக்கள் நடத்து

வதிலும், பண்டிகைகள் கொண்டாடுவதிலும், எண்ணற்ற மாறுபாடுகள் கொண்டிருககின்றன என்பதை நாம் காணுகின்ருேம். இந்துக்கள், முஸ்லீம்கள், கிறித்தவர்கள், ஜைனர்கள், பௌத்தர்கள் என்று சமய அடிப்படையில் மக்களை நாம் பிரித்து அறிந்து கொண்டாலும், இந்து சமயத்தைச் சார்ந்தவர்களிடையே சைவர், வைஷ்ணவர், வீரசைவர், காஷ்மீர சைவர் போன்ற உட்பிரிவுகள் இருப்பதையும் நாம் காணமுடிகின்றது. நடைமுறை வாழ்க்கையிலும் பழக்க வழக்கங்களிலும் நாம் இத்தகைய வேறுபாடுகளைத் தெரிந்து, உணர்ந்து நம்மைச் சார்ந்திராத மற்றவர்களை ஏதாவது ஒரு வகையில் குற்றம்சாட்டி வெறுக்கத் தலைப்படுகின்ருேம்.

## ஒரு சார்பெண்ண உணர்வுகளைக் கட்டுப்படுத்தல்

ஒரு சார்பெண்ணங்கள் அடிப்படை மதிப்பீடுகளால் (Basic Values) தான் ஏற்படுகின்றன. ஒருவன் தான் மதிக்கின்ற ஒரு சில பண்புகள் மற்றவரிடத்து இல்லாதபோது அவனை மதிக்க மறுத்து ஒதுக்குகின்ருன். இதை அவனுல் ஒதுக்கப்படுபவன் உணராது, இவனது விஷயத்தில் தலையிடுவதைக் காணும்போது இவ்விலக்குகின்ற உணர்வே வெறுப்பாகி பின், ஒருசார்பெண்ண உணர்ச்சியாக மாறுகின்றது. ஒரு சமூகமும் இங்ஙனமே, தான் மதிக்கின்ற கொள்கைகள், பழக்க வழக்கங்கள், வாழ்க்கை முறைகள், பிற சமூகத்தில் காணப்படாதபோது அதனை மதிக்க மறுக்கின்றது. இதனை உணராத பிற சமூகம் இச் சமூகத்தின் விஷயங்களில் தலையிட்டு இதன் நம்பிக்கைகளையும் கொள்கைகளையும் பழித்து எள்ளி நகையாடுவதைக் காணும்போது அதன்பால் வெறுப்புணர்ச்சியும், ஒரு சார்பெண்ண உணர்ச்சியும் கொள்ளுகின்றது.

ஒரு சார்பெண்ண உணர்வுகள் இங்ஙனம் அடிப்படை மதிப்புகளை ஏற்பதில் விளைவதால் ஒரு தனியவன் பிறரின் மதிப்புகளை ஏற்றுக்கொள்ளும்போதும் ஒரு சமூகம், பிற சமூகம் பெரிதாக மதிக்கின்ற நம்பிக்கைகளையும் கொள்கைகளையும் தானும் மதித்து, முடிந்தால் பின்பற்றவும் தொடங்கும்போதும் இந்த ஒரு சார்பெண்ண உணர்ச்சிகள் மறைந்து விடுகின்றன. ஸ்மித் (Smith) என்பார் இவ்வுண்மையைப் புலப்படுத்த ஒரு பரிசோதனையைக் கையாண்டார். பத்துப் பதினைந்து வெள்ளை நிற ஆங்கிலேய வாலிபர்களையும், யுவதிகளையும் ஒரு குழுவாக ஏற்படுத்தி அவர்களிடை, முன்பின் அறிமுகமற்ற சில நீக்ரோக்களைப் பழகவிட்டார். அந்த நீக்ரோக்களைப் பற்றி அவர்களுக்கு அறவே தெரியாது என்பதால்—நீக்ரோக்கள் எல்லாம் அசுத்தமான

வர்கள், மோசமான பழகக வழக்கங்களைக் கொண்டவர்கள், கல்வி, நாகரிகக் கலாசாரப் பண்பாட்டு விஷயங்களில் அறிமுக மற்றவர்கள் என்ற உணர்வில் அவர்கள் தங்களோடு சமமாக மதித்து அவர்களை நடத்தவில்லை. மாருகப் பேச்சிலும் செயலிலும் முகக் குறிகளிலும் அவர்களின்பால் ஒரு சார்பெண்ணங்களைக் காட்டினர். பின்னர் ஸ்மித் வேறு சில நீக்ரோக்களை—அக்குழுவினர் படித்த அதே கல்லூரிகளில் படித்தவர்கள் என்றும் அக் குழுவினரின் தொழில்களைச் செய்பவர்கள் என்றும், அககுழுவினரைப் போன்றே ஒருசில அடிப்படை நம்பிக்கை, கொள்கைகள் கொண்டவர்களென்றும், அவர்கள் தொடர்புகொண்டுள்ள குழுக்களில், பொழுதுபோக்குக் கழகங்களில் கேளிக்கை, விளையாட்டு மன்றங்களில் தொடர்பு கொண்டுள்ளவர்கள் என்றும் அறிமுகப்படுத்திஞர். பின்னர் இவ்விரண்டாவது நீக்ரோக் குழுவினருடன் பரிசோதனைக் குழுவினர் முற்றிலும் தங்களை ஐக்கியப்படுத்தி நண்பர்களாக ஏற்று நடந்து கொண்டதையும் அவர்களைச் சமமாகவே மதித்து எல்லா வகையிலும் தங்களைப் போன்றே நினைத்து நடத்தியதையும் அவர் கண்ணுற்ருர்

இந்தியாவிலும் இவ் உண்மையை நன்கு புரிந்துகொண்ட சமூகச் சீர்திருத்தவாதிகள், அரசியல் தலைவர்கள், இங்ஙனம் உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி, தீண்டாமை போன்ற ஒரு சார்பெண்ணங்களை ஒழிக்க தாழ்ந்த சமூகத்தைச் சேர்ந்த மக்கள் உயர்ந்த சமூகத்தைச் சேர்ந்த மக்கள் பெறுகின்ற அதே கல்வியையும் அவர்கள் செய்கின்ற அதே தொழிலையும், வாழ்கின்ற வாழ்க்கை அதே முறைகளையும் பழக்க வழக்கங்களையும் நாகரிக முறைகளையும் சிறந்த குணப் பண்புகளையும் பெற்று, ஏற்று அவர்களைப்போன்றே வாழ்க்கை நடத்த வாய்ப்பளிக்கும் முறையில் ஒருசில சட்டதிட்டங்களையும் சமூக அமைப்பில் மாறுதல்களையும் செய்வித்து வெற்றி கண்டுள்ளனர். இதன் விளைவாகத் தன்னுடன் சமமாக—சமயத்தில் ஒருபடி உயர்வாகக் கல்வி கற்பவன், தொழில் செய்பவன், வாழ்க்கை வசதிகளைப் பெற்றிருப்பவன்—சமூகத் தகுதிகளை உடையவன் போன்ற காரணங்களால் ஓர் உயர்ந்த குலத்தைச் சேர்ந்த தனியவன் தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவனுடன் ஒன்ருக ஒரே அறையில் வாழ்கின்ருன், ஒன்ருக அமர்ந்து உணவு உட்கொள்ளுகின்ருன். அவசியமும் வாய்ப்பும் ஏற்படும்போது இல்லற வாழ்க்கையிலும் கணவனும் மனைவியுமாய் இரு குலத்தவரும் இணைந்தும் வாழ்கின்றனர்

கல்வி வசதி, வேலை வாய்ப்பு, தொழில் வசதி, ஒருசில மதச்சடங்கு முறைகள், கலாசாரம் கலந்த பண்டிகைகள், விழாக்கள் போன்றவற்றில் பிற சமூகத்தினரைப் பங்கேற்கவிடாது ஒதுக்கு

வதின் மூலமே ஒரு சமூகம் பிற சமூகத்தின் கண்களுக்கு உயர்ந்தது எனத் தெரிகின்றது; அல்லது தன்னை உயர்ந்ததாகக் கருதிப் பிற சமூகத்தினின்று விலகி நின்று—பிற சமூகம் நெருங்கி வந்து எட்டிப்பிடிக்கமுடியாத வகையில் இயங்குகின்றது. இங்ஙனம் ஒரு சமூகம் தனக்கும் மற்ற சமூகங்களுக்குமிடையே நீண்ட இடைவெளியை ஏற்படுத்திக்கொண்டிருப்பதைக் கண்டுதான் அதனுல் பாதிக்கப்பட்ட மற்ற சமூகங்கள் இதனை வெறுக்கின்றன. நாம் இதனை உணர்ந்து, இவ்விடைவெளிகளைப் பாலமிட்டு இரு சமூகத்தினரும் ஒரே வகையான வாழ்க்கை மதிப்புகளைப் பெற வாய்ப்பளிப்போமேயாஞல் தனி மனிதனிடத்திலும், குழுவினிடத்திலும், சமூகத்திடமும் நாட்டினிடத்திலும்கூட நிலவுகின்ற ஒரு சார்பெண்ணங்களை அறவே நீக்கி அவை ஒன்றுபட்டு வாழ வகை செய்ய முடியும்!

ஒரு சார்பெண்ணங்கள் அனைத்துமே பிறரைப்பற்றி நன்கு அறிந்து கொள்ளாது ஏற்பட்டுவிடுகின்ற, சாதகமற்ற மனப்போக்கிஞல் தோன்றுகின்ற தப்பெண்ணங்களாகும். எனவே அவற்றை ஒழித்தல் என்பது மனப்போக்குகளை மாற்றினுலன்றி நடக்காது. இந்தியாவில் சாதிவழி, சமயவழி, மொழிவழி, தொழில்வழித் தோன்றும் சார்பெண்ணங்கள் நீண்ட காலத்திற்கு முன்பே தோன்றி நிலைத்திருக்கின்றன. வேதங்கள் உபநிடதங்கள், இதிகாசப் புராணங்கள் ஆகியவை காலத்தில் தோன்றிய தப்பெண்ணங்கள் புத்தர், மகாவீரர் போன்ற சமயத் தலைவர்கள் அவற்றை ஒழிப்பதற்கு எடுத்துக்கொண்ட பெரு முயற்சிகளுக்குப் பிறகும் தொடர்ந்து நிலவி வருகின்றன. எண்ணற்ற வழிகளில் இதனைக் கட்டுப்படுத்த இன்னும் முயற்சிகள் நடந்துகொண்டுதான் வருகின்றன. இருப்பினும் ஒரு சார்பெண்ணங்கள் வழி வழி வந்த சமூகத்தினரால் வளர்க்கப் பட்டுவிட்டபடியால் அவற்றை எளிதில் மாற்ற முடியவில்லை.

ஒருவர், பிறர் உயர்வாக மதிக்கின்றவற்றின் உண்மைகளைப் புரிந்துகொண்டு பின்பற்றத் தலைப்பட்டால் ஒரு சார்பெண்ணங்கள் மறையும் என நாம் நம்பலாம். ஆனுலும் அவ்வெண்ணங்கள் வாழ்க்கை மதிப்பீடுகள், வாழ்கின்ற சூழ்நிலைகள், பழகிவந்த தொழில் முறைகள் போன்றவற்றின் அடிப்படையில் தோன்றுவன. தாழ்த்தப்பட்ட ஒருவனை மற்றொருவன் ஒரு சார்பெண்ணத்தோடு நடத்தாமல் இருக்கச் செய்ய அவனுடைய வாழ்க்கை முறைகளையும் தொழிலையும் மற்றவர்கள் மதிக்கின்ற பழக்க வழக்கங்களைப்போல் மாற்றிக்கொள்ளச் செய்யலாம். ஆனுல் இதில் சில நடைமுறைச் சிக்கல்கள் இருக்கலாம். ஒருவன் எவ்வளவுதான் முயன்றுலும் அதில் எதிர்பார்த்த அளவு வெற்றி

பெற முடியாமல் போகலாம். இறுதியில் அவனுடைய வாழ்க்கையும் பாதிக்கப்படும் நிலையை அவன் அடையலாம். எனவே ஒருவனை மற்றவனின் வாழ்க்கை மதிப்பீடுகளை ஏற்றுக்கொள்ளச் செய்வதைவிட எந்த வாழ்க்கையையும் மதிக்கின்ற அல்லது யாரையும் மதித்துவாழ் என்ற ஒரு மனமாற்றத்தை ஏற்படுத்த முயலுவதே சிறந்த முறையாகும்.

இந்தியாவில் தாழ்த்தப்பட்ட சமூகத்தினருக்கு அளிக்கப் பட்டு வரும் கல்வி, தொழில், வேலைவாய்ப்பு போன்ற சலுகைகள் மக்களிடையே ஒரு சார்பெண்ணங்களைப் போக்குவதற்கு உதவுகிறது. இருந்தாலும் அது வேறொரு புதிய ஒரு சார்பெண்ண உணர்வுக்கு அடிப்படைக் காரணமாய் விளங்குகின்றது என்று டாக்டர் குப்புசாமி கருதுகின்றார். இதனைப் போன்றே தாழ்த்தப் பட்ட சமூகத்தினர்களுக்காகவே கட்டப்படும் கல்லூரி இலவச விடுதிகள், அவர்களை மற்ற சமூகத்தினரிடமிருந்து பிரித்து விடுகிறதென்றும் அந்தச் சலுகையே மற்ற சமூகத்தினர்களை ஒரு சார்பெண்ணம் கொள்ளுவதற்குக் காரணமாக அமைகின்றதென்றும் கூறி இவ்வகை விடுதிகளில் பிற சமூகத்தினரும், ஓரளவிற்குச் சேர்க்கப்படவேண்டும் என்று அவர் வலியுறுத்துகின்றார். ஒவ்வொரு சமூகத்தினரும் தாங்கள் வாழும் நகரப் பகுதிகளைத் தங்கள் சாதியினர்க்கென்று தனித்துக் கொள்வதைத் தவிர்த்து எல்லோரும் கலந்து கூடி வாழ வாய்ப்பளித்தால் இவ் வெண்ணங்களைக் கட்டுப்படுத்தமுடியும்.

சட்ட திட்டங்களால் இவற்றைப் போக்குதல் என்பதும் இயலாது. எனவே சமூகப் பழக்க வழக்கங்களில், மக்களின் மனப்போக்கில், வாழ்க்கைத்தரங்களில் மாற்றங்களை ஏற்படுத்துவதே ஒரு சார்பெண்ணங்களைக் கட்டுப்படுத்த ஏற்ற சிறந்த வழிகளாகும்.

### ஒரு சார்பெண்ணங்களின் சமூக விளைவுகள்

ஒரு சார்பெண்ணங்கள் ஒரு சமூகத்தின் முன்னேற்றத்தைப் பெரிதும் பாதிக்கின்றன ஒன்றி வாழும் ஒரு சமூகம் நாளடைவில் தங்களுக்குள் எண்ணற்ற சிறுசிறு குழுக்களாய்ப் பிரிந்து ஒன்றை ஒன்று வெறுக்கத் தொடங்கி ஒன்றின் அழிவுக்கு மற்றது நேரடியாகவோ, மறைமுகமாகவோ வேலை செய்ய மனிதச் சமுதாயம் அழிவுப் பதையில் முன்னேறத் தொடங்குகின்றது. மற்ற வகுப்பைச் சார்ந்த மக்கள் பெற்று மகிழ்கின்ற கல்வி வசதிகள், சமயச் சார்பான வசதிகள், இன்னும் பிற வசதிகள் அரிஜன வகுப்பைச் சார்ந்த மக்களுக்குச் சாதியின் அடிப்படையில் மறுக்கப்படுமானால், அரிஜன மக்களிடையே ஒரு

சார்பெண்ணங்கள் எழுவதற்கு ஏதுவாகின்றது. ஒரு நாட்டினிடை வாழ்கின்ற எண்ணற்ற சமூகங்களின்பால் இவ்வெண்ணங்கள் ஏற்படுமேயானால், உள்நாட்டுக் குழப்பங்களும், கிளர்ச்சிகளும், சண்டைகளும், அமைதியற்ற முறையில் கொந்தளிப்பும் இருந்துகொண்டே இருக்கும். இது ஒரு நாட்டின் எல்லா வளர்ச்சிகளையும் பாதிக்கும் என்பது அறிந்ததே.

ஒரு சார்பெண்ணத்தைப் பற்றி இந்தியாவில் ஆதிநாராயண் (1952) என்பார், மிகவும் விரிவாக ஆராய்ச்சி செய்துள்ளார். இந்தியாவிலும், இங்கிலாந்திலும் நிற சார்பெண்ணம் (colour prejudice in India and England) என்னும் ஆராய்ச்சிக் கட்டுரை ஒரு சார்பெண்ணங்களைப் பற்றித் தெளிவான கருத்தை வெளியிடுகின்றது. மேலும் அவர் எழுதியுள்ள 'நிறத்திற்கு ஒரு நிகழ்ச்சி' (case for colour) என்னும் நூல் உலகில் நிகழுகின்ற பல்வேறு வகையினைச் சார்ந்த ஒரு சார்பெண்ணங்களைப் பற்றி விரிவான விளக்கங்களைத் தருகின்றது.

### சமூக முரண்பாட்டுப் போராட்டங்கள்

தனி மனிதன் தன் வாழ்க்கையில் எண்ணற்ற போராட்டங்களைச் சந்திக்கின்றான். தன் வழியில் எதிர்ப்படுகின்ற இடர்ப்பாடுகளைக் களைந்து தவிர்த்து அவன் முன்னேறும்போது ஒரு வழி பல வழிகளாய் கிளை பிரியும் இடத்தில் வந்து அவன் நின்று விடுகின்றான். ஒரே வழியில் முன்னேறிய அவனுக்குத் தன்முன் காணப்படுகின்ற பல வழிகளில் எவ்வழியைப் பின்பற்றுவது என்ற சோதனை நிகழ்கிறது. தன் மூதாதையர் போற்றி வளர்த்த கலாசாரங்களை விட்டுவிட அவனால் முடியாது. ஆனால் அதே நேரத்தில் வேகமாக மாறிப்போகின்ற நாகரிக உலகிற்குத் தன்னை ஒப்புவிக்கவும் அவனுகக்கு மனம் வராது. சமூக வாழ்விலும், சாதி சமய வேற்றுமைகளைத் தகர்ப்பதிலும், அரசியல் வாழ்விலும் இங்ஙனமே அவன் எதைச் செய்வது எதைத் தவிர்ப்பது எனப் பலமுறைக் குழம்புகின்றான். தெரிந்தோ தெரியாமலோ தன் சூழ்நிலைச் சந்தர்ப்பங்களுக்கேற்பப் பழகிவந்த அநுபவங்களினால் தூண்டப்பெற்று தனக்கென ஒரு வழியை, ஒரு தீர்வை, ஒரு முடிவினை அவன் கண்டு தெளிகின்றான். இத்தகைய முரண்பாடான போராட்டத்தில் அவற்றுள் ஒன்றை மற்றதற்கு அவன் விட்டுக்கொடுக்கின்றான். அல்லது சூழ்நிலையை மாற்றிக் கொள்ள முயலுகின்றான்.

சமூகத்தின் எதிர் முரணான போராட்டங்கள், இத்தகைய ஒரு தனியவனின் போராட்டங்களினின்று முற்றிலும் மாறுபட்டது. சமூக முரண்பாட்டுப் போராட்டங்கள் தனக்கு வெளி

யில் இருக்கும் ஒன்றை எதிர்த்துப் போராடுவதன்று. மாறாக அவை ஒரு சமூகத்துக்குள்ளேயே முற்றிலும் முரண்பட்டு ஒன்றுக்கு ஒன்று எதிராக நிகழ்கின்ற போராட்டங்களைக் குறிக் கின்றன. இங்கு நாம் வேலை நிறுத்தம் (Strikes), போர் (War), புரட்சிகள் (Revolutions) போன்ற மூன்றுவித சமூக முரண் பாட்டுப் போராட்டங்களைப்பற்றிப் பயிலுவோம்.

### வேலை நிறுத்தம் (Strikes)

வேலை நிறுத்தம் திடீரென தொழிற்சாலைகளில் நிகழ்ந்து விடுகிறது. அதற்கு முன் தொழிலதிபருக்கும் தொழிலாளருக்கும் இடையே நிகழ்ந்துவிட்ட விஷயங்களை வேலை நிறுத்தம் பின் னரே நமக்குத் தெரியவருகின்றன. அதன் காரணங்களை ஆராய்ந்து கட்டுரைகள் வரைகின்றன. இங்ஙனம் திடீரென வேலை நிறுத்தங்கள் நிகழ்ந்துவிடுகின்றன.

தொழில் உற்பத்தி பெருகுகின்றபோது கூடவே விலைவாசி உயர்வும் ஏற்படத் தொழிலாளி தன் ஊதியத்தில் வாழ்க்கை நடத்துவது சிரமம் என நினைத்து ஊதிய உயர்வு கேட்கின்றான். தொழிலாளர் சங்கத் தலைவர் இதைப்பற்றி நிறுவன அதிகாரி களுடனும், தொழிலதிபர்களுடனும் கலந்து பேசி, தேவைக்காக வாதாடுகின்றார். அவருடைய கோரிக்கைகள் நிராகரிக்கப்படும் போது வேலை நிறுத்தப் போராட்டம் தொடங்குகின்றது. போராட்டம் நீடிக்கும்வரை தொழிலாளிக்கு ஊதியம் அளிக்கப் படுவதில்லை. தொழிலதிபரும் உற்பத்தி குறைவதால் இலாபத்தில் துண்டு விழுவதை உணருகிறார். இருவரும் எதிர்கால நன்மைக் காக இவற்றைத் தியாகம் செய்ய முன்வருகின்றனர்.

இங்கே தொழிலாளர்கள் தங்களின் வருவாயும் பொருளா தார நிலையும் உயரவேண்டும் எனக் கருதுகின்றனர். தொழி லதிபர் தனது லாபம் பாதிக்கப்படுவதையும் தன் பொருளாதார நிலைமைக்காக ஒருசில இடங்களில் வேலை நிறுத்தம் நிகழும்போது மற்ற இடங்களில் ஒதுக்கப்படும் வேலை–அதிகப்படியான மணி நேர உழைப்பு–வேலை செய்கின்ற சூழ்நிலை போன்ற பல்வேறு காரணங்களுக்காக வேலை நிறுத்தம் நிகழ்கின்றது. இருப்பினும் நாம் இவற்றை வேலை நிறுத்தத்திற்கான காரணங்கள் என்று எதையும் தனித்தனியாக எடுத்து விளக்கிவிட முடிவதில்லை. தொழிலாளரும் சரி, தொழிலதிபரும் சரி, முற்றிலும் பொருளா தாரப் பிரச்சினைகளுக்காக மட்டும் போராடுவதில்லை. அவர் களும் மனிதர்கள்; அவர்களுக்கும் உளவியல் சம்பந்தப்பட்ட வகைகளில் உணர்வுகளும், துடிப்புகளும், போராட்டங்களும் இருக்கவே செய்கின்றன. இந்த உந்துதல்களைச் சரிவர சமப்படுத்

தப்பட்டால் எத்தகைய பொருளாதார நிலையும் இருதரத்தினரின் பாலும் எவ்வித மாற்றத்தையும் ஏற்படுத்தாது. ஒருவரை ஒருவர் அறிந்து கொள்வர். பிரச்சினைகளுக்குச் சுலபமாகத் தீர்வினைக் காண்பர். உளவியல் வகையில் சம்பந்தப்பட்ட உளப் போராட்டங்களும், உணர்வுகளும் தோன்றும்போதே; அதை வெளியிட ஒரு காரணத்தைக் கற்பித்து உருவாக்கிக்கொண்டிருக்கின்றனர். பிறகு தங்களின் உள்ளப் போராட்டங்களும் உணர்வுகளும் தோன்றும்போதே, அதை வெளியிட ஒரு காரணத்தைக் கற்பித்து உருவாக்கிக்கொள்ளுகின்றனர். பிறகுத் தங்களின் உளப் போராட்டங்களைப் பின்னணியில் வைத்து தங்களின் தேவைகள், கோரிக்கைகள் எனும் செயற்கையான காரணங்களை முன் வைத்து அவர்கள் போராடி அவற்றில் வெற்றி காண்பதன் மூலம் தங்களின் உந்துதல்களைத் திருப்தி அடைவதை அவர்கள் உணருகின்றனர்.

தொழிலாளர் எவைகளை விரும்பதததககச் சூழ்நிலைகள் என்று கருதுகின்றனரோ, அவற்றைத் தொழிலதிபர்கள் ஆடம்பரச் செலவென்றும், தங்களின் பொருளாதார வளர்ச்சியை முற்றிலும் அழித்துவிடுகின்ற செயல்கள் என்றும் கருதுகின்றனர். தொழிலதிபர்கள் நியாயமான சலுகைகள் என வழங்குவதைத் தொழிலாளர்கள் அநியாயமான சலுகைகள் என எடுத்துக்கொள்கின்றனர். எனவே இருதரப்பினரின் போராட்டங்கள் அவர்களின் எதிர்ப்பார்ப்புகளின் வழிப் பிறக்கின்றன. மேலும் இருதரப்பினரின்பாலும் அதற்கு முன் இருந்துவந்த காரணங்கள் மனக் கசப்புகள், உள்ளக் கொந்தளிப்புக்களே ஒரு போராட்ட சூழ்நிலையை உருவாக்குகின்றன. வன்மையான போராட்டம் ஏறபடவும் வழி செய்கின்றன. தொழிற்சங்கத்திள் உணர்வுகளைத் தொழிலதிபர் மதிக்கவில்லை என்ற காரணத்திற்காக, தொழிலாளர்கள் தங்களுக்குக் கிட்டுகின்ற நியாயமான நன்மை பயக்கக்கூடிய சலுகைகளையும் ஏற்க மறுத்து, தொழிற்சங்கத்தின் தன்மானத்திற்காகப் போராடுகின்றனர். எனவே வேலை நிறுத்தப் போராட்டம் பின்னணியில் ஏற்படுகின்ற இருதரப்பினரின் உளப் போராட்டத்தின் விளைவினுலேயே நிகழுகின்றது.

### போர்கள் (Wars)

சண்டைகள் மனிதச்சமூகத்தினரால் எப்பொழுதுமே வரவேற்கப்படுவதில்லை. சமூகத்தின் எந்தவிதப் போராட்டத்திற்கும் நன்மைக்கும் போர் எழுவதை மக்கள் விரும்புவதில்லை. ஏனெனில் போரினுல் அழிவும் நாசமும் மனிதச் சமூகத்திற்குப் புதிய தொல்லைகளும் பிரச்சினைகளுமே உருவாகின்றன. எனவே எல்லோரும்

போரற்ற அமைதியான வாழ்க்கை நிலையையே எதிர்பார்க்கின்றனர். இருப்பினும் போர்கள் நிகழ்ந்துகொண்டுதான் இருக்கின்றன. போரின் காரணங்களைப் பற்றிய அறிவும், போரின் விளைவுகளைப் பற்றிய உணர்வும், போர் எழாமல் எப்பொழுதும் தடுத்து விடுவதில்லை.

போர்கள் என்பது என்ன? என்ற கேள்விக்கு நாம் எளிமையாகப் பதிலளித்துவிட முடியாது. போர்கள் எண்ணற்ற காரணங்களினால் எண்ணற்ற தேவைகளுக்காக நிகழுகின்றன. எனவே போருக்கான காரணங்கள் தனித்து இவை இவை என எளிதில் கண்டுபிடித்துவிட இயலாது. என்றாலும், போர்கள் தங்களுக்கென காரணங்களைக் கொண்டே ஏற்படுகின்றன. மேலும் போரிடுகின்ற அனைவரும் அப் போரின் காரணங்களால் பாதிக்கப் பட்டிருக்க வேண்டிய அவசியமில்லை. தங்களின் தலைவன் கூறுகின்ற போரின் காரணங்களை வீரர்கள் மறுக்காது ஏற்றுக் கொண்டு போரில் ஈடுபடுகின்றனர். அக் காரணங்கள் தனி மனிதனின் தன்மான உணர்வைத் தொடுபவைகளாகவும், அத் தலைவனின் கௌரவத்தைப் பாதிப்பனவாகவும் இருக்கலாம். அல்லது அத் தலைவனின் தனிப்பட்ட சுயதேவைப் பூர்த்திக்காகவும் அப் போர்கள் எழலாம். தலைவன் எடுக்கின்ற தீர்மானங்களில் சண்டை இடுகின்ற அனைவரும் பங்கு கொள்வதில்லை. அவர்கள் தீர்மானங்களைக் கூறும்போது, அதனை ஆராயாமல் அதன்படி நடக்கவே எதிர்பார்க்கப்படுகின்றனர். எனவே போரினைப் பற்றி ஆராய்கின்றபோது போரிடும் மக்களல்ல, ஒரு தனி மனிதனே ஒரு போருக்குக் காரணமாகின்றான், என்பதை நாம் அறியவேண்டும். ஒரு நாட்டின் தலைவன் இங்ஙனம் எண்ணற்ற காரணங்களுக்காகப் போரினை உருவாக்குகின்றான். நாட்டின் நலன் கருதி நிகழும் போரினைவிடப் பெரும்பாலும் தனது அரசியல் நிர்வாகத்தில் ஊழல் ஏற்படும்போதும், உள்நாட்டு மக்களிடையே ஒற்றுமை உணர்ச்சிக் குன்றும்போதும், பொருளாதாரப் பிரச்சினைகள், வேலை வாய்ப்பு வசதிகள், தேவைகள் அதிகரிக்கும் போதும், சமயத்தில் அத் தலைவனின் பதவிக்கு ஆபத்து வரும் போது, அதைக் காத்துக்கொள்ளவும் மக்களின் கவனத்தைத் திசை திருப்பவும் ஓர் அரசியல் தலைவன் ஏதாவது ஒரு காரணத்தை வைத்துக்கொண்டு போரினைத் தொடங்குகின்றான்!

போர்கள் மண் ஆசை, பொன் ஆசை, பெண் ஆசை என்ற மூன்று முக்கிய மனித தூண்டுதல்களின் விளைவில் நிகழுகின்றன. ஒரு நாடு மற்றொரு நாட்டை அடிமைப்படுத்த எண்ணி அரசாள முயன்று போரினைத் தொடங்கலாம். ஐம்பது சதவிகிதப் போர்கள் உலகில் இந்த உந்துதல்களின் விளைவாகவே

ஏற்பட்டு இருக்கின்றன. ஒரு நாடு பொருளாதார வளர்ச்சிக் குன்றும்போது பிற நாட்டின்மீது படையெடுத்துப் போரிட்டு அந் நாட்டின் செல்வங்களைக் கவர்ந்துச் செல்கிறது. இந் நிகழ்ச்சிகளை நாம் அந்நிய நாடுகளின் படை எடுப்புகளின் மூலமும், கஜினி முகமது, கோரி முகமது போன்றவர்களின் படையெடுப்பு மூலமும் கண்டிருக்கிறோம். இவற்றையன்றியும் ஒரு பெண்ணின் மீது ஒருவன் கொண்ட ஆசைக்காகவும் போர்கள் எழுந்துள்ளன. சீதைக்காக இராமாயணப் போரும், பத்மினிக்காகச் சித்தூர்ப் போரும், ஹெலன் என்பவளுக்காக டிரோசன் போரும் (Trojan War) நிகழ்ந்திருக்கின்றன.

## புரட்சி (Revolution)

ஒரு சமூகத்தில் அல்லது ஒரு நாட்டில் திடீரென்று நடைபெறுகின்ற மாற்றங்கள் புரட்சி என அழைக்கப்படுகின்றன. அம் மாறுதல்கள் நெடுங்காலமாகத் திட்டமிட்டு, சிந்திக்கப்பட்டு, ஆனால் திடீரென நிகழ்ந்த மாற்றமாகவோ அல்லது சிறிதுகூட எதிர்ப்பாராத வகையில் சட்டென நிகழ்ந்துவிட்ட மாற்றமாகவோ இருக்கலாம். புரட்சிகள் பலாத்காரத்தின் வழியிலும் போர், உள் நாட்டுக் கலகங்கள், கொலை, கொள்ளை போன்ற வன்முறைச் செயல்களின் மூலமும்–அல்லது இவற்றையெல்லாம் அற்ற அமைதியான முறையிலும் ஏற்படலாம். பிரெஞ்சுப் புரட்சி, ரஷ்யப் புரட்சி, தொழில் புரட்சி, விவசாயப் புரட்சி, பசுமைப் புரட்சி, இந்தியாவில் விடுதலைப் புரட்சி, பூமிதானப் புரட்சி போன்ற எண்ணற்ற புரட்சிகளை நாம் இங்ஙனமே இருவகைப்பட்டதாகவும் கண்டு உள்ளோம்.

சமூக அறிஞர்கள் புரட்சிகள் பல்வேறு காரணங்களினால் நிகழலாம் என்று கூறுகின்றனர். மனிதர்களின் அடிமனத்தில் அழுத்தி வைக்கப்பட்ட உந்துதல்களும், தூண்டுதல்களும் அவர்களை அறியாமலேயே திடீரென வெடித்து வெளிக்கிளம்ப, மக்கள் பழைய மூடப் பழக்க வழக்க நம்பிக்கைகளை, கட்டுப்பாடுகளை வெறுத்து ஒதுக்கிவிட்டுப் புதிய மாற்றங்களை ஏற்கின்றனர். சமயத்தில் மனிதர்களின் அடிப்படை எண்ணங்களும், ஆசைகளும், தேவைகளும் நிறைவேறாதபோது அடங்கி இருந்த உணர்வுகள் வெடித்து வெளிக் கிளம்பப் புரட்சிகள் நிகழுகின்றன. ஒருசில நேரங்களில் மனிதனிடம் குடிகொண்டுள்ள பழமை எண்ணங்களும், தூண்டுதல்களும் சரியான வழியில் திசை திருப்பாவிட்டாலும் அவை புரட்சிகளை உருவாக்குகின்றன.

காலத்திற்கேற்ப மனிதன் மாறுகின்றான். உலகம் மாறுவதற்கேற்ப மனித வாழ்க்கையும் மாற, அவனது பழக்க வழக்

கங்கள், சமயக்கோட்பாடுகள் சமூக சட்டதிட்டங்கள் மாற்றப்பட வேண்டியவைகளாக இருக்கின்றன. அப்பொழுதும் அவை மாற்றப்படாவிட்டால் மனிதர்கள் அவற்றை எதிர்த்து பின் பற்ற மறுக்கத் தலைப்படும்போது அங்கே புரட்சிகள் உருவா கின்றன. பொருளாதார ஏற்றத்தாழ்வும் சாதி சமய வேற்றுமை களும், அரசியலில் ஏற்படுகின்ற மாற்றங்களும் புரட்சிகளை உரு வாக்குகின்றன.

இங்குப் புரட்சிகள் தனி மனிதனின் திறமையினாலேயே உரு வெடுக்கின்றன. ஒரு சமூகம் எத்தனைதான் மாற்றத்தை விரும்பி யிருந்தாலும், அதற்காக முயன்றாலும் தனி மனிதன் ஒருவன் தலை வனாக முன்வந்து அப் புரட்சியில் வழி நடத்திச் செல்லாவிடில் புரட்சிகள் தோன்றுவதில்லை; தோன்றினாலும் நீடித்து நிலைத்து வெற்றி காண்பதில்லை. இங்கு, தனி மனிதனினால்தான் புரட் சிகள் நிகழுகின்றன என்றாலும் அவை அத் தனிமனிதனின் சுய தேவைக்காக நிகழ்கின்றது என்று நாம் கூற முடியாது.

அதிகாரச் சுருக்கம்

சமூக உறவுகள் விரும்பி நெருங்குதல், வெறுத்து ஒதுக்குதல், எதிர்த்துச் செயல்படுதல் எனும் மூன்றுவகைத்தான உறவு முறை களாலேயே நிர்ணயிக்கப்படுகின்றன. எதிர்த்துச் செயல் புரிதல் ஒரு நோக்கத்தின்பால் அல்லது ஒரு குறிப்பிட்ட பயனைக் கருதி நடைபெறாவிட்டால் அதனைச் சமூகம் ஏற்பதில்லை. வெறுப் புணர்ச்சி என்பது ஒருவர் மற்றவரின் உறவினின்று பின்னடை வதையும், விரோதத் தாக்குதல் அவரின்பால் எதிர்த்து முன் சென்று செயல்படுவதையும் குறிக்கின்றன. தனி நபர் ஒரு வரிடம் வெறுப்பும் விரோதத் தாக்குதலும் இயற்கை உடல்வாகு அமைப்பின் மூலம் விளைகின்றனவா, அல்லது அவற்றை அவன் பிறரிடமிருந்து கற்றுக்கொள்வதின் மூலம் தோன்றுகின்றனவா என்பதைப்பற்றிச் சமூக உளவியலாளர்கள் ஆராய்ந்துள்ளனர்.

வெறுப்புணர்ச்சி, விரோதத்தாக்குதல், கலாசாரத்தினால் பெரி தும் பாதிக்கப்படுகின்றன. இவற்றைக கீழ்த்தரக் குடும்பத்து மக்களே அதிகமாக வெளியிடுகின்றனர். நடுத்தரக் குடும்பத்து மக்கள் இத்தகைய உணர்ச்சிகளுக்கு ஆட்பட்டிருந்தாலும் அவற்றை மிகவும் முறையான, சமூகம் ஏற்றுக்கொள்ளுகின்ற வழிகளில்தான் வெளியிடுகின்றனர். மேலும் பொருளாதாரம், கல்வி வசதி போன்ற காரணிகள் நடுத்தர மககளின் இத்தகைய மனோபாவங்களைப் பிரித்து நல்ல பயனளிக்கும் வகையில் திசை திருப்பி விடுவதாக அமைகின்றன.

ஒரு சார்பெண்ணம் என்பது திட்டமிட்ட மனப்போக்கு, வெறுப்புணர்ச்சி போன்றவையாகும். ஒரு குழுவினிடை இச் சார்பெண்ணங்கள் நன்மைக்காகவும் எழலாம். ஒரு சார்பெண் ணங்கள் எங்ஙனம் வளர்ச்சி பெறுகின்றன, அவற்றை எப்படிக் கட்டுப்படுத்த முடியும் என்பவற்றைப் பற்றிச் சமூக உளவிய லாளர்கள் ஆராய்ந்துள்ளனர். ஒரு சமூகத்தின் முன்னேற்றம் இவ்வொரு சார்பெண்ணங்களால் பெரிதும் பாதிக்கப்படுவதால், நாம் இதைப்பற்றிப் பயிலுதல் அவசியமாகின்றது. சமூக முரண் பாட்டுப் போராட்டங்கள் சமூகத்துக்குள்ளேயே ஒன்றுக்கொன்று எதிராக நிகழ்கின்ற போராட்டங்களைக் குறிக்கின்றன. இங்கு நாம் வேலைநிறுத்தம், போர், புரட்சிகள் போன்றவற்றைக் குறிப் பிடலாம்.

# 15. சமூக நோய்த் தோற்றவியல்
## (Social Pathology)

மனித உடல் எண்ணற்ற வியாதிகளுக்கு உட்படுவதுபோலச் சமூகமும் நரம்புத்தளர்ச்சி உளப்பிறழ்நிலை போன்ற நோய்களுக்கு உள்ளாவது உண்டு. தொற்றுநோய் நாடு முழுவதும் பரவுவதைப் போன்றே சமூக வாழ்வைக் குலைக்கும் பயமும், கெட்ட நடத்தை வகைகளில் கிடைக்கும் கேளிக்கைகளைச் சுவைக்கத் துடிக்கும் ஆவல்களும், நாகரிகம், பொய்ச் செய்திகள் (வதந்திகள்) போன்றவையும் சமூகத்தில் பரவுகின்றன. சமூக நோய்த் தோற்றவியல் சமூகத்தில் தோன்றி எழுகின்ற இத்தகைய சமூக நோய்களைப்பற்றி ஆராய்கின்றது. எந்தத் தன்மையுடைய நடத்தை, சமூகத்தில் இந் நோய்களைத் தோற்றுவிக்கும் என்றும் எத்தகைய தன்மை உள்ள தனியவன் இந் நோய்களுக்கு ஆளாகிச் சமூகத்திடைப் பரப்புகின்றான் என்றும் அந் நோய்களை எங்ஙனம் குணப்படுத்த இயலும் என்றும் சமூக நோய்த் தோற்ற வியல் விரிவாக விளக்குகிறது.

சமூகத்தில் வாழும் தனியவர்கள் அனைவரும் சமூகத்துடன் ஒத்துப்போகின்றவர்களாக இருக்கவேண்டும் எனச் சமூகம் எதிர் பார்க்கின்றது. ஒவ்வொரு தனியவனும் தன் சமூகத்தின் பழக்க வழக்கங்களையும், கலாசாரங்களையும், அடிப்படை நம்பிக்கை களையும் பின்பற்றி அச் சமூக வாழ்வோடு ஒன்றி வாழவேண்டிய வனாய் இருக்கின்றான். ஆனால் ஒருசிலர் இந்த எதிர்ப்புகளினின்று ஒருசில சமயத்தில் மாறுபட்டுச் செயல்படுகின்றனர். இந்த மாற்றம் தீமையுடையதாயும் சமூகத்திற்கு எதிராகவும் இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. ஆனால் அவர்கள் அச் செயல் களால் சமூகத்தின் நல்வாழ்விற்குத் தீங்கு விளைவிக்கின்றனர் என்பது திண்ணமே. உதாரணமாக ஒருசில வகுப்பினர் பரத்தையர் அல்லது விலைமகளிர் நடத்தையில் ஈடுபடுகின்றனர். இதனால் அவர்களின் நடத்தைத் தவறானது என்றே சமூகத்திற்கு

எதிரானது என்றே கொள்ளமுடியாது. அந் நடத்தைகளில் ஈடு பட்ட தனியவர்களைப் பொறுத்தவரை அந் நடத்தைப் பல்வேறு சூழ்நிலைச் சந்தர்ப்பங்களைப் பொறுத்து வேண்டப்படுவதாக ஒத்துக்கொள்ளப்படுவதாக அமையலாம். ஆனால் அத்தகைய வரின் நடத்தையால் நல்ல சமூகத்திற்குச் சிறந்த உதாரணங் களாகத் தோன்றும் பிற ஆடவரும் பெண்டிரும் பாதிக்கப்படு கின்றனர் என்பதும் அத்தகைய நடத்தைக்குத் தங்களைப் பழி யாக்குகின்றனர் என்பதும் அது சமூகத்தின் ஆரோக்கியத்திற்குத் தீங்குவிளைவிப்பதனைச் சமூகத்தின் நலனைக் குறைக்கும் வியாதி யாக அது காணப்படுவதனைச் சுட்டிக்காட்டுகின்றது. இதனைப் போன்றே மயக்கம்தரும் குடிப்பழக்கத் தன்மை உண்மையான உலகினின்று ஒருவனை விலகச்செய்து, கனவுலகில் உலவ வைக் கின்றது. தன்னுடைய சிறிதுநேர சுகத்திற்காகச் சமூகத்தின் செல்வங்களையும் சேமிப்புகளையும் பயன்படுத்துகின்றான். அதனால் அவன் சமூகத்திற்கு ஆற்றவேண்டிய கடமை களினின்று அவன் விலகிச்சென்று விடுகின்றான். உடல் வலிமை பெற்றிருந்தும் உழைக்காமல் சாப்பிடவிரும்பிய சோம்பேறிச் சமூ கத்தில் பிச்சை எடுக்கின்றான். பிச்சை எடுக்கும் தொழிலைச் செய் வோர்களால் நேர்மையாக உழைத்து வாழும் மக்களின் நலன்கள் பாதிக்கப்படுகின்றன. திருடுதல், பொய்பேசுதல், கொலை செய்தல் போன்ற குற்ற நடத்தைகள் சமூகத்தை அச்சுறுத்துகின்றன. இச் செயல்கள் சமூகத்தின் பாதுகாப்பிற்குத் தீங்கு விளைவிக் கின்றன. ஆகையினால் இவை சமூக எதிர் நடத்தைகள் எனக் (Anti Social behaviour) கருதப்படுகின்றன. இங்ஙனம் ஒருசில சமூக எதிர்ப்பான கொள்கைகள் உடைய தனியவர்களின் செயல்கள் சமூகத்திற்கு நேரடியாகத் தீங்கு விளைவிக்காவிட்டா லும்—அவை மறைமுகமாகச் சமூக நோய்களைப் பரப்புவதாக அமைகின்றன.

சமூக உளவியலாளர்கள் சமூக நோய்களைப் பற்றிச் சமூக நோய்த் தோற்றவியலில் ஆராயும்போது ஒருசில தனிப்பட்ட சமய நோக்குகளையோ நீதிநெறிகளையோ, ஒழுக்கப் போதனை களையோ கையாண்டு, அதன்வழி இவற்றைத் தம் சமூகத்தில் நோயினைப் பரப்புபவை என எதையும் நிர்ணயிப்பதில்லை. ஆனால் அதே நேரத்தில் சமூகம் ஒருசில சமயக்கோட்பாடுகளுக்கு ஏற்ப மக்கள் ஒழுகிவரும்போது, அவர்களின் செயல்கள் மற்ற நீதிநெறி விதிகளுக்குக்குரிய மதிப்பையும் மரியாதையையும் குறைத்து மதிப்பிட்டு விடுவதும் இல்லை. அவர்களின் செயல் விரிவுபட்டதாய், பரந்த தன்மையுடையதாய், பொது நோக்கத் தின்பால் பொதுப் பண்புகள் கொண்டதாய் அமைகின்றது.

ஒருசில, சமயக் கோட்பாடுகளுக்குள் சமூக உளவியலாளர்கள் தங்களை இறுக்கிக்கொண்டு அதன் வழி நின்று எதையும் சமூகத்திற்குத் தீயது எனக் குறுகிய மனப்பான்மையின்பால் நிர்ணயிப்பதில்லை. அதே நேரத்தில் மதக் கோட்பாடுகளையும், ஒழுகக நெறி விதிகளையும் அறவே புறக்கணித்து, எதையும் புதிய நோக்குகளில் எடுத்துக்கொண்டு அந் நோக்குகளுக்கு அப்பாற்பட்டவற்றை, அதாவது சமூகத்தின் மதக் கோட்பாடுகளுக்கு உட்பட்டவற்றை தீயன என முடிவு கட்டுவதில்லை. சமூக உளவியலாளர் நோக்கு இவ்விரு எல்லைகளையும் மனதில் கொண்டதாக இவ்விரு செயல்களுக்கும் பயன்படுவதாக அமைகின்றது. எனவே இங்கு நாம் சமூக நோய் தோற்றவியலில் காணுகின்ற எதுவும் குறுகிய மனப்பான்மையின்பால் அல்லது முற்றிலும் புதிய எதிர்நோக்குகளின்பால் இல்லாது இடைப்பட்டதாகவே அமைகின்றது.

## பரத்தைத் தன்மை (அல்லது விபச்சாரம்) (Prostitution)

சமூக, சமய, அறத் துறைகளின் கட்டுப்பாடுகளும், பழக்க வழக்கங்களும், மனிதன் தனது பாலினத் தொடர்புகளைத் திருமண வழி நிர்ணயிக்கப்படுகின்ற உறவு வழித் தொடர்புகளினூடே வைத்துக் கொள்ளவேண்டும் என்று போதிக்கின்றன. அது மட்டுமின்றிக் கணவன் தன் மனைவியின் பாலின உந்துதல்களைத் திருப்திப்படுத்த வேண்டியவனாகவும் குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பினை ஏற்பவனாகவும் இருக்கவேண்டுமென்றே அவை எதிர்பார்க்கின்றன. சமூகத்தில் இளமைத் திருமணங்கள் பல அறநிலைகளுக்குப் புறம்பான விளைவுகளை விளைவிக்குமென்பதால் அவை கண்டிக்கப்படுகின்றன. திருமணத்தின்போது ஓர் ஆடவனும் ஒரு பெண்ணும் ஒருவர் மற்றவரின் பாலின உந்துதல்களைத் திருப்தி செய்யவேண்டிய உடல் வளர்ச்சியையும் மன வளர்ச்சியையும் பெற்றிருக்கவேண்டும். இந்நிலை மாறுபட்டிருப்பின் ஒரு கணவன் தன் மனைவியின் பாலின உந்துதல்களைத் திருப்தி செய்யாதபோது அங்கே ஒழுக்கக் கேடுகளும், ஒழுங்கீன நடத்தைகளும் பிற ஆடவனுல் பெண்டிரைத் தேடுகின்ற முயற்சியும் ஏற்படுகின்றன. தற்போது இத்தகைய சூழ்நிலை நம் நாட்டில் காணப்படுவது குறைந்துகொண்டே வருகிறது. ஆனுல் இது மனித வாழ்வின் மற்றெரு பகுதியிலிருந்து இப்பொழுது தலை தூக்குகிறது. பொருளாதார வசதியும், ஏற்ற வாழ்க்கை வசதிகளும் நிலையான வருமானமும் அற்ற ஏழைக் குடும்பத்துப் பெண்டிரும், ஆடவரும் தங்களின் திருமண வயதைத் தள்ளிப் போட்டுக்கொண்டே செல்கின்றனர். பெரும்பான்மையோர் இத்தகைய சூழ்நிலைகளில் முப்பது வயதிற்கு பின்னரே மணக்கின்றனர். அதனுல் இத்தகைய திருமணம்

நடைபெறுகின்றவரை அவர்கள் தங்களின் பாலின உந்துதல் களுக்கு ஆட்படுத்தப்படாதவருக நடந்துகொள்கின்றனர். இந் நிலையில் சமூக, சமய அறநெறிக் கட்டுப்பாடுகளை மீறி அங்கே ஒழுங்கீனமான நடத்தைகளும், பரத்தைத் தன்மையும் தோன்று கின்றன.

பரத்தைத் தன்மைக்கான காரணங்கள்

பரத்தமைத் தன்மை ஆடவனின் தேவையை நிறைவேற்று வதற்காகப் பழங்காலத்தில் எழுந்தது. பிற்காலச் சோழர்களின் தமிழ் சமூகத்தில் 'தாசிகள்' என்பர் ஒருநாட்டின் ஒரு முழுப்பகுதி யையே தங்கள் வசப்படுத்திக்கொண்டு வாழ்ந்து வந்தனர். இவர்கள் 'தேவதாசிகள்' முறையால் அவ்வூர்த் தெய்வத்திற்குத் தங்களை மனைவியர்களாய் நினைத்துப் பொட்டு எனும் தாலியை அக்கோயிலில் சென்று பூசை நடத்திக் கட்டிக்கொண்டு அதன் பின்னர் அவ்வூரில் செல்வம் மிக்க வணிகர்கள், வீரர்கள், அரசர்கள் போன்றோருக்கு மனைவியர்களாய் வாழ்ந்து வந்தனர். ஒரு தாசி ஒரு காலத்தில் ஒருவனையே தன் கணவனுக ஏற்றுக் கொண்டு அவனது பாதுகாப்பில், அரவணைப்பின் கீழ் வாழ்ந்து அவனுக்கு இன்பம் தரும் பொருளாக விளங்கினுள். அவன் பொருளாதாரத்தில் நொடித்துப்போன நேரத்திலும், இன்னெரு தாசியை வைத்துக்கொண்டு இவளைப் புறக்கணிக்கும்போதும், அல்லது இவளே அவனைவிடச் சிறந்த அழகான செல்வம் மிக்க வாலிபன் தன்னை விரும்புவதைக்கண்டு அவனுடன் வாழ ஆசைப் படும்பொழுதும், அவள் முதலாமவனைத் துறந்து இரண்டா மவனின்பால் தன் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளுகின்ருள். எனவே அக்காலத்தில் தேவதாசிமுறை ஒரு சமூகக் கட்டுப் பாட்டின்பாலும் அறநெறியின்பாலும் கட்டுப்பட்டதாய்க் காணப் பட்டது. தேவதாசிகள் கலை, நடனம், இசை போன்றவற்றை வளர்ப்பதற்காகவும், பொது மக்களுக்குக் கலை விருந்தளிப்பதற் காகவும், ஏற்ற குழுவினர் என அங்கீகரிக்கப்பட்டனர். அவர்கள் வாழ்வு சமூகத்தின் ஒரு தனிப்பட்ட பகுதியின் வாழ்வாகவே ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தது. ஆனுல் அச் சமூகநிலை இப்போது முற்றிலும் மாறுபாடுகள் ஏற்பட்டுள்ளன.

பரத்தமைத் தன்மைக்கான காரணங்களை ஆராய்ந்தபோது அத் தொழில் ஆடவனின் தேவைகளை நிறைவேற்றுவதற்காகவே தோன்றியது என்னும் கருத்து இன்னும் நிலவி வருகின்றது. ஆடவன் தன் தேவைகளைத் திருமணத்திற்கு முற்பட்ட காலத் திலும் திருமணத்திற்குப் பின் தன் மனைவி கருவுற்றிருக்கும் காலத்திலும் அதனையடுத்த மூன்ருண்டுக் காலம் வரையிலும்

திருப்திப்படுத்தப் பரத்தையர்களை நாடுகின்றான். பெண்கள், ஆண்களைவிட அவ்வளவு மேல் ததும்புகின்ற உணர்ச்சி பெற்றவர் அல்லர் எனினும் ஒருசில பெண்களின் அடிமனதில் தீராத பாலின உந்துதல்கள் இருந்துகொண்டேயிருக்கின்றன. அத்தகைய பெண்கள் தங்கள் உந்துதல்களைத் திருப்திப்படுத்த பரத்தமையை நாடுகின்றனர். இன்னும் பொருளாதார நிலையும், குடும்பத்தில் வளர்க்கப்பெறும் சூழ்நிலையும், தாய் தந்தையரின் நடத்தையும், கட்டுப்பாடற்ற தன்மையும் பெண்களைத் தவறான நடத்தைக்குத் தூண்டுகின்ற காரணிகளாக அமைகின்றன. ஒரு சில பெண்கள் ஆதரவற்ற நிலையினாலும், பொருளாதார நெருக்கடியினாலும் பெரிய குடும்பத்தின் பொறுப்பினை ஏற்க வேண்டியிருப்பதினாலும் இன்னும் பல சூழ்நிலைகளாலும் பரத்தையர்களாக மாறுகின்றனர். கற்பழிப்பு, இன்னும் ஒரு முக்கியமான காரணியாகும். நற்குடியில் பிறந்த பெண்ணும் சமய சந்தர்ப்பத்தால் தவறிவிட நேரும்போதும், தான் காதலித்தக் காதலினால் கைவிடப்படும் போதும், தன் நிலையினின்று மாறிச் சமுதாயத்தில் ஏசப்பட்டுச் சுற்றத்தினர் உறவினரால் நிராகரிக்கப்படும்போதும், வேறு வழியின்றிப் பரத்தைத் தொழிலை ஏற்றுக்கொள்ளுகின்றாள். இந்நிலையால் அப்பெண் குற்ற உணர்வோடு குடும்ப வாழ்வுக்கான எல்லாத் தகுதிகளையும் இழந்த நிலையையும் அடைகின்றாள். தனது உயர்ந்த சமுகத்தை இனித் தன்னால் நாட முடியாது என்பதாலும் தனக்கு இதைவிட்டால் வேறு கதி இல்லை என்பதாலும் அத்தகையவர் பரத்தைமைக்கு ஆளாகின்றனர். ஒருசிலர் முரட்டுத்தனமான அறிவற்ற தாய் தந்தையர்களாலும், பாதுகாப்பாளர்களாலும் பரத்தைத் தொழிலுக்குத் தள்ளப்படுகின்றனர்.

திருமணத்தில் தாம்பத்திய வாழ்விற்குள்ளான பெண்களும் பரத்தைகளாக மாறுகின்றனர். தனது இளவயதில் வயது சென்ற மனிதரை மணந்துகொள்ளும் பெண் தன் எஞ்சிய காலத்தில் பரத்தையாக வாழ்கின்றாள். கணவன் ஆதரவினை இழந்துவிட்டவளும், கணவனைத் திடீரென இழந்துவிட்ட பெண்ணும் பரத்தைத் தொழிலை ஏற்கின்றாள்.

மனிதர்களில் சிலர் வியாபாரிகளாகவும், நாடு சுற்றி நாடு செல்லும் வர்த்தகப் பயணிகளாகவும் கப்பற் பயணிகள், மாலுமிகள், போர்வீரர்களாகவும் தங்களின் வாழ்க்கையை ஏற்றுக்கொள்கின்றனர். இவர்கள் ஓரிடத்தில் நிலையாக தங்கியிருக்கமுடியாது என்பதால், குடும்பத்திலேயே தொடர்ந்து நாட்களைக் கழிக்கமுடியாது என்பதாலும் இவர்கள் பரத்தைகளை நாடுகின்றனர். ஒருசில மனிதர்களின் மனப்போக்கும் உடல்

வாகும், முரட்டுத் தன்மையும், வசதியற்ற வாழ்க்கையும் அவர் களைப் பரத்தமைத் தொழிலை நாடுபவர்களாகச் செய்கின்றன. இவை போன்ற எண்ணற்ற காரணிகள் பரத்தமைத் தன்மைக்குக் காரணங்களாகக் காணப்படுகின்றன

## பரத்தைத் தன்மையும் சமூக அமைப்புக் குலைவும் (Prostitution and Social disorganisation)

பரத்தைத் தன்மையை ஏற்கின்ற பெண் இரவெல்லாம் கண் விழித்துத்தான் தொழிலை நடத்துகின்ருள். பகலில் தனித்து உறங்குகின்ருள். இதனுல் அவள் சமூகத்தின் நடத்தை களினின்று ஒதுங்கியே வாழவேண்டியவளாயிருக்கின்ருள். அவளது குடும்பத்தினரும், சந்ததியினரும், சமூகத்தில் ஒதுக்கப் படுகின்றனர். கல்வி வசதி, வேலை வாய்ப்பு வசதிகளில் இன்னும் சமூக விழாக்களில் அவர்களுடைய பங்கு மறுக்கப்படுகின்றது. மேலும் ஒரு முறை பரத்தமைத் தொழிலை ஏற்றவள் பிறகு எப்படித்தான் முயன்ருலும் நல்ல குடும்பப் பெண்ணுக மாறுவது முடியாது. அதிக வருமானம் பெறுவதற்கேற்ற தொழில் என்ப தோடு தன் கீழ்த்தர ஆவலையும் பூர்த்திசெய்யும் தொழிலாகவும் அது படுவதால் மற்ற பெண்டிரும் பரத்தைகளாக மாற ஏதுவா கின்றது. எல்லாவற்றையும்விடப் பரத்தையானவள் எண்ணற்ற உடல் நோய்களைப் பரப்புவதோடு அல்லாமல் கண்ணியமாக வாழ்கின்ற மனிதர்களுக்கு ஒழுக்கக் கட்டுப்பாடுகளோடு வாழ் கின்ற பெண்களுக்கு ஒரு சபலத்தை ஏற்படுத்துபவளாகவும் விளங்குகின்ருள். இவை ஒரு சமூகத்தின் சட்ட திட்டங்களைக் குலைப்பதாக அமைகின்றன.

## குடிப்பழக்கம் (Alcoholism)

குடிப்பது உடம்புக்குத் தெம்பு தருவது என்ற கருத்து நம் நாட்டில் இப்பொழுது வேகமாகப் பரவி வருகின்றது. சாதாரணத் தொழிலாளி முதல் உடம்பை வளைத்துப் பலப்படுத்திச் செயல் படும் நடுத்தர மனிதன் வரை பெரும்பாலும் உடல் வேலைகளில் ஈடுபட்டிருப்போர் தங்களின் உடல் வலியையும், பலக்குறை வினையும், களைப்பையும் தீர்க்கக் குடியினை நாடுகின்றனர். ஏனை யோர் மனக்கவலையை மறக்க அல்லது தாங்கள் விரும்புகின்ற கற்பனை உலகில் சஞ்சரிக்க குடிப்பழக்கத்தை நாடுகின்றனர். கவிஞர்களும், கலைஞர்களும், ஓவியர்களும் இன்னும் சிறந்த இசை வல்லுநர்களும் பெரும்பாலும் குடிப்பழக்கத்தை ஏற்றிருக்கின் றனர். இங்ஙனம் குடிப்பழக்கம் சமூகத்தின் எல்லாவகை நிலை களிலும் காணப்படுகின்றது.

குடிப்பழக்கம் நல்லதா கெட்டதா என்பதைவிட அது அவசிய மானதா என்ற கேள்வியே நமக்குக் குடிப்பழக்கத்தின்பால் விளை யும் சமூகக் கெடுதிகளை நன்கு எடுத்துணர்த்தும். குடிப்பவன் விரைவில் தன்னைக் கட்டுப்படுத்தும் தன்மையை இழக்கின்றான். அவனது நரம்பு மண்டலங்கள் தொடர்ந்து குடிப்பதால் பலவீன மடைகின்றன. பின்னர் மூளையின் வேலைகள் தடைப்படுகின்றன. தூக்கமின்மையும், இன்னும் அதிகமாகப்போனால் மூச்சுவிட இயலாத தன்மையும் ஏற்படுகின்றது. குறைந்த அளவு உயர்ந்த ரக மதுவினை உடலின் ஆரோக்கியம் வேண்டி மருத்துவரின் அறிவுரையை ஏற்றுக் குடிப்பதால் உடலுக்கு நன்மை உண்டு ஆனால் ஒருமுறை சுவைத்த உணர்வு மீண்டும் கட்டுப்படுத்த இயலாத அளவுக்குக் குடிக்கும் வெறியைத் தூண்டுவதாக அமையும்.

மெக்டுகல் என்பார் மனிதன் குடிப்பதனால் ஏற்படுகின்ற களிப் புக்காக அல்லது கவலைகளை, வருத்தங்களை மறந்து விடுதலை பெறுவதற்காக–மட்டுமின்றி ஒருசிலர் தங்களின் இயற்கையான வெட்கப்படுகின்ற குணப்பண்புகளினால் மற்றவர்களுடன் கலந்து பழகாது ஒதுங்கி நிற்கின்றனர். அவர்கள் தங்களுடைய அக் குணப் பண்புகளிலிருந்து ஒருசில மணித்துளிகளாவது விடுபட்டு வெளிவந்து மற்றவர்களுடன் சிரித்து மகிழ்ந்து, கலந்து பழகித், தங்களின் குறையினைப் போக்கிக்கொள்ளக் குடிக்கின்றனர்; என்று கூறுகின்றார்.

## குடிப்பழக்கத்தால் ஏற்படும் சமூக விளைவுகள் (Social consequences of Alcoholism)

குடிப்பழக்கத்திற்கு ஆளாகும் மனிதனின் குடும்ப வாழ்க்கை முதலில் பாதிக்கப்படுகின்றது. அவனைக் கண்டு அவன் மனைவி யும் குடிக்கத் தலைப்படுகின்றாள். பொருளாதாரம் பாதிக்கப்படும் பொழுது கணவனை மனைவி வெறுக்கின்றாள். குடிப்பதற்கு அதிகமாகப் பணம் செலவு செய்யப்படுவதால் குடும்பத்தின் ஏனைய செலவுகள் பாதிக்கப்படுகின்றன. நண்பர்களிடை யேயும், உறவினர்களிடையேயும் விரைவில் பிளவு ஏற்படு கின்றது. ஓரளவிற்குக் குடிப்பழக்கத்திற்கு ஆட்பட்ட குடும்பம் தன் சமூகத் தகுதியை விரைவில் இழக்கின்றது. குடிப்பழக்கம் பாலின உந்துதல்களை அதிகரிக்கவைக்கின்றது. அடுத்தடுத்து தன் பாலின உந்துதல்களைத் திருப்திப்படுத்த விரும்பும் குடி காரன் தனக்குக் கிட்டுகின்ற எல்லா வழியையும் அதற்காகப் பயன்படுத்தத் தொடங்குகின்றான். தனக்கு ஏற்ற துணை கிட்டாதபோது தவறான வழிமுறைகளைப் பின்பற்றத் தொடங்கு

கின்ருன். இதனுல் கற்பழிப்பு நடத்தைகள் பெருக ஏதுவாகின்றது. குடிப்பவன் தன் கடமையை மறப்பதோடு மற்றவர்களின் உழைப்பை உறிஞ்சும் அட்டையைப்போல் விளங்குகின்ருன். எனவே சமூகம் குடிப்பழக்கத்தை வெறுத்து ஒதுக்குகின்றது.

### குற்ற நடத்தை

சமூகம் ஒத்துக்கொள்ளாது மறுக்கின்ற நடத்தைகளனைத்தும் குற்றங்களாகும். ஒரு சமூகம் பொறுத்துக்கொள்ளும் குற்றங்கள் என்பது சமூகத்திற்குச் சமூகம் மாறுகின்றது. அந்தப்பொறுத்துக் கொள்ளும் தன்மைக்கேற்பவே குற்றங்களும் மாறுபடுகின்றன. சமூகத்தின் பழக்க வழக்கங்களும் பண்பாடுகளும் மரபுச் செயல்களும் நாட்டிற்கு நாடு மாறுபடுகின்றன. குற்றங்களும் இவற்றின்பால் நிர்ணயிக்கப்படுவதால் அதற்கேற்பவே மாறுபாடு அடைகின்றன. மூன்ருவதாகக் குற்றங்கள் சூழ்நிலைக்கேற்ப மாறுகின்றன. ஒருசில சூழ்நிலைகளில் குற்றங்களாகக் கருதப்படுபவை மற்ற சூழ்நிலைகளில் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. எனவே குற்றங்கள் என்பன இன்னின்ன நடத்தைகள் என்று நம்மால் பொதுவாகக் கணிக்க இயலவில்லை. ஆனுல் குற்றங்கள் என்பது சமூகத்தில் ஏற்றுக்கொள்ளப்படாத நடத்தைகள் என்று நாம் பொதுவாகக் குறிப்பிட்டுக் கூறுகிருேம்.

### குற்றங்களின் தோற்றங்கள்

இத்துறையில் அதிக ஈடுபாடுகொண்டுள்ள சுதர்லேண்ட் (E.H. Sutherland) என்பார் குற்றங்களின் தோற்றத்திற்கான காரணிகளை ஆறுவகையாகப் பகுக்கின்ருர்.

(1) சமயத்தையும், சாதிக் கட்டுப்பாட்டையும் பற்றி எழுவது.
(2) தற்காலிகமான குற்றங்கள்: இவை ஒரு நாளில், ஒரு வாரத்தில் ஒரு வருடத்தில் தோன்றுவது.
(3) சமூகம்: சமூகத்தில் ஒருவன் சார்ந்துள்ள குடும்ப நிலை, படிப்பு, செய்கின்ற தொழில், வருமானம் போன்றவைகளை ஆராய்கின்றது.
(4) நிறுவனங்கள் சார்ந்த குற்றத் தோற்றங்கள்.
(5) உடல் சார்ந்த குற்றத் தோற்றங்கள்.
(6) உளம் சார்ந்த குற்றத் தோற்றங்கள்.

இப் பகுப்பு அவ்வளவாக உபயோகத்திற்கு உதவாததால் டூப் (Doob) என்பார் மூன்று காரணிகளைக் குற்றங்களின் தோற்றங்களுக்கு எடுத்துக் காட்டுகின்ருர்.

(1) மனிதத் துன்பம் (Human mysery)

குற்றங்களை விளைவிக்கின்ற துன்பங்கள், போதிய கல்வியறிவில்லாமை, ஏழ்மைக் குடும்பத்தின் நிலைகள், பசி, உளம் பிறழ்ந்த நிலை கட்டுப்பட இயலாத உணர்ச்சி போன்ற காரணிகளால் ஏற்படுகின்றன.

(2) பெரிதுபடுத்தி மதிப்பிடுதலும், தண்டனைகளைக் குறைவாக மதிப்பிடுதலும் (Over estimation of rewards and under estimation of Punishments)

குற்றவாளி போதிய அளவிற்குச் சமூகப்படுத்தப்படாதவன் என்பதோடு அவன் மிகவும் ஏழ்மையான சமூக வாழ்க்கை வாழ்பவன் என்ற கருத்தையும் நாம் மனதில் கொளளவேண்டும். அவனது ஏழ்மையான சமூக வாழ்வு அவனுக்குக் குறுகிய மனப்பான்மை கொண்ட வியாபார வாழ்க்கை நோக்கினை அவனுக்குத் தருகின்றது. அவன் மிகப் பெரிய செல்வத்தை, சொத்துகளைத் தன்னுடைய அறிவாற்றலால் மிகவும் வேகமாகக் கடினமற்ற முறையால் மற்றவர்களைக் காட்டிலும் அதிகமாகச் சம்பாதிக்க இயலும் என்று எண்ணும்போதே–தன் செயலின் விளைவினுல் தனக்குக் கிட்டுகின்ற தண்டனையையும் அதில் அவன் செலவிடுகின்ற நாட்களையும் எண்ணிப்பார்க்க அவன் மறந்து விடுகின்ருன். அவன் தனக்குக் கிட்டுகின்ற செல்வத்தைத் தான் அடைய விரும்பித் துன்பப்பட்ட நாட்களின் எண்ணிக்கை வைத்துப் பார்ப்பதில்லை. குற்றவாளி தன் நடத்தையின் பின் விளைவுகளைப் பற்றித் (தண்டனைகளை) குறைவாகவே மதிப்பிடுகின்ருன். என்ன நேரினும் தான் இலகுவாகத் தப்பித்துக் கொள்ள இயலும் என்று நம்புகிருன். நடைமுறைகளில் செயல்படுகின்ற உண்மை சார்ந்த அறிவுத்தன்மையை இழந்து எதுவும் நல்லபடியாகவே நடக்கும் என்ற (Optimism) கற்பிதக் கொள்கையை ஏற்றுச் செயல்படுகின்ருன். இங்ஙனம் குற்றவாளி, பரிசுகளின் தரத்தை அளவுக்கு மீறி மதிப்பிடுதலும் அதற்குக் காட்டுகின்ற தண்டனைகளைத் தாழ்த்தி மதிப்பிடுதலும் குற்றங்கள் பெருகுவதற்கான காரணங்களாய் அமைகின்றன.

(3) குற்ற விசாரணை, குற்றப் பகுப்பு பற்றிய அறிவு (Knowledge o f Criminal Procedure and Techniques)

எவ்வகையான செயல்கள் குற்றமானவை என்ற அறிவைப் பெருதவன் எதனையும் கெடுத்துவிட்டாலும் பயனடையலாம். எனவே அவன் செய்கின்ற குற்றச் செயல்கள் குறைகின்றன. ஆனுல் இவை தாம் குற்றங்கள், இந்தக் குற்றங்களை இன்னின்ன வழிகளில் தான் கண்டுபிடிக்க இயலும் என்ற போதிய

அறிவைப் பெற்றுள்ள ஒருவன் அந்த அறிவைச் சாதகமாக்கி குற்றத் தடுப்புச் சட்டத்தோடு விளையாடிக் குற்றம் புரிந்து தப்பித்துக்கொள்ளுகின்ருன். இவ்வகையில் அடுத்தடுத்து தவறுகள் செய்கின்ருன்.

குற்றங்களும் அவற்றின் தண்டனைகளும் பற்றிய அறிவு கிராமப்புற மக்களின்பால் குறைந்து காணப்படுவதால் ஆங் காங்கே குற்றங்கள் குறைந்தே காணப்படுகின்றன. ஆனுல் நகர்ப் புறங்களில் குற்றங்கள் மிகுதியாயுள்ளன. ஏமாற்றுவதற்கும் மோசடிச் செயலுக்கும் திறமையான செயல்தன்மை வேண்டியிருக் கின்றது. இக் குற்றங்களைப் புரிவோர் நல்ல அறிவாற்றல் உடையவராகவும் குற்றங்களைப் பற்றியும் அவற்றின் தண்டனை களைப் பற்றிய போதிய அறிவு பெற்றிருப்பவர்களாகவும் அவ்வறிவினைச் சாதகமாக்கிக்கொண்டு ஒருசில நுணுக்கமான இடங்களில் தங்களின் திறமையால் குற்றத்தை நிகழ்த்திவிட்டுத் தப்பித்துக் கொள்பவர்களாகவும் காணப்படுகின்றனர்.

குற்றங்களின் தோற்றங்களாக கருதப்படுகின்ற இந்த நம்பிக் கைகள் அனைத்தும் பழமையானவை, உண்மையற்றவை என்று இப்பொழுது மறுக்கப்படுகின்றன. இப்போது குற்றங்களின் தோற்றங்களும் சமூகமே என்று நம்புவதில் ஓரளவிற்கு உண்மை இருக்கின்றது. குற்றம் கண்டுபிடித்தல் மிகவும் எளிய செயல். சமூகம் தனது தன்மையில் பழக்க வழக்க நியதிக் கட்டுப்பாடு களில் ஒருசிலவற்றைக் குற்றமற்றவை ஒருசிலவற்றைக குற்ற முள்ளவை என்று எளிதில் கற்பித்து அவ்வழியில் தீர்ப்பளிக் கின்றது. ஆனுல் அதே நேரத்தில் தனியவன் குற்றம் புரிவதற் கான சூழ்நிலைகளை, சந்தர்ப்பங்களை, சமூகமே உருவாக்குகின்றது. எனவே பொதுவாகச் சமூகமேகுற்றத்தின் தோற்றக்களம் என்று இப்பொழுது நம்பப்படுகின்றது.

### குற்றங்களும் சமூக அமைப்புக் குலைவும் (Crime and Social dis-organization)

சமூகத்தின் அமைப்பு குலைவதற்கு முகக்கிய காரணம் குற்றங் களே ஆகும். அமைதியான குளத்தில் கல்லை எடுத்து எறிவதால் உண்டாகும் அலை வரிசையைப் போன்று ஒரு குற்ற நடத்தை சமூகத்தைத் தொடர்ந்து பாதிக்கின்றது. சமூகக் குலைவு என்பது சமூகத்தில் வாழ்கின்ற உறுப்பினர்கள் ஒருவருக்கொருவரும் ஒற்றுமையின்றிப் பிளவுபடும்படியான செயலில் ஈடுபடுவதாகும். குற்றம் புரிவோா சமூகத்தின் அமைப்பின் இடையே நின்று சமூகத் தொடர்புகளை எல்லா வழிகளிலும் தடைப்படுத்து

கின்றனர். அவன் குற்றம புரிந்தான் என்ற சூழ்நிலையில் அவனது தொடர்பினை அறுத்துக்கொள்ளும் சமூகம் அவன்பால் அவனது குடும்பத்தையும் உறவினர்களையும் சுற்றத்தையும் வெறுத்து ஒதுக்கத் தலைப்படுகின்றது. அழகான வலைப் பின்னலின் நடுவில் ஒரு நூல் வெட்டப்படுவதைப் போன்றும் அந் நூலைப் பிடித்து வெளியே இழுக்கும்போது எண்ணற்ற பின்னல் நூல் கட்டுகளின் அமைப்பு குலைவது போன்றும் ஒருவனின் குற்ற நடத்தை சமூகத்தின் ஒருங்கமைப்பில் குலைவினை ஏற்படுத்துகின்றது. அழகான அந்த வலைப் பின்னல் எண்ணற்ற இடங்களில் காணப்படுகின்ற இந்த ஒற்றுமைக குலைவால் அவ் வலைப் பின்னல் தன் தரத்தினின்று இறங்குவதைப் போன்று அத்தகைய சமூகம் நன்மதிப்பை இழக்கின்றது.

எல்லாக் குற்றங்களுமே தேவைகளின் விளைவால் பேராசைகளின் விளைவால் ஏற்படுகின்றன. ஒழுங்காக அமைக்கப்பெற்ற சமூகத்தில் தனியவர்களின் சுய முயற்சியால் தேவைகள் அனைத்தும் பூர்த்தி செய்யப்பட்டுவிடுகின்றன. இங்ஙனம் தனியவர்களை உருவாக்காத சமூகத்தில் பேராசை பிடித்த தனியவர்கள் உருவாகி எளிய வழியில் மற்றவர்களை ஏமாற்றியே செல்வம் சேர்க்க முயற்சிக்கின்றன. மேலும் பேராசையின் விளைவால் செல்வங்களை அதிகமாக ஒருவனே சேர்த்து வைத்துக்கொள்ளுவதாலும் மற்றவர்களின் வாய்ப்பும் வசதியும் தடைப்படுவதாலும் குற்றங்கள் பெருகுகின்றன. இந்நிலையில் சமூகம் பெரிதும் பாதிக்கப்படுகிறது.

#### அதிகாரச் சுருக்கம்

சமூக நோய்த் தோற்றவியல் சமூகத்தில் தோன்றி எழுகின்ற சமூக நோய்களைப் பற்றி ஆராய்கின்றது. எந்தெந்தத் தன்மையுடைய நடத்தைச் சமூகத்தில் இந் நோய்களைத் தோற்றுவிக்கும் என்றும் எத்தகைய தன்மையுள்ள தனியவன் இந் நோய்களுக்கு ஆளாகிச் சமூகத்தினிடை இதனைப் பரப்புகின்றான் என்றும் அந் நோய்களை எங்ஙனம் குணப்படுத்த இயலும் என்றும் சமூக நோய்த் தோற்றவியல் விரிவாக விளக்குகின்றது.

பரத்தைத் தன்மையை ஆராய்கின்றபோது, அத் தொழில் ஆடவனின் தேவைகளை நிறைவேற்றுவதற்காகவே தோன்றியது என்று கருதப்படுகின்றது. ஆடவன் தன் தேவைகளை திருமணத்திற்கு முற்பட்ட காலத்திலும் திருமணத்திற்குப் பின் தன் மனைவி கருவுற்றிருக்கும் காலத்திலும அதனையடுத்த மூன்றாண்டுக் காலம் வரையிலும் திருப்திப்படுத்தப் பரத்தைகளை நாடுகின்றான். இன்னும் பொருளாதார நிலையும் குடும்பத்தில் வளர்க்கப்பெறும்

சூழ்நிலையும் தாய் தந்தையரின் நடத்தையும் கட்டுப்பாடற்ற தன்மையும் பெண்களையும் ஆண்களையும் பரத்தைத் தன்மையின் பால் ஈடுபடுத்துகின்றது.

குடிப் பழக்கம் நல்லதா கெட்டதா என்பதைவிட அது அவசியமானதா என்ற கேள்வியே நமக்குக் குடிப் பழக்கத்தின் பால் விளையும் சமூகக் கேடுகளை எடுத்து உணர்த்துகின்றது. குடிப்பவனின் தனி வாழ்க்கை மட்டுமின்றி அவனது சமூக வாழ்க்கையும் பாதிக்கப்படுகின்றது.

குற்ற நடத்தை என்பது சமூகம் ஒத்துக்கொள்ளாது மறுக கின்ற நடத்தைகளை ஒருவன் செய்வது ஆகும். சுதர்லேண்ட் என்பார் குற்றங்களின் தோற்றத்திற்கான காரணிகளை ஆறு வகையாகப் பகுக்கின்றார். சமூகத்தின் குழைவிற்கு முக்கியக் காரணம் குற்றங்களேயாகும். குற்றங்களின் பெருக்கத்தால் சமூகம் பெரிதும் பாதிக்கப்படுகின்றது.

---

# மேற்கோள் நூற்பட்டியல்

## (Bibliography)


1. ADINARAYAN, S. P., Social Psychology, Allied Publishers, Bombay, 1964.
2. ASCH, S. E., Social Psychology, Prentice-Hall, New York, 1952.
3. BHATIA, H. R., Social Psychology.
4. BONNER, H., Social Psychology, American Book Company, New York, 1953.
5. DEUTSCH, M. AND KRAUS, R. M., Theories in Social Psychology, New York : Basic Books, 1965.
6. DOOB, L. W., Social Psychology, Henry Holt, New York, 1952.
7. KLINEBERG, O., Social Psychology, Henry Holt, New York, 1954.
8. KLINEBURG, O. AND CHRISTIE, R. (Ed.), Perspectives in Social Psychology, New York : Holt, Rinehart and Winston, 1965.
9. KRECH, D. AND CRUTCHFIELD, R. S., Theory and Problems of Social Psychology, McGraw Hill Book Company, New York, 1948.
10. KRETCH, D. ; CRUTCHFIELD, R. S. AND BALLACHEY, E. L., Individual in Society, New York : McGraw Hill, 1962.
11. KUPPUSWAMY, B., An Introduction to Social Psychology, Asia Publishing House, Bombay, 1961.
12. LINDGREN, H. C., An Introduction to Social Psychology, New York : Viley, 1969.
13. LINDGREN, H. C., (Ed.), Contemporary Research in Social Psychology, New York : Holt, Rinehart and Winston, 1965.
14. MCPHERSON, J. H. Cited in Taylor, C. W. (Ed.), Creativity Progress and Potential, New York : McGraw Hill, 1964.
15. NEW COMB, T. M., Social Psychology, Tavistock Publications, London, 1952.
16. RATH, R. N., Cited in A Survey of Research in Psychology, Popular Prakasham, Bombay, 1972.
17. SARGENT, S. S. AND WILLIAMSON, R. C., Social Psychology, The Ronald Press Company, New York, 1958.

# கலைச்சொற்கள்

## (Glossory)

### A

Abnormal — பிறழ்வான நிலை
Adultry — கற்பிழப்பு
Affection — அன்பு கெழுமியநிலை
Aggression — ஆக்கிரமித்தல் அல்லது தாக்குதல்
Agitator — ஆர்ப்பாட்டக்காரர்
Aguste Comte — அகஸ்டே காம்டே
Alcoholism — குடிப்பழக்கம்
Allee — அல்லி
All or none — எல்லாம் அல்லது ஒன்றுமில்லா
Allport, F. H. — ஆல்போர்ட், எப். எச்.
Alvador — ஆல்வேடர்
Ansbacher — அன்ஸ்பாக்கர்
Anthropology — மனித இயல் நூல்
Anti-Social behaviour — சமூக எதிர் நடத்தை
Apathetic — உணர்விழந்த நிலை
Arapesh — ஆரபிஷ்
Ash — ஆஷ்
Atlantic Eels — அட்லாண்டிக் ஈல்ஸ்
Attitude — மனப்பான்மை
Attitude change — மனப்பான்மையின் மாற்றம்
Attitude measurement — மனப்பான்மையினை அளவிடுதல்
Authoritarian — அதிகாரத்துவன்
Authoritarian Style — ஆட்சியாதிக்க அல்லது அதிகாரத்துவப் பாங்கு

### B

Baboons, Rhesus — பாபூன் ரீசாஸ் குரங்கினங்கள்
Bacteria — (பாக்டீரியாக்கள்) நுண்கிருமிகள்
Bailey — பாய்லே
Baldwin — பால்ட்வின்

| | | |
|---|---|---|
| Barlet, F. C. | — | பார்ட்லெட் எப். சி. |
| Basic unit | — | அடிப்படை அலகு |
| Bastide | — | பாஸ்டைட் |
| Beaver | — | நீர் நாய் |
| Bechtereu | — | பிட்சட்ரு |
| Behaviour | — | நடத்தை |
| Behaviour anti social | — | சமுக எதிர் நடத்தைகள் |
| Behaviour breeding | — | இனப்பெருக்க நடத்தை |
| Benedict Ruth | — | பெனடிக்ட் ருத் |
| Bentham | — | பென்தாம் |
| Biological purpose | — | உயிரியல் சார்ந்த நோக்கம் |
| Boas | — | போஸ் |
| Bogardus | — | போகார்டஸ் |
| Born leaders | — | பிறப்பிலேயே தலைவர்கள் |
| Brenheim | — | பிரென்ஹெய்ம் |

**C**

| | | |
|---|---|---|
| Calvin, Allen | — | கால்வின், ஆலன் |
| Capacity | — | திறமை |
| Carpenter | — | கார்ப்பென்டர் |
| Carter | — | கார்டர் |
| Case history method | — | தனியவன் வரலாற்று முறை |
| Cattell | — | கெட்டேல் |
| Causes of Crime | — | குற்றங்களின் தோற்றங்கள் |
| Censorship | — | தணிக்கைப்படுத்துதல் |
| Chambuli | — | சாம்புலி |
| Central person | — | மையமானவர் |
| Chimpanzee | — | மனிதக் குரங்கு |
| Chromosome | — | உயிரணுக்கோல் |
| Code | — | நியதி |
| Communication | — | கருத்துப் பரிமாற்றம் |
| Conation | — | எழுச்சி நிலை |
| Concentrate | — | ஒருமுனைப்படுத்து |
| Concept | — | கருத்துருவம் |
| Conflicts | — | உளப் போராட்டம் |
| Conscious multiple | — | நனவு நிலைப் பெருக்கம் |
| Consensus | — | செயல்பாட்டிசைவு |
| Control of prejudice | — | துவேத உணர்வுகளைக் கட்டுப்படுத்தல் |
| Conventional | — | மரபுவழி |

Crime — குற்ற நடத்தை
Crime and Social Organisation — குற்றங்களும் சமூக அமைப்புக் குலைவும்
Correlation — இடைத் தொடர்புகள்
Corockett — குரோக்கெட்
Crowd — கூட்டம்
Crowd exponent — கூட்டத்தின் கருத்தினை விளக்குபவர்
Culture — பண்பாடு

**D**

Darwin — டார்வின்
Democratic style — ஆட்சியாதிக்க அல்லது அதிகாரத்துவப் பாங்கு
Dependency — சார்ந்திருத்தல், சார்புடைமை
Deviation — விலக்கம்
Dictatorship — சர்வாதிகாரம்
Dimensions — பரிமாணங்கள்
Directive — வழிச்செலுத்த
Disposition — மன அமைப்பு
District personality — தனித்தன்மையுடைய ஆளுமைத் தன்மை
Divisive Propaganda — பிளவு வேண்டித் திகழ்கின்ற கருத்துப் பரப்பல்
Dominance — ஆதிக்கம்
Dominant — ஆதிக்கமிக்க
Doob — டூப்

**E**

Echo principle — எதிரொலி நியதி
Effect of culture — கலாசாரத்தின் பாதிப்பு
Emotional gestures — உணர்ச்சி வழி சைகைகள்
Empathy — ஒன்றும் உணர்ச்சி
Environment — சூழ்நிலை
Equality — சமத்துவ உணர்வு
Esper — எஸ்பர்
Espinas — எஸ்பினஸ்
Evolution theory — பரிணமக் கருத்துக் கோட்பாடு
Experimental method — பரிசோதனை முறை
Extrinsic factors — புறக்காரணிகள்

**F**

Father figure — தந்தை உரு
Field interview method — களப் பேட்டிகாண் முறை
Field Survey method — கள அளவீடு முறை
Fixation of attention — கவன ஒருமுனைப்பு
Followers — பின்பற்றுவோர்
Folk Psychology — நாட்டுப்புற மக்கள் உளவியல்
Ford Beach — போர்டு பீச்
Foreign contacts — அயல்நாட்டுத் தொடர்புகள்
Formal — நிலத்தலைவின் அமைப்பு
Formality — முன் வழக்கங்கள்
Foxes and Coyster — நரி போன்ற விலங்குகள்
Freedom of movement — செயல்களுக்கு அளிக்கப்பட்டுள்ள சுதந்திரம்
Freud — ஃபிராய்ட்
Fryer — ஃப்ரேயர்
Functional Factors — செயல்பாட்டுக் காரணிகள்

**G**

Garner — கார்னர்
Gastures Emotional — உணர்ச்சி வழி சைகைகள்
Genetics — பரம்பரை இயல்
General Trait — பொதுப்படையான பண்புக் கூறு
German Character Structure — ஜெர்மனிய நாட்டினர் இயல்பு
Gestalt — கெஸ்டால்ட்
Gibb, C. A. — கிப்
Gordschmidt — கோல்டக்மெட்
Green Revolution — பசுமைப் புரட்சி
Gregariousness — இணைந்துவாழும் இயல்பு
Groups — குழுக்கள்
Group mind — குழு மனம்
Guilty feeling — குற்ற உணர்வு
Guttman's technique of Social construction — கட்மனின் அளவீட்டமைப்பு-யுக்தி

**H**

Hedonism — இன்பியல் கோட்பாடு
Hemphill — ஹெம்பில்
Hemphray — ஹம்பரி
Hepin and Winer — ஹால்வினும் வைனர்
Harlow, H. F. — ஹெர்லோ எச். எப்.

Herbert Spencer — ஹெர்பர்ட்-ஸ்பென்சர்
Heredity — மரபு நிலை
Hereditory factors — மரபுக் காரணிகள்
Hienarchy Dominance — ஆதிக்கப்படி அமைப்பு
Hollingworth — ஹோலிங்வொர்த்
Holt — ஹோல்ட்
Home sickness — வீட்டு நினைவு நோய்
Hopi — ஹோபி
Hostility — வெறுப்பு
Housing Board — வீட்டு வசதி வாரியம்
Hull, C. — ஹல்
Human group — மனித குழு
Humour — நகைப்பு
Hypnotism — அறிதுயில்

**I**

Identity — ஒன்றுதல்
Identification — அடையாளப்படுத்திக் கொளல்
Ideo-motor — எண்ண இயக்கம்
Imitation — பாவிப்பு நடத்தை
Individual achievement — தனியாள் வெற்றியடைவுகள்
Influence — செல்வாக்கு
Informal — அமைப்பற்ற
Institutional leaders — நிறுவனத் தலைவர்கள்
Institutional type — நிறுவன வகையினர்
Institutionalised — நிறுவமைய
Instrumental conditioning — கருவிசார் நிலைவழிக்கட்டுப் படுத்தல்
Insight — உள்புலன் காட்சி
Instinct — இயல்பூக்கம்
Instinct of Imitation — பார்த்துக் கற்கும் இயல்பூக்கம்
Intelligent Quotient — நுண்ணறிவு ஈவு
Inter-Group Hostility — உள்ளிடைக் குழுவின் வெறுப்புணர்ச்சி

**J**

Jackdau — சேக்டவ்
Japanese culture and Personality — ஜப்பானிய பண்பாடும் ஆளுமையும்
Jennings — ஜென்னிங்ஸ்
Journals of Social Psychology — சமூக உளவியல் ஆய்வு இதழ்கள்

## L

Laughter — சிரிப்பு
Laws of Perception — புலன்நோக்கின் விதிகள்
Leaders — தலைவர்கள்
Leadership — தலைமைத் தன்மை
Leader, as substitute for individual responsibility — தலைவர் தனியாள் செயல்களுக்கு பொறுப்பேற்பவர்
Leader as a symbol of the group — தலைவர்–குழுவின் உருவகம்
Leader as Ideologist — தலைவர் லட்சியக் கோட்பாட்டினர்
Leader as Expert — தலைவர், செயலில் நிபுணர் (நிபுணராகத் தலைவர்)
Leader as Arbitrator and mediator — தலைவர்–நடுவர்
Leader as Controller of internal relations — தலைவர் உள் உறவுகளைக் கட்டுப்படுத்துபவர்
Leader as Scapegoat — தலைவர் சுமைதாங்கி
Leader as Father Figure — தலைவர் தந்தையின் உரு
Leader as Surveyor of Rewards and Punishments — தலைவர் தண்டனைகளையும் பரிசுகளையும் வழங்குபவர்
Leader as External Group Representative — தலைவர்–புறத்தொடர்புக் குழுவிற்கும் பிரதிநிதி
Leader follower — தலைவர்களும் பின்பற்றுவோரும்
Leaders Instability — தலைவர்களும் குழுநிலையின்மையும்
Leaders and Group Complexity — தலைவர்களும் குழுச்சிக்கலமைப்பும்
Leadership-dimensions of — தலைமையின் பரிமாணங்கள்
Leadership-Dominance and — தலைமைத் தன்மையும் ஆதிக்கமும்
Learning-Cognitive Principle of — அறிவுசார் கற்றல் நியதி
Lebon — லீபான்
Le Dantec — லடான்டக்
Likert's method of Summated writings — லைகர்டின் கூட்டுவிதப் பாங்கு முறை
Linton — லிண்டன்
Lipps — லிப்ஸ்

Locke — லாக்
Logic — தர்க்கம்
Loismurphy — லியோாஸ் மர்பி

**M**

Machines — பொறிகள்
Macaques — மாக்குகள்
Maclead — மக்லீட்
Mammary glands — பால்சுரப்பிகள்
Maslow, A. H. — மாஸ்லோ
Massimind — கும்பல் நடத்தை
Martin Conway — மார்டின் காண்வே
Maze — சிக்கலறை
Mead — மீடு
Measures of variability — மாறிகளின் அளவீடுகள்
McDougal — மெக்டூகல்
Mechanisation and Industrialisation — இயந்திரப்படுத்தலும் தொழிற்படுத்தலும்
Media — இடைப்பட்ட வாயில்கள்
Men of thought — சிந்தனையாளர்
Men of Action — செயல் திறனுளர்
Messerschmist — மாஸர்ச்மைட்
Metaphysical — இயலுக்கு அப்பாற்பட்ட கோட்பாடு
Migration — இடப்பெயர்ச்சி
Mildness — மென்மைத்தன்மை
Miller and Dollard — மில்லரும் டொலார்டும்
Mobs — கும்பல்கள்
Moreno — மொரீனே
Motives — ஊக்கிகள்–உந்துகள்
Mud-minnous — மட்மினே மீன்கள்
Mundugumor — மண்டுகுமர்
Myth — புனைக்கதை

**N**

National Superiority — நாட்டின் உயர்வு
National Solidarity — நாட்டின் ஒருமைப்பாடு
National characters — தேசிய குணங்கள்
Navaho — நவாஹோ
Navaho-Personality — நவாஹோ ஆளுமை
Negative — எதிர்மறை

Newcomb — நியுகாம்ப்
New Genea — நியு கெனியா
Nietzsche — நீட்சே
Nunn (Dr) — டாக்டர் நன்
Nutrition — உணவூட்டம்

**O**

Obedience — பணிவு
Objiwa Personality — ஒப்ஜிவர் ஆளுமை
Observation — உற்றுநோக்குதல்
Official heads — அலுவலகத்தலைவர்
Ojibua — ஒஜிப்வா
Orang — ஓராங்
Orderliness — ஒழுங்குத்தன்மை
Organised — அமைப்புடையவை
Oriole — ஓரியல்
Ottoklineberg — ஆட்டோகிளைன்பர்க்
Out groups — புறக்குழு
Over estimation of rewards under estimation of punishments — வெகுமதிகளைப் பெரிதுபடுத்தி மதிப்பிடுதலும், தண்டனைகளைக் குறைவாக மதிப்பிடுதலும்
Oxygen — பிராணவாயு

**P**

Paramecea — பேரமீசியா
Pavlov — பாவ்லாவ்
Perception — புலன் நோக்குதல்
Perception shift — புலன் நோக்கு மாற்றம்
Perception of the Social — சமூகப் புலன் நோக்கு
Perceptual experience — புலன் நோக்கின் அனுபவம்
Persuasive Type — இணங்கவைக்கும் வகையினர்
Persuasive leaders — இணங்கவைக்கும் தலைவர்கள்
Personality — ஆளுமை
Personalized — தனித்துவமய
Personal achivement — தனித்த சொந்த சாதனைகளில் விருப்பம்
Personality structure in simple societies — எளிய சமூகங்களில் ஆளுமை உருவமைப்பு
Peter Kleptokin — பீட்டர் கிலிப்டோகின்
Physiological — உடல்சார்ந்த
Phototropism — ஒளி ஈர்ப்பிணி

Pigors — பிக்கோர்ஸ்
Plato — பிளேட்டோ
Political boss — அரசியல் தலைவர்
Ponerine ants — போனரின் எறும்புகள்
Positive — நேர்மறையான
Potential leader — வன்மை பெற்ற தலைவன்
Power — ஆதிக்கவன்மை
Psychology — உளவியல்
Psychological — உளர்சார்ந்த
Psychoanalysts — உளப்பகுப்பாய்வினர்
Psychological Headonism — உளவியல் இன்பியல் கோட்பாடு
Prejudice — துவேதம், முற்சார்பெண்ணம்
Prejudice-control of — துவேத கட்டுப்படுத்தல்
Prejudice-growth of — துவேத வளர்ச்சி
Prestige — கௌரவம்
Preston — பிரிஸ்டன்
Primary leaders — முதல்நிலைத் தலைவர்கள்
Primary and Secondary groups — முதல்நிலை இரண்டாந்தர நிலை குழுக்கள்
Primates — மனித முன்இனம்
Private ownership — தனிச் சொத்துரிமை
Process — செயல்முறை
Production emphasis — உற்பத்தி வலியுறுத்தம்
Progress — முன்னேற்றம்
Projective Techniques — புறத்தெறி யுக்திகள்
Propaganda — கருத்துப் பரப்பல்
Propaganda of consolidation — உறுதிவேண்டி நிகழ்த்தும் கருத்துப் பரப்பல்
Prostitution — பரத்தைத்தன்மை
Prostitution-causes of — பரத்தைத் தன்மைக்கான காரணங்கள்
Prostitution and Social disorganisation — பரத்தைத் தன்மையும் சமூக அமைப்புக் குலைவும்
Protozoa — புரோட்டோசோவா
Public groups — பொதுமக்கள் குழு

**Q**

Qualities of leadership — தலைவர்களுக்குரிய தன்மைகள்
Qualitative variable — எண்ணளவு மாறி
Questionnaire method — வினா நிரல்கள் முறை

## R

Races — இனத்தினர்
Rapid-cultural growth — துரிதப் பண்பாட்டு வளர்ச்சி
Rapport — உளத்தொடர்பு
Rating Scale Method — தர அளவு முறை
Redicule — கிண்டல்கள்
Reformer — சீர்திருத்தவாதி
Reinforcement — வலியுறுத்துதல்
Reflex — மறிவினை
Relationship — உறவு முறை
Reliability — நம்பகத்தன்மை
Repitition — அடிக்கடி பரப்புதல்
Revolution — புரட்சிகள்
Resistence to change — மாற்றத்திற்கு எதிர்ப்பு
Revolt against the deteriorate principles due to passage of time — கீழ்த்தரப்படுத்தும் சமூகக் கட்டுப்பாடுகளைக் காலப் போக்கில் எதிர்த்தல்
Reward — வெகுமதி
Ribot — ரிபோட்
Road closed — சாலை மூடப்பட்டது
Robert, L. Hamlin — ராபர்ட் ஹம்ளன்
Ror'schach and Murray — சோர்சார்க் மர்ரே
Ross, E. A. — ராஸ், இ. ஏ.
Rousseau — ரூசோ
Russel — ரஸ்ஸல்
Ruth Benedict — ரூத் பெனிடிக்ட்

## S

Salaman — சாலமன்
Samoa — சமோவா
Scaling Method — அளவுத்திட்ட முறை
Schjelerup Ebbe — சுவிஜெலர்ப் எபே
Schwarz, D. C. — ஷிவார்ஸ்
Scientists — விஞ்ஞானிகள்
Scott — ஸ்காட்
Seaman — சிமென்
Secondary leaders — வழிநிலைத் தலைவர்கள்
Secularization or decline of religious controls — மதச் சார்பு அற்ற அல்லது மதக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தல்

| | | |
|---|---|---|
| Sentiments | — | உளப்பாங்குகள் |
| Sex | — | பாலுணர்வு |
| Sexes | — | பால்கள் |
| Shartle | — | ஷார்ட்டல் |
| Shelter seeking | — | இருக்கை தேடுதல் |
| Sherif | — | செரீப் |
| Shinto | — | ஷிந்தோ |
| Sigmund Freud | — | சிக்மெண்டு ப்ராய்டு |
| Similarities | — | ஒற்றுமைகள் |
| Simmel | — | சிம்மல் |
| Simplification | — | சுருக்கத்தன்மை |
| Sir. Martin Conway | — | சர். மார்டின் கன்வே |
| Smith | — | ஸ்மித் |
| Smith-Adam | — | ஸ்மித்-ஆதாம் |
| Specific | — | தனிச்சிறப்பான |
| Spreading of leaderships | — | தலைமைப் பரவல் |
| Soberity | — | சோகம் |
| Social control | — | சமூகக் கட்டுப்பாடு |
| Sociometric Method | — | சமூக அளவை முறை |
| Socialization and Social learning | — | சமூகப்படுத்தலும் சமூகப் படிப்பினையும் |
| Social distinction | — | சமூகப் பாகுபாடு |
| Social conditioning | — | சமூகநிலை வழிக்கடப்படுத்தல் |
| Social dependence | — | சமூகச் சார்பு |
| Social awareness | — | சமூகத்தை அறிநிலை |
| Social contract | — | சமூக ஒப்பந்தம் |
| Scocial conformity | — | சமூக இணக்கம் |
| Social significance of sympathy | — | பரிவுணர்ச்சியின் சமூக முக்கியத்துவம் |
| Social conflict | — | சமூக முரண்பாட்டு போராட்டங்கள் |
| Social distance | — | சமூக தொலைவு |
| Social attitudes and motives | — | சமூக நோக்குகளும் உந்துதல்களும் |
| Social learning through Imitation | — | போலிப் பாவனையின் வழி சமூகக் கற்றல் |
| Social consequences of Alcoholism | — | குடிப் பழக்கத்தால் ஏற்படும் சமூக விளைவுகள் |
| Social learning | — | சமூகக் கற்றல் |
| Social behaviour | — | சமூக நடத்தை |

Social Scientists — சமூக அறிவியலாளர்கள்
Social perception — சமூகப் புலன்நோக்கு
Soul — ஆன்மா
Soul of people — மக்களின் மனம்
Sources — மூலங்கள்
Stagner — ஸ்டேக்னர்
Standards — சமூகதர நிலைகள்
Stigma — சின்னம்
Stimuli — புலன் தூண்டுதல்
Strict — கட்டுப்பாடான
Strikes — கதவடைப்புகள்
Structural factors — அமைப்புக் காரணி
Submission — பணிந்து போதல்
Suggestion — கருத்தேற்றம்
Survey Research — அளவீடு ஆராய்ச்சி
Survival of the fittest — தகுதிவாய்ந்தவை உயிர் வாழும்
Sutherland — சுதர்லேண்ட்
Sympathy — இரக்க உணர்ச்சி

T

Tanatical — வெறி
Titchner — டிச்னர்
Tinkle Paugh — டினக்லே பக்
Titles — பட்டங்கள்
Technical Assistants — நுட்ப உதவியாளர்கள்
Termites — கரையான்
Territory leaders — மரபுநிலைத் தலைவர்கள்
Temperament — மனநிலை, குணநிலை
Temperamental characteristics — மனநிலைத் தன்மைகள்
The purpose of propaganda — கருத்துப் பரப்பலில் பயன் படுத்தப்படும் உத்திகள்
Three Spinal stickle back — முதுகில் மூன்று முட்கள்
Theorist — கொள்கையாளர்
Theories — கருத்துக் கோட்பாடுகள்
Theory of Imitation — போலிப் பாவனைக் கருத்துக் கோட்பாடு
Thoughts and services of efficient Social leaders — செயல் திறன்மிக்க சமூகத் தலைவர்களின் சிந்தனையும் தொண்டும்

Theories of Social Psychology — சமூக உளவியல் கருத்துக் கோட்பாடுகள்
Types of leadership — தலைமைத் தன்மையின் வகைகள்
Turkey — வான்கோழி
Tradition — பாரம்பரியம்
Traditionless — மரபு அற்ற
Trojan War — டிராஜன் போர்
Trout — ட்ரோட்
Trends — போக்குகள்
Trotter — டிரோட்டர்
Thurstone and Chave (E.J.) — தாஸ்டோனும் சாவும்
Thomas Brown — தாமஸ் பிரௌன்

U

Unfertilised — கருத்தரிக்காத
Uniform — சீருடைகள்
Unmigrants — ஒரே இடத்தவர்
Unorganised — அமைப்பற்றவை
Unpersonal — தன்விருப்பற்ற
Unstructured — அமைப்பற்ற
Urbanisation — நகர்ப்புறப்படுத்துதல்

W

Walter Bagehot — வால்டேர் பேக்காட்
War — போர்
Warden — வார்டன்
Welty, J. C. — ஜே. சி. வெட்டி
Wherry — வெர்ரி
Whitman — விட்மேன்
William Graham Sumner — வில்லியம் கிரஹாம் சம்னர்
Wundt — ஊண்ட்

Y

Yonng, K. — யாங்

Z

Zuni — சுயூனியா

